# குறள்நெறி

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

இதழ் 2 | தை 15, தி.பி2052 | பிப்பிரவரி 1, கி.பி2021






வாழ்நாளெல்லாம் தமிழ்ப்பகை கடிந்தே
ஞாலம் முழுவதும் தமிழ்ப்புகழ் பரப்பி
திருக்குறள் முழக்கம் திக்கெலாம் ஒலித்திடப்
பொறுப்புடன் உழைத்த புலமைக்கடலே
விருப்புடன் உங்கள் வழியினைத் தொடர்கிறோம்
"குறள்நெறி" இனிதே குவலயமெல்லாம்
சிறப்புடன் பரவிட அறிஞர் திரண்டனர்
இணைய தளத்தில் இணையிலாப் பணியை
முனைந்தே ஆற்றுவோம்! வள்ளுவச் சுடரால்
மானுடம் மாண்புறும் அருளொளி படர்கவே!

உலகத் திருக்குறள் இணையவழிக் கல்விக் கழகத்தால் வெளியிடப்படும் இணையத் திங்களிருமுறை–பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்- இணையாசிரியர்:பேராசிரியர் தமிழியலன்

# உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம்

(International Thirukkural Virtual Institute)

(ஊதியம் கருதாத தன்னார்வத் தொண்டு நிறுவனம்)

திருக்குறளைப் பரப்பவும் குறள்வழிச் சிந்தித்து வாழ்வுமுறையை நெறிப்படுத்திக் கொள்ள ஆற்றுப்படுத்தவும் பல்வேறு குறள் அமைப்புகள் செயற்பட்டுவருகின்றன. இணையதளத்தைப் பயன்படுத்திக் கொண்டு திருக்குறள் கல்வியை மேலும் விரிவாகவும் விளக்கமாகவும் மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெறச் செய்யும் நோக்குடன் உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் (International Thirukkural Virtual Institute) இணையதளத்தில் உலாவரத் தொடங்கியுள்ளது.உலகத் தமிழர்கள் http://kuralvirtual.com/ தளத்தில் இணைந்து பயன்பெற வேண்டும்.

பேராசிரியர் சி.இலக்குவனார் தமது வாழ்நாள் முழுமையும் குறள்நெறிபரப்பும் பணியில் உழைத்துவந்தார். குறள்நெறி என்னும் திங்களிருமுறை இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் இருபது ஆண்டுகளுக்கும் மேலாக வெளியிட்டு மக்கள்மன்றத்தில் ஒரு சிந்தனை மலர்ச்சியை ஏற்படுத்தினார். 1966 மே முதல் திசம்பர் வரை ஆறு திங்கள் நாளிதழாகவும் நடத்தினார்.

இன்றைய சூழலில் சிக்கலும் தடுமாற்றமும் பெருகிவரும் இல்லறம் நல்லறமாக நடைபெறும் வகையிலும் அரசியல்நெறி அறவழி இயங்கும் முறையிலும் நன்னெறி காட்டுதற்குக் குறள்நெறி இதழ் தேவைப்படுகிறது. கட்டுரை, கவிதை, இசைப்பாடல், நாடகம், கதை என அனைத்து வகைமைகளிலும் குறள்விளக்கங்கள் வரவேற்கப்படுகின்றன. உங்கள் அனைவரின் ஒத்துழைப்புடனும் குறள்நெறி இதழ் சிறப்பும் சீர்மையும் வலிவும் பொலிவும் பெற்றுப் பீடுநடையிடும் என்பதில் ஐயமும் உண்டோ? சுவைமிக்க சொல்லோவியங்களுடன் திங்கள் தோறும் முதல் நாளிலும் பதினைந்தாம் நாளிலும் உங்களைச் சந்திக்கக் குறள்நெறி உலா வரவுள்ளது. படியுங்கள்! நண்பர்களுக்குப் பகிர்ந்திடுங்கள்! ஞாலமெங்கும் பரப்புங்கள்!

- பேராசிரியர் முனைவர் தமிழியலன்



***இணையவழி இலவசத் தனிச்சுற்றுக்கு*** ***விற்பனைக்கு அல்ல.***

## அருள்நெறி பரவக் குறள்நெறி ஓங்குக!



அருள்நெறி பரவக் குறள்நெறி மங்கையை
நாளும் நாட்டில் நடமிடச் செய்தார்,
அஞ்சா நெஞ்சரும் அடலே றன்ன
செம்மாந்த நடையும் சீரிய நோக்கும்
கொள்கை உரமும் கொண்டு வாழ்ந்த
இலக்குவ னாரெனும் ஈடிலாச் சான்றோர்!

அந்தத் தொடர்ச்சியை அவரரும் மைந்தர்
மறைமலை என்னும் மணிப்பெயர் பூண்ட
பேரா சிரியப் பெருமகன் இன்று
மின்னித ழாக மிளிரச்செய்கிறார்!
தாள்வழி நடந்து தவித்த அதனை
மின்வழி ஏற்றி வீடெலாம் நொடியில்
சென்று சிலிர்க்கச் சீர்தர வைக்கிறார்!

உலகெலாம் பறந்தந்நாள் உயிர்த்தமிழ் பரப்பினார்
சுற்றியது போதுமெனத் தோன்றிய வேளையில்,
கையி லிருந்த கணினித் திருமகள்
மின்தாய்ப் பாட்டையில் மென்விரல் தொட்டே
பாரெல்லாம் அவ்வொளி பரவச் செய்கிறார்!
இல்லி லிருந்தே இவர்செயும் தொண்டுபோய்
ஒவ்வோர் அகத்தும் ஒளிமுகங் காட்டிட
நடந்து தந்தை நடத்திய புரட்சியை
அமர்ந்த படியே அவர்மக னான
மறைமலை செய்து மலைக்க வைக்கிறார்!

நாட்டளவில் தந்தை நடத்திய இதழை
உலகளவு மகன்இவர் உலவ விடுகிறார்
ஊதிய நோக்கம் உளங்கொள் ளாமல்
குறள்நெறி பரப்பலே குறியாய் வாழும்
ஐயா மறைமலை ஐந்நூ றாண்டிவண்
வாழ்ந்திட வாய்மை மணக்க
வாழ்த்துவோம் செந்தமிழ் வளர்த்தே உய்யவே!

***அன்புடன் வாழ்த்தும் மலேசியா முரசு நெடுமாறன்***

# ஊழிற் பெருவலி யாவுள?

முனைவர் இர. பிரபாகரன் (மேரிலாந்து, அமெரிக்கா)

*"எதிர்பாராத நிகழ்ச்சிகள் நடைபெறுவது உலக இயற்கை என்றும், அத்தகைய உலக இயற்கையைத்தான்வள்ளுவர் "ஊழ்" என்று குறிப்பிடுவதாகவும் தோன்றுகிறது. ஊழ் நமக்குச் சாதகமாக இருக்கும்பொழுதுநம்முடைய மனம் சோர்வில்லாமலும், ஊழ் நமக்குப் பாதகமாகஇருக்கும்பொழுது நாம் சோம்பலோடு இருந்து பொருளை இழக்கிறோம் என்கிறார் வள்ளுவர்."*



*தொழில் முனைவோராகவும் சிறந்த மேலாண்மையியல் வல்லுநராகவும் அமெரிக்கநாட்டில் புகழ்வாய்ந்த முனைவர் இர. பிரபாகரன் அவர்கள் சங்க இலக்கியங்களையும் திருக்குறளையும் இணையதளத்தின் மூலமாகவும் தமது நூல்களின் மூலமாகவும் பரப்பிவருபவர். வினாவிடையுடன் கூடிய இவாது வானொலி உரைகள் அமெரிக்கத்தமிழரிடையே ஒரு புதிய எழுச்சியை ஏற்படுத்திவருகின்றன.*

நம்முடைய வாழ்க்கையில் நடைபெறும் சில நிகழ்வுகள் நாம் எதிர்பார்க்காமல் எதேச்சையாக நடைபெறுபவை. சில நிகழ்வுகள் நாம் திட்டமிட்டபடியே நடைபெறுபவை.சில நிகழ்வுகளை நம்மால் திட்டமிட முடியாது. என்ன நடக்கும் என்று உறுதியாகக் கணிக்கக்கூடிய நிகழ்ச்சிகள் "நிர்ணயிக்கக்கூடிய நிகழ்ச்சிகள்" என்று கூறப்படுகின்றன. ஆங்கிலத்தில், இத்தகைய நிகழ்ச்சிகள் "deterministic events" என்று அழைக்கப்படுகின்றன. சில நிகழ்வுகள் நம்மால் நிர்ணயிக்க முடியாதவை. அவை ஆங்கிலத்தில் "stochastic events" என்று அழைக்கப்படுகின்றன. உதாரணமாக, ஒருவன், சனவரி மாதம் 2-ஆம் நாளன்று 1,000 வெள்ளிகளை (வெள்ளி - Dollar) ஒருவங்கியில் சேமிப்புக் கணக்கில் (சேமிப்புக் கணக்கு – Savings account) இரண்டு விழுக்காடு வட்டிக்கு முதலீடு செய்தால், அடுத்த ஆண்டு சனவரி மாதம் 2- ஆம் நாளன்று அவனுடைய சேமிப்புக் கணக்கில் 1,020 வெள்ளிகள் இருக்கும் என்று அவன் எதிர்பார்க்கலாம். அவன் எதிர்பார்த்தபடியே 1,020 வெள்ளிகள் அவனுடைய சேமிப்புக் கணக்கில் இருக்கும்.சேமிப்புக் கணக்கில் முதலீடு செய்யாமல், அவன் அதே பணத்தைப்

பங்குச் சந்தையில் (Stock market) சனவரி 2- ஆம் நாளன்று முதலீடு செய்தால், அடுத்த ஆண்டு சனவரி மாதம் 2-ஆம் நாளன்று அவனுடைய 5பங்குகளின் மதிப்பு 1,000 வெள்ளிகளைவிட அதிகமாக இருக்கலாம் அல்லது குறைவாகவும் இருக்கலாம். பங்குச் சந்தையின் செயல்திறன் (performance) நிர்ணயிக்க முடியாத ஒன்று. ஒரு நிறுவனத்தின் பங்கின் மதிப்பு, அந்த நிறுவனத்தின் செயல்திறன், அந்த நிறுவனத்தின் போட்டி நிறுவனங்களின் செயல்திறன், நாட்டின் பொருளாதார நிலைமை, உலகப் பொருளாதார நிலைமை போன்ற பல்வேறு நிர்ணயிக்க முடியாத சூழ்நிலைகளால் பாதிக்கப்படுகிறது. அதனால், நிறுவனங்களின் பங்குகளின் எதிர்கால மதிப்பைத் துல்லியமாகக் கணிக்க முடியாது என்று புள்ளியியல் (Statistics) அறிஞர்கள் கூறுகின்றனர். பங்குச் சந்தையைப்போல், மனிதர்களுடைய

வாழ்க்கையில் நடைபெறும் பல நிகழ்ச்சிகள் நிர்ணயிக்க முடியாதவை. சிந்தித்துப் பார்த்தால் மனித வாழ்க்கையே நிர்ணயிக்க முடியாத ஒன்றுதான் (Life itself is a stochastic process.). நேற்று உயிரோடு இருந்தவன் இன்று உயிரோடு இல்லை. "நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும் பெருமையுடைத்து இவ்வுலகு (குறள் – 333)" என்று வள்ளுவர் கூறுவதைப்போல், நாளை நாம்உயிரோடு இருப்போமா என்று இன்று கூற முடியாது.

நிர்ணயிக்க முடியாத நிகழ்வுகளும்எதிர்பாராத நிகழ்வுகளும் மனித வாழ்க்கையில் நடைபெறுவது உலக இயற்கை. இந்த நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்குக்காரணங்கள் இல்லாமல் இல்லை. ஆனால், அந்தக் காரணங்களை மனிதனால் கண்டுபிடிக்க முடியவில்லை.காரணங்கள் தெரியாவிட்டால் மனிதன் கலக்கமடைகிறான். தனக்குக் காரணங்கள் தெரியவில்லை என்பதைஏற்றுக்கொள்ள மனிதனின் மனம் மறுக்கிறது. ஆகவே, மனிதன் காரணங்களைக் கற்பனை செய்கிறான்.உதாரணமாக, சந்திர கிரகணமும் சூரிய கிரகணமும் எதனால் நடைபெறுகின்றன என்பதற்குக் காரணங்கள்தெரியாதவர்கள் அவை சந்திரனையும் சூரியனையும் இராகு என்னும் பாம்பு விழுங்குவதால் ஏற்படுகின்றனஎன்று எவரோ சொன்னதை நம்பினார்கள்; இன்றைக்கும் கோடிக்கணக்கான மக்கள் அதை நம்புகிறார்கள்.இதுபோல், நிர்ணயிக்க முடியாத நிகழ்வுகளும் எதிர்பாராத நிகழ்வுகளும் மனித வாழ்க்கையில்நடைபெறுவதற்குக் காரணங்கள் "விதி", "கர்மா"என்று மதங்கள் கூறுகின்றன. ஒருவனுடைய வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்று இறைவனால்தீர்மானிக்கப் படுகிறது. அதுவே, அவனுடைய விதி. விதி, "தலைவிதி" என்றும் "தலையெழுத்து"என்றும் அழைக்கப்படுகிறது. எவருடைய தலையிலும் எதுவும் எழுதப்பட்டதாகத் தெரியவில்லை!ஒருவன் ஒரு பிறவியில் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப அடுத்தப் பிறவியில் நன்மை தீமைகளைஅவன் அனுபவிக்கிறான் என்ற கொள்கை "கர்மா" அல்லது "வினைப்பயன்" என்று அழைக்கப்படுகிறது.

ஊழ் என்ற அதிகாரத்தில், "விதி" "கர்மா (வினைப்பயன்)" போன்ற கருத்துக்களை வள்ளுவர் கூறவில்லை. "வாய்மை எனப்படுவதுயாதெனின்" என்று தொடங்கி வாய்மைக்கு இலக்கணம் வகுத்ததைப்போல் வள்ளுவர் ஊழுக்கு இலக்கணம்வகுக்கவில்லை.நிர்ணயிக்க முடியாத நிகழ்வுகளும்எதிர்பாராத நிகழ்வுகளும் மனித வாழ்க்கையில் நடைபெறுவது உலக இயற்கை.அந்த உலக இயற்கையைத்தான் வள்ளுவர் "ஊழ்" என்று குறிப்பிடுகிறார் என்று கருதுவது பொருத்தமானதாகத்தோன்றுகிறது.

## ஆகூழும் போகூழும்

சில சமயங்களில் நம்முடைய முயற்சிஉடனே பலன் அளிக்கலாம்; தேடிய பொருள் எளிதில் கிடைக்கலாம். இது போன்ற சமயங்களில், மனிதர்கள்மனச்சோர்வடையாமல், உற்சாகத்தோடு, கடின உழைப்பால் வெற்றி பெற வாய்ப்பு உள்ளது. சிலசமயங்களில், பல காரணங்களினால் மனிதன் மனச்சோர்வு அடையக்கூடும். ஒருவன் பொருள்தேடுவதற்குப் பல முயற்சிகள் செய்தும் பயனில்லாமல் போகலாம்; வேலை தேடுவதற்குப் பலமுயற்சிகள் செய்தும் பயனில்லாமல் இருக்கலாம். அவன் முயற்சி செய்கின்றபொழுதுஅவனுடைய உடல்நிலை சரியில்லாததால் தொடர்ந்து முயற்சி செய்ய முடியாத நிலை ஏற்படலாம்.இது போன்ற சமயங்களில், மனிதன் மனச்சோர்வு அடைவது இயற்கை. ஒருவன் மனச்சோர்வுஅடைவதால், அவன் தன்னுடைய முயற்சிகளைக்

கைவிடக்கூடிய சூழ்நிலைகூட உருவாகலாம்.ஆனால், முயற்சியைக் கைவிட்டால், கையிலுள்ள பொருள் கைவிட்டுப் போகும். சாதகமானசூழ்நிலையை "ஆகூழ்" என்றும் பாதகமான சூழ்நிலையை "போகூழ்" என்றும் வள்ளுவர்குறிப்பிடுகிறார்.

***ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்***
***போகூழால் தோன்றும் மடி[1].*** (குறள் - 371)

மனச்சோர்வின்மைக்கும்மனசோர்வுக்கும் பல காரணங்கள் இருக்கலாம். மனச்சோர்வு அடைவதும் அடையாமல் இருப்பதும்உலக இயற்கை. ஆகவே, "ஆகூழ்" என்பதும் "போகூழ்" என்பதும் உலக இயற்கையைக் குறிப்பதாகக்கொள்வது பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

## இழவூழும் ஆகலூழும்

மனிதர்கள்மனச்சோர்வின்மையும் மனச்சோர்வும் அடைவது எப்படி உலக இயற்கையோ, அதுபோல் சில சமயங்களில்அறிவைப் பயன்படுத்தாமல் செயல்படுவதும், சில சமயங்களில் அறிவைச் சிறப்பாகப் பயன்படுத்துவதும்உலக இயற்கைதான். அறிவைப் பயன்படுத்தாத சூழ்நிலையை "இழவூழ்" என்றும், அறிவைச் சிறப்பாகப்பயன்படுத்தும் சூழ்நிலையை "ஆகலூழ்" என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார். இழவூழ் வந்தால்அறியாமை வரும் என்பதும் ஆகலூழ் வந்தவிடத்து அறிவைப் பெருக்கும் என்பதும் வள்ளுவரின்கருத்து.

***பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்***
***ஆகலூழ் உற்றக் கடை[2].*** (குறள் - 372)

நன்றாகப் படித்திருந்தாலும், தற்காலிகமான மறதியால், தேர்வுகளில் சரியான விடை எழுதாமல் தோல்வியுற்றவர்களும், விடைதெரிந்திருந்தாலும், நேர்காணலில் சொல்ல முடியாமல் தோல்வியுற்றவர்களும், நன்றாக வாகனங்களைஓட்டி அனுபவம் இருந்தாலும், அவசரத்தில், சரியாகச் சிந்திக்காமல் விபத்துகுள்ளானவர்களும்வள்ளுவர் கூறும் இழவூழால் பாதிக்கப்பட்டவர்கள் என்பதற்கு எடுத்துக்காட்டு. அதுபோல், ஒரு ஆபத்தான சூழ்நிலையில் தன் அறிவைப் பயன்படுத்தித் தன்னையோ அல்லது பிறரையோ காப்பாற்றுபவர்கள்ஆகலூழால் பயனடைந்தவர்கள்.

## உண்மை அறிவே மிகும்

ஒருவன்நுண்ணிய பொருள்களை உணர்த்தும் பல நூல்களைக் கற்றாலும் சில சூழ்நிலைகளில் அந்த நூல்களிலிருந்துதான் கற்றவற்றைப் பயன்படுத்தாமல் தனது இயற்கை அறிவையே பயன்படுத்துவான் (குறள் – 373).

***நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்***
***உண்மை அறிவே மிகும்.*** (குறள் - 373)

வழக்கறிஞர்கள் குற்றம்புரிவதும், மருத்துவர்கள் தங்கள் உடலுக்குக் கேடுவிளைவிக்கும் புகையிலையைப் பயன்படுத்துவதும், மது அருந்துவதும், ஈகை

[1] அசைவின்மை – தளர்ச்சியின்மை; மடி – சோம்பேறித்தனம்
[2] அகற்றுதல் – பெருக்குதல்; கடை - இடம்

ஒப்புரவு போன்றவற்றைப் பற்றித் திருக்குறளிலிருந்து நன்கு கற்றவர்கள்எவருக்கும் எதையும் அளிக்காமல் இருப்பதும் இந்தக் குறளுக்கு ஏற்ற எடுத்துக்காட்டு.

## இருவேறு உலகத்துஇயற்கை

உலகஇயற்கை இரண்டுவிதமாக உள்ளது. செல்வம் உடையவர்களாக இருப்பது ஒருவகை; அறிவுடையவர்களாகஇருப்பது மற்றொருவகை.

***இருவேறு உலகத்து இயற்கை திருவேறு***
***தெள்ளிய ராதலும் வேறு[3].*** (குறள் - 374)

ஒருவன்நூல்களைக் கற்றும், கற்றவர்களிடமிருந்து கேட்டும், கல்விக்கூடங்களில் பயின்றும்தெளிந்த அறிவுடையவனாகலாம். ஆனால், ஒருவன் கல்வியும் கேள்வியும் இல்லாமலேயேசெல்வந்தனாகலாம். வள்ளுவர் காலத்திலும் அதற்கு முன்பும் அறிஞர்களாக இருந்தவர்கள்பலரும் பொன்னும் பொருளும் பெறுவதற்காகப் புரவலர்களின் கொடையை நம்பி வாழ்ந்ததைக்கண்ட வள்ளுவர் அறிவுடையவனாக இருப்பதும் செல்வந்தனாக இருப்பதும் இருவேறு தன்மைகள்என்ற முடிவுக்கு வந்திருக்கலாம். அவருடைய கருத்து இன்றும் ஏற்புடையதுதான். கல்லூரிகளுக்குச் சென்று, படித்துப் பட்டங்கள் பெற்றவர்கள் நல்ல பணிகளைப்பெற்று, நல்ல வருமானத்தோடு வசதியாக வாழ்ந்தாலும், அவர்கள் அனைவரும் பெருஞ்செல்வந்தர்கள்என்று கூறமுடியாது. இன்று உலகிலேயே மிகப்பெரிய செல்வந்தர்களாகக் கருதப்படும்மூவர்: ஜெஃப் பேசோஸ் (Jeff Besos), பில் கேட்ஸ் (Bill Gates) மற்றும் மார்க்சக்கர்பர்க் (Mark Zuckerburg). இவர்களுள், ஜெஃப் பேசோஸ் என்பவர் அமேசான் (Amazon) நிறுவனத்தைநிறுவியவர். இவர் பொறியியல்துறையில் இளங்கலைப் பட்டம் பெற்றவர். இவர் 121 பில்லியன் டாலர்களுக்குச் ($121,000,000,000) சொந்தக்காரர். இவரைப்போல் பொறியியல்துறையில் பட்டம் பெற்றவர்கள் பலர். ஆனால், அவர்கள் இவரைப்போல் செல்வந்தர்கள் அல்ல. இளங்கலைப் பட்டப்படிப்பை முடிக்காமலேயே கல்லூரியைவிட்டு வெளியேறி, பில்கேட்ஸ்(Bill Gates) சொந்தமாக மைக்ரோசாஃப்ட்(Microsoft) நிறுவனத்தை நிறுவி, இன்று 106 பில்லியன் டாலர்களுக்குச் ($106,000,000,000) சொந்தக்காரராக உள்ளார். பில்கேட்ஸைப்போல், மார்க் சக்கர்பர்க் இளங்கலைப் பட்டப்படிப்பை முடிக்காமலேயேகல்லூரியைவிட்டு வெளியேறி, ஃபேஸ்புக் (Facebook) நிறுவனத்தை நிறுவி, இன்று 69 பில்லியன் டாலர்களுக்குச்($69,000,000,000) சொந்தக்காரராகத் திகழ்கிறார்.இவர்களுடைய சாதனைகளைப் பார்த்தால், ”திருவேறு, தெள்ளியர் ஆதலும் வேறு” என்றுவள்ளுவர் கூறுவது முற்றிலும் உண்மை என்பது நன்கு புலனாகிறது. செல்வந்தர் ஆவதற்கும்ஆறிஞர் ஆவதற்கும் அவரவர்களின் ஆர்வம், ஆற்றல், குறிக்கோள் முதலியவை காரணமாகஇருக்கலாம். காரணம் தெரியாததால், அதை “ஊழ்”என்று கருதத் தேவையில்லை.

## நல்லவையும்தீயவையும் செல்வமும்

சில சமயங்களில் நன்மைகள் செல்வம் சேகரிப்பதற்குத் தீமையாகவும், தீமைகள் செல்வம் சேகரிப்பதற்கு நன்மையாகவும் (சாதகமாகவும்) அமையும் (குறள் – 375) என்கிறார் வள்ளுவர்.

---

[3]திரு – செல்வம்; தெள்ளியர் – அறிவுடையோர்

***நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்***
***நல்லவாம் செல்வம் செயற்கு.*** (குறள் - 375)

ஒரு நாட்டில் அமைதி நிலவினால், போர்க்கருவிகளும் போருக்குத்தேவையான வாகனங்களையும் உற்பத்தி செய்பவர்களின் வருமானம் குறையும். ஆனால், அந்தநாடு மற்றொரு நாட்டோடு போர்செய்யத் தொடங்கினால், போர்க்கருவிகளும் போருக்குத்தேவையான வாகனங்களையும் உற்பத்தி செய்பவர்களின் வருமானமும் இலாபமும் அதிகரிக்கும்.இப்பொழுது (2020 – ஆம் ஆண்டில்), கொரானா என்ற நோய்க்கிருமி உலகெங்கும்பரவிவருகிறது. அந்த நோய்க்கிருமியால் தீமை விளைந்தாலும், அந்த நோய்க்கு மருந்துகண்டுபிடிக்கும் நிறுவனமும் அதன் பங்குதாரர்களும் மிகப்பெரும் அளவில் இலாபம்அடைவார்கள் என்பது உறுதி.

## நமக்குரியபொருள் நம்மைவிட்டுப் போவதில்லை

ஒருவன் எத்துணை முயற்சி செய்து, அவனுக்கு உரித்தானதல்லாதவற்றைக் காத்தாலும் அவை அவனிடம் தங்கா. ஆனால், அவனுக்கு உரியவற்றை அவன் வெளியேகொண்டுபோய்க் கொட்டினாலும் அவை அவனைவிட்டுப் போகா (குறள் – 376).

***பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்***
***சொரியினும் போகா தம.*** (குறள் - 376)

ஒருமுறைநான் என்னுடைய குடும்பத்தோடு இந்தியாவிற்கு சென்றபொழுது, எங்களுடைய கடவுச்சீட்டுக்கள் (Passports), பயணச்சீட்டுக்கள் (Arline tickets) ஆகியவற்றை தில்லியில் தொலைத்துவிட்டேன்.மறுநாள் என்னை முன்பின் தெரியாத ஒருவர் நான் இருக்குமிடம் தேடிவந்து அவற்றை எங்களிடம்கொடுத்தார். இது போன்ற நிகழ்ச்சிகளுக்குக் காரணம் தெரியாததால் அவற்றிற்குக் காரணம் ஊழ் என்று கருதப்படுகிறதுபோலும்.

## தொகுத்தவனும் வகுத்தவனும்

காரணங்களைக்கண்டுபிடிக்க முடியாத நிகழ்வுகள் நடைபெறுவது உலக இயற்கை. அந்த உலக இயல்பை “வகுத்தான்”என்று உயர்திணையாக உருவகித்து, வகுத்தான் வகுத்த வகைப்படி அல்லாமல் கோடிக்கணக்கில்பொருளை ஈட்டியவர்களும் அப்பொருளால் இன்பம் நுகர இயலாது என்கிறார் வள்ளுவர்.

***வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி***
***தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.*** (குறள் - 377)

கோடிக்கணக்கில்பொருள் இருந்தாலும், நோய், மூப்பு, சாக்காடு, கருமித்தனம், களவு போன்ற காரணங்களால்பொருளை அனுபவிக்க முடியாத சூழ்நிலை உருவாகலாம். ஆனால், அந்தச் சூழ்நிலை ஏன் உருவாகியதுஎன்பதை அறிய முடியாததால் அதை ஊழ் என்று முடிவு செய்து, ஊழை “வகுத்தான்” என்று உருவகிக்கிறார்வள்ளுவர். ஊழை “வகுத்தான்” என்று உருவகிப்பது காமத்தை காமன் என்றும், காற்றை வாயு என்றுஒருகடவுளாகவும் உருவகிப்பதைப் போன்றது.

## அல்லற் படுவது ஏன்?

நிர்ணயிக்கமுடியாத நிகழ்வுகளாலும் எதிர்பாராத நிகழ்வுகளாலும் நன்மைகளும் நடக்கின்றன, தீமைகளும்நடக்கின்றன. அவ்வாறு இருக்கும்பொழுது, ”நன்மைகள் நடக்கும்பொழுது அவற்றை நல்லவை என்றுஏற்று மனம் மகிழ்பவர்கள், துன்பங்கள் நேரும்பொழுது, அவற்றை ஏற்றுக்கொள்ளாமல் துன்பப்படுவது ஏன்?” என்று கேட்கிறார் வள்ளுவர் (குறள் – 379).

***நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்***
***அல்லற் படுவ தெவன்?*** (குறள் - 379)

## ஊழும் உழைப்பும்

நம்மால்காரணம் காண இயலாத நிகழ்வுகளைவிட (அதாவது ஊழைவிட) வலிமையானவை எவை? அவற்றைத் தடுப்பதற்குஎத்துணை ஆராய்ச்சி செய்தாலும், அவை நம்முன்னே வந்து நிற்கும் என்பது வள்ளுவரின் கருத்து (குறள் – 380).

***ஊழிற் பெருவலி யாவுள? மற்றொன்று***
***சூழினுந் தான்முந் துறும்[4].*** (குறள் - 380)

ஊழைத்தடுக்க முயன்றால் அது வந்து முன்னே நிற்கும் என்றுதான் வள்ளுவர் கூறுகிறாரே ஒழிய, அதைவெல்ல முடியாது என்று அவர் கூறவில்லை. தளர்ச்சி இல்லாமல் இடைவிடாது முயற்சி செய்தால், வெல்வதற்கரிய ஊழையும் வெல்லலாம் என்று

***ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்***

***தாழாது உஞற்று பவர்[5].*** (குறள்- 620)

என்ற குறளில் மனிதனின்விடாமுயற்சியைச் சிறப்பித்துக் கூறுகிறார் வள்ளுவர் (குறள் – 620). “ஊழிற் பெருவலியாவுள?” என்ற கேள்விக்கு வள்ளுவர் அளிக்கும் விடை, “கடும் உழைப்பு” என்பதுதான்.

## முடிவுரை

நம்முடைய வாழ்க்கையில்நடைபெறும் நிகழ்ச்சிகள் பலவற்றிற்கு நம்மால் காரணங்களைக் கண்டுபிடிக்க முடியாது. இதுபோன்ற நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்குக் காரணம் தெரியாததால், அவை கடவுளால் நிர்ணயிக்கப்பட்டவைஎன்றும் அவற்றிற்கு “ஊழ்”, “விதி”, “வினைப்பயன்”, “கர்மா” என்றெல்லாம் சிலர் பொருள்கூறுகிறார்கள்.

ஊழ் என்ற அதிகாரத்தில், ஊழ் என்பது என்ன என்பதற்கு வள்ளுவர் வரையறைஎதுவும் கூறவில்லை. அதிலுள்ள குறட்பாக்களை நடுவுநிலையோடு

---

[4]சூழ்தல் – ஆராய்தல்
[5]உப்பக்கம் – முதுகு; உப்பக்கம் காணுதல் – வெல்லுதல்; உலைவு – ஊக்கக்குறைவு; உஞற்றுதல் – ஊக்கி முயலுதல்

ஆராய்ந்தல், மனித வாழ்க்கையில்எதேச்சையாக, எதிர்பாராத நிகழ்ச்சிகள் நடைபெறுவது உலக இயற்கை என்றும், அத்தகைய உலக இயற்கையைத்தான்வள்ளுவர் "ஊழ்" என்று குறிப்பிடுவதாகவும் தோன்றுகிறது. ஊழ் நமக்குச் சாதகமாக இருக்கும்பொழுதுநம்முடைய மனம் சோர்வில்லாமலும், ஊழ் நமக்குப் பாதகமாகஇருக்கும்பொழுது நாம் சோம்பலோடு இருந்து பொருளை இழக்கிறோம் என்கிறார் வள்ளுவர். அதுபோல், தீயூழால் நமக்குப் பேதைமை தோன்றுகிறது, நல்லூழால் நமக்கு அறிவு பெருகுகிறது என்றும்வள்ளுவர் கூறுகிறார். ஒருவன் எத்துணை நூல்களைக் கற்றிருந்தாலும், ஊழின் தாக்கத்தால், அவனுடைய உண்மையான அறிவே மேம்பட்டுத் தோன்றும் என்ற கருத்தும் குறளில் காணப்படுகிறது.ஒருவன் அறிவுடையவனாக இருப்பதும் செல்வந்தனாக இருப்பதும் அவனுடைய ஊழைப் பொருத்ததுதான்என்ற கருத்தையும் நாம் குறளில் காண்கிறோம். செல்வத்தைப் பெருக்குவதற்கு நல்லவை எல்லாம் தீயவையாகவும் தீயவையெல்லாம்நல்லவையாகவும் அமைவது உலக இயற்கை என்று வள்ளுவர் கூறுகிறார். நமக்குச் சொந்தமில்லாதபொருள்களை நம்மால் பாதுகாக்க முடியாது என்றும் நமக்கு உரிய பொருள்களை நாம் வீசி எறிந்தாலும்அவை நம்மைவிட்டுப் போகா என்ற கருத்தும் குறளில் காணப்படுகிறது. ஒருவன் கோடிக்கணக்கில்பொருள்களைச் சேர்த்தாலும் அவற்றை அவனால் அனுபவிக்க முடியாத சூழ்நிலை ஏற்படுவதும் உலகஇயற்கைதான் என்றும் வள்ளுவர் கூறுகிறார். ஊழ் சாதகமாக இருக்கும்பொழுது மகிழ்ச்சி அடைபவர்கள், அது பாதகமாக இருக்கும்பொழுது வருந்துவது ஏன் என்று வள்ளுவர் கேட்கிறார். முடிவாக, எதிர்பாராதநிகழ்ச்சிகளைத் தடுப்பதற்கு எத்துணை முயற்சி செய்தாலும், அவை வந்து நம்முன் நிற்கும்என்று வள்ளுவர் நம்மை எச்சரிக்கிறார். மற்றொரு குறளில், எதிர்பாராத நிகழ்ச்சிகள் நம்முன்னே வந்து நின்றாலும், இடைவிடாத முயறசியால் வெற்றி பெறலாம் என்ற கருத்தும் குறளில்காணப்படுகிறது.

# மனுவும் திருவள்ளுவரும்

-முனைவர் பொற்கோ

"மனுநீதிச் சோழன் உருவாக்கி வழிநடத்திய மனுநீதி சிதைக்கப்பட்டு மனுதர்மமாக ஆகியிருக்கிறது. மனுநீதிச் சோழனின் பெயரை அழிக்கவே இந்த நூலுக்கு இப்படிப் பெயர் கொடுத்திருக்கிறார்கள். கொலை செய்யப்பட்ட உடலைப் புதைத்து அதன்மேல் தென்னை மரத்தை நடுவதுபோல் இருக்கிறது இந்த வேலை. மனுதர்மத்தில் ஏற்பட்ட மோசடியை வெளிப்படுத்த வேண்டும்."

---



*சென்னைப் பலகலைக்கழகத்தின் நீண்ட வரலாற்றில் துணைவேந்தர் பதவியேற்ற முதல் தமிழ்ப்பேராசிரியர் முனைவர் பொற்கோ அவர்கள்.மேலும் தம் கடுமையான உழைப்பால் "சிறப்புமிகு கல்வி நிறுவனம்" என்னும் பாராட்டையும் நிதியளிப்பையும் மத்திய அரசிடமிருந்து பெற்றுத் தந்தார்.தமிழுக்குச் செம்மொழித்தகுநிலை வேண்டிப் பல்கலைகழகத்தின் முன்மொழிவை மத்திய,மாநில அரசுகளுக்கு (2000 ) அனுப்பிய இவர் முயற்சியே பின்னர் கனிந்து வெற்றி கண்ட்து.*

---

மனு பெண்ணடிமை பேசினார் என்றும் இல்லை என்றும் அண்மைக் காலத்தில் விவாதங்கள் நடந்தன. இன்னும் நடந்து கொண்டிருக்கின்றன. பச்சையப்பன் கல்லூரியில் 11.03.1929 இல் நாவலர் ச.சோமசுந்தர பாரதியார் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தனார். இந்தச் சொற்பொழிவு திருக்குறள் வரலாற்றில் ஒரு இன்றியமையாத சொற்பொழிவு. தமிழகத்தில் உள்ள பெரிய அறிஞர்களை எல்லாம் இந்தச் சொற்பொழிவுக்கு அழைத்திருந்தார்கள். முனைவர் உ.வே.சாமிநாத ஐயர் அவர்களையும் இந்த நிகழ்ச்சிக்கு அழைத்திருந்தார்கள். அவர் முன் வரிசையில் இருந்து இந்தச் சொற்பொழிவைக் கேட்டார். ச.சோ.பாரதியார் அவர்கள் வள்ளுவரைப் பற்றி அப்போது வழங்கிய கற்பனைக் கதைகளையெல்லாம் ஆராய்ந்து விளக்கி வள்ளுவருக்கும் திருக்குறளும் விடுதலை வழங்கினார். அந்தக் கதைகள் எல்லாம் ஆதாரம் இல்லாதவை என்று விளக்கினார். திருவள்ளுவரை ஒவ்வொரு சமயத்தவரும் தங்கள் தங்கள் சமயத்தைச் சார்ந்தவர் என்று பேசிய பேச்சுக்கள் எல்லாம் ஆதாரமற்றவை என்று புறந்தள்ளினார்.

திருக்குறள் முதல் நூலா? வழி நூலா? என்று வினா எழுப்பி முதல் நூலே என்று உறுதிப்படுத்தினார். திருக்குறள் தரும சாத்திரங்களின் மொழிபெயர்ப்பு என்ற கருத்தை முழுதாக மறுத்துத் திருக்குறளின் தனித்தன்மையை விளக்கிப் பேசினார். திருக்குறளில் உள்ள இன்பத்துப் பால் வாத்ஸ்யாயனரின் காம சாத்திரத்தின் தழுவல் என்பதையும் மறுத்தார். ச.சோ.பாரதியார் தமது கருத்துகளுக்கு எல்லாம் ஏராளமான சான்றுகளை எடுத்துக் காட்டினார். அவர் காலத்துக்கு முன்பு திருவள்ளுவரைப் பற்றியும் திருக்குறளைப் பற்றியும் நிலவிய பல தவறான கருத்துகளை எல்லாம் அவர்தான் திட்டவட்டமாக மறுத்துத் திருக்குறளுக்கும் திருவள்ளுவருக்கும் விடுதலை

கொடுத்தார் என்று சொல்ல வேண்டும். இவருடைய சொற்பொழிவு நூலாக வெளிவந்தது. டாக்டர் உ.வே.சா. அந்த நூலுக்கு முன்னுரை கொடுத்திருக்கிறார்.

அறத்துப் பாலை தருமச் சாத்திரத் தழுவல் என்பது மிக மிகத் தவறான கருத்து. அறம் என்பது வேறு, தருமம் என்பது வேறு. இவை இரண்டும் ஒன்றல்ல. வருணாசிரமத்தின் அடிப்படையில் எழுந்தது தருமம் என்ற கருத்து. வேதமும் மனுதர்மமும் நால்வகை வருணங்களையும் நால்வகை ஆசிரமங்களையும் பற்றிப் பேசுகின்றன. இந்த வருணாசிரம அடிப்படையில் எழுந்த கருத்துதான் தருமம் என்பது. அறம் என்பது அப்படியல்ல.

பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்று மக்களை நால்வகையாகப் பிரிக்கிறார்கள். பிரமச்சரியம், கிருகஸதம், வானப் பிரஸ்தம், சன்னியாசம் என்று நால்வகை ஒழுக்கங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். இந்த நால்வகை ஒழுக்கங்களையும் நால்வகைப்பட்ட மக்களும் பின்பற்ற வேண்டும். இதுதான் மனுதர்மம். இந்த அமைப்பைக் காப்பதுதான் அரசனுடைய கடமை. அப்போதுதான் அவனை மனுதர்மம் பிறழாமல் அரசாண்டன் என்று சொல்லுகிறோம். மனுதர்மத்திலிருந்து தப்பியவர்களை அரசன் தண்டிக்க வேண்டும். அந்தத் தண்டனை வருணத்துக்கு ஏற்றபடி மாறுபடும். ஒரே குற்றத்தைப் பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகியோர் செய்வாரானால் தண்டனை ஒரே மாதிரி இருக்காது. பார்ப்பனர்க்கு ஒரு தண்டனை, சூத்திரருக்கு ஒரு தண்டனை என்று மாறுபடும். “சூத்திரனுக்கொரு நீதி தண்டச் சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொரு நீதி என்று சாத்திரம் சொல்லிடு மாயின் அது சாத்திரம் அன்று சதியென்று கண்டோம்” என்று பாரதியார் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். பல ஆண்டுகளுக்கு முன்னே இதை ஊன்றி நோக்கி, மனோன்மணியம் சுந்தரனார் “வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள் உள்ளுவரோ மநுவாதி ஒரு குலத்துக்கு ஒரு நீதி” என்று திருக்குறளுக்கும் மனுதர்மத்துக்கும் உள்ள அடிப்படை வேற்றுமையை விளக்கியிருக்கிறார்.

தமிழ் வரலாற்றிலேயே மிக அதிக அளவுக்கு மேற்கோள் காட்டப்பட்ட நூல் ஒன்று இருக்கிறதென்றால் அது திருக்குறள்தான். “இரவார் இரப்பார்க்கு ஒன்று ஈவார் கரவாது கைசெய்தூண் மாலை யவர் (குறள்.1035) என வரும் இந்தத் திருக்குறள் மனுதர்மத்துக்கும் திருக்குறளுக்கும் உள்ள அடிப்படை வேற்றுமையைத் தெற்றென விளக்கிப் பறைசாற்றுகிறது. இந்தக் குறள் உழவு அதிகாரத்தில் வருகிறது. வேதமும் மனுதர்மமும் உழவை இழிவாகப் பார்க்கிறது. உழவர்களையும் இழிவாகத் தான் பார்க்கும். ஆனால் இந்தக் குறள் என்ன சொல்லுகிறது பாருங்கள். இவர்கள் யாரிடமும் கையேந்திப் பிச்சை எடுக்கமாட்டார்கள். தம்மிடம் வந்து பிறர் கைநீட்டிப் பிச்சை எடுக்கும்போது கொடுப்பார்கள். தங்கள் முயற்சியிலேயே உண்டாக்கி உண்டு வாழுபவர்கள். உழவர்களின் இயல்பு இது. ஆனால் மனுநீதி என்ன சொல்லுகிறது பாருங்கள். பார்ப்பான் நாள்தோறும் பிச்சைக்காக ஊருக்குள் புகவேண்டும் (அத்தியாயம் 6, சூத்திரம் 43). தமிழ் மரபில் பசுவுக்குத் தண்ணீர் வேண்டும் என்று இரந்தாலும் அது இழிவு. திருக்குறளைப் பாருங்கள். ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு இரவின் இளி வந்தது இல் (குறள்.1066) என்று சொல்லுகிறது திருக்குறள். பிச்சை எடுத்துத்தான் உயிர் வாழ வேண்டும் என்று ஒரு நியதி இருந்தால் இந்த உலகை உண்டாக்கியவன் அழிந்து போகட்டும் என்கிறார் திருவள்ளுவர். திருவள்ளுவர் அங்கே பார்ப்பனரை விலக்கிச் சொல்லவில்லை. இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகியற்றி யான் (குறள்.1062) என்பது குறள்.

மனுதர்மம் சொல்லுகிறது (அத்தியாயம்.5, சூத்திரம்.148) பெண்கள் தன் சுவாதீனமாக ஒருபோதும் இருக்கக் கூடாது. திருவள்ளுவர் என்ன சொல்லுகிறார் பாருங்கள். தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண் (குறள்.56) வள்ளுவர் காட்டும் பெண் தன்னையும் காத்துக் கொள்வாள். தன் கொண்டவனையும் காப்பாள். தான் சொன்ன சொல்லையும் காப்பாள். இந்தப் பெண்ணுக்கும் மனுதர்மப் பெண்ணுக்கும் உள்ள வேறுபாட்டைப் பாருங்கள்.

நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக் கொன்றாகும் ஆக்கங் கடை (குறள்.328) என்றும் "தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது இன்னுயிர் நீக்கும் வினை" (குறள்.327) என்றும் சொல்லி வள்ளுவர் கொல்லாமையை வற்புறுத்துகிறார். இவருடைய போதனை இப்படி இருக்கிறது. சோழப் பேரரசின் பெருவீரனாக விளங்கிய ஆதித்த கரிகாலன் கொல்லப்பட்டு விட்டான். அவனைக் கொன்றவர்கள் சோழப் பேரரசில் உயர்பதவி வகித்த நான்கு பிராமணர்கள். உடையார்குடியில் உள்ள கல்வெட்டு அவர்கள் பெயரையே குறிப்பிட்டிருக்கிறது. இந்தப் பயங்கரக் கொலை நடந்தது சுந்தரசோழன் ஆட்சியில் - 969 இல். அவர்கள் பெயர் 1.சோமன், 2.ரவிதாசனான பஞ்சவன் பிரமாதிராஜன், 3. பரமேசுவரனான இருமுடிச் சோழப் பிரமாதிராஜன், 4. மலையனூரானான ரேவதாச கிரமவித்தன். இப்படிப்பட்ட படுகொலைகள் இன்னும் நடந்திருக்கின்றன. மாமன்னன் அசோகனுடைய பேரன் பிரகத்ரதனைப் புஷியமித்திர சுங்கன் என்ற ஒரு பிராமணன் வெட்டிக் கொன்றுவிட்டான். தவம் செய்த சூத்திரன் ஒருவனை மிகப் பழங்காலத்திலேயே இராமபிரான் வந்து தலையை வெட்டினார்.

வைதீக மரபில் யாகம் செய்வதற்காக உயிர்க்கொலை நிகழ்த்தலாம். இங்கும் திருவள்ளுவர் வேறுபடுகிறார். நெய்யைச் சொரிந்து ஆயிரம் வேள்விகளை வேட்பதைவிட ஒரு உயிரைக் கொன்று தின்னாமல் இருந்தால் போதும். அதுவே சிறந்தது. தமிழ் மரபில் பொய்யாமைக்கு மிகப் பெரிய இடமுண்டு. பொய் சொல்லுவதை இந்த மரபு எந்த இடத்திலும் ஆதரிக்காது. வைதீக மரபு தெளிவாக ஒரு சில இடங்களில் ஆதரிக்கிறது. மனுதர்மம் பேசுவதைக் கேளுங்கள் (அத்தியாயம்.8, சூத்திரம். 112) பல மனைவிகளை உடையவன் அவர்களை வசப்படுத்திக் கூடுவதற்காகவும் பசுமாடுகளின் புல்லுக்காகவும் பிராமணர்களைக் காப்பாற்றுவதற்காகவும் பொய் சொன்னால் குற்றம் இல்லை. தமிழ் மரபுப்படி பொய்யாமையைச் சரியாகக் கடைபிடித்தால் போதும். மற்ற அறங்களைச் செய்யாவிட்டாலும் குறையில்லை. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று (குறள்.297) என்று கூறுகிறது திருக்குறள்.

மனுதர்மப்படி (அத்தியாயம்.10, சூத்திரம். 84) பயிர்த்தொழில் இழிவானது. தமிழ் மரபு உழவுத் தொழிலை உயர்ந்த தொழிலாகப் பேசுகிறது. உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்கிறார் திருவள்ளுவர்.

செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம் என்று ஆண்டாள் அம்மையார் பாடியிருக்கிறார். அதைப் பற்றிக் கருத்து சொல்ல வந்த மகாபெரியவர் செய்யக்கூடாதனவற்றைச் செய்யமாட்டோம். தீய திருக்குறளைப் படிக்க மாட்டோம் என்று விளக்கம் சொல்லுகிறார். குறளை என்றால் கடுஞ்சொல், புறங்கூறல் முதலான பொருளைக் குறிக்கும். அங்கே ஆண்டாள் குறிப்பிட்டது திருக்குறளை அல்ல. திருக்குறளை அவர் குறித்திருந்தால் தீக்குறளைச் சென்றோதோம் என்று வாசகம்

அமைந்திருக்கும். இந்த இலக்கண நுட்பம் அவருக்குத் தெரியாமல் போனது நமக்கு வியப்பாக இருக்கிறது.

வேலையில்லாதவன் ஒரு முதலாளியிடம் சென்று எனக்கு வேலை கொடுங்கள் என்று சொன்னால் அது நமக்குப் புரிகிறது. முருகக் கடவுளிடம் சென்று பக்தன் ஒருவன் வேலைக் கொடு என்று சொன்னால் அவர் கையில் வைத்திருக்கிற வேலைக் கேட்கிறான் என்றுதானே நாம் புரிந்துகொள்ள வேண்டும். வேலை கொடு என்பதற்கும் வேலைக் கொடு என்பதற்கும் உள்ள பொருள் வேறுபாடுதான் குறளை சென்றோதோம் என்பதற்கும் குறளைச் சென்றோதோம் என்பதற்கும் உள்ள பொருள் வேறுபாடு. இந்த நுட்பம் மகாபெரியவருக்குத் தெரியாமல் போனது வியப்பாக இருக்கிறது. அடுத்ததாகத் தமிழ் மக்கள் போற்றிப் பாராட்டிப் புகழுகிற ஒரு நூலை இவர் எப்படி அவ்வளவு தூரம் அலட்சியப்படுத்தினார் என்பதும் நமக்கு விளங்கவில்லை. ஒரு சராசரி மனிதன் அப்படி அலட்சியப்படுத்தியிருந்தால் நாம் கவலைப்படமாட்டோம். மகாபெரியவர் அப்படிச் சொல்லும் போது அது நமக்குத் துன்பமாக இருக்கிறது. அப்படிச் சொன்ன காலகட்டத்தில் தமிழக அறிஞர் உலகம் கொதித்தெழுந்தது. யாகாவராயினும் நாகாக்க என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறார். மகாகவி பெரியவர் போன்றவர்களுக்கும் சேர்த்துச் சொன்னதுதான் இது.

போர் என்றாலே சமமானவர்களிடம் போராடவேண்டும். குற்றம் என்றால் குற்றம் நிரூபிக்கப்பட வேண்டும். தண்டனை என்றால் குற்றத்திற்கு ஏற்ற தண்டனையாக இருக்க வேண்டும். தவம் மேற்கொண்ட சூத்திரன் சம்பூகனை இராமன்பிரான் கொன்றது சரிதானா?

இந்திரன் ஒரு சோழ மன்னன் என்ற கருத்து உண்டு. இவன் ஏழு இந்திர விகாரைகளைக் கட்டியவன் என்ற கருத்தும் உண்டு. இந்த இந்திரனும் அகலிகையை வஞ்சித்த இந்திரனும் ஒரே ஆளாக இருக்க முடியாது. பேரும் புகழும் பெற்ற சோழ மன்னன் இந்திரனை அவமானப்படுத்தக் கதைகளைக் கட்டியிருக்கிறார்கள். ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி என்ற குறளுக்குத் தவறான விளக்கங்களைக் கொடுக்கிறார்கள். இந்தக் குறள் இந்திரனைப் பெருமைப்படுத்துகிற முறையில் அமைந்திருக்கிறது. சிறுமைப்படுத்த இந்தக் குறளைக் காட்டக்கூடாது.

பிராமணன் முதல் வருணத்தான் ஆனதாலும் பிரம்மாவின் முகமாகிய உயர்ந்த இடத்தில் பிறந்ததனாலும் எல்லா வருணத்தார்களுடைய பொருள்களையும் தானம் வாங்குவதற்குரிய தலைவன் ஆகிறான் (அத்தியாயம்.1, சூத்திரம். 100). தமிழ் மரபு இதை ஏற்காது. நல்லாறு எனினும் கொளல் தீது என்கிறார் வள்ளுவர். (குறள்.222)

சூத்திரன் பிராமணர்களைத் திட்டினால், அவன் தாழ்ந்த இடமான காலில் பிறந்தவன் ஆகையால் அவன் நாக்கை அறுக்கவேண்டும் (அத்தியாயம்.8, சூத்திரம். 270). கொடிய குற்றம் செய்தாலும் பிராமணனைக் கொல்லாமலும் மற்ற எத்தகைய குற்றத்திற்கும் ஆளாக்காமலும் அவனுடைய பொருளை அவனுக்கே கொடுத்து அயலூருக்கு அனுப்பவேண்டும் (அத்தியாயம்.8, சூத்திரம். 380) இப்படிச் சொல்லுகிறது மனுதர்மம்.

அரசனானவன் எத்தகைய குற்றத்துக்கும் பிராமணனைக் கொல்ல நினைக்கக் கூடாது (அத்தியாயம்.8, சூத்திரம். 381). ஆனால் வள்ளுவர் சொல்லுகிறார். கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களைகட்டதனோடு நேர் (குறள்.550).

பெருவீரன் சோழ இளவரசன் ஆதித்த கரிகாலனைக் கொலை செய்த நான்கு பிராமணர்களையும் கண்டுபிடித்துத் தண்டித்தவன் இராஜராஜ சோழன். இந்த உண்மையை உடையார்குடி கல்வெட்டிலும் பொறித்தான். பிராமணர்களுக்குத் தண்டனை கொடுத்த முதல் அரசன் இவன்தான்.

அந்தணர், பார்ப்பார், அறவோர் இந்த மூன்று சொற்களையும் சரியாக விளங்கிக் கொள்ள வேண்டும். அந்தணர் என்பவர் சான்றாண்மைப் பண்புகளைக் கொண்டவராகவும் அருள்நெறியில் நடப்பவராகவும் இருப்பார். வள்ளுவரே இந்த விளக்கத்தைக் கொடுத்திருக்கிறார். அந்தணர் என்போர் அறவோர் மற்றுஎவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான் (குறள்.30). பார்ப்பார் என்ற சொல் ஐயர், ஐயங்கார் முதலான பிரிவுகளைத் தழுவும் ஒரு பொதுச் சொல். பார்ப்பனர் என்ற வழக்கும் உண்டு. பார்ப்பனர் என்பது தெலுங்கில் பாப்பனவாடு என்று வழங்குகிறது. கன்னட மொழியிலும் பார்ப்பன என்ற சொல் வழங்குகிறது. தமிழில் பார்ப்பார், பார்ப்பனர் என்ற இரண்டு சொற்களும் வழங்குகின்றன. இதிலிருந்து பிறந்த வேறுசொற்கள் பாப்பாத்தி, பாப்பாரப்பிள்ளை முதலானவை. சங்க இலக்கியங்களில் பார்ப்பனப் பாங்கன், பார்ப்பனத் தோழி முதலான சொற்கள் வழங்கியிருக்கின்றன.

கண்ணகிக்குக் கிடைத்த தோழி பார்ப்பனத் தோழி. அறவோர் என்பது சமண மதத்திலும் புத்த மதத்திலும் உள்ள துறவிகளைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. “அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும் துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை..” என்று கண்ணகி ஒரு கட்டத்தில் உணர்ச்சி வசப்பட்டுக் கணவனோடு பேசுகிறாள். இங்கே வருகிற அறவோர், அந்தணர் என்ற சொற்களைக் கவனிக்க. அறவோர் என்பது வேறு, அந்தணர் என்பது வேறு. அந்தணர் என்பது சாதிப் பெயர் அல்ல. சான்றோர்களைக் குறித்த பண்புப் பெயர். பார்ப்பனர்கள் தங்களை அந்தணர்கள் என்று சொல்லிக்கொள்வது பொருந்தாது.

தமிழ் மரபுப்படி ஒழுக்கம் என்பது உயிர் போன்றது. இது வருணாச்சிரம தர்ம ஒழுக்கம் அல்ல. ஒழுக்கம் என்பது வாழ்க்கை முறை. வாழ்க்கையில் வழிதப்பித் தீமை செய்தால் கேடு வரும் என்பதை அறிந்து அறிவுடையவர்கள் தவறுகளுக்கு இடம் தரமாட்டார்கள். தவறுகளுக்கு இடந்தராமல் வாழ்பவர் உயர்வினை அடைவர். சரியான உள்ளீடு கொண்ட மனத்திண்மையை ஒருவனுக்கு அளிப்பது எதுவோ அதுதான் ஒழுக்கம். இதற்குக் கேடுவர இடந்தரக் கூடாது. இங்கே சொன்ன ஒழுக்கம் உயிரைவிட மேலானது. உயிரைவிட மேலாக இதைக் காக்கவேண்டும். ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும் (குறள்.131) இது தமிழ் மரபுக்குரிய குரல். பார்ப்பனர்களுடைய பிறப்பு எப்போதும் தூய்மையானது என்று அவர்கள் கருதுகிறார்கள். அந்தப் பிறப்பு நெருப்பு போன்றது என்றும் அதிலே தூசு படாது என்றும் அவர்கள் கருதுகிறார்கள். ஆகவே பார்ப்பனப் பிறப்பு அந்த நிலைமை மாறாமல் அப்படியே இருக்கும் என்று நம்புகிறார்கள். ஆனால் தமிழ் மரபுப்படி வள்ளுவர் சொல்லுகிறார். மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றக் கெடும் (குறள்.134) என்கிறார். வேதத்தை ஓதுவது அவன் குலத்தொழில் அவனுடைய வருணாசிரம தர்மம் அப்படி. வேதத்தை ஓதுவதிலிருந்து அவன் தவறிவிட்டாலும் அந்த வேதத்தையே மறந்துவிட்டாலும் மீண்டும் அவனைப் பார்ப்பான் என்றே ஆக்கிக் கொள்ளலாம். ஆனால் அவனுடைய ஒழுக்கம் கெட்டுப் போனால் பார்ப்பனப் பிறப்பு என்ற உயர்வு கெடும்.

மனுதர்மம் என்ற பெயர் எப்படி வந்தது? மனு என்பது ஒரு சோழ அரசனுக்குரிய பெயர். இந்தச் சோழ மன்னன் நீதிக்குப் பேர் போனவன். இந்திய வரலாற்றிலேயே எல்லா உயிர்களையும் சமமாக மதித்து ஆட்சி நடத்தியவன் இவனே. மனு என்றால் பொதுவாக வழங்குகிற பொருள் மக்கள் என்பது. அவன் குடும்பம் மனு பெருத்த குடும்பம் என்று சொல்லுவார்கள். மனு என்றால் மக்கள் என்று பொருள். மன்பதை காக்கும் நன்குடி (சிலம்பு) என்றும் மன்பதை காக்கும் நீள்குடி (புறம்) என்றும் மன்னுயிர் என்றும் வருகிற தொடர்களைக் கூர்ந்து நோக்கினால் மன் என்பதே மக்கள் என்று விளங்கும். இந்த மக்கள் விரும்பிய ஒரு சோழ மன்னன்தான் மனுநீதிச் சோழன். ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத் தான்தன் அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன் என்று சிலப்பதிகாரம் பேசுவது இந்த மன்னனையே. பெருமைக்குரிய அந்த மரபைக் கண்ணகி சுட்டிக் காட்டுகிறாள். இவன் ஒரு சோழ மன்னன். வள்ளலார் எழுதிய மனுமுறை கண்ட வாசகம் என்ற நூல் இங்கே எண்ணிப் பார்க்கத் தகுந்த நூல்.

சிலப்பதிகாரக் காலத்திலேயே இவன் பழமை வாய்ந்த மன்னனாகக் காணப்படுகிறான். அவன் காலத்தில்தான் மனுநீதி பற்றி ஒரு நூல் உருவாகியிருக்க வேண்டும். பசுவின் துன்பத்தைத் தீர்ப்பதற்காகத் தன் மகனையே தேர்க்காலிலிட்டு நீதி செலுத்திய இந்த மன்னன் வகுத்தளித்த மனுநீதி அழிக்கப்பட்டு விட்டது. அல்லது மறைந்துவிட்டது. மனுநீதிச் சோழனை நினைவூட்டுகிற ஒரு சிற்பம் திருவாரூரிலுள்ள தேரில் இன்றும் இருக்கிறது. வள்ளலார் மனுமுறை கண்ட வாசகம் என்ற ஒரு நூலை நமக்கு வழங்கியிருக்கிறார். அவர் ஆன்மநேய ஒருமைப்பாடு பேசியவர். அவருக்குத்தான் இந்த அருமை தெரிந்திருக்கிறது. எல்லா உயிர்களையும் சமமாகப் பார்க்கும் பார்வை மனுநீதிச் சோழனுக்கு இருந்திருக்கிறது. எல்லா உயிர்களையும் சமமாகக் கருதி நேசிக்கின்ற ஒரு பண்பு வள்ளலாருக்கு இருந்திருக்கிறது. அதனால்தான் ஆன்மநேய ஒருமைப்பாடு என்ற ஒரு கொள்கையை வகுக்கிறார். மனுநீதிச் சோழன் உருவாக்கி வழிநடத்திய மனுநீதி சிதைக்கப்பட்டு மனுதர்மமாக ஆகியிருக்கிறது. மனுநீதிச் சோழனின் பெயரை அழிக்கவே இந்த நூலுக்கு இப்படிப் பெயர் கொடுத்திருக்கிறார்கள். கொலை செய்யப்பட்ட உடலைப் புதைத்து அதன்மேல் தென்னை மரத்தை நடுவதுபோல் இருக்கிறது இந்த வேலை. மனுதர்மத்தில் ஏற்பட்ட மோசடியை வெளிப்படுத்த வேண்டும். இதைப் பற்றியெல்லாம் தொடர்ந்து சிந்திக்க வேண்டும். தமிழகத்தின் தொல் வரலாற்றை மீட்டெடுக்க வேண்டும். உண்மைகள் தாமே வெளிப்படும். உண்மைக்கு உள்ள வலிமையே அதுதான்.

# பேராசிரியர்சி.இலக்குவனாரின் “வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை’ –நூல் அறிமுகம்

இலக்குவனார்.திருவள்ளுவன்

*தமிழுக்கென வாழ்ந்த பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களின் குறிப்பிடத்தக்கப் பணிகளுள் ஒன்று குறள்நெறியைக் குவலயம் எங்கும் ஓங்கச் செய்ய வேண்டும் என்று பாடுபட்டது. ‘இருபதாம் நூற்றாண்டுத் திருவள்ளுவர் ‘ எனத் தமிழ் உலகத்தவரால் அன்புடன் அழைக்கப் பெற்ற பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள், மாணாக்கர்களிடம் கற்பிப்பதை மட்டும் தம் கடமையாகக் கொள்ளாமல், மக்களிடையேயும் சங்க இலக்கிய மாண்புகளையும் தொல்காப்பியச் சிறப்புகளையும் திருக்குறள் நெறிகளையும் விளக்குவதையும் பரப்புவதையும் தம் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர்; இலக்கிய உலாக்களை அமைத்துக் கொண்டு ஊர்கள் தோறும் சென்று திருக்குறளைப் பரப்பிய பேரறிஞர்; ‘குறள்நெறி ‘ என்னும் பெயரில் திங்கள் இதழ், திங்களிருமுறை இதழ், நாளிதழ் நடத்திக் குறள்நெறி அன்பர்களை உருவாக்கிய இதழியல் அறிஞர்; ’எல்லாரும் இந்நாட்டு மன்னர்’ , ‘அமைச்சர் யார்?’, ‘வள்ளுவர் வகுத்த அரசியல்’ முதலான பல நூல்கள் மூலம் படிப்போர் வட்டத்திலும் குறள்நெறி எண்ணங்களைப் பரப்பியவர்.*

---



*பேராசிரியர் சி.இலக்குவனாரின் நூற்படைப்புகளில் ஒன்றுதான் ‘வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை’ என்னும் அரிய நூல். 1971ஆம் ஆண்டு சென்னையிலுள்ள மீனா புத்தக நிலையம் இந் நூலை வெளியிட்டுள்ளது. இந்நூலை ‘இலக்குவனார் இலக்கிய இணையம் ‘மறுபதிப்பாக வெளியிட்டுள்ளது.*

---

இந்நூலின் முதல் பதிப்பில் மீனா புத்தக நிலையம் பின்வருமாறு பதிப்புரை வழங்கியுள்ளது.

“திருவள்ளுவப் பெருமான் இயற்றியருளிய பொய்யா மொழியெனும் பொதுமறைச் செல்வமாகிய திருக்குறளில் அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இரண்டு பால்களுக்கும் விளக்கங்கள் பல அறிஞர் பலரால் இயற்றப்பட்டு வெளி வந்திருக்கின்றன. ஆனால், காமத்துப்பால் எனப்படும் இன்பத்துப்பாலில் அடங்கியுள்ள கருத்துச் செறிவு எளிதில் புலனாகும் வண்ணம் தெளிவான விளக்கங்கள் இதுவரை வெளிவரவில்லை. பேராசிரியர் சி.இலக்குவனார், எம்.ஏ.எம்.ஓ.எல்பி.எச்.டி. அவர்கள், திருக்குறளில் அறத்துப்பாலில் இல்லறவியலில் உள்ள இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு, விருந்தோம்பல் ஆகிய நான்கு அதிகாரங்களையும், இன்பத்துப்பாலுக்குரிய களவியல், கற்பியல் ஆகியவற்றின் இருபத்தைந்து அதிகாரங்களுடன் இணைத்துச் சுவை செறிந்த ஒரு நாடகக் காட்சியென அமைந்திருக்கும் முறை, படிப்பவர் உள்ளத்தைக் கவர்ந்து ஈர்க்குமாறுள்ளது. இவற்றிற்கு மிகத்தெளிவான இனிய எளிய உரை கூறி, இவற்றிற்

செறிந்துள்ள கருத்து எளிதிற் புலனாகுமாறு விளக்கியிருக்கும் முறை, கலைகள் பல கற்றுத் துறைபோய புலவர் பெருமக்களும், எழுதப் படிக்க மட்டுமே அறிந்துள்ள பிறமக்களும் விரும்பிப் படித்து மகிழுமாறுள்ளது.

பொதுவாக, தமிழறிந்த அனைவரும் மீண்டும் மீண்டும் பன்முறை படிக்க அவாக் கொள்ளும் வகையில் இலக்கியச் சுவை குன்றாமல், பண்டைத் தமிழ் மக்களின் காதல் வாழ்க்கைச் சிறப்பு தெள்ளிதிற் புலக்கும் வண்ணம் இயற்றியளித்துள்ளார் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள்"

திருக்குறள் வகுப்புகள் மூலம் எளிய முறையில் திருக்குறள் நெறியை விளக்கிய பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களுக்கு எளிய நடையில் திருக்குறள் விளக்கம் தருவது என்பது எளிய செயலாயிற்று. எனவே, தமிழ் மாணாக்கர் மட்டுமல்லாமல் ஓரளவு தமிழறிந்த அனைவரும் நன்கு புரிந்து கொள்ளும் முறையில் திருக்குறள் தொடர்பான நூல்களை உலகிற்கு அளித்துள்ளார் அவர். அதே வரிசையில்தான் இந்நூலையும் படைத்துள்ளார்.

வாழ்வியல் கல்வியைக் கற்க வேண்டிய அனைவருக்கும் எளிதில் புரியும் வண்ணம் தலைவன், தலைவி உரையாடுவது போலவும் எண்ணுவது போலவும் நாடகப் பாங்கில் சுவையுடன் பேராசிரியர் சி.இலக்குவனார் இந் நூலைப் படைத்துள்ளார். அதே நேரம் திருக்குறள்களைத் திருவள்ளுவர் நோக்கத்தில் இருந்து மாறுபட்டுத் தம் கருத்து முலாம் பூசும் முறையைச் சிறிதும் பின்பற்றவில்லை. இடையிலே பூசப்பட்ட ஆரிய வண்ணங்களை அகற்றிய தமிழிய அறிஞர்கள் பலர், எடுத்துக்காட்டுகளை எடுத்துக்காட்டுகளாக எண்ணாமல் பகுத்தறிவு நோக்கில் புதுப்புது விளக்கங்கள் அளித்துள்ளனர். பேராசிரியர் அவ்வாறு இல்லாமல் மக்களிடையே நிலவிய புராணக் கதைகளை எடுத்துக்காட்டுவதற்காகத் திருவள்ளுவர் கையாண்டுள்ளாரே தவிர, அவரின் நோக்கம் தமிழ்நெறிக் காப்பு மட்டுமே என்பதைத் தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ளார். எனவே, இந்திரன் உலகம் முதலான கற்பனைகளைக் கற்பனைகளாக மக்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கில் விளக்கியுள்ளாரே தவிர கற்பனைகளை உண்மை என நம்பும்படியோ புதிய விளக்கங்களை ஏற்றியோ விளக்கம் அளிக்கவில்லை.

பரிமேலழகர் முதலானவர்கள் கருத்துகளை மறுக்கும் பொழுதும் அக்கால நெறியும் திருவள்ளுவர் கருத்தும் இதுவாகத்தான் இருக்க வேண்டும் என உணரும் வகையில் விளக்கியுள்ளார். திருவள்ளுவரை 'வையகத்தின் முதல் புரட்சியாளர் ' எனக் கூறும் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள், அதற்கேற்பவே இந்நூலையும் படைத்துள்ளார்.

இவருக்கு முன்னரும் பின்னரும் யாரும் விளக்காத வகையில் பல கருத்துகளை ஆங்காங்கே தரப் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள் தவறவில்லை. எடுத்துக்காட்டாகக் கள்ளின்பத்தைவிடக் காதல் இன்பம் சிறந்தது என்பதைக் கூறும் பொழுது "கள் தரும் துன்பம் போல் காதலாலும் துன்பம் விளையும்" என விளக்கியுள்ளதைக் கூறலாம். இலக்கணக் குறிப்புகள், நாம் அயற்சொற்களென மயங்கியுள்ள அமிழ்தம், முத்து முதலான சில தமிழ்ச் சொற்களின் விளக்கம் ஆகியவற்றைத் தேவையான இடத்தில் தந்துள்ளார்.

"சான்றோன் எனக் கேட்ட தாய்","தந்தை மகற்காற்றும் நன்றி", "மகன் தந்தைக்காற்றும் உதவ", "கொழுநன் தொழுதெழுவாள்" முதலான குறளடிகளுக்கு

ஆணையும் பெண்ணையும் இணையாகக் கருதிய அக்காலச் சூழலையும் திருவள்ளுவர் கருத்தையும் நன்கு விளக்கியுள்ளார். இவ்வாறு பெண்களும் ஆண்களும் இணை என்ற பழந்தமிழ்நெறிக்கு மாறான பிறரின் விளக்கங்களுக்குப் பேராசிரியர் தந்துள்ள மறுப்புகள் அனைவரும் படித்தறிந்து பின்பற்ற வேண்டியன வாகும்.

இவற்றை யெல்லாம் நூலிலேயே படித்தறிந்து கொள்ள வேண்டும் என்பதால் இங்கு விளக்கவில்லை.

“தனித்தமிழ் நூலாம் திருக்குறள் தமிழ் மரபு தழுவி முதல் நூலாகத் தமிழிலேயே இயற்றப்பட்டது” என்பதையும் பேராசிரியர் சி.இலக்குவனார் விளக்கத் தவறவில்லை.

மேலும் பேராசிரியருக்குத் திருக்குறள் அதிகார வைப்புமுறையை மாற்ற வேண்டும் என்பதில் உடன்பாடு இல்லை. அதே நேரம் எடுத்துக் கொண்ட தலைப்பிற்கிணங்கத் தேவையான முறையில் தொகுத்துத் தருவதே எளிய முறையில் விளக்குவதற்கு வாய்ப்பாக அமையும் என்ற நம்பிக்கை உடையவர். எனவேதான்,”திருக்குறள் எளிய பொழிப்புரை’யை நடைமுறை அதிகார வரிசைக்கு இணங்கவே அளித்துள்ளார். அதே நேரம் இல்லறப் பொருண்மையை விளக்கும் வகையில் இந்நூலில் இன்பத்துப்பால் 25 அதிகாரங்களுக்கு முன்னும் பின்னும் அறத்துப்பாலில் இரண்டிரண்டு அதிகாரங்களை இணைத்து நூற் கருத்தை முழுமையாக்கியுள்ளார். இதே போல், ஒரு சில அதிகாரங்களில் திருக்குறள் வரிசைமுறையையும் மாற்றி விளக்கியுள்ளார். இவ்வாறு சுவைபடத் தொகுத்து எளிய இனிய தமிழில் பேராசிரியர் தந்துள்ள விளக்கங்களைப் படித்துக் குறள்நெறி வழி வாழ்வோம்! குவலயம் ஓங்கச் செய்வோம்!

# திருக்குறளால் உயர்ந்தேன்
## முனைவர் சிரீரோகிணி

(உலகத் தமிழ் ஆராய்ச்சியாளர், எழுத்தாளர்)



கொஞ்சும் தமிழில் செஞ்சொல்மழலை கூறும் பிஞ்சுப் பருவத்திலிருந்தே திருக்குறளைத் தம் வாழ்வின் வழிகாட்டியாக ஏற்றதனால் முனைவர் திருமதி சிரீரோகிணி குறள்பரப்புநராக மட்டுமின்றிப் பின்பற்றும் பெருந்தகைகளுள் ஒரு முன்னோடியாகத் திகழ்கிறார். ஆய்வுப் படிப்பில், ஐக்கிய அரபு அமீரகத்தின் துபாய் நாட்டில் இருந்தபடி, வாழ்வியலுடன் பின்னிப் பிணைந்துள்ள திருக்குறள் குறித்து உலகத்தமிழர்கள் எந்தளவு ஆர்வமாக உள்ளனர், எப்படி அவர்களை ஊக்குவிப்பது என அவர் மேற்கொண்ட ஆய்வின் விளைவாகமுனைவர் பட்டம் பெற்றார்.

அவர் குறள் ஆர்வம்கொண்டது எப்படி? அவரே விளக்குகிறார்.

"பிறந்தது ஈரோடு மாவட்டம். திருமணத்திற்குப் பின் வசிக்கும் இடமானது துபாய். துள்ளும் பள்ளிப் பருவத்திலிருந்தே திருக்குறளைக் கற்றதால் குறளின்மேல் கொண்ட ஈடுபாட்டால் மேடைப்பேச்சாளராக, எழுத்தாளராக, சொற்பொழிவாளராக, ஆய்வாளராக விரல்விட்டு எண்ண முடியாத அளவுக்கு நற்சான்றுகள், விருதுகள், பாராட்டுகள் பல தங்கு தடையின்றித் தானாகவே வந்து சேர்ந்தன.

குறள் கல்வியால் நான் ஈட்டிய அத்தனை விருதுகளையும் எனது பெற்றோர்களின் தூண்டுதலே பெற்றுத் தந்தது. குழந்தைப் பருவத்திலேயே என்னைக் குறள் கற்குமாறு முதன்முதலில் தூண்டிவிட்டவர் தந்தை தான். நடுத்தர வகுப்பைச் சேர்ந்த கூட்டுக் குடும்பத்தில், ஈரோடு மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கியில் எழுத்தர் பணிக்குச் சேர்ந்து பொது மேலாளர் எனும் பதவி வரை உயர்ந்த என் தந்தைக்குத் தமிழ்ப்பற்று மிகுதி. உலகப் பொதுமறையாகிய திருக்குறள் மேல் அவருக்குப் பெரும் ஈடுபாடு..



இந்த இடத்தில் எனக்குத் திருக்குறள் மீது பிடிப்பு ஏற்படுத்தக் காரணமாக இருந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுவது சுவையாகவும் பொருத்தமாகவும் இருக்கும். உலக மயமாக்கல், தாராள மயமாக்கல் என்ற நடவடிக்கைகள் தொடங்கி, பன்னாட்டு உணவு நிறுவனங்கள் நம் மக்களின் உணவுப் பண்பாட்டை குப்பை (ஜங்க்) வகைக்கு மாற்றி விட்டனர்.பெரும்பாமையோர் காலையில் பழைய சோறு சாப்பிடும் வழமையை மேற்கொண்டபொழுது, நகர்ப்புற உயர்நடுத்தர வகுப்பில் மட்டும் சிற்றுண்டி (டிபன்) ஒருவேளை உணவாக இருந்தது. எனவே, நம்ம வீட்டிலும் சிற்றுண்டி (டிபன்) செய்ய மாட்டார்களா என ஆசையாக இருக்கும். அதிலும், நான்கு வயதில் இட்லி எனது தீராத கனவாக இருந்தது. அப்போது தான் அப்பா என்னிடம், ‘‘ஒரு

திருக்குறள் ஒப்பித்தால் ஒரு இட்லி", என்றார். நான் இரண்டு குறள் மனப்பாடமாக ஒப்பித்து இரண்டு இட்லி சாப்பிடுவேன். ஆக, இட்லி தான் என்னைத் திருக்குறளைப் படிக்கத் தூண்டியது என்பது உண்மை.

பணி ஓய்வு நேரங்களில் மேடைப்பேச்சுகளில் அப்பா கலந்து கொண்டு பேசுவார். உடன் சென்ற எனக்கும் அந்த தாக்கம் அப்போதே ஏற்பட்டது. மேலும் வள்ளலார் மீது தீவிரப் பற்றுக் கொண்ட குடும்பத்தினராகிய எங்களுக்கு வடலூரில் மடம் உள்ளது. எனவே சமரச சன்மார்க்க குணம் கொண்ட அப்பா, தமிழ் மொழி மீது எனக்கு அளவிலாப் பற்று உருவாக்கினார்.

அவர் அறிவுறுத்திய கருத்துகளால் திருக்குறளைப் போன்று வாழ்வியல் சார்ந்த வேறு எந்த நூலும் இல்லை என்ற கருத்து என்னுள் திடமாக ஏற்பட்டு, பத்து வயதில் 1,330 குறளையும் அத்துப்படி ஆக்கிக் கொண்டேன். சிரீசக்தி வித்யா நிகேதன் பள்ளியில் ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த சமயத்தில், மாவட்ட அளவில் தாய் மொழி இலக்கியத்தில் உலக சாதனை போட்டி பள்ளியில் நடைபெற்றது. போட்டியில் கலந்து கொண்டு, குறிப்பிட்ட நேரத்திற்குள் 1,330 குறளையும் கணீரென ஒலித்தேன். முடித்ததும், அவையில் ஆரவாரம் கொப்பளித்தது. பலத்த கைதட்டலுக்கு இடையே மேடையில் இருந்து இறங்க முயற்சித்த போது, போட்டியாளர்கள் என்னை நிறுத்தி, ஒரு சில குறளுக்கு பொருள் கேட்டனர். அசராமல் விளக்கம் அளித்தேன். என்னைப் போலவே பிற மாணவர்களும், நாலடியார், ஆத்திச்சூடி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது என அசத்தினர். சரிதான், நமக்குப் பரிசு கிடைக்காது எனச் சோர்ந்து போனேன். எனக்காக அன்று பள்ளிக்கு வந்திருந்த அப்பா, ''இவங்க பரிசு கொடுக்கலன்னா என்ன.. நான் மெடல் வாங்கித் தர்றேண்டா செல்லம். வா வீட்டுக்கு போகலாம்'', என்றார்.

"இருங்கப்பா, யாருக்கு பரிசுன்னு தெரிஞ்சிக்கலாம் " "என்றேன். எதிர்பார்த்தபடி வேறு ஒரு மாணவியின் பெயர் அறிவிக்கப்பட்டது. போச்சுடா சொக்கா, இப்படி சொதப்பல் ஆயிடுச்சேன்னு மனசுக்குள் வருத்தமாக இருந்தது. அடுத்த நொடியில், போட்டிக் குழுவினரிடமிருந்து ஒரு அறிவிப்பு. ஒலிவாங்கியில்(மைக்கில்), ''சிறிய திருத்தம். முதல் பரிசுக்குரிய மாணவி தனது விளக்க உரையில் சில தவறுகள் செய்துள்ளார். எனவே முதல் பரிசு சிரீரோகிணிக்குச் செல்கிறது''." என அறிவித்தனர். ஈரோடு மாவட்டத்தில் ஐந்தாம் வகுப்பு மாணவியின் உலகச் சாதனை என்றால் சும்மாவா? உலகச் சாதனைப் புத்தகத்தில் இடம் பெற்றேன் .இன்ப அதிர்ச்சியில் உறைந்து போனேன். அதுதான் திருக்குறள் என்னுள் விதைத்த தொடக்க விதை. அந்த விதை தான் இன்று ஆலமரமாகத் தழைத்து ஓங்கி உள்ளது.

என் அப்பா வழி தாத்தா தெய்வத்திரு.முத்து அவர்களின் செயல் அளப்பரியது. கணினி, அலைபேசி இல்லாத அந்தக் காலத்திலேயே தம்முடைய சப்பான் நண்பருடன் கடிதம் வாயிலாகத் தொடர்பு கொண்டு திருக்குறள், அபிராமி அந்தாதி போன்ற பல தமிழ் நூல்களை சப்பான் மொழியில் மொழிபெயர்த்தார். தமிழ்மொழிக்கு ஆற்றிய சேவையை கண்டு சப்பான் அரசு இவரது புகைப்படத்தை அஞ்சல் தலையாக வெளியிட்டுப் பெருமைப்படுத்தியது.

தாத்தாவின் சாதனை எனக்கு ஓர் உந்துசக்தியாக இருந்தது.

பள்ளி இறுதி ஆண்டு, பின்னர் கல்லூரி என படிப்புடன் எனது இலக்கிய வட்டாரமும் விரிவடைந்தது. தொடர்ந்து மேடை பேச்சுகளில் கலந்து கொண்டு

பரிசுகள் வென்றேன். ஈரோடு மாவட்டத்திலும், திருச்செங்கோட்டில் நான் படித்த பொறியியல் கல்லூரியிலும், பின்னர் கோவை, மதுரை கலை, இலக்கிய வட்டாரத்திலும் திருக்குறள் சிரீரோகிணி எனத் தனித்துவம் கிடைத்தது. இத்தனைப் புகழும் தந்தை ஏற்படுத்திய திருக்குறள் கல்வியால் தான் கிடைத்தது.

கல்லூரியில் படிக்கும் போது தான் வாழ்வியல் என்றால் புரியத் தொடங்கியது. வாழ்வியலை முற்றிலும் புரிய வைக்கும் இலக்கியம் உலகில் திருக்குறளைத் தவிர வேறு எதிலும் இல்லை எனவும் தெரிந்தது. பேச்சாற்றலும் அதிகரித்ததால், முன்பைக் காட்டிலும் எனது திருக்குறள் விளக்க உரைக்கு மதிப்பு கூடியது.

இதனிடையே அரசு தேர்வு எழுதிய எனக்கு தாராபுரம் பொதுப்பணி துறையில் தொழில்நுட்ப உதவியாளர் பணி கிடைத்தது. தகவல் தொழில்நுட்பம் படித்த எனக்கு அந்த பணியில் 2 ஆண்டுக்கு மேல் பிடிப்பு ஏற்படவில்லை. எனவே, சென்னைக்கு இடம் பெயர்ந்து, HCL நிறுவனத்தில் சேர்ந்தேன். இது தான் எனக்குத் திருப்பு முனை. விடுமுறை நாட்களில் சென்னையில் உள்ள அனாதை ஆசிரமங்கள் மற்றும் குழந்தைகள் விடுதிகளுக்குச் சென்று திருக்குறள் கற்பிப்பது பழக்கமாகிப் போனது. அப்படிச் செல்லும் போது, பணம் இல்லாததால் படிப்பை தொடர முடியாமல் இருந்த பல மாணவ-மாணவிகளுக்கு அன்பால் தோள் கொடுத்துப் படிக்க வைத்தேன். சக ஊழியர்களும், நண்பர்களும் எனது தொண்டுக்கு உதவியாக, மாணவிகளுக்கு நல்ல ஆடை, உணவு, அடிப்படை தேவைகளை பூர்த்தி செய்ய ஆர்வமாக உடன் வந்தனர்.

இதனிடையே திருமணம். கணவருக்கு துபாயில் வேலை என்பதால் கடல் கடந்தேன். அங்கு சென்றும், அங்குள்ள இலக்கிய தொடர்புகளுடன் நல்ல நட்பை வளர்த்துக் கொண்டேன். இதனிடையே மகள் காதம்பரி பிறந்தாள். திருக்குறள் மற்றும் விளக்க உரை என மேடைகள் தோறும் ஆராய்ச்சி நிறுவனம் சார்பில் முனைவர் கோவிந்தராசன் அவர்கள் தலைமையில் ஆய்வு படிப்புக்கு அனுமதி கிடைத்தது. இந்தியா, இலங்கை, சிங்கப்பூர், துபாய், செருமன், ஆத்திரேலியா, பிரான்சு உள்ளிட்ட உலக நாடுகளில் உள்ள தமிழர்கள் மத்தியில் திருக்குறள் தீவிர விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும் என்பது ஆய்வின் கருத்தாக்கம். அதன் விளைவாக முனைவர் பட்டம் பெற்றேன். சார்சா 38-வது உலகப் புத்தக கண்காட்சியில் எனது 'மகிழ்ந்திரு' நூல் வெளியிட்டேன். அங்கு நடைபெற்ற கின்னசு சாதனை நிகழ்வில், என் புத்தகமும் ஒன்று என்பது எனக்கு பெருமகிழ்ச்சி.

தமிழர்களிடம் இப்போது திருக்குறள் ஆர்வம் குறித்து விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகிறேன். உலகத் தமிழர்களிடையே குறள் குறித்த கணக்கெடுப்பு ஆராய்ச்சியில் எனக்கு ஒதுக்கப்பட்டு உள்ளதால், கம்போடியா, செருமன், பிரான்சு என எனது திருக்குறள் பயணம் தொடர்கிறது.

அரசு பணியாளர் தேர்வாணையத்தின் தேர்வுகளைத் தவறாமல் எழுதி வருகிறேன். அரசுப் பணியில் இருந்தால், எனது வாழ்வின் பெருங்கனவைத் தலைமையிடத்துக்கு எளிதில் கொண்டு செல்ல முடியும் என்பதாலேயே, அரசுப் பணியில் ஆர்வம் செலுத்துகிறேன். எனது கனவு இந்த தமிழுலகிற்கு மட்டுமன்றி வள்ளுவனுக்கு நாம் செய்யும் நன்றிக் கடனாகவும் அமையும் என உறுதியாக நம்புகிறேன்." என்கிறார் முனைவர் சிரீரோகிணி.

# இலக்குவனாரும் திருக்குறளும்

## மறைமலை இலக்குவனார்

உலகத்தமிழ்ச்சங்கம் நடத்தும் சீனக் கவிஞர் யூசி அறக்கட்டளையின் நான்காம் கருத்தரங்கம் "நவம்பரைச் சிறப்பித்த நால்வரும் திருக்குறளும்"'என்னும் தலைப்பிலமைந்து வீரமாமுனிவர், வ.உ.சி., கி.ஆ.பெ.விசுவநாதம், இலக்குவனார் ஆகிய தமிழ்ச்சான்றோர்கள் திருக்குறளுக்கு ஆற்றிய அரும்பணிகளை எடுத்துரைக்கும் நல்வாய்ப்பை வழங்கியுள்ளமை நன்றியுடன் போற்றத்தக்கது. தமிழ்நாட்டு அரசுக்கும் தமிழ்வளர்ச்சித்துறைக்கும் மாண்புமிகு அமைச்சர், செயலாளர், தமிழ்வளர்ச்சி இயக்குநர், உலகத்தமிழ்ச்சங்கப் பொறுப்பு இயக்குநருக்கும் உளங்கனிந்த நன்றி கூறி என் உரையைத் தொடங்குகிறேன்.

இலக்குவனாருக்கும் மதுரைக்கும் நெருங்கிய பிணைப்பு உள்ளமையை மூத்த தலைமுறையைச் சேர்ந்தவர்கள் நன்கறிவர்.மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராக 1959 முதல் 1965 வரை பணியாற்றிப் புகழ்மிக்க வரலாறு படைத்துள்ளார்.

1936-ஆம் ஆண்டு தஞ்சை மாவட்ட நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளிகளில் தமிழாசிரியப் பணி ஏற்றதிலிருந்து 1970-ஆம் ஆண்டு நாகர்கோவில் தென் திருவிதாங்கூர் இந்துக்கல்லூரி முதல்வராக அவர் ஓய்வு பெற்றதுவரை எந்த நிறுவனத்திலும் ஓராண்டு அல்லது இரண்டாண்டுகளுக்கு மேல் பணியாற்றியதில்லை. '"கெடல் எங்கே தமிழின் நலம் அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க""என்னும் குறிக்கோளுடன் போராட்டமே தம் வாழ்க்கைமுறையாக அவர் கொண்டிருந்தமையால் இவ்வாறு அவரது பணி அலைக்கழிப்புக்கு ஆளாகியது.அவர் மிகுதியான காலம் அஃதாவது ஆறாண்டுக் காலம் பணியாற்றிய ஒரே நிறுவனம் மதுரைத் தியாகராசர் கல்லூரிதான்.

அவர் பணியாற்றிய காலத்தில் மதுரைத் தியாகராசர் கல்லூரி "மதுரையின் ஐந்தாம் தமிழ்ச்சங்கம்" என்று போற்றப்பட்டது. பின்னாளில் புகழ்நிறுவிய பேராசிரியர்கள் சுப.அண்ணாமலை, தமிழண்ணல், கதிர்.மகாதேவன், ஔவை நடராசன் முதலியோர் அவர் காலத்தில் இளம் விரிவுரையாளர்களாகப் பணியாற்றி அவரால் உருவாக்கப்பட்டவர்களே. இன்றைய நாடறிந்த கவிஞர்கள் மீரா, நா.காமராசு, அபிபுல்லா, இன்குலாபு, மு.மேத்தா முதலியோர் அன்று அவர் மாணவர்களாகத் திகழ்ந்தவர்கள். மதுரை மகால் நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் வாரம் தோறும் திருக்குறள் வகுப்பு நடத்தினார்.பிறரும் அவ்வாறு வகுப்பு நடத்தத் தூண்டுதலாக,ஒரு முன்னோடியாக விளங்கினார்.மீனாட்சி கோவில் வடக்காடி வீதியிலும் அவர் திருக்குறள் வகுப்பு நடத்தியுள்ளார்.

திருக்குறளைப் பரப்புதற்காக வார விடுமுறை நாள்களில் பட்டிதொட்டியெங்கும் சென்று குறள் பொழிவுகள் நிகழ்த்தினார்.இன்னும் விரிந்து பரந்த அளவில் குறள் சென்று சேர்தற்காக "குறள்நெறி" என்னும் திங்களிருமுறை இதழை 1963-ஆம் ஆண்டு முதல் நடத்தினார். அதற்கு முன்னதாக அவரும் புதுக்கோட்டை அண்ணலார் பு.அ.சுப்பிரமணியனாரும் "குறள்நெறி"யை'த் தனிச்சுற்று இதழாகப் பல ஆண்டுகள் நடத்திவந்தமையே இந்த இதழ் தோன்ற

ஊக்கஊற்றாகத் திகழ்ந்தது என்பதையும் குறிப்பிடுதல் இவ் வரலாற்றை முழுமையாக்கும்.

"Kuralneri—The way of life" என்னும் தலைப்பைத் தாங்கிய ஆங்கில இதழையும் திங்களிருமுறையாக நடத்திவந்தார்.இந்தி எதிர்ப்புப் போராட்டத்தால் தமது பணியை இழந்த சூழலில் தமது குறள்நெறி இதழை நாளிதழாகவே நடத்தவும் துணிந்தார். இவ்வளவையும் இங்குக் கூறுவதற்குக் காரணம் அவர் மதுரையில் வாழ்ந்த காலம் தமிழியக்க வரலாற்றில் அவர் புதிய வரலாறு படைத்தற்கு மட்டுமின்றித் திருக்குறள்பணியிலும் முத்திரை பதித்த காலமாகத் திகழ்ந்தது என்பதனைச் சுட்டிக்காட்டவே எனலாம்.

இலக்குவனாரின் திருக்குறள்பணி அவர் திருவையாறு அரசர் கல்லூரியில் புலவர் வகுப்பு மாணவராகத் திகழ்ந்த பொழுதிலேயே தொடங்கிவிட்டது.அவர் வித்துவான் இடைநிலை வகுப்பு மாணவராக விளங்கிய காலத்தில்(1933) கல்லூரி விடுமுறை நாள்களில் தமது சொந்த ஊருக்குச் செல்வதை விடுத்து, பல்வேறு சிற்றூர்களுக்குச் சென்று குறள்வகுப்பு நடத்தினார்.அவருடன் துணையாகச் சென்று அத் தொண்டில் தங்களையும் ஈடுபடுத்திக் கொண்டவர்கள் (பின்னாளில் கல்லூரி முதல்வராகப் பணிபுரிந்த) அ.கிருட்டிணமூர்த்தி,முருகு இலக்குவன் என்னும் அவரது கல்லூரித்தோழர்கள் ஆவர்.

படிப்பு முடித்துப் பள்ளியில் ஆசிரியப்பணியில் ஈடுபட்டபின்பும் ஆண்டு தோறும் தாம் பணியாற்றிய பள்ளியில், பின்னர் கல்லூரியில் என்று இப் பழக்கம் இறுதிவரை தொடர்ந்தது நாகர்கோவிலில் தெ.தி.இந்துக் கல்லூரியில் முதல்வராகப் பொறுப்பு ஏற்றிருந்தபோது. 1957-ஆம் ஆண்டு திருவள்ளுவர் திருநாளைத் தமிழுலகு பாராட்டும் வண்ணம் சிறப்பாக நடத்தினார்.யானையின் மேல் திருக்குறள் நூலை இருத்தி முன்னே தேசிய மாணவர்படை அணிவகுத்துவரவும் யானையின் பின்னே நகர்ச் சான்றோர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள் தொடர்ந்துசெல்லவும் சென்ற அந்த ஊர்வலம் தமிழ்நாட்டு வரலாற்றில் இன்றுவரை காண இயலாவண்ணம் தனித்தன்மை கொண்டதாகும்.இவ்வாறு சிறப்பாகத் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடுவதன் மூலம் மாணவர்கள் மட்டுமின்றிப் பெற்றோரும் மற்றோரும் திருக்குறளின் பெருமையை உணர வழிவகுக்கும் என்பது இலக்குவனாரின் கருத்தாகும்.

பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்கள் தமிழ்நாட்டில் திருக்குறளை மக்கள் மன்றத்தில் பரப்பப் பெருந்துணை புரிந்தார்.

"தமிழ் இலக்கியங்களில் பெரிதும் பரப்பப்படவேண்டிய ஒரே நீதிநூல், அறநூல்,அறிவுநூல் திருக்குறள் தான் எனத் தந்தை பெரியார் கருதியே அதனை 1949-இல் (15,16/01/1949--இருநாள்கள்) தனி மாநாடு நடத்தி,மிகப் பெரும் தமிழறிஞர்களான நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், தமிழ்த்தென்றல் திரு.வி.க., பன்மொழிப்புலவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், கா.அப்பாதுரையார்,ஏ.சக்கரவர்த்தி நயினார், கந்தசாமிப் புலவர்,திருக்குறள் வி.முனுசாமி போன்ற அறிஞர் பெருமக்களை அழைத்து இருநாட்கள் சென்னையில் குறள்மழை பொழியச்செய்த பின்பே திருக்குறள் புலவர்கள் வீட்டுப் புத்தக அலமாரிக்குள்ளே இருந்து பொதுமக்கள் மன்றத்தை அடைந்து,குறள் கருத்துப் பரவி ஒளிவீசத் தொடங்கியது." (பெரியார் களஞ்சியம்-தொகுதி-37 பக்.iv)என்னும் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது.

இந்த மாநாட்டில் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களும் பங்கேற்றார்.

“விருதுநகர் செந்தில்குமாரநாடார் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள் குறள் மொழிப்படி திருக்குறளை அனைத்துலகுக்கும் எடுத்தோதி அதற்குச் சிறப்பை உண்டாக்கித் தர இப் பெரியார் ஒருவராலேயே முடியும் என்பதை உணர்ந்தே இயற்கையானது திருக்குறளை பெரியார் அவர்களிடம் ஒப்படைத்திருக்கின்றதென்றும், இயற்கை கூட வள்ளுவர் கட்டளைப்படியே நடக்கிறதென்பது வள்ளுவர்க்குப் பெருமை தருவதாகும்" என்று கூறியதாகவும் "அரசியல் நெறியை எடுத்துக் கூறும்போது கூட, வள்ளுவர் அறம் வழுவாது உயர் நெறிகளை எடுத்தோதி இருக்கிறார் என்றும், இன்றைய சர்க்கார் உண்மையிலேயே மதச்சார்பற்ற சர்க்காராக வேண்டுமானால், திருக்குறள் அதற்கேற்ற வழிகாட்டி என்றும் கூறி பழந்தமிழனான வள்ளுவன், புரட்சித் தமிழ் மகனான வள்ளுவன், சீர்திருத்தக்காரனான வள்ளுவன் எழுதிய குறளை யாவரும் படித்து அதன்படி நடந்து இன்ப வாழ்வு வாழ்தல் வேண்டும்" (பெரியார் களஞ்சியம்-பக்.334) என்று பேசியதாகவும் தெரிகிறது.

இம் மாநாட்டில் கலந்துகொண்டதுடன் நில்லாது தாம் பணியாற்றிவந்த விருதுநகரில் பேராசிரியர் சி.இலக்குவனார் மிகப் பெரிய திருக்குறள் மாநாடு நடத்தியுள்ளார்.அவர் விருதுநகரில் திருவள்ளுவர் மன்றம் நிறுவி அதன் செயலராகப் பொறுப்பேற்றிருந்தார் கல்லூரித் தாளாளர் வே.வ.இராமசாமி அவர்கள் அதன் தலைவராகத் திகழ்ந்தார்.

இம் மாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங்கள் “விருதுநகர் குறள் மாநாட்டுத் தீர்மானங்கள்”என்னும் தலைப்பில் பதினாறாம் இயலாக வெளிவந்துள்ளன.(பெரியார் களஞ்சியம்-தொகுதி-37பக்.102-103)இவை இங்குக் குறிப்பிடத்தக்கவை.

விருதுநகர் குறள் மாநாட்டுத் தீர்மானங்கள்

1) இப்பொழுதுள்ள கல்வித்திட்டத்தில் முதல் உயர்நிலைவகுப்பு (பாரம்) தொடங்கி இளங்கலைஞர்(பி.ஏ.)வகுப்பு முடிய திருக்குறள் முழுதும் படித்து முடிக்கும் வகையில் படிப்படியாகப் பாடம் வகுக்குமாறும் அதற்கெனத் தனி வினாத்தாள் (சேக்சுபியர் போல)ஏற்படுத்துமாறும் கல்வித்துறை அதிகாரிகளையும் பல்கலைக்கழகங்களையும் இம் மாநாடு வேண்டுகின்றது.

2) ஆட்சிமன்றங்களில் உறுப்பினராக வருவோர்க்கும் கல்விக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் தலைவராக வருவோர்க்குரிய தகுதிகளில் திருக்குறள் புலமையும் ஒன்றாக வற்புறுத்துமாறு ஆட்சியாளரை வேண்டுகிறது.

3) திருவள்ளுவர் விழாவுக்கென ஒரு நாளைக் குறிப்பிட்டு அரசு விடுமுறை நாளாக்கி அந் நாளை நாடெங்கும் கொண்டாடுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தாரை வேண்டுகிறது.

4) திருக்குறள் பற்றிய விழாக்கள் மாநாடுகள் முதலியவற்றின் நிகழ்ச்சிகளை அறிவிக்குமாறும் ஒலிபரப்புமாறும் திருச்சி வானொலி நிலையத்தாரைக் கேட்டுக்கொள்கிறது.

இந்த் நான்கு தீர்மானங்களும் விருதுநகர்த் திருவள்ளுவர் மன்றத்தாரால் நடத்தப்பட்ட திருக்குறள் மாநாட்டில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் மட்டுமன்று. மாநாட்டை முன்னின்று நடத்திய பேராசிரியர் சி.இலக்குவனாரின் கனவுகள் என்றே கூறலாம்.

காலம் அவற்றை நிறைவேற்றிவைத்துள்ளது,காங்கிரசு ஆட்சிக்காலத்தில் தமிழ்நாட்டு அரசு வைகாசி அனுசம் நாளைத் திருவள்ளுவர் நாளாக அறிவித்தது. அறிஞர் அண்ணாவின் ஆட்சி அமைந்ததும் தை முதல் நாள் தமிழர் திருநாள் எனவும்த இரண்டாம் நாள் திருவள்ளுவர் திருநாளெனவும் கொண்டாடும் வழமை நிறுவப்பட்டு அதனை அரசு அறிவிக்கையாகக் கலைஞர் ஆட்சியில் 1969-இல் அறிவிக்கப்பட்டு அதன்பின் அரசு ஆணையும் பின்னாளில்வெளியானது.

"திருவள்ளுவர் திருநாள்" என்னும் பண்டிகையை தமிழர் யாவரும் கொண்டாட வேண்டும் என்ற தீர்மானத்தை முன்மொழிந்து 1935 சனவரி 17ஆம் தேதி, இதற்கான கால்கோள் இட்டவர்கள், காழி சிவகண்ணுசாமிப் பிள்ளையும், திரு.வ.சுப்பையாவும் ஆவர். அவர்களின் முயற்சியில் "திருவள்ளுவர் திருநாட் கழகம்" எனும் கழகமொன்று அமைக்கப்பட்டு, தமிழகம், அயல் மாநிலங்கள், அயல் நாடுகளில் அதைக் கொண்டாடுவதென்றும் முடிவெடுக்கப்பட்டது.

இந்த நெடிய வரலாறும் திருவள்ளுவர் ஆண்டு, தமிழ்ப்புத்தாண்டு தொடர்பான கருத்துமுரண்களும் இங்கு விரிக்கிற்பெருகும்.

"திருவள்ளுவர் திருநாள் தொடர்பான முன்மொழிவுகளிலும் முயற்சிகளிலும் முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்,ஈழத்தமிழறிஞர் கா.பொ.இரத்தினம் ஆகியோரின் முயற்சிகள் பதிவாயின.ஆனால் பேராசிரியர் சி.இலக்குவனாரின் முயற்சி ஆவணப்படுத்தப் படவில்லை.தமது போர்ப்பண்பால் பல்வேறு நிறுவனங்களுக்கு ஊரூராக அவர் அலைக்கழிக்கப்பட்டமையும் விருதுநகர்த் திருவள்ளுவர் மன்றத்தின் மூலம் அவர் மேற்கொண்ட முயற்சிகள் வரலாற்றில் பதிவுபெறாமல் போயினமையுமே காரணங்கள் எனலாம்.

ஆறாம் வகுப்பு முதல் பட்டப்படிப்பு வரை திருக்குறள் முழுமையும் மாணவப் பருவத்தில் அனைவரும் கற்கும் நிலை வரவேண்டும் என்னும் அவர் கனவு அக் காலத்திலேயே அவினாசிலிங்கம் அவர்கள் கல்வியமைச்சராகப் பொறுப்பேற்றபொழுது தொடக்கம் பெற்றது.

தமிழ்நாட்டு உயர்நீதிமன்றத்தில் மாண்பமை நடுவர் ஆர்.மகாதேவன் மாணவர்களை நல்வழிப்படுத்த வரும் கல்வியாண்டு முதல் திருக்குறளை முழுமையாகக் கொண்ட பாடத்திட்டத்தை நடைமுறைபடுத்த வேண்டுமெனப் பிறப்பித்த (27/4/2016) ஆணை இலக்குவனாரின் கனவை நனவாக்கியது.

மாணவர்களை நல்வழிப்படுத்தும் விதமாக வரும் கல்வியாண்டு முதல் 6 முதல் 12ம் வகுப்பு வரை திருக்குறளின் இன்பத்துப்பால் நீங்கலாக அறத்துப்பால் மற்றும் பொருட்பாலில் 108 அதிகாரங்களில் உள்ள அனைத்துக் குறள்களையும் பாடத்திட்டத்தில் சேர்த்துக் கற்பிக்க வேண்டும். இதற்கென தனியாக பாடத்திட்டத்தை உருவாக்க வேண்டும் என நடுவர் பரிந்துரைத்திருந்தார்.

அதன்விளைவாகப் பள்ளிகளில் குறள்பரப்பும் உயரிய தொண்டினை ஆசிரியர்கள் ஆற்றிவருகின்றனர்.

மலேசியாவின் பள்ளிகளில் திருக்குறளைப் பாடத்திட்டமாக சேர்க்க அந்நாட்டு கல்வித்துறையால் முடிவு செய்யப்பட்டுள்ளமை மற்றொரு திருப்புமையமாகும்.

'வரும் கல்வியாண்டு முதல், 254 அரசு பள்ளிகளில் திருக்குறளை பாடத்திட்டமாக அமைக்க உள்ளோம். ஆரம்பப் பள்ளிகள் மட்டுமின்றி உயர்நிலைப் பள்ளிகள் மற்றும் இரண்டு பல்கலைக்கழகங்களில் திருக்குறளை பாடத்திட்டமாகச் சேர்க்க உள்ளோம்.' என மலேசிய நாட்டின் கல்வித்துறை இணை அமைச்சர் கமலநாதன் (15/3/2015) தெரிவித்துள்ளமை இனித் தமிழ்கூறு நல்லுலகெங்கும் குறள் பரவவேண்டுமென்னும் இலக்குவனாரின் கனவு நனவாகிய மகிழ்ச்சியை நல்குகிறது.

எல்லாரும் இந்நாட்டு அரசர், அமைச்சர் யார்?, திருக்குறள் எளிய பொழிப்புரை, வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, வள்ளுவர் வகுத்த அரசியல் என்னும் தலைப்பில் குறளைப் பற்றிய பல நூல்களைப் படைத்த இலக்குவனாரின் முதல்நூல் "அமைச்சர் யார்" என்னும் தலைப்பிலான நூலாகும்.திருக்குறளின் அமைச்சியலை இக் காலச்சூழலுக்கேற்ப எழுதப்பட்ட இந் நூல் வெளிவந்ததும்(1949) இதனைப் படிக்காமலேயே சிலர் இதனைப் பற்றிய தவறான் முடிவுக்கு வந்துள்ளனர். அப்போது நடந்துவந்த ஆட்சியைச் சார்ந்த அமைச்சர்களை இலக்குவனார் இந் நூலில் குறைகூறியுள்ளார் என்னும் தவறான முடிவுகொண்டு அப்[போதிருந்த சென்னை மாகாண முதலமைச்சருக்குக் கம்பிச்செய்தி அனுப்பியுள்ளனர்.

"இலக்குவனார் கல்லூரிப்பணியிலிருந்துகொண்டே அரசியலில் ஈடுபட்டுவருகிறார். அமைச்சர்களைத் திறனாய்வு செய்து ஒரு நூல் வெளியிடும் அளவு துணிந்து பிழைசெய்கிறார். அவரை உடனே பதவியிலிருந்து நீக்கவேண்டும்." என்பதே அவர்கள் விடுத்த கம்பிச்செய்தி.

அப்போது முதலமைச்சராயிருந்த குமாரசாமி ராசா அவர்கள் உடனே இலக்குவனாருக்கு இரண்டு ரூபாயை விரைவுப்பணவிடை (T..M..O).) மூலம் அனுப்பி அவரது நூலை உடனே தமக்கு (முதலமைச்சருக்கு) அனுப்புமாறு கேட்டிருந்தார். இலக்குவனாரும் அனுப்பிவிட்டார்.

இரண்டு நாள்கள் கழித்து முதலமைச்சரிடமிருந்து இலக்குவனாருக்கு மடல் வந்தது." "உங்கள் நூலை முழுமையாகப் படித்தேன்.மிகச் சுவையாகவும் எளிமையாகவும் திருக்குறள் அமைச்சியலை அறிமுகப்படுத்தியுள்ளீர்கள் .பாராட்டுகள்."என்று முதலமைச்சர் எழுதியிருந்தார்.

தமிழ்நாட்டு வரலாற்றிலே ஒரு நூல் வெளிவந்தவுடனேயே ஒரு முதலமைச்சர் விரைவுப்பணவிடை அனுப்பிப்படித்த நூல் "அமைச்சர் யார்?" என்பது இலக்குவனாரின் குறள்பரப்பும் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி எனக் கூறவேண்டும்.

இந் நூலுக்குத் தமிழ்ப்பெரியார் திரு.வி.க. முகவுரை வழங்கியுள்ளார். திருக்குறளுக்கு இக் காலத்தில் புதுப்புது உரைகள் தோன்றிவருகின்றன. அவற்றுள் பொருந்திவருவன சிலவே. அச் சிலவற்றுள் ஒன்று இலக்குவனார் உரை என அவர் பாராட்டியுள்ளார்.இந் நூலுக்குக் கருத்துரை வழங்கிய குத்தூசி குருசாமி திருக்குறள் இங்ஙனம் புதுமையான முறையில் தொகுத்து அறிமுகப்படுத்தப்படுவது பாராட்டத்தக்கது எனக் கூறியுள்ளார்.

அமைச்சியலின் அதிகாரங்கள் வைப்புமுறை மாற்றப்பட்டு .1.அமைச்சு 2.சொல்வன்மை 3.அவையறிதல்4.அவையஞ்சாமை5.குறிப்பறிதல் 6.வினைத்தூய்மை

7.வினைத்திட்பம் 8.வினைசெயல்வகை 9.தூது 10.மன்னரைச்சேர்ந்தொழுகுதல் என்றிருந்தால் பொருத்தமாக் இருக்கும் என இலக்குவனார் ஆய்ந்துரைத்துள்ளார்.

இலக்குவனாரின் உரையையும் திருக்குறள்விளக்கநூல்களையும் ஆய்வுசெய்து புதுவைத் தமிழமல்லன் பினவருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"இவ்வாறாக இலக்குவனாரின் திருக்குறள் உரை பலவகைகளிலும் சிறந்து விளங்குகிறது.திருக்குறள் உரையை இலக்குவனார் பல்துறைப் புலமையோடு எழுதியிருக்கிறார்.பரிமேலழகர் உரையைச் சில இடங்களில் மறுத்திருக்கிறார். இலக்கணத்தின்துணையோடு பல குறட்பாக்களுக்கு விளக்கம் சொல்லியிருக்கிறார். திருக்குறளை இழிவுபடுத்தும் முயற்சியை அவர் தடுத்திருக்கிறார். தனித்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவதும் சொல்லாய்வால் அதை உறுதிப்படுத்துவதும் இப்பணியில் நிகழ்ந்திருக்கின்றன. முறைவைப்பைச் சில இடங்களில் இலக்குவனார் மாற்றியிருக்கிறார்."

"திருக்குறளுக்கு உரை எழுதிய அவர் வெறும் உரையாசிரியராக மட்டும் தோன்றவில்லை. மன்பதைநலத்தில் சிறந்த அக்கறை கொண்டவராகவும் காணப்படுகிறார். அதற்காக அவர் துணிச்சலாகத் தம் கருத்துக்களை ஆங்காங்கு வெளிப்படுத்தத் தவறவில்லை."என்னும் தமிழமல்லனின் கருத்து இலக்குவனாரின் குறளாய்வுக்குப் பொருத்தமான மதிப்பீடாக விளங்குகிறது.

இலக்குவனாரின் திருக்குறள் ஆய்வு அணுகுமுறைகளாக இ.திருவள்ளுவன் கூறும் முடிபுகளைக் கூறி அவற்றின் வழி அவரது நூல்களைக் கற்றல் நமக்குக் குறளில் மேலும் ஆய்தற்குரிய வழிமுறைகளை விளக்கும்

1. எளிமை
2. நுண்மை
3. பகுத்தறிவுப் பார்வை
4. தமிழ் நெறிப் பின்புலம்
5. பெண்ணுரிமை பேணல்
6. உரையாளர் தவறுகளை நயம்பட மறுத்தல்
7. ஒப்புமைக் கருத்துகளைச் சுட்டுதல்
8. எக்காலத்திற்கும் ஏற்ற உரை
9. தனியர் தாக்குதல் இன்மை
10.கருத்தில் வன்மை
11.நடையில் மென்மை
12.வகுத்தும் தொகுத்தும் விவரித்தல்
13.சொல்விளக்கமும் இலக்கணக் குறிப்பும்

14. அறிவியல்பார்வை

15. புரட்சி எண்ணம்

இவையனைத்தையும் விளக்கிப் பின்னர் விரிவான நூல் எழுதுவேன்.அதற்குரிய தோற்றுவாயாக இந்த உரைவழங்கும் வாய்ப்பளித்தமைக்கு நன்றி.

**“குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்”**

என்னும் இலக்குவனாரின் முழக்கத்தோடு இந்த உரையை நிறைவுசெய்கிறேன். (உலகத் தமிழ்ச் சங்கத்தில் வழங்கப்பட்ட எழுத்துரை)

## குறள்நெறி தழைக்குமே.
(அழ. பகீரதன், இலங்கை)



குறள்தனை மழலையர் ஒப்புவிக்கப் பூரித்து
திறம்என அவையினில் வியந்திட மகிழ்ந்து
குவலய மெலாம்நிறை தமிழோங்கத் திளைத்து
தந்தையரும் தாயரும் பெருமை பேசிடில்
மாந்தருக்கு அஃது மட்டுமே போதுமோ?

சிந்தை தனில் பகுத்துக் குறளினைச்
சீர்பொருளைப் பொதிந்த முத்துக்களை
மாந்தி தற்காலத்திற் பொருத்தி பார்த்தே
கொள்ள விளைந்தீரோ சற்றேனும் ஆய்ந்து!

காமத்துப் பால்வழி நின்று கூடிப்பின்
இல்லறம் நல்லறம் என்றே இணைவாரை
சாதிவெறி மிக்கராய் சங்கடங்கள் செய்வாரெனில்
குறள்நெறி வையகத்தில் எங்கனம் தழைக்கும்?

பகுத்துண்டு பல்லுயர் ஓம்பிட உலகதில்
மாந்தர் யாவரும் சமம் எனமதித்து
யாரையும் யாரும் அடிமை கொளா
அரசொன்று நமக்காய் நாம் அமைத்து
ஏற்றிடோம் எனிற் குறள்நெறி தழைக்குமே.

பொருளுணர்ந்து கற்கின்ற பாங்கினை வியப்பீர்
குறள்நெறி நின்று வாழ்வாரைச் சிறப்பீர்
அறம் பொருள் இன்பம் என்கின்ற மூன்றுமே
வாழ்க்கை விளக்கமதாய் கொண்டே ஏற்பீர்!

## இமயம் தொடுவோம்...
(ச.இராசகுமாரன், அயர்லாந்து)



நின்றோம் நடந்தோம் கிடந்தோம் உழன்றோம்
தின்றோம் திரிந்தோம் உணர்ந்தோம் இல்லை
ஒன்றாய் உணர்வில் உயிர்த்தோம் என்றால்
குன்றாப் புகழுடன் நன்றே எழுவோம்

இன்றா பிறந்தது இன்பத் தமிழ் மொழி
ஒன்றா இரண்டா எப்படிச் சொல்வேன்
தோன்றாப் புகழுடன் தோன்றிற்றென்றே
அன்றே சொன்னார் அறிஞர் பலரும்.

மன்றம் வளர்த்த மாநிலம் தன்னில்
நின்று வளர்ந்த நம் தமிழ்க் கொடையாம்
குன்றாப் புகழுடை வள்ளுவன் தந்த
வென்றோர் போற்றும் திருக்குறள் பாக்கள்

நன்றே அதனை நாம் காக்க வேண்டும்
அன்றும் இன்றும் என்றும் நமையது
கன்றைப்பசு போல் காக்கும் உயர்த்தும்.
இன்றே பயில்வோம் இமயம் தொடுவோம்..



## முன்னுரைத்த நற்குறளே நம்நெறியாம்!
**( தமிழ் இயலன் )**

உலகத்(து) இயல்பை உணர்ந்தே அறிவோர்
பலகற்றுச் சொல்லிடும் பண்பாட்(டு) அறத்தைச்
செழிப்புடன் முன்னுரைக்கும் செம்மைக் குறளே
வழிகாட்டும் உண்மை விளக்கு
(இருவிகற்ப இன்னிசை வெண்பா)

-

# குறள் நெறி

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 3 | மாசி 3, தி.பி 2052 | பிப்பிரவரி 16, கி.பி2021



நாடாளுமன்ற உறுப்பினர் கியூ மெக்தெர்மோத்
(Hugh McDermott MP)



ஆத்திரேலியா நியூ சவுத் வேல்சு பாராளுமன்றத்தில் திருவள்ளுவர் திருநாள்



விழாவில் உரையாற்றிய ஆத்திரேலியத் தமிழருடன் நியூ சவுத் வேல்சு மாநில அமைச்சர் முனைவர் சியோபு லீ




உலகத் திருக்குறள் இணையவழிக் கல்விக் கழகத்தால் வெளியிடப்படும் இணையத் திங்களிருமுறை - பொறுப்பாசிரியர்: மறைமலை இலக்குவனார் இணையாசிரியர்: பேராசிரியர் தமிழியலன்

# உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம்

(International Thirukkural Virtual Institute)

(ஊதியம் கருதாத தன்னார்வத் தொண்டு நிறுவனம்)

திருக்குறளைப் பரப்பவும் குறள்வழிச் சிந்தித்து வாழ்வுமுறையை நெறிப்படுத்திக் கொள்ள ஆற்றுப்படுத்தவும் பல்வேறு குறள் அமைப்புகள் செயற்பட்டுவருகின்றன. இணையதளத்தைப் பயன்படுத்திக் கொண்டு திருக்குறள் கல்வியை மேலும் விரிவாகவும் விளக்கமாகவும் மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெறச் செய்யும் நோக்குடன் உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் (International Thirukkural Virtual Institute) இணையதளத்தில் உலாவரத் தொடங்கியுள்ளது.உலகத் தமிழர்கள் http://kuralvirtual.com/ தளத்தில் இணைந்து பயன்பெற வேண்டும்.

பேராசிரியர் சி.இலக்குவனார் தமது வாழ்நாள் முழுமையும் குறள்நெறிபரப்பும் பணியில் உழைத்துவந்தார். குறள்நெறி என்னும் திங்களிருமுறை இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் இருபது ஆண்டுகளுக்கும் மேலாக வெளியிட்டு மக்கள்மன்றத்தில் ஒரு சிந்தனை மலர்ச்சியை ஏற்படுத்தினார். 1966 மே முதல் திசம்பர் வரை ஆறு திங்கள் நாளிதழாகவும் நடத்தினார்.

இன்றைய சூழலில் சிக்கலும் தடுமாற்றமும் பெருகிவரும் இல்லறம் நல்லறமாக நடைபெறும் வகையிலும் அரசியல்நெறி அறவழி இயங்கும் முறையிலும் நன்னெறி காட்டுதற்குக் குறள்நெறி இதழ் தேவைப்படுகிறது. கட்டுரை, கவிதை, இசைப்பாடல், நாடகம், கதை என அனைத்து வகைமைகளிலும் குறள்விளக்கங்கள் வரவேற்கப்படுகின்றன. உங்கள் அனைவரின் ஒத்துழைப்புடனும் குறள்நெறி இதழ் சிறப்பும் சீர்மையும் வலிவும் பொலிவும் பெற்றுப் பீடுநடையிடும் என்பதில் ஐயமும் உண்டோ? சுவைமிக்க சொல்லோவியங்களுடன் திங்கள் தோறும் முதல் நாளிலும் பதினைந்தாம் நாளிலும் உங்களைச் சந்திக்கக் குறள்நெறி உலா வரவுள்ளது. படியுங்கள்! நண்பர்களுக்குப் பகிர்ந்திடுங்கள்! ஞாலமெங்கும் பரப்புங்கள்!

- பேராசிரியர் முனைவர் தமிழியலன்

இயக்குநர்: மறைமலை இலக்குவனார்
இணை இயக்குநர்: பேராசிரியர் முனைவர் தமிழியலன்
துணை இயக்குநர்(ஒருங்கிணைப்பு): பேராசிரியர முனைவர் பெ.வெற்றிநிலவன்
துணை இயக்குநர்(கல்விப்பணி): முனைவர் திருமதி அ.செயசாலினி இரத்தினமேரி
துணை இயக்குநர்(செய்தித்தொடர்பு): திரு.செ.மன்னர்மன்னன்
துணை இயக்குநர்(மகளிர் தொடர்பு ): திருமதி.தாமரை சீனிவாசராவ்
துணை இயக்குநர்(தொழில்நுட்பம்): பொறியாளர் தி.ஈழக்கதிர்
துணை இயக்குநர்(வடிவமைப்பு): திருமதி சுபா அருணாசலம்
உதவி இயக்குநர்(பெருந்தகைகள் தொடர்பு): திரு. சொ.செ.இளங்கோவன்
உதவி இயக்குநர்(ஊடகப் பிரிவு): திரு.நா.முத்துவேலன்

**அயலக ஒருங்கிணைப்பாளர்கள்**

முனைவர் இர.பிரபாகரன் -அமெரிக்கா
முனைவர் அன்புசெயா (சிட்னி,ஆத்திரேலியா)
பேராசிரியர் மன்னர்மன்னன் (மலேசியா)
கவிஞர் அழ.பகீரதன் (இலங்கை)
பொறியாளர் ச.இராசகுமாரன் (அயர்லாந்து)
திரு.எலியாசு (சிங்கப்பூர்)
திருமதி.மதிவதனி பத்மனாபன்(சுவிட்சர்லாந்து)
திருமதி.தாமரை சீனிவாசராவ் (கம்போடியா)
திரு.ஞானமுருகன் (இங்கிலாந்து)
முனைவர் இராம சுந்தரம் (கொரியா)

***இணையவழி இலவசத் தனிச்சுற்றுக்கு விற்பனைக்கு அல்ல.***

# ஆத்திரேலியா நாடாளுமன்ற வளாகத்தில் முதல் முறையாக "திருவள்ளுவர் திருநாள்"

ஆத்திரேலியாவின் நியூ சவுத் வேல்சு மாநில நாடாளுமன்ற வளாகத்தில் முதல் முறையாக "திருவள்ளுவர் திருநாள்" கொண்டாடப்பட்டது. அதனோடு சேர்த்துத் தமிழர் நாளும், தாய்மொழி நாளும் கொண்டாடப்பட்டது. இந்த நிகழ்வில் சிட்னி வாழ் தமிழர்கள் சார்பில் திரு பொன்ராசு மருத்துவர் கார்த்திக், திருமதி காந்தி தினகரன் ஆகியோர் தமிழிலும் செல்வி மாதுமை கோணேசு,செல்வி கவிதா போல்,செல்வி அபூர்வா ராசு ஆகியோர் ஆங்கிலத்திலும் உரையாற்றினர். திரு பொன்ராசு தம்முடைய தமிழ் உரையின் ஆங்கில மொழியாக்கத்தை நாடாளுமன்ற உறுப்பினர்களுக்குக் கொடுத்துவிட்டுத் தமிழில் பேசியது குறிப்பிட்த்தக்கது.



இவர்களின் உரைக்கு அடுத்ததாக நியூ சவுத் வேல்ஸ் மாநில எதிர்க்கட்சித் தலைவர் முனைவர் சோடி மெக்கே (Dr.Jodi McKay MP) அவர்கள் "திருவள்ளுவரும் திருக்குறளும்" என்கிற தலைப்பிலும், மதிப்பிற்குரிய நாடாளுமன்ற உறுப்பினர் முனைவர் கியூ மெக்தெர்மோத் (Dr.Hugh McDermott MP: State Member for Prospect ) "திருக்குறளும் அதன் பொதுத் தன்மையும்" என்கிற தலைப்பிலும் உரை நிகழ்த்தினார்கள். நியூ சவுத் வேல்சு மாநில அமைச்சர் முனைவர் சியோபு லீ அவர்கள் உரையாற்றியவர்களுக்குச் சான்றிதழ் வழங்கிச் சிறப்பித்தார்.திருக்குறளை நாடாளுமன்றத்தில் கொண்டு சேர்த்துள்ளது ஆத்திரேலியத் தமிழ்ச் சமூகம். முன் நின்று வழி நடத்திய தமிழ் வளர்ச்சி மன்றத்திற்கும் அதன் முன்னோடிகள் முனைவர் சந்திரிகா சுப்பிரமணியம் மற்றும் முனைவர் அன்பு செயா அவர்களுக்கு நன்றியும் வாழ்த்துகளும்.






# பெண்ணின் பெருந்தக்க யாவுள?

-முனைவர் இர. பிரபாகரன் மேரிலாந்து, அமெரிக்கா

*“வள்ளுவரின் கருத்துக்கள் மனுநூலில் பெண்களைப்பற்றியும் மனைவியைப் பற்றியும் கூறப்பட்டுள்ள கருத்துக்களைவிட முற்றிலும் மாறானவை.”மனைவி என்பவள் குடும்ப விளக்கு. அவள் குடும்பத்திற்கு அச்சாணி போன்றவள். அவள் இன்றிக்குடும்பத்தில் எதுவுமில்லை.” என்பது வள்ளுவரின் கருத்து..”*



*தொழில் முனைவோராகவும் சிறந்த மேலாண்மையியல் வல்லுநராகவும் அமெரிக்கநாட்டில் புகழ்வாய்ந்த முனைவர் இர. பிரபாகரன் அவர்கள் சங்க இலக்கியங்களையும் திருக்குறளையும் இணையதளத்தின் மூலமாகவும் தமது நூல்களின் மூலமாகவும் பரப்பிவருபவர். திருக்குறளைப் பல்வேறு கோணங்களில் அணுகும் வினாவிடையுடன் கூடிய இவாது வானொலி உரைகள் அமெரிக்கத் தமிழரிடையே ஒரு புதிய எழுச்சியை ஏற்படுத்திவருகின்றன.*

## வள்ளுவர்பார்வையில் மனைவிக்குரிய மாண்புகள்

மனைவிஎன்ற சொல்லுக்கு மனையை உடையவள் என்று பொருள்.பொருள் தேடுவதற்காகக் கணவன், வீட்டுக்கு வெளியே பணியாற்றுகிறான்.குழந்தைகளுக்கும், கணவனுக்கும், வீட்டில் இருக்கும் மற்ற உறவினர்களுக்கும் தேவையானஉணவு தயாரிப்பது, அவர்களின் நலத்திற்காக உழைப்பது போன்ற பணிகளில் ஈடுபட்டு, மனைவிதன் குடும்பத்தைப் பராமரிக்கிறாள். குடும்பத்திற்கு ஏற்ற நற்குண நற்செய்கைகளோடுஇருப்பது மட்டுமல்லாமல், மனைவி தன்னுடைய கணவனின் வருவாய்க்குத் தகுந்த முறையில்குடும்பச் செலவுகளைக் கண்காணிப்பதிலும் கவனம் செலுத்த வேண்டும் என்றும் வள்ளுவர்கூறுகிறார்.

*மனைக்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. (குறள் – 51)*

ஒருபெண் தன்குடும்பத்தினருக்கு உதவியாகப் பல பணிகளைச் செய்ய வேண்டுமென்றால், முதலில் அவள் தன்உடல் நலத்தைக் காப்பாற்றி மனவுறுதியுடன் இருக்க வேண்டும் என்றும், அவள் தன்புகழையும் தன் குடும்பதினரின் புகழையும் காப்பதில் சோர்வில்லாதவளாகவும் இருக்கவேண்டும் என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

*தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண். (குறள் –56)*

புரட்சிக் கவிஞர்பாரதிதாசன் இயற்றியகுடும்ப விளக்குஎன்னும் காப்பியத்தின் கதாநாயகியாகியமனைவி, தன் குழந்தைகளுக்கு ஏற்ற தாயாகவும், ஆசிரியராகவும், கணவனுக்கு ஏற்றகாதலியாகவும், அகமும் முகமும் மலர்ந்து உறவினர்களை வரவேற்று விருந்தோம்பல்செய்வதில் சிறந்தவளாகவும், குடும்பத்தில்

நோயுற்றவர்களுக்கு மருத்துவராகவும், செவிலியாகவும் சேவை செய்பவளாகவும், குடும்பத்தின் வரவு செலவுகளைக் கண்காணிக்கும் கணக்கராகவும், பல பரிமாணங்களில் பணியாற்றுகிறாள். குடும்ப விளக்கின் கதாநாயகியை, வள்ளுவர் கூறும்வாழ்க்கைத் துணையின் இலக்கணத்துக்கு ஏற்றவளாகப் பாரதிதாசன் தன் காப்பியத்தில்படைத்திருக்கிறார் என்பதுகுறிப்பிடத்தக்கது.

மகளிரைச் சிறையில் அடைத்து வைத்ததைப்போல் காவல் காப்பதனால் எந்தப்பயனும் இல்லை என்றும் அவர்கள் தாமாகவே தங்கள் மனவுறுதியால் தங்கள் கற்பைக் காப்பாற்றிக்கொள்வதேமிகவும் சிறந்தது என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

*பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்*
*திண்மைஉண் டாகப் பெறின்.* *(குறள் – 54)*

*சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்*
*நிறைகாக்கும் காப்பே தலை.* *(குறள் – 57)*

## மனைவியின் நற்குணநற்செய்கைகளின் சிறப்பு

இல்லறத்திற்குஏற்ற நற்குண நற்செய்கைகள் ஒருவனுடைய மனைவியிடத்தில் இல்லாவிடின், அவனது வாழ்க்கை வேறுஎந்த வகையில் சிறப்புடையதாக இருந்தாலும் சிறப்புடையதாகாது. ஒருவனுடைய மனைவி நற்குணநற்செய்கைகள் உடையவளானால் அவனிடம் இல்லாதது எதுவுமில்லை. அந்த மனைவி நற்பண்புகள் உடையவளாகஇல்லையென்றால் அவனிடத்தில் எது இருந்தும் பயனில்லை. தனக்கும் தன் குடும்பத்துக்கும்புகழை விரும்பும் மனைவி இல்லாதவன் தன்னை இகழ்வார்முன் ஏறுபோல் இறுமாப்புடன் நடக்க முடியாது.

*மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை*
*எனைமாட்சித் தாயினும் இல்.* *(குறள் – 52)*

*இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்*
*இல்லவள் மாணாக் கடை?* *(குறள் – 53)*

*புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்*
*ஏறுபோல் பீடு நடை.* *(குறள் – 59)*

சங்கஇலக்கியத்தில், மனைவியால் கணவன் மதிக்கப்படுவதை,

செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ! (புறநானூறு, 3:6)

சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ! (பதிற்றுப்பத்து, 88:36)

போன்றபாடல் அடிகளால் அறிய முடிகிறது. மனைவியால் கணவனுக்குப் பெருமை. அதுபோல் கணவனால் மனைவிக்குப்பெருமை. இல்லற வாழ்க்கையில் கணவனும் மனைவியும் ஒருவருக்கு ஒருவர் துணையாக இருந்து அன்போடுஅறநெறியில் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதுதான் வள்ளுவரின் எண்ணமாகத் தோன்றுகிறது.வள்ளுவர் காலத்திலும் அதற்கு முன்பும், தமிழ்ச் சமுதாயத்தில் மனைவியைக் காட்டிலும்கணவன் பல ஆண்டுகள் மூத்தவனாக இருந்ததால், அவன் மரியாதைக்கு உரியவனாகக் கருதப்படும்வழக்கம் இருந்தது. இன்றும் பல குடும்பங்களில் அத்தகைய வழக்கம் உள்ளது. தன் கணவன் மரியாதைக்குஉரியவன் என்ற காரணத்தினால், அவன் மனைவி அவனை

நாள்தோறும் தொழுவது வழக்கிலிருந்ததாகத்தெரியவில்லை. ஆனால், தெய்வத்தைத் தொழாமல், காலையில் கணவனைத் தொழுது எழும் மனைவி, “பெய்”என்று கூறினால் மழை பெய்யும் என்று வள்ளுவர் கூறுகிறார்.

*தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் மழை.* (குறள் - 55)

வள்ளுவர்காலத்தில், “நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை (மூதுரை – 10)” என்ற கருத்தும், ”மன்னன்செங்கோல் செலுத்தினால் மாதம் மும்முறை மழை பொழியும்” என்ற கருத்தும் நிலவியது.இது போன்ற நம்பிக்கைகளின் அடிப்படையில் வள்ளுவர் இக்குறளை இயற்றியிருக்கலாம். கணவனைமதித்து வாழும் பெண் மிகுந்த பெருமைக்குரியவள் என்பதை வலியுறுத்துவதற்காக உயர்வு நவிற்சியாகவும்இவ்வாறு வள்ளுவர் கூறியிருக்கலாம். உதாரணமாக, தவத்தின் வலிமையைக் கூறும்பொழுது, தவம் என்னும் அதிகாரத்தில், “தவத்தின் ஆற்றல் கைவரப் பெற்றவர்மரணத்தையும் வெல்லலாம் (குறள் – 269)” என்று வள்ளுவர் மிகைப்படுத்திக் கூறுகிறார்.இதுவரை எவரும் மரணத்தை வென்றதாகத் தெரியவில்லை!இக்குறளையும் உயர்வு நவிற்சியாகக் கருதுவதில் தவறில்லை. தெய்வங்களைத் தொழாமல்கணவனைத் தொழுது எழும் மனைவி, ”பெய்யெனப் பெய்யும் மழைக்கு ஒப்பாவாள்” என்று இக்குறளுக்குப்பாரதிதாசன் விளக்கம் அளிப்பதுகுறிப்பிடத்தக்கது.

மிகச்சுருக்கமாக, கீச்சகத்தைப் போல் (கீச்சகம் -Tweet) குறட்பாக்களைத் திருவள்ளுவர் இயற்றியிருப்பதால், குறட்பாக்களுக்குப் பலரும் பலவிதமான உரை எழுத வாய்ப்பு உருவாகிறது. நற்குணநற்செய்கைகளை உடையவனைக் கணவனாகப் பெற்றால், அவன் மனைவி தேவர் உலகில் வாழ்வதைப் போன்றபெருஞ்சிறப்பைப் பெறுவாள் என்று வள்ளுவர் கூறுகிறார்.கணவன் நல்லொழுக்கம் இல்லாதவனாக இருந்தால் பெண்களின்வாழ்க்கை நரக வாழ்க்கையாக இருக்கும் என்பது அனைவரும் அறிந்த உண்மை. அதற்கு மாறாகக்கணவன் நல்லொழுக்கம் உடையவனாக இருந்தால், அவளும் அவள் கணவனும் அன்பும் அறனும் கூடியவாழ்க்கையைப் பண்போடு வாழ்ந்து பயன்பெற்று, தேவருலகத்தில் வாழ்வதைப்போல் வாழலாம் என்பதுபலராலும் ஏற்றுக்கொள்ளத் தகுந்த கருத்து.

*பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்*
*புத்தேளிர் வாழும் உலகு.* (குறள் - 58)

## மங்கலமும் அதன் நன்கலமும்

மனைவியின் நற்குண நற்செய்கைகள் இல்வாழ்க்கைக்கு அழகு. நன்மக்களைப் பெறுவது அந்த அழகுக்கு மேலும்அழகுசெய்யம் அணிகலனாக அமையும் என்பது வள்ளுவரின் கருத்து.

*மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்*
*நன்கலம் நன்மக்கட் பேறு.* (குறள் – 60)

சங்ககாலத்திலும் வள்ளுவர் காலத்திலும், புதல்வரைப் பெறுதல் இல்வாழ்க்கையில் இருப்பவர்களின்கடமையாகக் கருதப்பட்டது. “ஈன்று புறந்தருதல் என் தலைக்கடனே” என்று பொன்முடியார் என்றபெண்பாற் புலவர் புறநானூற்றில்

பாடியிருப்பது (பாடல் 312) புதல்வரைப் பெறுதலின் சிறப்பைக்குறிக்கிறது. எவ்வளவு செல்வம் இருந்தாலும், குழந்தைகள் இல்லையென்றால் வாழ்நாட்கள் பயனற்றவைஎன்பதைப் புறநானூற்றில் பாண்டியன் அறிவுடை நம்பி இயற்றிய பாடலிலிருந்து (பாடல் – 188) உணர முடிகிறது.

## பெண்களைப் பற்றிவள்ளுவரும் மனுவும்

ஒருபெண் தன் இல்லறவாழ்க்கையில் தன் கணவனுக்குத் துணையானவள். அவள் தன் கணவனுக்கு அடிமை அல்ல. கணவனுக்குப் பலவகைகளிலும் உதவி செய்து அவனுக்கு ஏற்ற துணையாக இருப்பது அவள் கடமை. அந்தக் கடமைகளைநிறைவேற்றுவதில் அவள் மகிழ்ச்சியோடு பணிபுரிபவள். அவளுடைய நற்குண நற்செய்கைகளுக்கும்அவள் கற்புக்கும் அவளே பொறுப்பேற்க வேண்டும் என்பதுவே வள்ளுவரின் கருத்து. மகளிரைப்பற்றிய வள்ளுவரின் கருத்து போற்றுதற்குரியது. அவருடைய கருத்து மனுநூலில் (மனுஸ்மிருதியில்) கூறப்பட்டிருக்கும் கருத்துக்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. மகளிரைப் பற்றிய வள்ளுவரின் சிந்தனைக்கும்மனுவின் கருத்துக்களுக்கும் உள்ள வேற்றுமை, இரவுக்கும் பகலுக்கும் – மலைக்கும் மடுவுக்கும் – உள்ளதைப் போன்றது என்பது மனுநூலிலிருந்து கீழே கொடுக்கபட்டுள்ள பகுதிகளிருந்துதெளிவாகத் தெரிகிறது.

• ஆண்களைத் தவறு செய்யத் தூண்டுவதே பெண்களின் இயல்பு. ஆகவே, அறிவுடையோர் பெண்களுடன் இருக்கும்போது கவனக் குறைவாக இருக்கமாட்டார்கள். (எச்சரிக்கையாகவே இருப்பார்கள்) (மனுநூல் - 2:213)

• பெண்கள் ஆண்களின் அழகைப் பற்றியும், வயதைப் பற்றியும் பொருட்படுத்துவது இல்லை. அவன் ஒரு ஆண் என்பது மட்டுமே போதுமானது. அழகானவர்களாக இருந்தாலும் சரி, விகாரமானவர்களாக இருந்தாலும் சரி, எப்படி இருந்தாலும் தங்களை ஒப்படைத்துக் கொண்டுவிடுவார்கள். (மனுஸ்மிருதி - 9:14)

• ஆண்கள் மேலுள்ள ஆசையினாலும், சலனப்புத்தியினாலும், இயல்பாகவே இதயமில்லாதவர்களாக இருப்பதனாலும், பெண்களை அவர்களின் கணவன்மார்கள் எவ்வளவுதான் பாதுகாப்புடன் காத்து வந்தாலும் துரோகமே இழைப்பார்கள். (மனுநூல் - 9:15)

• படைக்கும்போது கடவுள் இத்தகைய இயல்புடன் அவளைப் படைத்துவிட்டான் என்பதை அறிந்து, ஆண்கள் அவர்களைப் பாதுகாக்க கவனத்துடன் செயல்படவேண்டும். (மனுநூல் - 9:16)

• பெண்களைப் படைக்கும்போதே அவர்களுக்கு படுக்கை, இருக்கை, அணிகலன்கள் ஆகியவற்றில் விருப்பம், கேவலமான ஆசைகள், சினம், நேர்மையின்மை, தீய நடத்தை ஆகியவற்றையும் கடவுள்படைத்தார். (மனுநூல் - 9:17)

• இரவும், பகலும் தங்கள் குடும்பங்களைச் சேர்ந்த பெண்களைத் தங்கள் கண்காணிப்பிலேயே ஆண்கள் வைத்திருக்கவேண்டும். அவர்கள் புலன் இன்பங்களில் தோய்ந்தவர்களாதலால், ஒருவர் கண்காணிப்பின் கீழ்தான் அவர்கள் இருக்க வேண்டும். (மனுநூல் - 9:2)

• பெண்கள் குழந்தையாக இருக்கும்போது தந்தையின் பாதுகாப்பிலும், திருமணத்திற்குப் பின் கணவன் பாதுகாப்பிலும், வயதான காலத்தில் மகனின்

பாதுகாப்பிலும் இருக்கவேண்டும். பெண் ஒரு போதும் சுதந்திரமாக இருக்கத் தகுதியற்றவள். (மனுநூல் - 9:3)

• தீய விருப்பங்களுக்கு எதிராக - அவை எவ்வளவுதான் சிறியதாகத் தோன்றினாலும் - பெண்களைக் குறிப்பாகப் பாதுகாக்க வேண்டும். இல்லையெனில் அவை குடும்பங்களுக்குத் துன்பத்தையே தரும். (மனுநூல் - 9:5)

• பெண் குழந்தையாக இருக்கும்போதும், சிறுமியாக இருக்கும்போதும், வயதானவளாக இருக்கும்போதும் சுயமாக எதையும் செய்யக்கூடாது. தன் சொந்த வீட்டிலும்கூட அவள்அவ்வாறு செய்யக்கூடாது. (மனுநூல் - 5:147)

• தன் தந்தை, கணவன் அல்லது பிள்ளைகளை விட்டுத் தனியே வாழ பெண் முயற்சிக்கக் கூடாது. காரணம், இவர்களை விட்டுத் தனியே செல்வதின் மூலம் அவள்இரு குடும்பத்தாருக்கும் அவமதிப்பையே உண்டாக்குகிறாள். (மனுநூல் - 5:149)

• மனைவி, மகன், அடிமை, சீடன், உடன் பிறந்த தம்பி ஆகிய இவர்கள் தவறு செய்தால், கயிறு அல்லது பிரம்பின் மூலம் அடிக்கலாம். (மனுநூல் - 8:299)

• தந்தை யாரிடம் ஒப்படைக்கிறாரோ அல்லது தந்தையின் அனுமதியின் பேரில் தன் சகோதரன் யாரிடம் ஒப்படைக்கிறானோ அவருக்கு, சாகும் வரை அவள் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். அவர் இறந்து விட்டால் அவர் பெயருக்கு களங்கம் ஏற்படுத்தக்கூடாது.(மனுஸ்மிருதி - 5:151)

பெண்களை ஆண்களுக்கு அடிமைகளாகவும், தீய எண்ணங்களும்நடத்தையும் உள்ளவர்களாகவும், கற்பொழுக்கம் இல்லாதவர்களாகவும், தனி ஆளுமைக்கும் சுதந்திரத்திற்கும் தகுதி அற்றவர்களாகவும், பாலியல் பொருட்களாகவும்மட்டுமே மனுநூலில்கூறப்பட்டுள்ளது.

## முடிவுரை

மற்ற சமுதாயத்தைச் சார்ந்த பெண்களைவிடத் தமிழ்ப் பெண்கள் அறிவிலும், ஆற்றலிலும், வீரத்திலும் நெடுங்காலமாகவே சிறந்து விளங்குகிறார்கள். அச்சம், நாணம், மடம், கற்பு ஆகிய நல்லொழுக்கங்கள் தமிழ்ப் பெண்களிடம் இருக்க வேண்டிய நற்குணங்கள் என்று தொல்காப்பியம் கூறுகிறது. அத்தகைய நல்லொழுக்கங்கள் பெண்களிடையே இருந்ததாகச்சங்க இலக்கியத்திலிருந்து அறிகிறோம். வள்ளுவர் “வாழ்க்கைத் துணைநலம்” என்ற அதிகாரத்தில்ஒரு மனைவி பின்பற்ற வேண்டிய நற்குண நற்செய்கைகளை தொகுத்துக் கூறுகிறார். மனைவியை வாழ்க்கைத்துணை என்றும், ஒருவன் பெறக்கூடிய பேறுகளில் எல்லாம் தலையாயது குடும்பத்திற்கு ஏற்ற மனைவி என்றும் வள்ளுவர் கூறுகிறார். வள்ளுவரின் பார்வையில், மனைவியின் மாண்பு குடும்பத்திற்கு அழகு. அந்த அழகுக்கு அணிகலனாக அமைவது, அந்தக் குடும்பத்தின் குழந்தைகள்.

வள்ளுவரின் கருத்துக்கள் மனுநூலில் பெண்களைப்பற்றியும் மனைவியைப் பற்றியும் கூறப்பட்டுள்ள கருத்துக்களைவிட முற்றிலும் மாறானவை.”மனைவி என்பவள் குடும்ப விளக்கு. அவள் குடும்பத்திற்கு அச்சாணி போன்றவள். அவள் இன்றிக்குடும்பத்தில் எதுவுமில்லை.” என்பது வள்ளுவரின் கருத்து. ஆனால், “மனைவி என்பவள் கணவனின்அடிமை. அவள் தீயொழுக்கங்கள் உடையவள். அவளை எப்போதும் காவலிலும் கண்காணிப்பிலும் வைத்திருக்கவேண்டும். அவள் தவறு செய்தால் அவளைப் பிரம்பால் அடிக்கலாம்”, என்று மனுநூல் கூறுகிறது.

# மலாய்மொழியில் திருக்குறள்மொழிபெயர்ப்பும், பல்லினமக்களிடையே அதன்தாக்கமும்

-மன்னர்மன்னன் மருதை, மலாயாப்பல்கலைக்கழகம், மலேசியா

*காவல்துறையின் உயர்அதிகாரியானடத்தோ ஆ. தெய்வீகன் (Deputy Commisioner of Police) அவர்கள்சிறைச்சாலை, காவல்துறை பிறஇனஅதிகாரிகளுக்காக சிலாங்கூர் மாநிலத்தில் ஒருநாள் பயிலரங்கம் (2013 இல்) ஏற்பாடுசெய்திருந்தார். தமிழ்படிக்கத் தெரியாத சிறைக்கைதிகளிடையேயும் குற்றவாளிகளிடையேயும் திருக்குறளின் உயரியபண்புக்கூறுகளை உட்புகுத்த திருக்குறள் மலாய் – ஆங்கில மொழிபெயர்ப்பு பெரிதும் உதவுவதாகக் கலந்துகொண்ட காவல்துறைஅதிகாரிகள் கருத்து தெரிவித்துள்ளனர். அத்தோடு தாங்களும் திருக்குறளின் அறக்கருத்துகளால் ஈர்க்கப்பட்டதாக மலாய், சீன இனங்களைச் சார்ந்த காவல்துறை அதிகாரிகள் மகிழ்வோடு தெரிவித்தனர்.*

---



*மன்னர்மன்னன் (19-02-1954) அவர்களின் தந்தை தமிழாசான் மருதை அவர்கள் தம் மக்களுக்குச் சூட்டிய பெயர்கள் மன்னர்மன்னன், தமிழரசி, கதிரவன், மதிவாணன், கலைச்செல்வன், அமுதவள்ளி, திரவியம், அண்ணாதுரை, நெடுஞ்செழியன், வாசுகி ஆகும். இப்பெயர்களே அவரது தமிழுணர்வுக்கும் திராவிடஇயக்கச் சார்புக்கும் எடுத்துக்காட்டாவன. மலாயாப் பல்கலைக் கழகத்தில், மலாய் இலக்கியத்தில் இளங்கலைப் பட்டமும் (BA Hons) 1991-1995 முதுகலைப் பட்டமும் (MMLS) பெற்ற இப்பெருந்தகை, பதினெட்டாண்டுக் காலம் ஆசிரியப் பயிற்சிக் கல்லுரிகளில் விரிவுரையாளராகப் பணியாற்றி உருவாக்கிய ஆயிரத்தைந்நூறு ஆசிரியர்கள் மலாயா நாடெங்கும் பணியாற்றி வருகின்றனர். இவரது தமிழுணர்வும் இலக்கிய ஆய்வுத்திறனும் இவர்கள் மூலம் அடுத்த தலைமுறைக்குச் செல்வதில் வியப்பில்லை. 2015 முதல் 2017 வரை மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இலக்கியப்பணி ஆற்றுதல். தொடர்ந்து சங்கத்தின் நல்லுரையாளராகச் செயற்பட்டுவருகிறார்.உலகத் திருக்குறள் மாநாடு,உலகக் குழந்தையிலக்கிய மாநாடு எனப் பல மாநாடுகளைப் பொறுப்பேற்றுத் திறம்பட நடத்தியுள்ளார்*

---

‘வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டதமிழ்நாடு’ என்பதற்கொப்ப உலகிற்குத் தமிழுலகு கொடுத்த மிகப் பெரிய கொடை திருக்குறளாகும். உலகின் ஒப்பற்ற அறிவுக்களஞ்சியமான திருக்குறளை; இன்றளவும் தனக்கு ஈடில்லாப் பெருமைசால் அரும்நூலைப் பரவலாக்கம் செய்வதில் மொழிபெயர்ப்பு முக்கியப் பங்காற்றுகின்றது. திறமையான புலமையெனில் அதனை வெளிநாட்டார் வணக்கம் செய்தல் வேண்டும் என்றான் பாரதி. அவனது வாக்கினை மெய்ப்படுத்தும் வகையில் மொழிபெயர்ப்புகள் விளங்குகின்றன என்றால்அதுமிகையாகாது.

திருக்குறள் இதுவரை எழுபதுக்கும் மேற்பட்ட மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. விவிலியம், திருக்குரான் அடுத்து அதிகமான மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட நூலாகத் திருக்குறள் திலங்குகின்றது. விவிலியம், திருக்குரான் ஆகியன சமயநூல்கள்; ஆகவே, திருக்குறளே அதிகமான மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்ட பொதுமறையாக விளங்குகின்றது என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

மலேசியாவைப் பொறுத்தவரையில் திருக்குறளை மலாய்மொழியில் மொழிபெயர்க்கும் முயற்சி 1960இல் தொடங்கியது. கன்னிமுயற்சியாக திரு.ஜி.சூசை என்பவர் திருக்குறளை மலாய்மொழியில் மொழிபெயர்த்தார். அவருடைய மொழிபெயர்ப்பில் வடிவத்திற்கே முக்கியத்துவம் வழங்கப்பட்டிருந்தது. இரண்டு அடிகளையும் ஏழுசீர்களையும் கொண்ட திருக்குறளில் சிலவற்றை அவரோ ஐந்துசீர்களில் மலாய்க் கவிதைவடிவத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து மொழியாக்கம் செய்திருந்தார்.(Soosai (2005). Trilingual Sacred KuralTigaBahasa. Kuala Lumpur : Western Reserve University Centre of Asia.

அடுத்து, மலாயாப் பல்கலைக்கழகத்தைச் சார்ந்த மலாய்மொழித்துறைப் பேராசிரியர் இஸ்மாயில்உசேன் திருக்குறளை மலாய்மொழியில் மொழியாக்கம்செய்தார். (Thirukkural, The great classical Tamil Literature. Translated by Ismail Hussein, Kuala Lumpur, Department of Indian Studies, University Malaya, 1967.) அவரது தாய்மொழி மலாய்; ஆனால் ஆங்கில மொழியிலும் நன்கு பரிச்சயம் உள்ளவர். ஆங்கில மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்ட திருக்குறளை அடிப்படையாகக் கொண்டே அவர் திருக்குறளை மலாய்மொழியில் மொழியாக்கம் செய்தார். தொடர்ந்து மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வியல்துறை மாணவர்கள் அறத்துப்பாலையும், பொருட்பாலையும் மலாய்மொழியில் மொழியாக்கம் செய்தனர். இவை யாவும் பாராட்டுக்குரிய அரிய முயற்சிகளாகும்; ஆனால், எந்தவொரு முயற்சியும் முழுமையாகவும் செம்மையாகவும் அமையவில்லை.

2013இல் நிறைநிலைப்பேராசிரியர் முனைவர் சிங்காரவேலுசச்சிதானந்தம் அவர்களின் திருக்குறள்மலாய் – ஆங்கில மொழிபெயர்ப்பு வெளியீடு கண்டது. நற்றமிழ்அறிஞரான ஆ. சோதிநாதன் அவர்களின் ‘உமாபதிப்பகம்’ இந்நூலைவெளியிட்டுப்பெருமைதேடிக்கொண்டது. இந்நூலின் அறம், பொருள் இரண்டும் மட்டும் அடங்கிய மாணவர்பதிப்பின் ஒருபகுதிச் செலவினை மலேசியஅரசு வழங்கியுள்ளது நன்றியுடன் நினைத்துப் பார்க்கத்தக்கது. தமிழ் – மலாய் – ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் ஆற்றல் மிக்கவர் முனைவர் சிங்காரவேலு. ஆகவே, அவரது மொழிபெயர்ப்பு செம்மையாகவும் சிறப்பாகவும் அமைந்துள்ளது என்பது வெள்ளிடைமலை.

அத்துடன் அவர், தமிழ்அறியாத் தமிழரும், பிறமொழி இனத்தாரும் திருக்குறளைத் தமிழ்மொழியிலேயே உச்சரித்துக் கற்கும்வகையில் உரோம எழுத்திலும் ஒலிபெயர்ப்பு (Transliteration) செய்துள்ளார். இதன்வழி திருவள்ளுவ அய்யனை ஒரு புதியஉலகிற்கு அழைத்துச்சென்றுள்ளார். மலேசியத் தமிழ்கூறு நல்லுலகம் மட்டுமின்றி, மலேசியாவின் பிற இனமொழியினரும் பயன்பெறும் வகையில் இம்மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது. மலேசியநாட்டைப் பொறுத்தமட்டில் நிறைநிலைப் பேராசிரியர் சிங்காரவேலு இருபதுஆண்டு இடையறாத கடின உழைப்பின் வழி திருக்குறளைப் புதிய பரிணாமத்திற்கு இட்டுச்சென்றுள்ளார் .

உலகின் பலநாடுகளில் தமிழர்கள் புலம்பெயர்ந்து வாழ்கின்றனர். அத்தகைய நாடுகளில் மலேசியா ஒரு சிறப்புமிக்க நாடாகத் திகழ்கின்றது. இங்கு வாழ்கின்ற தமிழர்கள் தங்களுடைய மொழியையும், பண்பாட்டையும் ஊக்கத்துடன் பேணிக்காத்து வருகின்றனர். நமது மொழியின் ஒப்பற்ற இலக்கியமான உயரிய நீதி இலக்கியமான திருக்குறளின் உன்னதத்தை நன்கு உணர்ந்துள்ளனர். அந்த உணர்தலின் அடிப்படையிலேயே திருக்குறளை ஒரு வாழ்வியல் நூலாகக் கொண்டு, அதன் அறக் கருத்துகளைப் பரப்ப முனைந்து உழைக்கின்றனர்.

மலேசியக் கல்விஅமைப்பில் திருக்குறளுக்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டுள்ளது. கல்விஅமைச்சின் கலைத்திட்டத்தில், தமிழ்மொழிப் பாடத்திட்டத்தில் .தொடக்கப்பள்ளி முதல் பல்கலைக்கழகம் வரையில் திருக்குறள் கட்டாயமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. தொடக்கப்பள்ளியில் முதலாம் ஆண்டு முதல் ஆறாம் ஆண்டு வரையில் ஒவ்வொரு ஆண்டிற்கும் பத்துகுறள்களைக் கற்பித்தல்வேண்டும். திருக்குறளை ஒட்டிவரும் வினாக்களுக்கு மாணவர்கள் பதிலளித்தல் வேண்டும். அதுபோன்றே இடைநிலைப் பள்ளிகளிலும் முதலாம் படிவத்திலிருந்து ஆறாம்படிவம்வரை திருக்குறள் கட்டாயப்பாடமாகவும் தேர்வுப்பாடமாகவும் அமைந்துள்ளது.

திருக்குறள்களை வெறுமனே மனனம் செய்து ஒப்புவிப்பதை விட அவை கூறும் நீதிக்கருத்துகளை உள்வாங்கிக்கொண்டு வாழ்தலே சிறப்பாகும். அந்தவகையில் மலேசியநாட்டின் இந்தியர்களிடையே, குறிப்பாகத் தமிழ்கற்றதமிழர்களிடையே திருக்குறள் நேர்மறையான பண்புகளை விதைப்பதில் ஆக்ககரமான பங்கினை ஆற்றி வருகின்றது. மலேசியாவில் தொடக்கக்கல்வி பயில்கின்ற இந்தியப்பிள்ளைகளில் ஏறக்குறைய அறுபது விழுக்காட்டினர் தமிழ்ப்பள்ளிகளிலும், நாற்பது விழுக்காட்டினர் மலாய், சீனப்பள்ளிகளிலும் கல்விகற்கின்றனர். மலாய், சீனப்பள்ளிகளிலும் கல்விகற்கின்ற நாற்பது விழுக்காடு மாணவர்கள் தமிழ்கற்காததால் அவர்கள் திருக்குறள் படிப்பதற்கான வாய்ப்பில்லை.

மலேசியஇந்தியர்களிடையே குற்றச்செயல்களும், சமூகச்சீர்கேடுகளும் நாளுக்கு நாள் அதிகரித்து வருவது மிகவும் வருத்தத்திற்குரிய செய்தியாகும். உயரியநீதிகளையும் பண்புகளையும் உலகுக்கு வழங்கிய தமிழினத்தின் இந்நிலைக்கான காரணிகள் யாவை? இவ்வினாவிற்கான பதிலைக் கண்டுபிடிக்க சமூகஆர்வலர்கள் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டனர்; மேற்கொண்டும் வருகின்றனர். தமிழ்ப்பள்ளியில் படித்த இளைஞர்களை விட பிறமொழிப் பள்ளிகளில் படித்த இளைஞர்களிடையே குற்றச்செயல்கள், சமூகச்சீர்கேடுகள் விழுக்காடு ஏற்றமாக உள்ளது.

தமிழ்ப்பள்ளியில் படித்த மாணவர்களிடையே குற்றச்செயல்களும், சமூகச்சீர்கேடுகளும் அறவே இல்லை என்று கூறமுடியாது. ஆனால், தமிழ்படிக்காத பிறமொழியில் மட்டும் கல்விகற்ற மாணவர்களுடன் ஒப்பிடும்போது விழுக்காட்டளவு குறைவாகவே உள்ளது என்பது தெளிவு. திருக்குறள் போன்ற உயரிய நீதிஇலக்கியங்களைக் கற்றதனால் விளைந்தபயனாக இது இருக்கக்கூடுமோ?

இந்தக் கருதுகோளின் அடிப்படையிலேயே நிறைநிலைப் பேராசிரியர் சிங்கார வேலனாரின் திருக்குறள் மலாய் - ஆங்கில மொழிபெயர்ப்பு இங்கு ஆராயப்படுகின்றது.

மலேசிய அரசு வழங்கிய பொருளுதவியோடு வெளியிடப்பெற்ற அறம், பொருள் இரண்டும் மட்டும் அடங்கிய திருக்குறள் மாணவர்பதிப்பு தமிழ்ப்பள்ளி, தேசியப்பள்ளி வேறுபாடின்றி அனைத்து மாணவர்களுக்கும் வழங்கப்பட்டது. உமாபதிப்பகத்தாரின் வெளியீடான நிறைநிலைப் பேராசிரியர் சிங்காரவேலனாரின் திருக்குறள்மலாய் - ஆங்கிலமொழிபெயர்ப்பு கோலாலம்பூரில் பெரியஅளவில் வெளியீடுகண்டது. வெளியீட்டுவிழாவில் நம்மவர்களோடு பிறமொழி அறிஞர்களும், பெருமக்களும் கலந்துசிறப்பித்தனர்.

வெளியீட்டுவிழாவில் திருக்குறளின் மேன்மையைப் பற்றியும், பல்லினமக்கள் வாழும் மலேசியா போன்ற நாடுகளில் திருக்குறள் எத்தகைய மாற்றத்தைக் கொண்டு வரஇயலும் என்பது பற்றியும் கல்விமான் இப்ராஹிம்அஹ்மாட்பாஜூனிட் (Professor Datuk

Dr. Ibrahim Ahmad Bajunid, Vice President, Inti College, Malaysia) விரிவாக எடுத்தியம்பினார். எல்லா மொழித் தகவல்ஊடகங்களும் செய்தியினை விரிவாக வெளியிட்டுத் திருக்குறளுக்குப் பெருமை சேர்த்தன. இதன்வழி நாடு முழுமையும் திருக்குறளின்பால் ஒரு புத்துணர்வும் நாட்டமும் ஏற்பட்டது என்றால் அது மிகையாகாது.

மலேசியநாட்டு, காவல்துறையின் உயர்அதிகாரியானடத்தோ ஆ. தெய்வீகன் (Deputy Commisioner of Police) அவர்கள்சிறைச்சாலை, காவல்துறை பிறஇனஅதிகாரிகளுக்காக சிலாங்கூர் மாநிலத்தில் ஒருநாள் பயிலரங்கம் (2013 இல்) ஏற்பாடுசெய்திருந்தார். அப்பயிலரங்கில் நிறைநிலைப்பேராசிரியர் முனைவர் சிங்காரவேலுசச்சிதானந்தம் அவர்களின்திருக்குறள்மலாய் – ஆங்கிலமொழிபெயர்ப்பு அறிமுகம்செய்யப்பட்டது. நீதிநூலான திருக்குறளின் சிறப்புப்பற்றியும் நூலின் பயன்பாடு பற்றியும் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டது. கலந்துகொண்ட 200 பங்கேற்பாளருக்கும் அரசுசெலவிலேயே அன்பளிப்பாக திருக்குறள்மலாய் – ஆங்கில மொழிபெயர்ப்பு வழங்கப்பட்டது. தொடர் நடவடிக்கையாக பேரா, பினாங்கு ஆகிய மாநிலங்களிலும் டத்தோ ஆ. தெய்வீகன் இப்பயிலரங்கினை வெற்றிகரமாக நடத்தினார்.

குற்றச்செயல்களைத் தடுப்பதற்கும், சமூகச்சீர்கேடுகளைக் களைவதற்கும் திருக்குறள் உறுதுணையாக இருக்கும் என்றநம்பிக்கையிலேயே இந்நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. தமிழ்படிக்கத் தெரியாத சிறைக்கைதிகளிடையேயும் குற்றவாளிகளிடையேயும் திருக்குறளின் உயரியபண்புக்கூறுகளை உட்புகுத்த திருக்குறள்மலாய் – ஆங்கில மொழிபெயர்ப்பு பெரிதும் உதவுவதாகக் கலந்துகொண்ட காவல்துறைஅதிகாரிகள் கருத்து தெரிவித்துள்ளனர். அத்தோடு தாங்களும் திருக்குறளின் அறக்கருத்துகளால் ஈர்க்கப்பட்டதாக மலாய், சீன இனங்களைச் சார்ந்த காவல்துறை அதிகாரிகள் மகிழ்வோடு தெரிவித்தனர்.

மலேசியக் கல்வி அமைச்சும் பல்லினமக்கள் வாழும்நாட்டில் திருக்குறளின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்துள்ளது. திருக்குறள் கல்வி அதிகாரத்தின் மலாய் மொழிபெயர்ப்பு வருகையாளர்களின் பார்வைக்காக கல்வி அமைச்சின் நுழைவாயிலில் பொறிக்கப்பட்டு உள்ளது. இந்த அரும்பணியினை மேற்கொண்ட மலேசியஅரசின் கல்வித்துறை துணைஅமைச்சர் மாண்புமிகு ப. கமலநாதன் அவர்களின் பணி பாராட்டுக்குரியது. ஒவ்வொரு நாளும் கல்விஅமைச்சுக்கு வருகை தரும் நூற்றுக்கணக்கான வருகையாளர்கள் அதனைப் பார்த்து பரவசம் அடைகின்றனர்; திருக்குறளின் மகிமையைக் கேட்டும் உணர்ந்தும் மகிழ்கின்றனர்.

மனிதன் பண்புள்ள மனிதனாக வாழ திருக்குறள் துணைபுரிகின்றது என்பதில் எந்த மாற்றுக்கருத்தும் இருக்கமுடியாது. ஆனால், இந்தத் திருக்குறள் மொழியாக்கம் பல்லின மலேசியச் சமூகத்தினரிடையே எத்தகைய மாற்றங்களைக் கொண்டுவந்துள்ளது என்பதை எங்ஙனம் அறிவது? அதற்கான அளவுகோல் யாது? பொதுப்பணித்துறை எத்தனை சாலைகளை அமைத்தது? எத்தனை பாலங்களைக் கட்டியது என்பதைக் கணக்கிட்டுக் கூற இயலும். ஆனால், சமூகநலத்துறையின் பணிகளைக் கணக்கிட்டுத் துல்லியமாகக் கூறுவது சற்றுச் சிரமமே! அதுபோன்றே திருக்குறள்மொழியாக்கம் மலேசியத்திருநாட்டில் கொண்டுவந்த மாற்றத்தையும் உடனடி கணக்கிட இயலாது. காலம்தான் அதற்கான பதிலைக் கூறும்!

**துணைநூல்கள்**:


1.Thirukkural, SasteraKelasik Tamil yang Agung. Diterjemahkanoleh Ismail Hussein, Kuala Lumpur, JabatanPengajian India, Universiti Malaya, 1967.

2.Thirukkural, (trilingual) Dr. SingaraveluSachithanantham, Kuala Lumpur, Uma Publication, 2013.

3.Soosai (2005). Trilingual Sacred KuralTigaBahasa. Kuala Lumpur : Western Reserve University Centre of Asia.

# “இயல்புடைய மூவர்” யார்?

## பேராசிரியர்சி.இலக்குவனார்

இல்லாளோடு கூடி வாழ்தலே இல்வாழ்க்கை எனப்படும். ‘இல்லாள்’ என்பது னிட்டிற்குரியாள் எனும் பொருளைத்தரும். ‘இல்லான்’ என்பதோ ஒன்றும் இல்லான், வறியன் எனும் பொருள்களைத் தரும். ஆதலின், இல்லத் தலைமைக்குரியவர்கள் பெண்களே எனத் தமிழ் முன்னோர் கருதியுள்ளனார் என்றும் பெண்ணினத்தின் முதன்மையைப் போற்றி வாழ்வியலில் அவ்வினத் தலைமையையும் ஏற்றுள்ள னர் என்றும் தெளியலாம். இல்லறம் செம்மையுற்றால்தான் நாட்டில் நல்வாழ்வு உண்டாகும் பல இல்லறங்களால் அமைந்ததே நாடு. இல்லறங்கள் இன்றேல் நாடு ஏது? ஆட்சி எதற்கு? இல்லறம், நாகரிகத்தின் உயர்நிலையைக் காட்டுவதாகும்; விலங்கு நிலையினின்றும் வேறுபடுத்துவதாகும். நினைத்தவுடன் கூடி வெறுத்தவுடன் பிரிந்து போவது மாக்களுக்கு உரியதேயன்றி, உயர்மக்களுக்கு உரியது ஆகாது. ஒருவனும் ஒருத்தியும் காதலால் பிணிப்புண்டு கடிமணம் புரிந்து கொண்டு

இல்லறப் பொறுப்பேற்று இனிதே வாழத் தொடங்கிய காலம் தான் மாந்தர் உயர்நிலையும் பண்பாடும் உற்ற காலமாகும் "இல்லறமல்லது நல்லறமில்லை" என்று துணிந்துரைத்ததும் அதனாலேயே யன்றே? வாழ்வியல் அறம் கூறப் புகுந்த வள்ளுவர் பெருமான் பாயிரத்தின் பின்னர் ‘இல்வாழ்க்கை’ பற்றி எடுத்துரைத்ததும் இதன் ஏற்றத்தைப்புலப்படுத்தும்.

*"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை."*

இல்வாழ்வான் என்பான்=இல்லற நெறியில் போருந்தி வீட்டிலிருந்து வாழ்பவன் என்று சொல்லப்படுபவன், இயல்புடைய மூவர்க்கும்=தத்தமக்குரிய இயல்புகளைப் பெற்றுள்ள மூவர்க்கும், நல்லாற்றின்=அவர்கள் மேற்கொண்டுள்ள கடமைகளை நிறைவேற்ற மேற்கொள்ளும் நல்வழிகளில்,நின்ற=நிலைத்து நின்ற, துணை=துணைவனாவான்.

### மூவர் யார்?

"பிரமச்சரிய ஒழுக்கத்தான், வனத்தில் சென்று மனையாள் வழிபடத் தவம் செய்யும் ஒழுக்கத்தான், முற்றத் துறந்த யோக ஒழுக்கத்தான்"" என்பர் பரிமேலழகர். இவ்வாறு பிரித்துக் காணுதல் தமிழ் மரபன்று. ‘பிறர் மத மேற்கொண்டு’ கூறியதாகவே பரிமேலழகரும் கூறியுள்ளார். மாணவ நிலை, மனையாளோடு வாழும் நிலை என இரண்டே தமிழர் வாழ்வியல் முறைக்குரியனவாகும்.

"தாய், தந்தை, உறவினர்"" என மூவர் என்பாருமுளர். இம்மூவரும் குடும்பத்துக் குரியராதலின் இவர்க்குத் துணையாவான் என்பதில் சிறப்பின்று.

"புலவர், பாடகர், நடன மாந்தர்"" என்பர் பரிதி. இவர்களும் இல்லற வாழ்வில் இருப்போர் ஆதலின், இவர்கட்கு இல்லற வாழ்வினரால் அளிக்கப்படும் துணை வேண்டற்பாலதன்று. இல்லற வாழ்வு இல்லாதோர்க்குத்தான் இல்லறத்தான் துணை வேண்டும்.

பேராசிரியர் சக்கரவர்த்தி என்பார் தம் சமண சமயக்கோட்பாட்டின்படி ஆசிரியரை அடுத்துப் பயிலும் மாணவர், தமக்கென வீடு இல்லாது உலகத்தை முற்றும் துறவாது துறவு நிலைக்கு ஆயத்தமாவோர், முற்றும் துறந்த மாமுனிவர் ஆய மூவர் என்பார்.இல்லறத்தினை முற்றுந்துறந்து முனிவராக வாழும் நிலையும் தமிழர் நெறிக்கு ஒத்ததன்று. ஆகவே, இம்மூவருள் மாணவர்க்கு உதவுதல் ஏற்புடைத்தே.

வறியராய் இருப்பினும் கற்றல் தவிர்க்க முடியாத ஒன்று.

'பிச்சை புகினும் கற்கை நன்றே' என்றதூஉம் காண்க. இயல்புடைய மூவருள் மாணவர் ஒரு பிரிவினர்.பின்னும் இருவர் யாவர்? பிறர்க்கென வாழும் தொண்டரும் பொருளீட்டி வாழ்தலில் கருத்துச்செலுத்தாது முக்காலத்தையும் அறிந்து உலகுக்கு நல்லன கூறி இன்புறும் அறிவரும் இல்லறத்தாரின் உதவிக்குரியராவார். ஆதலின் இயல்புடைய மூவராவார், **மாணவர், தொண்டர், அறிவர்** என்று கூறுதல் தகும்.

# "இயல்புடைய மூவர்"

-மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர்

*"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை"* *(குறள். 41)*

என்னும் குறளில், "இயல்புடைய மூவர்" என்னும் தொடருக்குப் பரிமேலழகர், "அறவியல்பினையுடைய ஏனை மூவர்க்கும்" என்று தொடருரையும், "ஏனை மூவராவார், ஆசாரியனிடத்தினின்று ஓதுதலும் விரதங் காத்தலுமாகிய பிரமசரிய வொழுக்கத்தானும், இல்லை விட்டு வனத் தின்கண் தீயொடு சென்று மனையாள் வழிபடத் தவஞ் செய்யுமொ ழுக்கத்தானும் முற்றத் துறந்த யோக வொழுக்கத்தானு மென இவர்" என்று சிறப்புரையும் கூறியுள்ளார். இவற்றின் பொருந்தாமைக்குப் பல காரணங்கள் உள.

**முதலாவது**, பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்னும் நால்வகைப் பிராமணிய வாழ்க்கைநிலையைத் தமிழர் ஒப்புக் கொள்ளவில்லை. ஆதலால், வள்ளுவரும் அதை ஒப்புக்கொண்டிலர். தமிழர் வகுத்த வாழ்க்கைநிலையெல்லாம், இல்லறம் துறவறம் என இரண்டே. இல்லறத்தை மேற்கொள்வானின் மாணவநிலை இல்லறத்தின் பாற்படுவதே. துறவறத்தை விரும்புவானின் மாணவநிலையும், உண்மை யின்மை (கூடாவொழுக்கம்), உறுதியின்மை (தொடராமை), ஆகிய காரணங்களால் துறவறத்தின்பாற் பட்டுவிடாது. மனைவியொடு கூடி வாழும் வாழ்க்கை ஒருபோதும் துறவாகாது. இன்ப நுகர்ச்சியாற்ற லழிந்தபின், இன்பத்தை வெறுத்ததாக நடிப்பது, பார்வை யிழந்தபின் படக்காட்சி பாராமையொத்ததே. ஆதலால், உண்மையான அறநிலை தமிழர் கண்டவையே.

**இரண்டாவது**, "இயல்பு" என்பது அதிகாரத்தான் இல்வாழும் இயல்பைக் குறிக்குமேயன்றிப் பொதுவாக அறத்தை உணர்த்தாது. இங்குள்ள அதிகாரம் "இல்வாழ்க்கை" என்பது, பொதுவான அறம் "அறன் வலியுறுத்தல்" என்னும் அதிகாரத்திற்குரியதாம்.

**மூன்றாவது**,

*"துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்*
*இல்வாழ்வான் என்பான் துணை"* *(குறள் .42)*

என்னும் அடுத்த குறளில், துறவியரைக் குறிக்கின்றார் வள்ளுவர். முந்தின குறளில், "இயல்புடைய மூவர்" என்று குறிக்கப்பட்டவருள் துறவியரையும் பரிமேலழகர் அடக்கிவிட்டதனால், இங்கு, "களைகணா னவராற் றுறக்கப் பட்டார்" என்று "துறந்தார்" என்னும் சொற்குப் பொருந்தாப் பொருள் கூற வேண்டியதாயிற்று. துவ்வாதவருள் களை கணானவரால் துறக்கப்பட்டாரும் அடங்குவர். துறந்தார் என்னும் வினையாலணையும்பெயர் செய்வினை வாய்பாட்டிலிருப்பதால், அதற்குத் துறவியர் (உலகப்பற்றைத் துறந்தவர்) என்று நேர்பொருள் கொள்வதே நேரிதாம்.

**நான்காவது**, முற்றத் துறந்த யோக வொழுக்கத்தானை இல் வாழ்க்கை யதிகாரத்தின் முதற்குறளிலேயே குறிக்கத் தேவையில்லை. வள்ளுவர் இல்லறத்தாரை முதற்குறளிற் குறித்துவிட்டுத் துறவறத்தாரை இரண்டாங் குறளிற் குறித்தார் எனவே பொருத்தமாம். இல்லறத்தாருள் ளேயே ஒரு வகுப்பார் ஏனை மூவகுப்பார்க்குத் துணை என்பதை எடுத்துக் காட்டுவதே ஆசிரியர் நோக்கமாம். துறவியர் ஒருதொழிலுஞ் செய் யாமையின், அவர்க்கு இல்வாழ்வான் துணை என்பது வியக்கத் தக்க செய்தியன்று.

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பாற் குடிகளுள், வேளாளரையே இல்லறத்தாருட் சிறந்தவராக எடுத்துக்கொண்டார் திருவள்ளுவர். அந்தணர், முனிவரான துறவறத்தாரும் புலவரான

இல்லறத்தாரும் ஆக இருசாரார். ஒரு நாட்டின் நல்வாழ்விற்கு உழவு, வணிகம், அரசு, கல்வி என்னும் நான்கும் இன்றியமையாதன. இவற்றை நடத்துவோரே, முறையே, வேளாளர், வணிகர், அரசர், அந்தணர் என் போர். வேளாளர்க்கில்லாத அறிவு, அதிகாரம், செல்வம் ஆகிய சிறப்புப் பற்றி, ஏனை மூவகுப்பாரும் நூல்களில் முற்கூறப்பெற்றனர். நகரமக்க ளான பதினெண் தொழிலாளரும் திணைநிலை மாந்தரான குறவரிடையர் செம்படவரும் உழவர்க்குப் பக்கத் துணைவராயிருந்தமை பற்றி, கைத் தொழிலெல்லாம் உழவில் அடக்கப்பெற்றன.

*"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்*
*செந்தண்மை பூண்டொழுக லான்"* *(குறள். 30)*

என்னும் இயல்வரையறைப்படி, அந்தணர் என்பது நீத்தாரையே குறிக்கு மெனினும், கல்வியொப்புமைபற்றி ஆசிரியர் உவச்சர் ஆகிய இல்லறத் தாரும் நாற்பாற் பாகுபாட்டில் அந்தணரொடு சேர்க்கப்பெறுவர். இக் குலங்களெல்லாம் தொழில்பற்றியனவே யன்றி இக்காலத்திற்போற் பிறப்புப் பற்றியவல்ல. மக்கள் உயிர்வாழ்க்கை, அரசியல் வெற்றி, இரப்போர் பிழைப்பு, துறவியல் நிலை ஆகியவற்றிற்கு உழவர் இன்றியமையாதவர் என்பதை,

*"உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்றா(து)*
*எழுவாரை யெல்லாம் பொறுத்து."* *(குறள். 1032)*

*"பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்*
*அலகுடை நீழ லவர்."* *(குறள். 1034)*

*"இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது*
*கைசெய்தூண் மாலை யவர்."* (குறள். 1035)

*"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்*
*விட்டேம்என் பார்க்கு நிலை."* (குறள். 1036)

என்னுங் குறள்களாற் பெறவைத்தார் திருவள்ளுவர். உழவர் எனினும் வேளாளர் எனினும் ஒன்றே. வேளாண்மைக்குச் சிறந்தமையின் உழவர் வேளாளர் எனப்பெற்றார். வேளாண்மையாவது விருந்தோம்புதலும் வேண்டியன கொடுத்துதவுதலும்.

*"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்(கு)*
*ஐம்புலத்தா றோம்பல் தலை."* (குறள். 43)

என்னும் இல்வாழ்க்கையியல்பு வேளாளர்க்கே சிறப்பாம். களத்திற்கண்ட கண்டுமுதலில் ஆறிலொருபங்கை அரசனுக்குக் கடமையாக இறுத்து, எஞ்சியதைத் தென்புலத்தார் தெய்வம் முதலியவர்க்குச் செலவிடுவது வேளாளனுக்கே இயலும். ஏனையரெல்லாம் பெரும்பாலும் குறிப்பிட்ட பணத்தையே வரியாகச் செலுத்துபவரும் வருவாயளவு கண்டுபிடிக்கப் படாத நிலைமையருமாயிருந்தனர்.

இல்வாழ்க்கைக்குச் சொல்லப்பட்ட அறங்களுள் ஒன்றான விருந் தோம்பலைப்பற்றிய அதிகாரத்தில்,

*"வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி*
*மிச்சில் மிசைவான் புலம்."* (குறள். 85)

என்று வேளாளனைமட்டும் ஏன் விதந்து குறிக்கவேண்டும்? பிற தொழில்களைக் குறியாவிடினும், திருவள்ளுவர் செய்து வந்ததாகச் சொல்லப்பெறும் நெசவுத் தொழிலைப்பற்றியாவது,

"பஞ்சும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
எஞ்சல் மிசைவான் கதிர்." என்றோ,

"நூலும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மேலை மிசைவான் தறி. "
என்றோ, கூறியிருக்கலாமே!

"வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்"
என்னும் நல்லாதனார் கூற்றும்,

"செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே-முட்டிபுகும்
பார்ப்பார் அகத்தையெட்டிப் பாரோமே எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்"

என்னும் கம்பர் பாட்டும், விருந்தோம்பும் அறம் வேளாளன் சிறப்பி யல்பு என்றன்றோ காட்டும்!

இனி, பாயிரத்தைச்சேர்ந்த வான்சிறப்பதிகாரத்திலும்,

*"ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்*
*வாரி வளங்குன்றிக் கால்."* (குறள். 14)

என்று வேளாளரையே சிறப்பித்தோதினர் வள்ளுவர். ஆதலால், "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழவிடை விளைப்போர்" ஆன வேளாளரே, இல்வாழ்க்கையருட் சிறந்தவராகத் திருவள்ளுவராற் கொள்ளப் பெற்றனர் என்பது தெளிவாம். குடி [வீடு, குடியிருத்தல், குடியானவன் (உழவன்)] குடிகள் என்னும் தொடர்புடைய சொற்களும், வேளாளனின் சிறப்பை ஓரளவு உணர்த்தும்.

ஆகவே,

*"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை"* (குறள். 41)

என்னுங் குறட்கு இல்லறத்தோடு கூடி வாழ்வதற்குச் சிறந்தவன் என்று சொல்லப்பெறும் வேளாளன், தன்னைப்போன்றே இல்வாழும் இயல்புடைய பார்ப்பான், அரசன், வணிகன் என்னும் ஏனை மூவர்க்கும், அவர்செல்லும் நல்லற நெறிக் கண் நிலைபெற்ற துணையாம், என்று பொருள் கூறுவதே பொருத்தமாம்.

*"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்*
*தொழுதுண்டு பின்செல் பவர்."* (குறள். 1033)

என்னும் குறளும் ஈண்டு நினைக்கத் தகும்.

பார்ப்பான் நூல்களை அல்லது கோயில் வினைகளைப் பார்ப்பவன். ஆகவே, ஆசிரியனும் பூசாரியுமான இல்லறத்தார் பார்ப்பார் என்பதாயிற்று. அந்தணன், பார்ப்பான் என்னும் இரண்டும் தூய தமிழ்ச் சொற்கள். இவை, பிராமணர் வருமுன், துறவியரும் இல்வாழ்வினருமான தூய தமிழரையே குறித்தன; பின்னர்ப் பிராமணர்க்கே வரையறுக்கப் பட்டுவிட்டன. இன்றும், உவச்சர், நம்பி, பண்டாரம், புலவர், போற்றி என ஆங்காங்கிருக்கும் பூசாரியரும், ஆசிரியருமான தமிழரெல்லாம் பார்ப்பாரே. பட்டினத்தடிகளும் தாயுமானவரும் போலத் துறவுபூண்ட தமிழரெல்லாம் அந்தணரே. பார்ப்பான் அல்லது பார்ப்பனன் என்னும் சொல் பிராமணன் என்பதன் திரிபென்றும், அந்தணன் என்பதற்கு ஒத்த பொருட்சொல்லான ஐயன் என்பது ஆரியன் என்பதன் திரிபென் றும் கூறுவதெல்லாம் தமிழரின் பேதைமையை அடிப்படையாகக் கொண்ட ஆரியக் குறும்பேயன்றி வேறன்று.

(1956-ஆம் ஆண்டு, மே, 2ஆம் நாள் தென்காசித் திருவள்ளுவர் கழக ஆண்டு விழாவில் ஆற்றிய தலைமைப் பேருரைச் சுருக்கம்.)

# அறிவும் உயிர்நேயமும்

## தமிழ் இயலன்

“அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தம் நோய்போல் போற்றாக் கடை.” (குறள்-315)

திருவள்ளுவர் மிக அழகாக ஒரு செய்தியை சொல்லிச் செல்கிறார்.

“நான் அறிவிலே வளர்ந்திருக்கிறேன் என்று ஒருவர் சொல்கிறார்”, மிகுந்த பட்டங்களைப் பெற்றிருக்கிறார் அவர் !. மிகுந்த பட்டங்கள், மேலும் பெருநூல்கள் பல படித்திருக்கிறார்.‘அறிவிலே மிகச் சிறந்தவர்’என்று அவரைச் சுற்றி இருக்கிறவர்கள் எல்லாம் போற்றுகிறார்கள்; பாராட்டுகிறார்கள். ஆனால் “அந்த அறிவின் பயன் என்ன? ” என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார் இந்தக் குறளிலே!.

“பிறிதின்நோய் தன்நோய்போல் போற்றாக்கடை”- அதாவது மற்றவர்களின் துயரத்தைத் தன் துயரமாக ஏற்று அவர்களுக்கு உதவி செய்யவில்லை என்றால் அறிவினால் பயன் இல்லை என்பது வள்ளுவரின் கருத்து.

வேறு ஒருவருக்கு அடிபட்டிருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அந்த மனிதருக்கு வருகிற வலியைத் தன்னுடைய வலி என்று ஒருவன் உணருவான் - என்று சொன்னால் அவனை அறிவு பெற்றவர்களின் பட்டியலிலே வைக்கலாம்.

நம்மைச் சுற்றி இருக்கிற யாரோ ஒருவன் வறுமை நிலையில் இருக்கிறான் என்றால், பட்டினியோடு இருக்கிறான் என்றால், மனத் துயரத்தில் இருக்கிறான் என்றால் - அப்படிப்பட்ட நிலையில் அருகிலே இருக்கிற இன்னொரு மனிதனுடைய துயரத்தை உணருகிறவர்கள் தான் கற்றறிந்தவர்கள - அறிவில் நிரம்பியவர்கள்! என்பது வள்ளுவப் பெருந்தகையின் கருத்து.

இங்கு இன்னும் கூட கூர்மையான ஒன்றைக் கவனிக்கலாம்.

வள்ளுவப் பெருந்தகை “பிற மனிதர்களின் நோய்” என்று சொல்லவில்லை. “பிறிதின்நோய்” என்று சொல்வதன் மூலம் இந்த உலகத்தில் இருக்கிற அஃறிணை உயிர்கள் என்று நாம் சொல்லிக் கொண்டிருக்கிற உயிரினங்களின் துயரங்களைக் கூட உணர்பவராக இருக்கவேண்டும் என்பது வள்ளுவப் பெருந்தகையின் உள்ளக்கிடக்கையாகும்.

ஒரு விலங்குக்கு அடிப்பட்டிருந்தாலும், ஒரு பறவைக்குச் சிக்கல் இருந்தாலும், புழு பூச்சிகள் தண்ணீரிலே தத்தளித்துக் கொண்டிருந்தாலும் அவற்றையும் காப்பாற்றுகிற பேரன்பு நிறைந்தவனாக இருந்தால் தான் அவனை அறிவில் சிறந்;தவனாகவும் கற்றறிந்தவனாகவும் கருதுவேன் என்பது வள்ளுவப் பெருந்தகையின் கூற்றாகும்.

எனவே மனிதநேயத்தைக் கடந்த “உயிர்நேயத்தை” இந்தக் குறளிலே வள்ளுவப் பெருந்தகை சொல்லியிருக்கிறார்.ஆதலால் சுற்றியிருக்கிற மனிதர்கள் மீது மட்டுமல்ல சுற்றியிருக்கிற அனைத்து உயிரினங்களின் மீதும் பேரன்பு செலுத்தி அவர்கள் துயரத்திலும், வருத்தத்திலும் இருக்கிறபோது அந்தத் துயரை நீக்குகிற பொறுப்பை ஏற்றுக்கொள்வோம்!

வள்ளுவர்நெறியில் அப்படி நல்லறிவு நிரம்பியவர்களாக உயிர்நேயம் என்ற உயரிய பண்புடையவர்களாக நாம் வாழ்வோம்.

# குறள்நெறி

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 4 | மாசி 17, தி.பி 2052 | மார்ச்சு 1, கி.பி2021



## வெல்க குறள்நெறி

தங்களின் நீண்டநாள் தாகம், தந்தையாரின் குறள்நெறி ஏடு, மின்னிதழாக மலர்ந்திருப்பதைப் பார்த்தும் படித்தும் பெருமகிழ்வு எய்தினேன். தக்கார் பலர் ஒருங்கிணைப்பாளர்களாக அமைந்திருப்பது இதழுக்குச் சிறப்பு. ஏடு நடத்துவது ஒரு நாடு நடத்துவது போன்ற பெரும்பாடு நிறைந்தது.



பெருஞ்சுமையைச் சுமந்துள்ளீர்கள். தங்கள் முயற்சி திருவினையாக வேண்டும். இதழின் அமைப்புமுறை, அறிஞர்களின் படைப்புகள் அனைத்தும் அருமை. நெஞ்சார்ந்த என் மகிழ்வையும் வாழ்த்துகளையும் தெரிவிக்கிறேன்.

**- புலவரேறு பெ.அ. இளஞ்செழியன்**



# உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம்

(International Thirukkural Virtual Institute)

**(ஊதியம் கருதாத தன்னார்வத் தொண்டு நிறுவனம்)**

திருக்குறளைப் பரப்பவும் குறள்வழிச் சிந்தித்து வாழ்வுமுறையை நெறிப்படுத்திக் கொள்ள ஆற்றுப்படுத்தவும் பல்வேறு குறள் அமைப்புகள் செயற்பட்டுவருகின்றன. இணையதளத்தைப் பயன்படுத்திக் கொண்டு திருக்குறள் கல்வியை மேலும் விரிவாகவும் விளக்கமாகவும் மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெறச் செய்யும் நோக்குடன் உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் (International Thirukkural Virtual Institute) இணையதளத்தில் உலாவரத் தொடங்கியுள்ளது.உலகத் தமிழர்கள் http://kuralvirtual.com/ தளத்தில் இணைந்து பயன்பெற வேண்டும்.

பேராசிரியர் சி.இலக்குவனார் தமது வாழ்நாள் முழுமையும் குறள்நெறிபரப்பும் பணியில் உழைத்துவந்தார். குறள்நெறி என்னும் திங்களிருமுறை இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் இருபது ஆண்டுகளுக்கும் மேலாக வெளியிட்டு மக்கள்மன்றத்தில் ஒரு சிந்தனை மலர்ச்சியை ஏற்படுத்தினார். 1966 மே முதல் திசம்பர் வரை ஆறு திங்கள் நாளிதழாகவும் நடத்தினார்.

இன்றைய சூழலில் சிக்கலும் தடுமாற்றமும் பெருகிவரும் இல்லறம் நல்லறமாக நடைபெறும் வகையிலும் அரசியல்நெறி அறவழி இயங்கும் முறையிலும் நன்னெறி காட்டுதற்குக் குறள்நெறி இதழ் தேவைப்படுகிறது. கட்டுரை, கவிதை, இசைப்பாடல், நாடகம், கதை என அனைத்து வகைமைகளிலும் குறள்விளக்கங்கள் வரவேற்கப்படுகின்றன. உங்கள் அனைவரின் ஒத்துழைப்புடனும் குறள்நெறி இதழ் சிறப்பும் சீர்மையும் வலிவும் பொலிவும் பெற்றுப் பீடுநடையிடும் என்பதில் ஐயமும் உண்டோ? சுவைமிக்க சொல்லோவியங்களுடன் திங்கள் தோறும் முதல் நாளிலும் பதினைந்தாம் நாளிலும் உங்களைச் சந்திக்கக் குறள்நெறி உலா வரவுள்ளது. படியுங்கள்! நண்பர்களுக்குப் பகிர்ந்திடுங்கள்! ஞாலமெங்கும் பரப்புங்கள்!

- பேராசிரியர் முனைவர் தமிழியலன்

இயக்குநர்: மறைமலை இலக்குவனார்
இணை இயக்குநர்: பேராசிரியர் முனைவர் தமிழியலன்
துணை இயக்குநர்(ஒருங்கிணைப்பு): பேராசிரியர முனைவர் பெ.வெற்றிநிலவன்
துணை இயக்குநர்(கல்விப்பணி): முனைவர் திருமதி அ.செயசாலினி இரத்தினமேரி
துணை இயக்குநர்(செய்தித்தொடர்பு): திரு.செ.மன்னர்மன்னன்
துணை இயக்குநர்(மகளிர் தொடர்பு ): திருமதி.தாமரை சீனிவாசராவ்
துணை இயக்குநர்(தொழில்நுட்பம்): பொறியாளர் தி.ஈழக்கதிர்
துணை இயக்குநர்(வடிவமைப்பு): திருமதி சுபா அருணாசலம்
உதவி இயக்குநர்(பெருந்தகைகள் தொடர்பு): திரு. சொ.செ.இளங்கோவன்
உதவி இயக்குநர்(ஊடகப் பிரிவு): திரு.நா.முத்துவேலன்

**அயலக ஒருங்கிணைப்பாளர்கள்**

முனைவர் இர.பிரபாகரன் -அமெரிக்கா
முனைவர் அன்புசெயா (சிட்னி,ஆத்திரேலியா)
பேராசிரியர் மன்னர்மன்னன் (மலேசியா)
பேராசிரியர் பெஞ்சமின் லெபோ (பிரான்சு)
கவிஞர் அழ.பகீரதன் (இலங்கை)
பொறியாளர் ச.இராசகுமாரன் (அயர்லாந்து)
திரு.எலியாசு (சிங்கப்பூர்)
திருமதி.மதிவதனி பத்மநாதன் (சுவிட்சர்லாந்து)
திருமதி.தாமரை சீனிவாசராவ் (கம்போடியா)
திரு.ஞானமுருகன் (இங்கிலாந்து)
முனைவர் இராம சுந்தரம் (கொரியா)

***இணையவழி இலவசத் தனிச்சுற்றுக்கு*** ***விற்பனைக்கு அல்ல.***

# தண்டபாணி தேசிகர் அவர்களின் திருக்குறளாய்வு

- பேரா.கு. வெ. பாலசுப்பிரமணியன், அமெரிக்கா

*பத்மபூசண் விருது பெற்ற முதல் தமிழ் அறிஞர் தண்டபாணி தேசிகர் (1903-1990). உ.வே.சாமிநாத அய்யரிடம் பயின்றவர். சென்னைப் பல்கலைக்கழகத்தில் வித்வான் பட்டத்தில் மாநில அளவில் முதலிடம் பெற்றார். தமிழ் ஆராய்ச்சியில் சிறந்து விளங்கியவர்.திருவாரூர் உயர்நிலைப் பள்ளியில் இவர் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றிய போது, கலைஞர் மு.கருணாநிதி இவரது மாணவர். குன்றக்குடி அடிகளாரும் தண்டபாணி தேசிகரின் மாணவர் தான். திருக்குறளில் இவருக்கு இருந்த புலமையால் தமிழக அரசு இவருக்குத் திருவள்ளுவர் விருது வழங்கிப் பாராட்டியது. மதுரைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்விருக்கையிலிருந்து, திருக்குறள் உரைக் களஞ்சியத் தொகுதிகளை வெளியிட்ட பணியும் இவரது அறிவு சான்ற பெருந்தொண்டிற்கு உரைகல்லாக அமைந்தன.*



---

*பேரா.கு. வெ. பாலசுப்பிரமணியன்*
*மேனாள் துறைத் தலைவர்*
*இலக்கியத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர்..*

---

பெருமதிப்பிற்குரிய தமிழறிஞர் தண்டபாணி தேசிகர் அவர்கள் திருக்குறளாய்வில் தலைநின்ற பெருமக்களுள் ஒருவர். அண்ணாமலை, மதுரைப் பல்கலைக்கழகங்களில் திருக்குறள் ஆய்வு மேற்கொண்ட மூதறிஞர். திருக்குறள் பற்றிய இவரது ஆய்வுநூல்களும், கட்டுரைகளும், இவற்றின் மேம்பட மதுரைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்விருக்கையிலிருந்து, திருக்குறள் உரைக் களஞ்சியத் தொகுதிகளை வெளியிட்ட பணியும் இவரது அறிவு சான்ற பெருந்தொண்டிற்கு உரைகல்லாக அமைந்தன. தேசிகர் அவர்கள் தருமபுர ஆதினப் புலவராக இருந்த காலத்தில், அத்திருமடத்தின் கல்லூரியிற் புலவர் வகுப்புப் பயின்றவர்களுக்குத் திருக்குறளைப் பயிற்றுவித்தபோது, பல உரைகளோடும் பொருந்தத் திருக்குறளை ஆராய்ந்து, பன்னிரண்டாண்டுகளின் முடிவில் 1951ஆம் ஆண்டில் 'திருக்குறள் உரைவளம்' என்னும் பெயரில் மூன்று தொகுதிகளை

எழுதியளிக்கத் தருமபுர ஆதீனம் அவற்றை வெளியிட்டது. இவ்வுரை வளத்தின் விரிவே மதுரைப் பல்கலைக்கழக வெளியீடான 'திருக்குறள் உரைக்களஞ்சியம்' ஆகும். இந்த உரைக்களஞ்சியம் மிகப்பெரிய ஆய்வாகும். மூதறிஞர் செம்மல் வ.சுப.மாணிக்கம், இக்களஞ்சியம் குறித்துக் கூறுகையில்,

*"உரைக் களஞ்சியம் பல்வேறு உரைகளின் குவியல் என்று எண்ணிவிடல் வேண்டா. ஒவ்வோர் குறளுக்கும் கிடைத்திருக்கும் உரையெல்லாம் ஓரிடத்துக் குவித்துக் காட்டுவதோடு நில்லாது, அவற்றை நிறுத்துப் பார்க்கும் ஆய்வுப் பெற்றியுடையது. 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்ற குறட்கு ஐந்தவித்தானாய் என எச்சப்பொருள் கொள்ள வேண்டும் எனவும் 'மனத்துக்கண் மாசிலனாதல்' என்ற குறட்கு வ. உ. சி. உரை சிறந்ததெனவும், மாசின்றி வாழும் இல்லறத்தாரும் நீத்தாராவார் என்ற திரு.வி.க. விளக்கம் நுனித்து அறியத்தக்கது எனவும் வரும் இடங்கள் சிறந்த சீர்தூக்குமாம்"*

எனக் கூறுவது எண்ணத்தக்கது.

உரை பார்த்துச் சொல் மாற்றி உரை எழுதுவாரும், இலக்கண நுட்பம் காணாது பிழையுரை செய்வாரும், விரித்தெழுதுவதாகக் கருதிக் கற்றுணரக் கூற அறியாரும், புதுக் கருத்துக் கூறுவதாய் எண்ணி மூல நூற்குப் பொருந்தாதன கற்பிப்பாரும், தம்மினம், சமயம் ஆகியவற்றின் கருத்தை வலியுறுத்தவே மூல நூலைக் கருவியாகக் கொள்வாரும் மலிந்த நிலையில், பல்லுரைகளையும் பயின்ற தெளிவில் அவற்றைத் தொகுத்தும், அவற்றை ஆய்ந்தும், திருக்குறள் தொடர்களுக்கு ஒப்புமை காட்டியும், கொள்ளத் தக்கவுரை இன்னது என முடிவு காட்டியும் அமைந்த இவ்வுரைக் களஞ்சியம், திருவள்ளுவர் ஆணையிற் கிளந்த மறைமொழியை மாத்திரை முதலா அடிநிலைகாறும் ஒழியாது நோக்கி நுண்பொருள் காணும் சிறப்புடையது.

## உரைக்களஞ்சிய நுட்பங்கள்

திருக்குறளுக்குக் காலந்தோறும் பற்பல உரைகள் பிறந்துள்ளன. பலர்க்கு உரையெழுதுவதே எளிய பணியாக இருந்த நிலையில், நெல் குத்தாது உமி குத்திய நிலையும் சேர்ந்திருக்கிறது. அறிஞர் தம் உரையில் கருத்து வேறுபாடுகள் தோன்றியுள்ளன. மகாவித்துவான் தேசிகர், 38 உரைகளை ஆராய்ந்தும் ஒப்பிட்டும், சரியான உரைகளைத் தேர்ந்தும், ஒன்றும் தேர்ந்து கொள்ளா நிலையில் புத்துரை பயந்தும்

திருக்குறட் பணியில், என்றும் அழியாத ஆழ்ந்த தடம் கண்டுள்ளார். அவர் கண்டுள்ள உரைகள் சில இங்குக் காட்டப் பெறுகின்றன.

'இயல்புடைய மூவர்' என்பதற்கு, பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி என்றும், மூவேந்தர் என்றும், சைவ, வைணவ வைதிகர் என்றும், பார்ப்பான், அரசன், வணிகன் என்றும், துறந்தார், துவ்வாதார், இறந்தார் என்றும், பலப்பல உரை தருவர் உரையாசிரியர் பலர். இவற்றின் பொருத்தமின்மை கருதித் தேசிகர், காக்கப் பெறும் இளையர், காப்பிழந்த காரிகையர், இயலாத முதியர் என உரை காண்பர். இன்றும் காப்பகங்கள் இவர்களுக்கே அமைதலை எண்ணலாம்.

'அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான் கேடும் நினைக்கப்படும்' என்பதற்கு 'ஆராயத்தக்கவை' பழவினை எனத் துணியப் பெறும்' நினைக்கக் கெடும் – இமைப்பிற் கெடும்' என்றவாறு உரை எழுதினர் பலர். செவ்வியான் சோம்பியிருந்து கெடுதலும், அவ்விய நெஞ்சத்தான் முயற்சியான் ஆகி ஆக்கமுறுதலும் ஆராய்ந்து அறியப்படும் என்றும் தேசிகர் உரை பொருந்துவது.

ஒப்புரவறிதலில், ஊருணி, பயன்மரம், மருந்து மரம் என்னும் மூன்றும் உவமையாகக் காட்டப் பெறுகின்றன. இதற்கு வேறுபட்ட பல உரைகள் தோன்றியுள்ளன. எல்லாவற்றையும் சீர்தூக்கிய பின், மகாவித்துவான் "நீர் குடிக்க வருபவன் தேவை நோக்கி வருகிறான்; பழம் கருதி வருபவனுக்குத் தேவை இல்லாதும் வருகிறான்: மருந்து கருதி வருபவன் நோய் தீர்க்கும் இன்றியமையாமை கருதி வருகிறான். வருபவன் எத்தன்மையனாயினும் அவன் நிலை நோக்காது தன்னிலை தாழாமல் உதவுதலே ஒப்புரவு' என்று நயந்தோன்ற விளக்குவர்.

'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்னும் குறட்பாவிற்குப் பலரும் தாம் கொண்ட உணவைப் பசித்த உயிர்களோடு பகிர்ந்துண்ணல்' என உரை கண்டனர். இங்குத் தேசிகர் எழுதும் விளக்கம் கருதத்தக்கது.

'இக்குறள் உணவைப் பகிர்ந்துண்டு உயிர்களைப் பாதுகாத்தல் வேண்டும் என்கிறது. இது 'ஈகை'யில் இடம் பெறலாம். ஈண்டு இடம் பெறுதல் இயைபுடையதாமோ எனின், கத்தி முதலிய கருவிகளாற் கொல்லுதலைப் போல், உண்ணாமையால் உயிர்களை இறக்க விடுவதும் கொலையாம் என்பார். இங்ஙனம் கூறினார் என்க. தான் குத்தி வெட்டிக் கொல்வது தான் கொலை என்று எண்ணிவிடக் கூடாது. தன்னிடம் உணவுப் பொதியிருக்க, அவற்றைப் பகிர்ந்தளித்து

உண்ணாமல், தானே உண்டுவிட்டு உயிர்களை உயிர் துறக்க விடுதலும் பாவமாம் என்பார். இங்ஙனம் கூறினர் என்க.”

என்று கூறுவது கருதத்தக்கது.

இறைமாட்சி அதிகாரத்தில் ‘அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும்” என்று கூறியவர் அடுத்த குறளில் ‘தூங்காமை, கல்வி, துணிவுடைமை இம்மூன்றும்’ என்கிறார். அஞ்சாமையும் துணிவுடைமையும் ஒன்று தாமே என ஐயம் தோன்றும். துணிவு என்பதற்குப் பரிப்பெருமாள் ஒரு பொருளை ஆராய்ந்து துணிதல் என்றார். தேசிகர் ஐயா, “அஞ்சாமை முதலியன உயிர்க்குணம்; தூங்காமை முதலியன தொழிற்குணம்” என வரையறுத்தார்.

‘படர்மெலிந்திரங்கல்’ அதிகாரத்தில் காமக்கடலை நீந்துவதற்குரிய ‘ஏமப்புணை’ இல்லை என்று கூறப்படுகிறது. ஏமப்புணை என்பதற்கு ஏற்றபுணை, தெப்பம், இறுதி, மிதவை, அரணாகிய புணை என்றெல்லாம் உரையாசிரியர்கள் கூறினர். தேசிகர்

“ஏமப்புணை – புணை ஒன்றிருக்கவும் அது கெட்ட விடத்து அல்லது உடைந்தவிடத்து உதவும் ( Life boat ) என்பதை உணர்த்தும்.”

என்று கூறுவது நயமிக்கது.

பழைய உரையாசிரியர்களையும், பிற்கால உரையாசிரியர்களையும் கொண்டு திருக்குறளின் உண்மைப் பொருள் அறிவது எங்ஙனம் என்பதற்குத் தேசிகரின் தொகுப்புகள் மிகப்பெரிய அறிவுக் கொடையாகும். இப்பெரியாரின் திருக்குறள் உரைக்களஞ்சியம் காட்டும் பாட வேறுபாடுகளும், ஒப்புமைப் பகுதிகளும், திருக்குறளை மேலும் தெளிவுறுத்துவன.

திருக்குறளில் ஆழ்ந்தவர், திருமுறையில் தோய்ந்தவர், சித்தாந்தத்தில் தெளிந்தவர் எனப் பல அறிவுப் பரிமாணங்களைப் பெற்ற மகாவித்துவான் தண்டபாணி தேசிகர், திருக்குறளாய்வில், ஓங்கியுயர்ந்த புகழீட்டிய சான்றோர் என்பதை அவரது உரைக் களஞ்சியம் நன்கு புலப்படுத்துகின்றது.

# பட்டிமன்றம் ஓர் வரலாறு

## - பேராசிரியர் கண.சிற்சபேசன்

*இன்று தொலைக்காட்சி அலைவரிசைகளில் கோமாளிக்கூத்தாக்க் காட்சிவழங்கும் பட்டிமன்றத்துக்குப் பெருமிதம் மிக்கநெடியவரலாறு உண்டு.மெய்ப்பொருளியல் துறையில் புதிய கருத்துகளை உருவாக்கியோரும் பரப்பிவருபவரும் தத்தம்கருத்துகளை நிலைநாட்டப் பட்டிமறம் நிகழ்த்திய பாங்கினை மணிமேகலை வழி அறிகிறோம்.பல நேரங்களில் சமயக் கருத்துகளப் பரப்பவும் இதுவொரு குறுக்குவழியாக அமைந்திருந்த்து..தமிழ் மறுமலர்ச்சிக்காலமாகிய இருபதாம் நூற்றாண்டில் சங்க இலக்கியம்,திருக்குறள்,சிலப்பதிகாரம் எனச் செவ்வியல் இலக்கியங்களப் பரப்புதற்குப் பெரிதும் உதவியது.கோவில்களின் சார்பில் நடக்கும் விழாக்களில் இராமாயணம்,பாரதம் ஆகியவை பற்றிய பொருண்மைகளில் பின்னர் இஃது பெருவழக்குப்பெற்றது. இன்றோ பொருளற்ற பொருள்களில் பொருளுக்காக நடக்கும் வெட்டிமன்றமாக வீழ்ச்சியடைந்துவிட்டது. இப் பட்டிமன்றப் பொழிவில், அறுபதுகளில் கோலோச்சிவந்த பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் திருக்குறள் தொடர்பான பட்டிமன்றங்களின் வரலாறு குறித்து ஒரு தொடர்கட்டுரயை வழங்கவுள்ளார்.அதன் முதற்பகுதி இங்கு வெளிவருகிறது.*

தமிழ் இலக்கியங்களைப் பரப்பப் பட்டிமன்றங்கள் பெரிதும் துணை நிற்கின்றன என்பதைத் தமிழக இலக்கிய வரலாறு நன்கறியும். தமிழகத்தில் கடந்த 70 ஆண்டுகளுக்கு மேலாகப் பட்டிமன்றங்கள் மக்களால் பெரிதும் வரவேற்கப்பட்டு வருகின்றன. இதில் வியப்பு என்னவென்றால் கற்றவரையும் கல்லாதவரையும் இவை களிப்புறுத்துவதுதான். இலக்கிய மேடைகள் தவிர, சிற்றூர்களில் நடைபெறும் சமய விழாக்களில்கூட பட்டிமன்றங்கள் பெரிதும் விரும்பப்படுகின்றன. இந்த வகையில் பல இலக்கியப் பட்டி மன்றங்களை நடத்தும் வாய்ப்பினை நான் பெற்றேன். அவற்றுள் பெரும்பாலன கம்பராமாயணம், மகாபாரதம், சிலப்பதிகாரம், பெரியபுரானம் போன்ற இலக்கியங்களைச் சார்ந்தவையாகத்தாம்

இருக்கும். அவற்றினூடே திருக்குறளைப் பொருளாகக் கொண்டு அரங்கேறிய பட்டிமன்றங்கள் மிக மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டமை வியப்பினும் வியப்பிறந்தற்றே! சமுதாய நலக்கருத்துக்களை நடுவாகக்கொண்ட பட்டிமன்றங்களும் விரும்பிச் சுவைக்கப்பட்டன என்பதும் அதனினும் வியப்பு! அவற்றில் தமிழ்ப் பேரறிஞர் பலர் என்னுடன் கலந்துகொண்டு சிறப்பித்தனர். அவர்களையெல்லாம் இப்போது நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

இவற்றைப் பற்றிய வரலாற்றை எங்கள் பேராசிரியர் இலக்குவனார் ஐயா அவர்கள் நிறுவிய குறள் நெறி இணைய வழி இதழில் எழுதுவதில் மகிழ்வு கொள்கிறேன். எங்களூரில் திருவள்ளுவர் கழகத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் நடுவராக இருப்ப ஐயா இலக்குவனாரும் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும் கலந்துகொண்ட பட்டிமன்றங்களும் என் நினைவில் எழுகின்றன. அதேபோல அடிகளார் தலைமையில் நானும் திருக்குறள் முனுசாமி ஐயா அவர்களும் கலந்து மகிழ்ந்தவையும் உண்டு.

பட்டிமன்றத்திற்கு முதன்முதலில் வடிவம் கொடுத்த பெருமை கம்பனடிப்பொடி சா.கணேசனாரையே சாரும். அதற்கடுத்து எங்களூர் தேவகோட்டாயில் ஏறத்தாழ 75 ஆண்டுகளுக்கு முன் தோற்றுவிக்கப்பட்ட கந்தர்சட்டி முருக விழாவில் புலவர் அவை என்ற பெயருடன் பட்டிமன்றம் ஏற்றம் பெற்றது. அன்றைக்குத் தமிழ்வளர்த்த சன்றோர் பலரும் இவற்றில் பங்கேற்றுப் புகழ்சூட்டினர் புகழ் சூடினர். தமிழ்க்கடல் இராய.சொக்கலிங்கனார், பெருஞ்சொல் விளக்கனார் அ.சரவண முதலியார், வாகீச கலாநிதி கி.வா,செக்கனாதர், பேராசிரியர்கள் பன்மொழிப்புலவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், சீனிவாசகராகவன், இராமகிட்டினன், அ.ச. ஞானசம்பந்தன், பால் நாடார், வ.சுப.மாணிக்கனார் போன்றோர் இவற்றில் பங்கேற்பர். பிறகு தவத்திரு குன்றக்குடி அடிகளார் நடுவராகப் பொறுப்பேற்றார். சமுதாயத் தொடர்பான தலைப்புகளில் முதன்முதல் பட்டிமன்ற நிகழ்ச்சிகளை அறிமுகப்படுத்தியவர் அடிகளார் அவர்களே. இப்பொற்காலத்தில் நுழைந்த எனது பட்டிமன்ற வரலாற்றைத் தொடர்ந்து பார்க்கலாம்.

# வள்ளுவர் பார்த்து வியந்த பேரழகி

- **மன்னர்மன்னன்மருதை, மலேசியா**



*மன்னர்மன்னன் (19-02-1954) அவர்களின் தந்தை தமிழாசான் மருதை அவர்கள் தம் மக்களுக்குச் சூட்டிய பெயர்கள் மன்னர்மன்னன், தமிழரசி ,கதிரவன், மதிவாணன் ,கலைச்செல்வன்,அமுதவள்ளி ,திரவியம், அண்ணாதுரை, நெடுஞ்செழியன்,வாசுகிஆகும்.இப் பெயர்களே அவரது தமிழுணர்வுக்கும் திராவிடஇயக்கச் சார்புக்கும் எடுத்துக்காட்டாவன.*

*மலாயாப் பல்கலைக்கழகத்தில், மலாய் இலக்கியத்தில் இளங்கலைப் பட்டமும் (BA Hons) 1991-1995 முதுகலைப்பட்டமும் (MMLS) பெற்ற இப் பெருந்தகை, பதினெட்டாண்டுக் காலம் ஆசிரியப் பயிற்சிக் கல்லுரிகளில் விரிவுரையாளராகப் பணியாற்றி உருவாக்கிய ஆயிரத்தைந்நூறு ஆசிரியர்கள் மலாயா நாடெங்கும் பணியாற்றி வருகின்றனர்.இவரது தமிழுணர்வும் இலக்கியஆய்வுத் திறனும் இவர்கள் மூலம் அடுத்த தலைமுறைக்குச் செல்வதில் வியப்பில்லை. 2015 முதல் 2017 வரை மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இலக்கியப்பணி ஆற்றுதல். தொடர்ந்து சங்கத்தின் நல்லுரையாளராகச் செயற்பட்டுவருகிறார்.உலகத் திருக்குறள் மாநாடு,உலகக் குழந்தையிலக்கிய மாநாடு எனப் பல மாநாடுகளைப் பொறுப்பேற்றுத் திறம்பட நடத்தியுள்ளார்.*

‘கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு’

என்பது பொருட்பாலிலே ஐம்பத்துஏழாம் அதிகாரமாய் மிளிரும் கண்ணோட்டம் எனும் அதிகாரத்தின் முதற்குறள்.

கண்ணோட்டம் எனும் பண்பையே பேரழகு எனும் உரைக்கும் திருவள்ளுவர், அப்பண்பை ஓர் அழகிய பெண்ணாக உருவகித்து கழிபெருங்காரிகை எனக்கூறுகின்றார். கழி, பெரும் என்னும் இரு சொற்களைக் கொண்டு ஈரடையாகவும் பண்பாகுபெயராகவும் ஆட்சிசெய்யப்பட்டிருப்பது மெய்யாகவே ஒரு முருகியல் உணர்வினைத் தோற்றுவிக்கினறது.

கண்ணோட்டம் என்று சொல்லப்படுகின்ற மிகச் சிறந்த அழகு இருக்கும் கரணியத்தால்தான் இந்த உலகம் அழியாமல் இருக்கிறது எனும் பொருள்பட அமைந்த இக்குறளில் ‘கண்ணோட்டம்’ என்ற ஓர் அற்புதமான ஆழ்ந்தகன்ற நுண்ணிய பொருட்செறிவு மிக்க சொற்றொடரின் விழுமியத்தைப் பற்றிச் சற்றுச் சிந்திப்போம்.

கண்ணோட்டம் என்பது பிறரது துயரங்கண்டு இரங்கும் பண்பையும் பிறர்குற்றத்தை மன்னிக்கும் பெருந்தன்மையையும் குறிப்பதாக உரையாசிரியர்கள் விளக்குவர். கண்ணோட்டம் என்ற சொல் இரக்கம் காட்டுதல் என்ற பொருளிலேயே ஆளப்பட்டுள்ளது. அது கண்ணின் வழியாக அன்பைச் செலுத்துதல் என்ற பொருளில் நின்றது என்பார் பேராசிரியர் தமிழண்ணல்.

ஆகவே, கண்ணோட்டத்தின் மூலக்கூறே அன்புடைமைதான். வள்ளுவப்பேராசான் வகுத்தளித்த பேரறக்கோட்பாட்டின் விழுதுகளாய் அமைந்த அன்புடைமை காட்டும் அகத்துறுப்பின் வெளிப்பாடுதான் கண்ணோட்டம். அறப்பண்புகளில் முதன்மையாகத் திகழ்வது கண்ணோட்டம். அறப்பண்புகளையே வள்ளுவப்பெருந்தகை மக்கட்பண்பு என்பார். அவ்வகையிலே கண்ணோட்டம் என்பது அன்பும் இரக்கமும் கொண்ட கண்ணின் உயிரோடு பிணைந்த பண்பைக் குறிக்கும்.கண்ணின் வழி வெளிப்படும் ஒளிபொருந்திய பார்வை, ஈரப்பார்வை என்றுகூட வழங்கலாம்.

அன்புற்ற ஒருவரைக் காணும்போது மனம்இளகி அவர்கள் துன்பத்தைக் களைதலையும் குற்றஞ்செய்த ஒருவர்பால் இயல்பாக

இரங்கி, குற்றத்தைப் பொறுத்தலையும் கண்ணோட்டம் என வள்ளுவர் குறிக்கின்றார்.

‘கடுஞ் சொல்லின் கண்ணிலன் ஆயின்
நெடுஞ்செல்வம் நீடின்று ஆங்கேகெடும்’

எனும் குறட்பாவிலே கண்ணிலன் என்பது கண்ணோட்டம் இல்லாமல் இருப்பதையே காட்டுகின்றது. தொடர்ந்து ‘உண்மையான் உண்டிவ்வுலகு’ எனவரும் முதற்குறட்பாவின் இறுதித்தொடர் கண்ணோட்டம் உள்ளமையால் இவ்வுலகம் இருக்கின்றது என்ற பொருளை நயம்பட உரைக்கின்றது.

உலகஇயக்கம் ஒருவரை ஒருவர் சார்ந்து ஒழுகும் பண்பால் நிலைபெறுகிறது. கண்ணோட்டம் உள்ளவர்கள் வாழும் இடத்தில் அச்சமின்றி வாழவகை ஏற்படுகிறது. அதனால்தான் உலகநடைமுறையானது கண்ணோட்டம் இருப்பதால்தான் நிகழ்கிறது எனும் கருத்தை ‘கண்ணோட்டத்துஉள்ளதுஉலகியல்’ என வள்ளுவர் வலியுறுத்திக் கூறுகின்றார்.

கண்ணோட்டம் எனும் சொல்லை ஆங்கிலத்திலே மொழிபெயர்த்த அறிஞர்கள் ‘Human Consideration’ என்றும் ‘Ongracious Compassion’ என்றும் நயம்பட மொழிபெயர்த்துள்ளனர். மேலும்ஆங்கிலஅகரமுதலியில் ‘Gracious’ என்ற சொல்லுக்கான பொருள் விளக்கம் இங்ஙனம் மொழியப்பட்டுள்ளது.

‘Being gracious means choosing kindness and courtesy over harshness. Gracious people are tactful, delicate, and generous even when they have lost everything.

‘Being around a gracious person makes us feel better and makes us act better. The world becomes kinder and gentler even in the amid of confusion.’

இந்த ஆங்கில விளக்கத்தை முழுவதுமாகவும் அதற்கும் மேற்சென்று உளவியல் (Psychology) சமூகவியல் (Sociology) பாங்கிலும் மட்டுமின்றி உலகியல் சார்ந்த பார்வையிலும் நம் அய்யன் திருவள்ளுவப் பேராசான் கண்ணோட்டம் பற்றி விளக்கியிருப்பது படித்துப்படித்து இன்புறத்தக்கது; உய்த்துணரத்தக்கது.

வாழ்கவள்ளுவம்! ஓங்குககுறள்நெறி!

# அரசியல்வாதிகளுக்காக அன்றே வலியுறுத்திய இலக்குவனார்!

## - இலக்குவனார் திருவள்ளுவன்



*முடியாட்சி நிலவிய அக் காலத்தில் இயற்றப்பெற்ற திருக்குறள் குடியாட்சி கோலோச்சும் இக் காலத்திற்கும் முற்றிலும் பொருந்தும் வண்ணம் விளங்குவதை இலக்குவனார் எடுத்தியம்பும் கருத்து இக் கட்டுரையில் நயமுற நவிலப்பட்டுள்ளது.*

திருக்குறள் எந்நாட்டவர்க்கும் எக்காலத்திற்கும் பொருந்தக்கூடிய சிறப்பு மிக்கது. எனினும் திருக்குறளுக்கு உரை எழுதுவோர்கள் அல்லது விளக்கம் தருபவர்கள் முன்னோர் தெரிவித்து வழி வழியே வந்த விளக்கங்களையே தத்தம் நடைகளில் விளக்குகின்றனர்.

மாறுபட்ட கருத்தாக இருப்பின் மாறுபட்டு உரை தந்த முன்னோர் வழி வந்த கருத்தாகத்தான் பெரும்பாலும் இருக்கும். அங்கும் இங்குமாக மாறுபட்டு அமைவன சிலவே.

ஆனால் திருக்குறள் அறிஞர் பேராசிரியர் முனைவர் சி.இலக்குவனார் அறிவியல் நோக்கிலும் இக்காலச் சூழலுக்கேற்பவும் திருக்குறட்பாக்களுக்கு விளக்கம் தந்துள்ளார்.

அவற்றில் ஒன்றையே இங்கே பார்க்கப் போகிறோம். திருக்குறளின் பெருமைக்கும் அதை உணர்த்தும் இலக்குவனாரின் உரை அருமைக்கும் ஒரு சான்றாக இஃது அமையும்.

திருவள்ளுவர் வழங்கியுள்ள அனைத்துக் குறட்பாக்களும் அனைவரும் பின்பற்றப்பட வேண்டியனவே என்றாலும் சில குறட்பாக்கள் சில துறையினருக்கும் சில குறட்பாக்கள் சில மாந்தருக்கும் மிகவும் இன்றியமையாதனவாக இருக்கும்.

அரசியலாளர்களுக்குப் பொருட்பால் முழுமையும் வழிகாட்டியாக அமைகின்றது. அவற்றுள் அரசியல் பிரிவில் உள்ள 25 அதிகாரங்களும் அமைச்சியல் பிரிவில் உள்ள 10 அதிகாரங்களும்

மிகவும் கருத்துடன் அறிந்து அரசியலில் ஈடுபட்டுள்ளோரும் ஆட்சியாளரும் அறிந்து பின்பற்றப்பட வேண்டியவை.

வெற்றியும் தோல்வியும் நிறைந்த அரசியல் உலகில் அரசியலாளர்கள் வழிகாட்டியாகக் கொள்ளவேண்டிய ஒரு திருக்குறட்பாவைப் பேரா.சி.இலக்குவனார் வலியுறுத்துகிறார்.

இடுக்கண் அழியாமை அதிகாரத்தில் உள்ள திருக்குறள் அது.

இடுக்கணழியாமை என்பது முயற்சியில் பொருளிழப்பு, மெய் வருத்தம், தோல்வி போன்ற துன்பங்கள் வந்த பொழுது, அதற்கு மனங்கலங்காமையைக் குறிக்கும் என அறிஞர்கள் விளக்குகின்றனர். இவ்வதிகாரத்தின் 6 ஆவது குறள்; மொத்தத்தில் 626 ஆவது குறள் வருமாறு:

அற்றேம்என்று அல்லற் படுபவோ? பெற்றேம்என்று
ஓம்புதல் தேற்றா தவர்.

இக்குறட்பாவிற்கு அறிஞர் சிலர் தரும் விளக்கங்கள் வருமாறு…

**மணக்குடவர் உரை**: பொருளற்றேமென்று இரங்கித் துன்பமுறார், அதனைப் பெற்றோமென்று போற்றி வைத்தலை நன்றென்று தெளியாதவர். இது பொருட்கேட்டினால் வருந்துன்பத்திற்கு அழியாதாரைக் கூறிற்று.

**பரிமேலழகர் உரை**: அற்றேம் என்று அல்லற்படுபவோ - வறுமைக் காலத்து யாம் வறியமாயினேம் என்று மனத்தால் துயருழப்பாரோ; பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர் - செல்வக்காலத்து இது பெற்றேம் என்று இவறுதலை யறியாதார்?

**மு.வரதராசன் விளக்கம்**: செல்வம் வந்த போது இதைப்பெற்றோமே என்று பற்றுக்கொண்டு காத்தறியாதவர் வறுமை வந்தபோது இழந்தோமே என்று அல்லல்படுவரோ.

**பாவாணர் உரை**: பெற்றேம் என்று ஒம்புதல் தேற்றாதவர் - செல்வக் காலத்தில் யாம் இது பெற்றேமென்று மகிழ்ந்து கையமுத்தங் கொண்டு அதைக் காத்துக் கொள்ளுதலை அறியாதார்; அற்றேம் என்று அல்லல் படுபவோ - வறுமைக் காலத்தில் யாம் செல்வத்தை யிழந்தேமென்று துயரப்படுவரோ? படார்.

**வ.சுப.மாணிக்கம் உரை**: செல்வம் வந்தபோது பற்றற்று இருப்பவர் போனபோது துயரப் படுவாரோ?

**கலைஞர் உரை**: இத்தனை வளத்தையும் பெற்றுள்ளோமேயென்று மகிழ்ந்து அதைக் காத்திட வேண்டுமென்று கருதாதவர்கள் அந்த வளத்தை இழக்க நேரிடும்போது மட்டும் அதற்காகத் துவண்டு போய் விடுவார்களா?

**ஆனால் திருக்குறள் அறிஞர் பேரா.சி.இலக்குவனார் அனைவரிடமிருந்தும் மாறுபட்டுக் காலத்திற்குத் தேவையான விளக்கம் அளிக்கிறார். அவரது விளக்கம் வருமாறு:**

பெற்றேம்-என்று அரசியல் பதவிகளை அடைந்து விட்டோம் என்று கருதி, ஓம்புதல்-அவற்றைத் தம்மினின்றும் நீங்காமல் காத்தலை, தேற்றாதவர் - தெளிந்து அறியாதவர், அற்றேம் என்று - அவை தம்மைவிட்டு நீங்கிய காலத்தில் இழந்து விட்டோம் என்று, அல்லல்படுபவோ - துன்பப்படுவார்களோ? துன்பப்பட்டார்.

அரசியல் பதவிகளைப் பெற்றுப் பணியாற்றுங்கால் உண்டாகும் இடர்ப்பாடுகளை எவ்வாறு வெல்ல வேண்டும் என்று முதல் ஒன்பது குறட்பாக்களிலும் கூறி, அப்பதவிகளை இழந்த ஞான்று உண்டாகும் உளத்துயரை மாற்றுவதற்கு வழி இக்கடைசிக் குறட்பாவில் கூறுகின்றார்.

பதவிக் காலத்தில் உண்டாகும் இடையூறுகளை, பதவி பெற்றுள்ள மகிழ்ச்சியாலும், பதவியால் பெற்றுள்ள செல்வாக்கினாலும், மக்கட்குத் தொண்டாற்றுகின்றோமே என்ற உணர்ச்சி இன்பத்தானும் மாற்றுதல் எளிது.

பெற்ற பதவிகளை இழக்கும் காலத்தில் உண்டாகும் துன்பத்தை வெல்லுதல் எல்லோராலும் முடியாது. அரசியல் பதவிகளைப் பெறுவதிலும் அவற்றைக் காப்பதிலுமே அரசியல் தலைவர்கள் கருத்தைச் செலுத்திக் காலங்கழிக்கின்றனர்.

அவர்கள் பதவிகளைப் பெறுங்காலத்தில் பெரு மகிழ்வும், அவற்றை இழக்குங்காலத்தில் பெருந்துன்பமும் அடைகின்றனர். பதவிகள் மக்கட்குத் தொண்டாற்ற வாய்ப்பளிக்கும் நிலைகளே என்று கருதித் தொண்டாற்றுபவர்கள், அப்பதவிகளில் என்றும் இருக்க

வேண்டுமென்று விரும்பமாட்டார்கள். பதவிகள் தம்மை அகன்ற காலத்து வருந்தமாட்டார்கள்.

அரசியல் தொண்டில் ஈடுபடுபவர்கள் இக்குறட்பாவை என்றும் உள்ளத்தில் பொறித்து வைத்துக் கொள்வார்களாக!

உயர் பதவிகள் கிட்டிய காலத்தில் உள்ளம் மகிழாதும் உயர் பதவிகளை விட்ட காலத்தில் உள்ளம் வருந்தாதும் இருத்தலே உணமைத் தொண்டர் இயல்பு.

*(இலக்குவம் : வள்ளுவர் வகுத்த அரசியல்: பக்கம் 734)*

அரசியல் தொண்டில் ஈடுபடுபவர்கள் உள்ளத்தில் பதிக்க வேண்டிய குறளாக இதனை விளக்குகிறார். வந்துபோகும் செல்வச் சூழலில் இருக்க வேண்டிய மன உறுதியை அனைவரும் விளக்குகின்றனர்.

ஆனால் பேரா.சி.இலக்குவனாரோ பதவி வரும்பொழுதும் போகும் பொழுதும் இருக்க வேண்டிய மனநிலையை விளக்குகிறார்.

பதவிகளைப் பெறுவதையும் நிலையாகப் பதவிகளில் இருப்பதையும் இலக்காகக் கொண்டு அரசியல் தலைவர்கள் செயல்படுகின்றனர். தொண்டாற்றுவதையே இலக்காகக் கொண்டு செயல்பட்டால் துன்புறும் சூழல் வராது என்கிறார் பேரா.சி.இலக்குவனார். அவர் தந்துள்ள விளக்கத்திற்கு மேல் கூறுவதற்கு ஒன்றும் இல்லை.

இக்குறளை இலக்காகக் கொண்டு அரசியலில் ஈடுபடுவோர் செயல்பட்டால் ஊழலில் ஈடுபட வாய்ப்பில்லை.

# குறள் நெறி

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 5 | பங்குனி 2, தி.பி 2052 | மார்ச்சு 15, கி.பி2021



## வெல்க குறள்நெறி



**வள்ளுவரின் திருக்குறளும் பெரியவர் வ.உ.சி.யும்**

**- பக்கம் 7**



# பட்டிமன்றம் ஓர் வரலாறு

--பேராசிரியர் கண.சிற்சபேசன்

---

**இன்று தொலைக்காட்சி அலைவரிசைகளில் கோமாளிக்கூத்தாகக் காட்சிவழங்கும் பட்டிமன்றத்துக்குப் பெருமிதம் மிக்க நெடியவரலாறு உண்டு.மெய்ப்பொருளியல் துறையில் புதிய கருத்துகளை உருவாக்கியோரும் பரப்பிவருபவரும் தத்தம்கருத்துகளை நிலைநாட்டப் பட்டிமறம் நிகழ்த்திய பாங்கினை மணிமேகலை வழி அறிகிறோம். பல நேரங்களில் சமயக் கருத்துகளைப் பரப்பவும் இதுவொரு குறுக்குவழியாக அமைந்திருந்தது..தமிழ் மறுமலர்ச்சிக்காலமாகிய இருபதாம் நூற்றாண்டில் சங்க இலக்கியம்,திருக்குறள்,சிலப்பதிகாரம் எனச் செவ்வியல் இலக்கியங்களப் பரப்புதற்குப் பெரிதும் உதவியது. கோவில்களின் சார்பில் நடக்கும் விழாக்களில் இராமாயணம், பாரதம் ஆகியவை பற்றிய பொருண்மைகளில் பின்னர் இஃது பெருவழக்குப்பெற்றது. இன்றோ பொருளற்ற பொருள்களில் பொருளுக்காக நடக்கும் வெட்டிமன்றமாக வீழ்ச்சியடைந்துவிட்டது. இப் பட்டிமன்றப் பொழிவில், அறுபதுகளில் கோலோச்சிவந்த பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் திருக்குறள் தொடர்பான பட்டிமன்றங்களின் வரலாறு குறித்து ஒரு தொடர்கட்டுரையைக் கடந்த இதழில் வழங்கியுள்ளார்.அதன் இரண்டாம் பகுதி இங்கு வெளிவருகிறது.ஆர்வலர்க்கு விருந்தாகத் தொடர்ந்து வெளிவரும்.**

---------------------------------------------------------------------------------------------------------------------

சென்ற இதழில் நான் குறிப்பிட்டவாறு பட்டிமன்றங்களுக்காகப் பல ஊர்களுக்கும் நாங்கள் செல்ல நேர்ந்தது. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரை பட்டிமன்றக் களமாகவும் விளங்கத் தொடங்கியது. தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர் என்ற பாரதியாரின் தொடர் மதுரைக்கே முற்றிலும் பொருந்தும். கோயில் திருவிழாக் காலங்களில் முச்சந்தி நாற்சந்திகளில் மேடைகள் அமைக்கப்படும். அரசமரம், விட்டவாசல், தெற்கு வாசல், தெற்குமாசி வீதி, வடக்குமாசி வீதி, மேலமாசி வீதி, முனிச்சாலை, சிம்மக்கல் என்று மூலைமுடுக்கெல்லாம் பட்டிமன்றங்கள் நடந்து அவற்றில் பங்குபெற்றுள்ளோம்.

மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயில் வளாகத்திலேயே திருவள்ளுவர் கழகம் தமிழ் நிகழ்ச்சிகளை நடத்தும். இதனை கி.பழநியப்பனார் (பழ. நெடுமாறனின் தந்தை) திறம்பட நடத்தினார். அதேபோல அவ்வை மன்றம் என்றொரு அமைப்பு திருவள்ளுவர் கழகத்திற்குப் போட்டியாகத் தோன்றி திருக்கோயில் வளாகத்தில் ஆயிரங்கால் மண்டபத்தில் தமிழ் இலக்கிய நிகழ்ச்சிகளை நடத்தியது. இங்கெல்லாம் பட்டிமன்றங்கள்தான் கூட்டத்தினரைப் பெரிதும் ஈர்த்தன. அவற்றுக்குத்தான் பெருங்கூட்டம் கூடும். முதுபெரும் அறிஞர் ஒருவர் நடுவராக அமைய இரு அணியினர் வாதிடுவர். ஆண் பெண் பேச்சாளர்

ஓரணிக்கு மூவர் இருப்பர். பெரும்பாலான நிகழ்ச்சிகள் இரவு 9 மணிக்கு மேல் தொடங்கி இரவு 1 மணிக்கு மேல்தான் நிறைவுறும். பொதுமக்கள் தமது கடைகளை மூடிவிட்டு வீடு சென்று இரவு உணவுண்டு திரும்பி வந்து அமர்ந்து கேட்பர்.

இதேபோல மதுரையைச் சுற்றிலும் உள்ள ஊர்களிலும் நாலாபக்கங்களிலும் தொலைவில் உள்ள ஊர்களிலும் பட்டிமன்றங்கள் நடைபெறும். கிழக்கே தேவகோட்டை, காரைக்குடி, இராமநாதபுரம், அறந்தாங்கி, சிவகங்கை, பரமக்குடி போன்ற ஊர்களும், மேற்கே சோழவந்தான், உசிலம்பட்டி, தேனி, கம்பம், போடி, போன்ற ஊர்களும், தெற்கே வற்றாயிருப்பு, விருதுநகர், சிவகாசி, அருப்புக்கோட்டை, சங்கரன்கோயில் திருச்செந்தூர், திருநெல்வேலி, தூத்துக்குடி போன்ற ஊர்களும், வடக்கே அலங்காநல்லூர், காந்திகிராமம், திண்டுக்கல், புதுக்கோட்டை, திருச்சி, அரியலூர் போன்ற ஊர்களும் என் நினைவில் இன்றும் பசுமையாக உள்ளன. நான் எனது வாழ்க்கையின் பிற்பகுதியில் சென்னை வந்தபிறகு சென்னையில் பல இடங்களிலும் சுற்றியுள்ள ஊர்களிலும் நடத்தியுள்ள பட்டிமன்றங்கள் எண்ணிலடங்கா-என்னிலடங்கா. முதல் தொலைக்காட்சியாகிய தூர்தர்ஷனில் நிகழ்ந்த முதற்பட்டிமன்றத்திற்கு நடுவராகப் பொறுப்பேற்ற பெருமையும் எனக்கு வாய்த்தது.
ஏறுதழுவுதலுக்குப் பெயர் வாய்ந்த அலங்காநல்லூரில் ஒரு பட்டிமன்றத்திற்கு அழைக்க வந்தார்கள். முதல் நாளே மஞ்சிவிரட்டு முடிந்துவிடும் என்பதை அவர்களிடம் உறுதியாகக் கேட்டுக்கொண்டுதான் நிகழ்ச்சிக்கு இசைவளித்து நான் களத்தில் இறங்கினேன். நடந்ததைப் பாருங்கள்! பட்டிமன்ற நிகழ்ச்சியின் ஊடே 'அச்சமில்லை அச்சமில்லை அச்சமொன்றில்லையே' என்று வானுயர நான் கத்திக்கொண்டிருந்தபோது ஏறுதழுவதல் களத்திலிருந்து முதல் நாளே தெறித்தோடித்திரிந்த காளையொன்று நேராக என்னை நோக்கிப் பாய்ந்தோடி வந்து மிரட்டியதையும் அக்கணம் நான் குலை நடுங்கியதையும், அப்போது எங்கிருந்தோ வந்தான் காளையின் உரிமையாளன் என்பதையும் "ஐயா உங்களுக்கு நன்னி, என் மாட்டைக் கண்டுபிடிச்சுக் கொடுத்ததுக்கு" என்று அவன் கைகூப்பியதையும் 'குறள் நெறி' படிப்போருடன் பகிர்ந்துகொள்கிறேன். பட்டிமன்றம் முடிந்து விழா ஏற்பாட்டாளர்களுடன் விருந்து உண்டு கொண்டிருந்தபோது தா.கு.சுப்பிரமணியன் அனைவரும் கேட்க என்னிடம் கேட்டார் "ஐயா அந்தக் காளை உங்களை நோக்கிச் சீறி வந்தபோது நீங்கள் வகுப்பில் எங்களுக்குச் சொன்ன "கொல்லேற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும் புல்லாளே ஆயமகள்" என்ற வீரவரிகள் எங்கள் நினைவிற்கு வந்தன" என்று சொல்லியதோடு மட்டுமன்றி அதற்கு அங்குக் கூடியிருந்த மக்களுக்கு விளக்கமும் சொன்னபோது பறந்துபோன என் மானத்தை இன்றுவரைத் தேடிக்கொண்டிருக்கிறேன். அப்போதுதான் புரிந்துகொண்டேன் அவர் என்னுடைய ***மாணவர்*** இல்லை ***மானவர்*** என்று. அடுத்த பட்டிமன்றத்தில் காண்போம். (பட்டிமன்ற வரலாறு 3 தொடரும்.)

******************

# திருக்குறள் மனுதருமத்தின் சாரமா?

கவிச்சிங்கம் கண்மதியன் கவிதைக்கணை




தமிழர்தம் வாழ்வியல் வழிகாட்டியாக விளங்கும் திருக்குறள் உலகெங்கும் கொண்டாடப்படுவதைக் கண்டு மனம் புழுங்கிய சிலர் திருக்குறளில் எதுவும் புதிதாக இல்லை,மனுதருமத்தில் கூறப்பட்ட கருத்துகளே திருவள்ளுவரால் வழிமொழியப்பட்டுள்ளன என்னும் பிழையான பிதற்றலை பரப்பமுனைந்தனர்.நாடு,மொழி,இனம் என்னும் வரையறைகளையெல்லாம் கடந்து மனித இனம் முழுமைக்கும் உரிய வாழ்வியல் வழிகாட்டியாகத் திருக்குறள் திகழ்கிறது.இதனாலேயே விவிலியம், திருக்குரான் திருமறைகளுக்கு அடுத்ததாக உலகில் மிகுதியான மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுப் பல்வேறு நாட்டாரும்

பயிலும் பெருமைபெற்று விளங்குகிறது. இதனைக் கண்டு அழுக்காறு கொண்ட மனுவாதிகள் "“திருக்குறளில் தனிச்சிறப்பு ஏதுமில்லை,மனுதரும சாத்திரத்தின் சாரமே திருக்குறள் “ என்று பொய்யுரை கூறத்தலைப்பட்டனர். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் வழிநின்று இந்த ஆரியப்பீடைகளைத்தமது சொல்லம்புகளால் தாக்கி வீழ்த்துகிறார் கவிச்சிங்கம் கண்மதியன்.

ஈட்டியெனக் கிளம்பும் அவரது கவிதைஎழுப்பும் “மலைத்தேனும் மலமும் ஒன்றாகுமா?” “எனும் வினாவுக்கு மனுவாதிகள் எதிர்நிற்க முடியுமா?

“திருக்குறள் மனுதருமத்தின் சாரமா?
மலைத்தேனும் மலமும் ஒன்றாகுமா?”
கடலளவு நீரென் கைவசம் இருக்கு- உன்றன்
மனுதருமத் தோலை உரித்துக் காட்ட!
கடுகளவு உரித்துப் போட்டேன் இன்று-இன்னும்
காணவேண்டின் வந்தால் நன்று
உடனே வாரும் இலையேல் ஓடும்-வந்தால்
உடலின் ஒன்பது ஓட்டையும் மூடும்!! (திருக்குறள் மனுதருமத்தின் சாரமா?
மலைத்தேனும் மலமும் ஒன்றாகுமா?” -பக்.18-20)

என்னும் பாடலடிகள் இந்த இனப்பகையைக் கண்டித்து நடத்தும் நூறு கூட்டங்களைவிட ஆற்றல் வாய்ந்தவை.

# ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்



முனைவர் இர. பிரபாகரன்
மேரிலாந்து, அமெரிக்கா

---

எத்துணை வல்லமை பொருந்தியவர்களாக இருந்தாலும், உயர்ந்த பதவியில் இருந்தாலும், நல்லொழுக்கத்தோடு வாழத் தவறினால் அவர்கள் பெருந்துன்பத்திற்கு உள்ளாவார்கள்.

---

திருக்குறளில், மனிதன் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்கள் பல அதிகாரங்களில் கூறப்பட்டுள்ளன.ஒழுக்கமுடைமை என்ற அதிகாரத்தில், ஒழுக்கத்தின் உயர்வைப் பற்றியும், அவற்றைப் பின்பற்றுவதனால்வரும் நன்மைகளைப் பற்றியும், அவற்றைப் பின்பற்றாவிட்டல் வரும் தீமைகளைப் பற்றியும்வள்ளுவர் கூறுகிறார்.

**<u>ஒழுக்கத்தின் சிறப்பு</u>**

ஒழுக்கம்என்ற சொல்லுக்கு நடத்தை என்று பொருள். அது நல்லொழுக்கம் தீயொழுக்கம் ஆகிய இரண்டையும்குறிக்கும் சொல்லாக இருந்தாலும், பொதுவாக, நல்லொழுக்கத்தை மட்டும் குறிக்கும் சொல்லாகவழக்கில் உள்ளது. வள்ளுவரும் ஒழுக்கம் என்ற சொல்லை நல்லொழுக்கம் என்ற பொருளில்தான்பயன்படுத்துகிறார். தீயொழுக்கத்தையும், நல்லொழுக்கத்திலிருந்து தவறிய நடத்தையையும், வள்ளுவர் இழுக்கம் என்று குறிப்பிடுகிறார். “ஒழுக்கம் மேன்மையைத் தருவதால், ஒழுக்கத்தை உயிரைவிடச்சிறப்பாகப் பேணிக் காக்க வேண்டும் (குறள் - 131).” என்று வள்ளுவர் கூறுகிறார்.

***ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்***
***உயிரினும் ஓம்பப் படும்.*** (குறள் - 131)

ஒரு சூழ்நிலையில், ஒருவன் தன் ஒழுக்கத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமா அல்லது தன்உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமா என்ற கேள்வி எழுந்தால், அந்தக் கேள்விக்கு வள்ளுவர்அளிக்கும்

விடை, “ஒழுக்கம் உயிரைவிடச் சிறந்ததாகையால், உயிர் போனாலும் பரவாயில்லை, ஒழுக்கத்திலிருந்து தவறக் கூடாது.”உயிரைவிட நல்லொழுக்கமே உயர்ந்தது என்று கருதும் சிலர் எப்பொழுதும் இவ்வுலகில்வாழ்ந்துள்ளனர்; இப்பொழுதும் வாழ்கின்றனர்.

**ஒழுக்கத்தால் வருவதுஉயர்வு**

மக்கள்பிறப்பினால் வேறுபடுகிறார்கள் என்பது வருணாசிரமம். பெரும்பாலான மக்களைப் பிராமணர்கள்,சத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என்று நான்கு பிரிவுகளாக வருணாசிரமம் பிரிக்கிறது.இந்த நான்கு பிரிவுகளில், பிராமணர்கள் மேலானவர்கள். அதற்கு அடுத்த நிலையில் உள்ளவர்கள்சத்திரியர்கள் என்றும், அதற்கும் அடுத்த நிலையில் உள்ளவர்கள் வைசியர்கள் என்றும், கடைநிலையில்உள்ளவர்கள் சூத்திரர்கள் என்றும் வருணாசிரமக் கொள்கை கூறுகிறது. நான்கு பிரிவுகளுக்கும்அப்பால் உள்ள வேறு சிலர், தீண்டப்படாதவர்கள் என்றும் அவர்கள் சூத்திரரையும்விடக் கீழானவர்கள்என்றும் வருணாசிரமம் கூறுகிறது. வருணாசிரமத்தைப் பற்றிய கருத்துக்களை மனுஸ்மிருதி (1.31), ரிக் வேதம்(10.90) பகவத்கீதை (4.13) போன்ற நூல்களில் காணலாம். மக்களிடையே வருணாசிரமம் காட்டும் வேறுபாடு பிறப்பினால்தோன்றுவது. வள்ளுவர் காலத்திற்குமுன்பே, தமிழகத்தில் ஆரியர்கள் குடியேறி வாழ்ந்துவந்தார்கள். அவர்களுடைய வருணாசிரமக்கொள்கை மக்களிடையே பரவ ஆரம்பித்தது. வருணாசிரமத்தை எதிர்த்து, ”பிறப்பொக்கும்எல்லாஉயிர்க்கும்” என்று முழங்கியவர் வள்ளுவர். பிறப்பினால் சமம் என்றாலும், மக்களுடைய செயல்களாலும்ஒழுக்கங்களாலும் அவர்களிடையே வேறுபாடுகள் தோன்றுகின்றன என்கிறார் வள்ளுவர். அதனால்தான், வள்ளுவர், ”ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை (குறள் - 137)” என்கிறார். ஒழுக்கமுடையவன்உயர்ந்தவன். ஒழுக்கமில்லாதவன் தாழ்ந்தவன். பிறப்பினால் ஒருவன் மேலானவனாகக் கருதப்பட்டாலும்அல்லது ஒருவன் தாழ்ந்தவனாகக் கருதப்பட்டாலும், உண்மையான உயர்வும் தாழ்வும் ஒழுக்கத்தால்தான்எழுகிறது. ஆகவேதான்,

*மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்; கீழிருந்தும்*
*கீழல்லார் கீழல் லவர்.* (குறள் - 973)

என்று வள்ளுவர் கூறுகிறார்.ஆகவே, ஒழுக்கம் மட்டுமே ஒருவனது மேன்மையையும் தாழ்மையையும் அளவிடுவதற்கு ஏற்ற அளவுகோல்என்பது வள்ளுவரின் கருத்து.

**இழுக்கத்தின்எய்துவர்எய்தாப்பழி**

ஒருவன் எவ்வளவு உயர்ந்த பதவியிலிருந்தாலும், ஒழுக்கத்திலிருந்துதவறுவதால் பல துன்பங்களை அடைவான் என்பதற்கு, அமெரிக்காவின் வரலாற்றில் இரண்டு உதாரணங்கள்உள்ளன. அமெரிக்கா ஒரு வல்லரசு என்பதால், அந்த நாட்டின் தலைவராக இருப்பவர், உலகிலேயேமிகுந்த வல்லமை உடையவராகக் கருதப்படுகிறார். இதுவரை, நாற்பத்தி ஐந்து பேர் மட்டுமேஅந்தப் பதவியில் இருந்திருக்கிறார்கள். இப்பொழுதுநாற்பத்திஆறாவதாகஒருவர்தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவர்களில் ரிச்சர்ட் நிக்சன்(Richard Nixon) என்பவரும், வில்லியம் கிளிண்டன்(Bill Clinton) என்பவரும் தங்களின் தீயொழுக்கங்களால் அவமானத்திற்கும், பிறரின் ஏளனத்திற்கும் உள்ளாகியிருக்கிறார்கள். தன்னை எதிர்த்துத் தேர்தலில் போட்டியிட்டவருடையஆவணங்களைத் திருடுவதற்காக நிக்சன் சிலரை அனுப்பினார். திருடச் சென்றவர்கள் கையும் களவுமாகப்பிடிபட்டார்கள். அத்திருடர்களைப் பற்றியோ அல்லது அந்த நிகழ்ச்சியைப் பற்றியோ தனக்குஎதுவும் தெரியாது என்று நிக்சன் கூறியது மட்டுமல்லாமல், அந்த நிகழ்ச்சிக்குத் தொடர்பானஒலிப்பதிவுகளையும் அவர் அழிக்க ஏற்பாடு செய்தார். அத்தகைய தீய செயல்களுக்காக, அமெரிக்கமக்களவை (House of Representatives), அவர்மீது நடவடிக்கை எடுக்கத் தொடங்கியது. தனக்குமக்களவையிலும் மேலவையிலும் (மேலவை - senate) ஆதரவு இல்லை என்பதை உணர்ந்த நிக்சன் பதவியிலிருந்துவிலகினார்.

ஒரு இளம்பெண்ணோடு தகாதமுறையில் வெள்ளை மாளிகையில் பாலியல் தொடர்புவைத்துக்கொண்டதால், அமெரிக்க மக்களவையில் கிளிண்டன்மீது வழக்குத் தொடரப்பட்டு அவர்குற்றவாளி என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால், மேலவையில் பெரும்பான்மையோர் மக்களவையின்குற்றச்சாட்டுக்களை ஏற்றுக்கொள்ளாததால், அவர் பதவியில் நீடித்தார். அவருடைய தவறான நடத்தைக்காகவும், தான் செய்த குற்றத்தைத் தான் செய்யவில்லை என்று அவர் கூறியதற்காகவும், கிளிண்டன் வழக்கறிஞராகப்பணியாற்றும் தகுதியை இழந்தார்.

***ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்***
***எய்துவர் எய்தாப் பழி.*** (குறள் - 137)

எத்துணை வல்லமை பொருந்தியவர்களாக இருந்தாலும், உயர்ந்த பதவியில் இருந்தாலும், நல்லொழுக்கத்தோடு வாழத் தவறினால் அவர்கள் பெருந்துன்பத்திற்கு உள்ளாவர்கள் என்பது நிக்சன் மற்றும் கிளிண்டன் ஆகியோரின் வாழ்க்கை வரலாறு மற்றவர்களுக்குக் கூறும் எச்சரிக்கையாகும்.

**ஒழுக்கமும் குடிப்பெருமையும்**

தனிமனிதனுக்கு மட்டுமல்லாமல் அவனுடைய குடும்பத்தின் மேன்மைக்கும் தாழ்மைக்கும் ஏற்ற அளவுகோல் ஒழுக்கம் மட்டுமே. ஒரு குடும்பத்தில் ஒழுக்கம் இல்லையென்றால் அது அந்தக் குடும்பத்திற்கு இழிவைத் தரும்.

***ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்***
***இழிந்த பிறப்பாய் விடும்.*** (குறள் - 133)

ஒருவன் ஒழுக்கத்திலிருந்து தவறினால், அது அவனுக்கு மட்டும் இழிவைத் தராமல் அவனுடைய குடும்பத்திற்கும், வழித்தோன்றல்களுக்கும் இழிவைத் தரும் என்ற கருத்து, புறநானூற்றுப் பாடல் (புறநானூறு - 151) ஒன்றிலும்காணப்படுகிறது.

சங்க காலத்தில், ஒவ்வொரு அரசனும் தன் நாட்டிலுள்ள ஒருமரத்தைக் காவல் மரமாக வைத்திருந்தான். அந்த மரத்தை வெட்டுவது, அந்த மரத்தின் கிளைகளை ஒடிப்பது, அந்த மரத்தின் காய் அல்லது பழங்களை உண்ணுவது போன்ற செயல்கள் பெருங்குற்றங்களாகக் கருதப்பட்டன. அத்தகைய குற்றங்களுக்குக் கடும் தண்டனைகள் விதிக்கப்பட்டன. நன்னன் என்ற சிற்றரசனுக்கு மாமரம் ஒன்று காவல் மரமாக இருந்தது. அவனுடைய காவல் மரத்திலிருந்து ஒரு காய் ஆற்று நீரில் விழுந்தது. அங்கு குளிக்கச் சென்ற பெண் ஒருத்தி அந்த மாங்காயைத் தின்றாள். அதைக் கண்ட நன்னனின் வேலையாட்கள், அவனிடம் சென்று அந்தப் பெண் மாங்காயைத் தின்ற செய்தியைக் கூறினர். அதைக் கேள்வியுற்ற நன்னன், அப்பெண்ணைக் கொலை செய்யுமாறு தன் வேலையாட்களைப் பணித்தான். அவர்களும் அவ்வாறே செய்தனர். நன்னன் ஒரு தவறும் செய்யாத ஒரு இளம்பெண்ணை, ஆராயாமல் கொலை செய்தவன் என்று பலராலும் பழிக்கப்பட்டான்.

ஒரு சமயம், பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர் இளங்கண்டீரக்கோ என்னும் குறுநில மன்னனைக் காணச் சென்றார். அவனைக் கண்டதும் அவனை அன்போடு தழுவினார். அங்கு, நன்னனின் வழித்தோன்றலாகிய இளவிச்சிக்கோவும் இருந்தான். புலவர் பெருந்தலைச் சாத்தனார் இளவிச்சிக்கோவைத் தழுவவில்லை.அதைக் கண்டு கலக்கமுற்ற இளவிச்சிக்கோ, பெருந்தலைச் சாத்தனார் ஏன் தன்னைத் தழுவவில்லை என்று கேட்டான். அவனுடைய கேள்விக்கு, "அரசே, இளங்கண்டீரக்கோ வண்மை மிக்கவன்; அவன், வீட்டில் இல்லாவிட்டாலும் அவன் வீட்டுப் பெண்டிர் தம் தகுதிக்கேற்ப இரவலர்க்குப் பரிசளிப்பர். அதனால், இளங்கண்டீரக்கோவைத் தழுவினேன். உன் முன்னோருள் முதல்வன் நன்னன் என்பவன் ஒரு இளம்பெண்ணைக் காரணமின்றிக் கொலை செய்தான். அது மட்டுமல்லாமல், உன் நாட்டில் பாடி வருபவர்களுக்குப் பரிசளிக்காமல் வீட்டுக் கதவை அடைக்கும் வழக்கம் உள்ளது. அதனால் என் போன்ற புலவர்கள் உன் மலையாகிய விச்சி மலையைப் பாடுவதில்லை. அதனால் அம்மலைக்குரிய உன்னைத் தழுவவில்லை" என்று பெருந்தலைச் சாத்தனார்

விடையளித்தார். ஆராயாமல் ஒரு இளம்பெண்ணைக் கொலைசெய்ததால் நன்னனுக்கு ஏற்பட்ட பழியால் அவன் வழித்தோன்றலாகிய இளவிச்சிக்கோவும் பாதிக்கப்பட்டான்.

எத்தனை வல்லமை பொருந்தியவர்களாக இருந்தாலும், உயர்ந்த பதவியில் இருந்தாலும், நல்லொழுக்கத்தோடு வாழத் தவறினால் அவர்கள் பெருந்துன்பத்திற்கு உள்ளாவர்கள் என்பதற்கு இங்குக் கூறப்பெற்ற சங்க காலச் செய்திகளும் சான்றாக விளங்குகின்றன அல்லவா?

*ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்*
*உயிரினும் ஓம்பப் படும்.* (குறள் - 131)

என்னும் குறள்நெறி போற்றுவோம்.



## வள்ளுவரின் திருக்குறளும் பெரியவர் வ.உ.சி.யும்

*ரெங்கையா முருகன்*

கட்டுரையாளர் பற்றிய குறிப்பு: திரு.ரெங்கையா முருகன் அவர்கள் 19ஆம் நூற்றாண்டு தமிழ் ஆளுமைகள், அச்சு ஊடகப் பண்பாடு, பழங்குடிகள் மற்றும் வெகுசன கலாச்சாரம் குறித்து ஆய்வு செய்து வருகிறவர். 'அனுபவங்களின் நிழல் பாதை' எனும் நூலின் ஆசிரியரான இவர், சென்னை வளர்ச்சி ஆராய்ச்சி நிறுவனத்தில் இணை நூலகராகப் பணிபுரிந்து வருகிறார்.-நன்றி: மின்னம்பலம் இணைய இதழ்)

---

பெரியவர் வ.உ.சிதம்பரனார் முதன்மையாக நாட்டுப்பற்றில் முனைந்து செயல்பட்டு பிற்காலத்தில் மொழிப்பற்றில் சங்கமமாகி ஆறுதலடைந்தவர். அவர் வாழ்ந்த காலத்தில் தமிழ்நூல்கள் பதிப்பிக்கப் பெற்று தொடங்கி வளர்ந்து வந்த காலம். அந்த வகையில் வ.உ.சி.யும் சில நூல்களினை பதிப்பிக்க முயல்கிறார். தமிழ்ப்பதிப்பு வரலாற்றில் முதற் பதிப்பாளர் என்ற தகுதியையும் அடைகிறார். ஆம் திருக்குறளுக்கு மணக்குடவார் எழுதிய அறப்பால் உரையை 1917-ஆம் ஆண்டு முதன்மையாகப் பதிப்பித்த பெருமை இவரைச் சாரும். இந்த நூலின் பதிப்புரையில் பின்வருமாறு கூறுகிறார்.
"அப்பதின்மர் உரைகளில் தமிழ்நாட்டில் பயின்று வழங்குவது பரிமேலழகருரை ஒன்றே. அவ்வுரையைச் சில வருடங்களுக்கு முன்னர் யான் படிக்க தொடங்கினேன்.அப்பொழுது ஒன்பதின்மர் உரைகளையும் பார்க்க வேண்டுமென்னும் அவா எனக்கு உண்டாயிற்று. அது முதல் தமிழ் நூல்கள் இருக்கும் இடங்களில் அவற்றைத் தேடவும் தேடுவிக்கவும் முயன்றேன். அம்முயற்சியின் பயனாக எனக்கு கிடைத்தவற்றில் மணக்குடவருரைப் பிரதி ஒன்று.வள்ளுவர் கருத்துக்களைத் தெள்ளென விளக்குவதாகவும் இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றதாகவும் தோன்றிற்று. அது பற்றி யான் அச்சிட்டு வெளிப்படுத்தக் கருதி… எனது பிரதியில் ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்காரம் என்னும் மூன்றையும் புரிந்து மணக்குடவர் உரையை ஒருவாறு பூரணமாக்கி அச்சிற்கு கொடுத்தேன்"( வ.உ.சி. திருக்குறள் - மணக்குடவருரை - அறத்துப்பால், பதிப்புரை).
இந்தப் பதிப்பில் காகிதம் , மை, கட்டுநூல் முதலியனவெல்லாம் சுதேசியம் என்று குறிப்பிட்டார். இதுவும் பதிப்பில் செய்த முன்னோடி என குறிப்பிடலாம்.

திருக்குறள் அரங்கேற்றம்:

1935 ல் திருச்செந்தூர் திருக்குறள் மணக்குடவார் உரை வெளியீட்டு விழாவில் பல தமிழறிஞர்கள் கூடிய சபையில் அறுபத்து மூன்று வயதைத் தொட்ட வ.உ.சி. தம் ஆராய்ச்சியை ஆதாரங்களுடன் தெளிவாக

விளக்கி கொண்டிருந்தார். மணக்குடவரே திருக்குறளின் முதல் உரையாசிரியர் என்றும், அவர் உரை பரிமேழகர் உரையினின்றும் எந்தெந்த இடங்களில் வேறுபட்டுள்ளன என்று எடுத்துக் காட்டினார்.
அறத்துப்பாலில் 74 இடங்களில் வேறுபட்டுள்ளது எனவும், அவற்றுள் தம் நூலில் 30 இடங்களில் முன் ஆசிரியர்கள் உரையை ஏற்று விளக்கியுள்ளதாகவும், எஞ்சிய 44 இடங்களில் தாம் கொண்ட கருத்தை விளக்கியுள்ளதாகவும் கூறினார். அவையோர் அனைவரும் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்த சூழலில் ஒரு வித்துவான் திடீர் என எழுந்து பிள்ளையவர்களிடம் ஒரு வேண்டுகோள். தாங்கள் கூறிய விளக்கங்களுக்கு ஏதேனும் முன் ஆசிரியர்கள் ஆதாரம் உண்டா? இல்லையாயின் அவற்றை நாங்கள் எவ்வாறு ஏற்றுக் கொள்ளமுடியும்? என வினவினார். அதனை செவியுற்ற வ.உ.சி.யின் கண்களில் தீப்பொறி பறந்தன.அதனைக் கண்டு என்ன நடக்குமோ என்று அவையோர் அஞ்சினர். அவை எங்கும் அமைதி சூழ்ந்திருந்தது.

பெரியவர் வ.உ.சி. தனது கம்பீரமான குரலை உயர்த்தி “திருவள்ளுவர் யார் என்று உமக்குத் தெரியுமா? அவர் என் பாட்டனுக்கு பாட்டனார். அதனால் அவர் உணர்வை பெற்றுள்ளேன். அவர் உணர்வை நான் அறிவேன். அவர் உணர்வுக்கு மாறான கருத்துக்களை மாற்ற எனக்கு உரிமையுண்டு. அதற்கு ஓர் ஏட்டுப் பிரதி ஆதாரம் தேவையில்லை. உமக்கு அத்தகைய உரிமை கிடையாது அமரும்”. என்றார்.அவையில் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். கேள்வி கேட்டவர் குன்றிப் போய் இருந்த இடம் தெரியாது அமர்ந்து விட்டார். இந்த அரங்கேற்ற நிகழ்வை நேரில் கண்டவர் வ.உ.சி. உடன் இருந்த திருக்குறள் அட்டாவதானம் தி.ப. சுப்பிரமணியதாஸ்.

**<u>தம்பியுடையான் படைக்கஞ்சான்:</u>**

சந்திரசேகரப் பாவலர் என்ற புனைபெயரில் இராமாயணத்தின் ஆபாசம் என்ற தொடர் கட்டுரையை பெரியார் ஈ.வே.ரா நடத்திய குடியரசு இதழில் எழுதி வந்தவர் இ.மு.சுப்பிரமணிய பிள்ளை. வ.உ.சி. திருக்குறள் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்ட போது அச்சுப் பிழை திருத்திக் கொடுத்து உதவியவர் இவரே. வ.உ.சி. அவருக்கு எழுதிய கடிதத்தில் “திருக்குறள் சம்பந்தமான சில குறிப்புகளும் வினாக்களும் எழுதியிருந்தத திருத்தப்பட்ட புரூப்களைப் பார்த்து பேரானந்தம் அடைந்து “அறிவுடைய தம்பியுடையான் யார்க்கும் அஞ்சான் “ என்று உணர்கிறேன். இனித் திருக்குறளைப் பற்றி எப்புலவரும் எவ்வகையான குற்றங்களும் சொல்ல முடியாது என்று உணர்கின்றேன் என்று குறிப்பிட்டுள்ளார்.
சுவாமி சகசானந்தர் வ.உ.சி. அவர்களிடம் திருக்குறள் பயின்றவர்.இராசாசியும் பயின்றார். ஆனால் வ.உ.சியிடம் ஒரு குணம் இருந்தது. ஒரு அதிகாரம் சொல்லிக் கொடுத்தப் பிறகு முழுமையாக மனனம் செய்து ஒப்புவித்தால் மட்டுமே அடுத்த பாடத்திற்கு செல்வார். இராசாசி குறள் பயின்ற போது இந்த நிபந்தனைக்கு உட்படாமல் இருந்ததால் வ.உ.சி “உனக்குச் சொல்லி கொடுக்கும் அளவுக்கு எனக்கு பொறுமையும் இல்லை “ என்று மறுத்து விட்டார்.

<u>திருக்குறள் ஏற்படுத்திய நட்பு:</u>

1926ஆம் ஆண்டு டி.கே.சிதம்பரநாத முதலியார் வீட்டில் வ.உ.சி. தனக்கே உரிய ஆவேசப் பேச்சினிடையே பரிமேலழகர் உரையில் பல இடங்களில் பிழை உள்ளது எனவும், முதல் நான்கு அதிகாரங்கள் வள்ளுவர் இயற்றியது அல்ல எனவும் கூறிய வேளையில் வையாபுரி பிள்ளை இடையே குறுக்கிட்டு உணர்ச்சிக்கு இடங் கொடாதபடி பரிமேலழக்ர் உரையின் போக்கையும் சிறப்பையும் வலியுறுத்தி பேச, அந்த அணுகுமுறை வ.உ.சி.க்கு பிடித்துப் போய் அன்று முதல் வ.உ.சியின் பதிப்புப் பணியில் வையாபுரி பிள்ளையின் பங்களிப்புக்கும் காரணமாக இருந்தது.

<u>காலத்திற்கேற்ற கருத்து மாற்றம்:</u>

திருவள்ளுவர் ஒரு ஒப்பற்ற அறிஞர். நானும் அவரை கடவுள் என்றே போற்றுகிறேன். அவர் நூலில் வாளென்றும், வேல் என்றும் இருக்கிறதேயன்றி துப்பாக்கி என்றாவது பீரங்கி என்றாவது இல்லை. இப்பொழுது யுத்தத்திற்கு சாதனங்களாக துப்பாக்கியும் பீரங்கியும் இருக்கின்றன. யுத்தத்திற்கு செல்ல நேரிடின் என் செய்வது?. வள்ளுவர் துப்பாக்கி பீரங்கி குறித்து ஒன்றும் சொல்லவில்லையே என்று அச்சாதனங்களைக் கொண்டு போர் புரியாமல் இருப்பது எவ்வளவு மூடத்தனம். காலத்திற்கேற்ற மாற்றம் வேண்டும் எனப்திலும் கருத்து கொண்டிருந்தார் பெரியவர் வ.உ.சி.

புரட்சிகரப் புத்துரை:

தென்புலத்தார் என்பதற்கு ஏன் பிதுர்கள் என்று பொருள் கூற வேண்டும். வள்ளுவர் அவ்வாறு கூறினாரா? தென் - அழகிய புலத்தார் - அறிஞர்கள் அதவது தென்புலத்தார் கடன் எனபது ஞானிகள் விட்டுச் சென்ற வேலைகளை முடிக்க வேண்டும் எனப்து பொருளாகும் என புத்துரை அளிக்கிறார் வ.உ.சி. தென்புலத்தார் கடன் என்றாலே பிதுர்கடன் என்ற பெயரில் சிரார்த்தம் செய்து பிராமணர்களுக்கு அளிக்கப்படும் அரிசி, காய்கறி முதலியன வழங்குவது முன்னோர்களுக்குப் போய்ச் சேர்வது கிடையாது. அப்படியே முன்னோர்கள் (பிதுர்கள்) தங்கள் பிள்ளைகள் மூலம் வாங்கப் பிரியப்படுவார்களேயன்றி பிறர் மூலம் வாங்கமாட்டார்கள் என்று செட்டி நாட்டு சொற்பொழிவில் கூறுகிறார். இவரது திருக்குறள் உரையில் பல புரட்சிகரமான கருத்துக்களுடன் தனித்துவப்படுத்தி பார்க்கிறார். பெரியவர் வ.உ.சி. சுயசரிதையில் கூறுகையில் "திருவள்ளுவரின் தெய்வமா மறையின் பெருவளக் குறள் சில பேணிப் படித்தேன். சிறையில் அனுமதி பெற்று கரும்பொருள்கொண்ட நம் வள்ளுவர் மறையும் மாண்புயர் நல்லாப்பிள்ளை பாரதமும் படித்தேன் " என்கிறார்.

பெரியவர் வ.உ.சி. வாழ்வின் முதல் இலக்கிய சொற்பொழிவே தூத்துக்குடி சைவசித்தாந்த சபையில் 1904 ம் ஆண்டு திருக்குறளின் ஒழுக்கமுடைமை தலைப்பில் பேசியவர்.
பாடற்றிரட்டில் திருக்குறள் தனது பாடல் திரட்டில் வள்ளுவன் வாக்கின்படி வாழ்வதை சத்தியப்பிரமாணம் எடுக்கும் பாடல் ஓட்டப்பிடாரம் அருகே குறுக்குசாலையிற் பாடிய பாடல் ஒன்றைக் காணமுடிகிறது.

"திருவள் ளுவனென்னுந் தெய்வீக வாசா
னருளுள்ளி யென்றென்று மன்பை - யொருநற்
பொருளென்னக் கொண்டு பொருளுண்மை கண்டு
தெருளுன்னி வாழ்வேன் றினம்.

இதன்படி அவர் வாழ்நாள் முழுமையிலும் வாழ்ந்து காட்டியதற்கான பல்வேறு குறட்கவிகள் அவர் வாழ்வில் பொருந்திப் போகிறது. சிறையில் இருந்த போது தனது அன்னை, தந்தை, மனைவி அனைவருக்கும் அவர் எழுதிய கடிதங்களில் பாடல் வடிவில் ஊழ் மற்றும் விதி குறித்தும் திருக்குறள் பாடலை மேற்கோள் காட்டியுள்ளார்.கோயமுத்தூர் சென்ட்ரல் ஜெயிலில் வ.உ.சி. சிறைவாசம் அனுபவித்த போது மனைவி மீனாட்சி அம்மாளும் , வ.உ.சி.யின் வேதாந்த நண்பரான வள்ளிநாயக சுவாமிகளும் சிறையில் சந்திக்கின்றனர். குடும்ப குசலங்கள் விசாரித்து விட்டு அச் சமயம் நடந்த சம்பாசணையின் போது வ.உ.சி. திருக்குறள் மேன்மை குறித்து கூறுகிறார். " தமிழர்களெல்லாரும் வள்ளுவர் குறளை உரையுடன் அறிந்து பாராயணம் செய்தல் வேண்டும். 1330 குறளையும் பொருளுடன் உணர்ந்திலாத தமிழர் முற்றுந் துறந்த முனிவரேயாயினும்,என்னைப் பெற்ற தந்தையேயாயினும், யான் பெற்ற மக்களே யாயினும் யான் அவரைப் பூர்த்தியாக மதிப்பதுமில்லை;நேசிப்பதுமில்லை என்று குறிப்பிடுகிறார். இக் கூற்று 1910ல் கர்மயோகி இதழில் வெளியானது. கோவையில் வசித்த காலத்தில் தியாசபிகல் மன்றத்தில் ஞாயிறு தோறும் திருக்குறள் வகுப்பு சொற்பொழிவை நிகழ்த்தியவர்.

**கரிசல்காட்டு திருக்குறள் ஆய்வாளர்கள்**

திருக்குறள் படி நடந்து ஆய்வு செய்து சதா திருக்குறள் இன்பத்தை முகர்ந்து முடிந்த வரை அதன்படி நடக்க முயற்சித்த கரிசல் காட்டு திருக்குறட் ஆய்வாளர்கள் இருவர் . ஒருவர் பெரியவர் வ.உ.சிதம்பரனார். மற்றொருவர் கவிராயர் செகவீரபாண்டியனார். வ.உ.சிதம்பரனார் உடல் நலிந்து இறப்பதற்கு முன்பாக செகவீரபாண்டியனார் தனது நண்பர் வ.உ.சிதம்பரனாரைச் சந்திக்கிறார்.
மரணப்படுக்கையில் கிடந்த வ.உ.சிதம்பரனார் செகவீரபாண்டியனாரை நோக்கி தழுதழுத்த குரலில் இவ்வூரில் இருவர் இருந்தோம். ஒருவன் செல்கிறேன் என்றார். அதாவது திருக்குறள் ஆராய்ச்சியில் வ.உ.சிதம்பரனாரும் கவிராயர் செகவீரபாண்டியனாரும் பரஸ்பர ஆராய்ச்சி நோக்கில் விவாதிப்பதும் அதன்படி வாழவும் முயற்சித்தவர்கள். திருக்குறள் மூலம் கதியின்பம் அடைந்தவர்கள் பெரியவர் வ.உ.சிதம்பரனார் மற்றும் கவிராயர் செகவீரபாண்டியனார்.

**வள்ளுவமாய் வாழ்ந்த பெரியவர் வ.உ.சி.:**

தனது குழந்தைகளினை காலையில் எழுப்ப " மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்" என்ற குறளை ராகத்துடன் படிக்க உடனே தூக்கத்தில் இருக்கும் அனைத்துக் குழந்தைகளும் எழுந்து விடுவார்கள் என்று அவரது மகன் தனது அப்பா குறித்த நினைவலைகளில் பதிவு செய்துள்ளார். அவரது வீட்டில் எப்பொழுதும் திருக்குறள் வகுப்பு நடத்தி விட்டுச் சுண்டல் கொடுப்பதை வழக்கமாக வைத்துள்ளார். பெருமுயற்சியின் விளைவாக ஆங்கிலேயர்களை அடக்க வேண்டுமெனில் சொந்தமாக கப்பல் வாங்க முயற்சி செய்த போது மும்பைக்குச் செல்கிறார். மும்பைக்கு புறப்ப்டும் முனபு கப்பலுடன் திரும்புவேன் அல்லது கடலில் விழ்ந்து மாய்வேன் என்று சூளுரைத்து விட்டுச் சென்றார்.

"கப்பலுடன் வாரேனேல் காண்பீர்கள் என்பிணத்தை
இப்படியோர் சூளுரைத்த தேனோ சிதம்பரனார்?
"எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர்
திண்ணியர் ஆகப் பெறின்" என்ற குறள் வரி அப்படியே பொருந்துகிறது.

ஒருவன் துன்பத்தையே இன்பமாக கொள்வானாயின் பகைவர்களும் அவனை மதிப்பர் என்பது வள்ளுவரின் வாக்கு.

வெஞ்சிறையில் ஏனோ விலங்கு போல செக்கிழுத்தார்
நெஞ்சுரத்தில் இவருக்கு நிகர் யார்?
இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு.

அதே போன்று வ.உ.சி.யின் முதல் மனைவி வள்ளியம்மையை குறிப்பிடும் போது " வள்ளுவர் குறளை வளனுறப் படித்துக் கொள்ளும் விதத்தில் கூறுவள் உரையுடன்" என்று பதிவிடுகிறார். இதன் மூலம் தனது மனைவிக்கும் திருக்குறள் மீதான ஈடுபாட்டை தெள்ளென விளக்குகிறார்.

செய்நன்றி அறிதல் குறளுக்கு தம் வாழ்விலும், இல்வாழ்க்கையிலும் எந்தெந்த சமயத்தில் யாரெல்லாம் உதவி செய்தார்களோ அவர்களை மறக்காமல் நன்றியறிதலை காட்டி நமக்கு முன்னோடியாக வாழ்ந்து காட்டினார் வ.உ.சி. கப்பல் கம்பெனிக்கு தொண்டாற்றிய சி.த. ஆறுமுகம் பிள்ளை, கோவைச் சிறையில் பல உதவிகளைச் செய்த சி.கே.சுப்பிரமணிய முதலியார், தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த தில்லையாடி வேதியன்பிள்ளை செய்த தக்க உதவிகள், சிறைத் தண்டனையால் தனது வழக்கறிஞர் சன்னத் திரும்ப கிடைக்க வழி செய்திட்ட வாலஸ் என்னும் ஆங்கிலேயர் எல்லோரயும் ஞாபகப்படுத்தும் விதமாக தனது குழந்தைச் செல்வங்களுக்கு பெயரிட்டு தனது நன்றி உணர்ச்சியைக் காட்டி வள்ளுவ்னின் வாய்மையை வேதமெனக் கொண்டு வாழ்ந்து காட்டினார்.

அவருடைய அரசியல் குருநாதர் திலகர் பகவத் கீதைக்கு உரை எழுதியவர். திலகரின் சீடரோ இவர் திருக்குறளுக்கு உரை கண்டார்.

சிறையில் இருந்தபோது பாமரர்களான சாமான்ய கைதிகளும் புரியும்படியாக திருக்குறள் சாராம்சத்தை ஆத்திசூடி பாணியில் மெய்யறம் படைத்து திருக்குறளுக்கு வழிநூலாக தமிழுலகத்திற்குக் கொடையளித்தார்.

1927 ல் சேலம் மாநாட்டில் பெரியவர் வ.உ.சி. வழங்கிய "அரசியல் பெருஞ்சொல்" சொற்பொழிவு முழுமையும் நெல்மணிகளைப் போல் திருக்குறளை மிகவும் ஆழமாகவும், பரவலாகவும் பயன்படுத்தியிருப்பார். வ.உ.சி.க்கு மிகவும் பிடித்த - அடிக்கடி பயன்படுத்தும் -குறள் "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது உஞற்றுபவர்" என்ற குறள் ஆகும்.

செல்வம் நிலையாமை குறளுக்கு தன் வாழ்வின் அனுபவத்திலிருந்து கூறல்:

தூத்துக்குடி வீட்டில் வசித்திருந்த சூழலில் சில மாணவர்களுக்குத் திருக்குறள் வகுப்பினை எடுத்து வந்தார். செல்வம் நிலையாமை அதிகாரம் சொல்லி கொடுத்து வரும் வேளையில் பல்வேறு உரை மூலமாக அர்த்தப்படுத்திக் கொண்டிருந்தார். " ஒரு மாணவன் எழுந்து செல்வம் நிலையாமை குறித்து தங்களது சொந்த கருத்து என்ன எனக் கேட்கிறான்".

வசதி மிக்க வழக்கறிஞர் பரம்பரை குடும்பம். கப்பலை ஓட்டி ஆங்கிலேயர்களுடைய அடிவயிற்றைக் கலக்கியவர். கோரல் மில் போராட்டத்தில் ஈடுபட்ட ஆயிரத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர் குடும்பங்களுக்கு போராட்டக் காலங்களில் அன்னமிட்டு தனது சொத்துக்களை இழந்தவர்.அவர் கொண்ட சுதேசிய கொள்கை பிடிப்பால் வருமானமிழந்து வறுமையான சூழலில் கேட்கப்படும் கேள்வி இது. அந்த நேரம் வ.உ.சி. சன்னல் வெளியே பார்க்கிறார். தனது மனைவி வீட்டின் சுற்றுச் சுவற்றில் ஒட்டப்பட்டிருந்த எரு வறட்டிகளைப் பிய்த்து கொண்டிருப்பதைக் காண்கிறார்..

கேள்வி கேட்ட மாணவனைப் பார்த்து "அம்மா என்ன செய்கிறார் என்று தெரிகிறதா?" என வ.உ.சி. கேட்கிறார். மாணவருக்கு அவர் எரு வறட்டியை பிய்த்து எடுத்துக் கொண்டிருப்பதை தவிர வேறொன்றும் தெரியவில்லை என்கிறான். அச்சமயம் வ.உ.சி. அந்த மாணவனிடம் கூறியதாவது

"இன்றைய வீட்டுச் சாப்பாட்டிற்கான பணத்தேவைக்கு விற்பனை செய்வதற்காக அம்மா வறட்டியை எடுத்துக் கொண்டிருக்கிறாள்" என்கிறார். மாணவன் கலங்கிப் போய் வ.உ.சி.யின் முகத்தைப் பார்க்கிறான். பின்பு தொடர்கிறார். " இதுதானப்பா நீ கேட்ட செல்வ நிலையாமை" குறித்த எனது சொந்தக் கருத்து " என்றாராம். (கள ஆய்வு தகவல் - குருசாமி மயில்வாகனன்)

முடிந்த வரை திருக்குறளைப் பின்பற்றி நடக்க முயன்றவர். அவரது வாழ்வில் மேற்குறித்த செல்வ நிலையாமையைக் குறிக்க எப்படி தனது வாழ்க்கையையே விளக்கமளித்தாரோ அப்படித்தான் திருக்குறள் போற்றி வாழ்ந்த ஆளுமை இவர்.

## தண்டபாணி தேசிகர் அவர்களின் திருக்குறளாய்வு-2

பத்மபூசண் விருது பெற்ற முதல் தமிழ் அறிஞர் தண்டபாணி தேசிகர் (1903-1990). உ.வே.சாமிநாத அய்யரிடம் பயின்றவர். சென்னைப் பல்கலைக்கழகத்தில் வித்வான் பட்டத்தில் மாநில அளவில் முதலிடம் பெற்றார். தமிழ் ஆராய்ச்சியில் சிறந்து விளங்கியவர்.திருவாரூர் உயர்நிலைப் பள்ளியில் இவர் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றிய போது, கலைஞர் மு.கருணாநிதி இவரது மாணவர். குன்றக்குடி அடிகளாரும் தண்டபாணி தேசிகரின் மாணவர் தான். திருக்குறளில் இவருக்கு இருந்த புலமையால் தமிழக அரசு இவருக்குத் திருவள்ளுவர் விருது வழங்கிப் பாராட்டியது. மதுரைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்விருக்கையிலிருந்து, திருக்குறள் உரைக் களஞ்சியத் தொகுதிகளை வெளியிட்ட பணியும் இவரது அறிவு சான்ற பெருந்தொண்டிற்கு உரைகல்லாக அமைந்தன.

-----------------------------------------------------------------------------------------------------------------------------------------------------------

--

பேரா.கு. வெ. பாலசுப்பிரமணியன்
மேனாள் துறைத் தலைவர்,இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**திருக்குறளின் மாண்பு**

மகாவித்துவான் தேசிகர் அவர்கள் திருக்குறளிற் கருத்தழகு காண்கிறார்; குறள் யாப்பு என்னும் கட்டமைப்பிற் பொலியும் அமைப்பழகு காண்கிறார். திருக்குறள் சட்ட நூலா தத்துவ நூலா என்னும் வினாவிற்கு,

"இந்நூல் விதி விலக்குகளைக் கட்டாயப் படுத்தாமல், அறங்களின் அடிப்படையான தத்துவங்களை எடுத்துக்காட்டி அவரவர்களும் தாங்களே தங்கள் வாழ்க்கையைத் தூய்மைபடுத்திக் கொள்ளச் செய்கிறது. ஆதலால் இது தத்துவ நூலே."

என்று விடையிறுக்கின்றார். (திருக்குறள் அழகும் அமைப்பும் ப. 17) என்ற இக்கருத்தின் விரிவையே ஆசிரியரின் மற்றொரு படைப்பான 'திருக்குறளில் மெய்ப்பொருட் சுவடுகள்' நூலாக உருக்கொண்டது.
திருக்குறள் முப்பாலமைப்புடையதாயினும் முழுவதும் அறமே நுவலும் நூல் என்பதை அதன் அமைப்பை ஆராய்ந்து கூறுவதன் வழி தெளிவுபடுத்துவார்.

"இந்நூல் அடிமுதல் முடிவுறுகாறும் அறமே உணர்த்துகிறது. முதற்கண் தனி அறம். அடுத்துப் பொருளீட்டற் கண்ணும், தொகுத்தார் கண்ணும் அழித்தற் கண்ணும் மேற்கொள்ள வேண்டிய அறங்கள், இன்பத்திற்கு வழியாய அறங்கள் எல்லாம் அறமாகவே உணர்த்தப் படுகின்றன. "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம்" என்பதும் ஆன்றோர் அருண்மொழி. ஆதலால் இந்நூல் நாற்பாலை முப்பாலாக மொழிந்தாலும், ஏனைய திரிவர்க்க சாத்திரங்களைப் போல அறம் பொருள் இன்பங்களாகிய திரிவர்க்கங்களைப் பற்றிக் கூறாமல் அவற்றின் அறத்தத்துவங்களை மட்டும் அறிவிப்பதால், அறம் என்ற ஒன்றையே அறிவிப்பதாகும்." (முந்து நூல் ப. 26)

என்று கூறுவது எண்ணத்தக்கது. இக்கருத்தின் படியாகத் திருக்குறள் அறத்தின் அறம், பொருளின் அறம், இன்பத்தின் அறம் என நூல் முழுமையும் அறத்தின் திறம் கூறுவதாக அமைந்தமை அறியப்படும். திருக்குறள் முதல் நூல்; இஃது எந்நூலின் வழி நூலுமன்று என்பதை ஆசிரியர் பலர் கூற்றுக் கொண்டு தெளிவுபடுத்தியுள்ளார்.

“இத்தகைய அறத்திற்கு - சிறந்தாரும் வரைவிலக்கணம் கூற முடியாத அறத்திற்கு வள்ளுவர், சில சொற்களால் மிகச் சீரிய முறையல் இலக்கணங் கூறி முடித்தார். முற்கூறிய மனு, சுக்கிரன் முதலாயினார் கூட நல்லன செய்தல் அறம் என்றார்கள். வள்ளுவர் செயல் சிந்தையின் வழியது ஆகலின் அறம் அங்கேயே அமைதல் வேண்டும் என்கிறார். செயற்கண் வெளிப்படின் சிந்தித்துச் செயலுக்கு வருவதற்குள் அறமல்லாதன உள்ளத்தையும், உணர்ச்சியையும் ஏன் உடலையுங் கூடக் கெடுத்துவிடுகின்றன. ஆதலால் அதனை அகத்திலேயே அமைக்க வேண்டும் என்று கருதிய வள்ளுவர் அறமாவது ‘மனத்துக்கண் மாசிலனாதல்’ என்றார்”
(முந்து நூல் ப.62)

என்று கூறுவது ஓர் ஆழ்ந்த கருத்தாகும். பிற மொழி அறநூல்கள் செயலே அறத்தின் அடிப்படை என்ற போது திருக்குறள் மனமே அடிப்படை என்று கூறிய நிலையை ஆசிரியர் எடுத்துரைப்பது எண்ணத்தக்கது. எது துறவறம் இல்லறமே சிறந்தது என்பது திருவள்ளுவர் கருத்தெனக் கூறும் மகாவித்துவான், துறவறத்தைப் பற்றிக் கூறுவது. ஆழ்ந்த சிந்தனையின் வெளிப்பாடாகும். பெரும்பாலும் துறவு என்பது புறவேடப் பொலிவே என்றிருந்த கருத்தை மாற்றியவர் திருவள்ளுவர். உலகம் பழித்தது ஒழிக்காமல், புண்ணிய நீராடியும், தவவேடப் பொலிவு தோற்றியும், ‘யாம் முற்றத் துறந்தேம்’ என்பது துறவாகாது என்பது திருவள்ளுவர் கருத்து. ஆசிரியர் துறவென்பது 1. பற்றறுத்தல் 2. உலக உயிர் யாவற்றுக்கும் அருள் செய்தல் என இருநெறியால் நிகழும் என்று கூறுவது நல்ல விளக்கமாகும்.
“பற்றறுத்தல், பற்றுச் செல்லுமிடத்திற் செல்லவிடாது, மனத்தைத் தடுத்து நிறுத்துதலும், இது செல்லுமிடம், இது செல்லாதவிடம் என்ற வேறுபாடின்றி உலகம் முழுவதையுமே உறவாகக் கொண்டு செலுத்துதலுமாகிய இரு நெறியால் நிகழும். அவற்றுள் முன்னது ஓடு நீரை அணியிட்டதுபோல, முட்டவரும் மாட்டைக் கட்டிப் போட்டது போலத் தடுத்தலாகும். அணை மெலிந்தாலும், கயிறு அறுந்தாலும் நீரும் மாடும் பொருட்கேடு விளைத்தல் போலப் பற்றுறுதியும் தடை நீங்கியவரிடத்துப் பெருந்துன்பம் செய்யும்.” (மு. நூ. ப. 69)
என்று கூறி இதற்கு மாறாகத் தன் பற்று உலகம் முழுவதற்குமான அருளாக மாறிவிட்டால், அதுவே துறவின் சிறந்த நிலையென்று கூறுகின்றார். இதே போலத் தவத்தை விளக்குங்கால், தனக்கு வந்த துன்பத்தைத் தாங்குதலும், பிற உயிர்க்குத் துன்பம் செய்யாமையுமே தவமெனவும், தன்னலத்துக்காகச் செய்யப்படுவது தவமன்று எனவும் கூறுவன எண்ணி இன்புறத்தக்கன.
காமத்துப்பால் நாடகமா?
ஒரு நீதி நூல் எங்ஙனம் அமைய வேண்டுமென்பதற்குத் திருக்குறள் எடுத்துக்காட்டாக இலங்குவதை மகாவித்துவான் கீழ்வருமாறு விளக்குவர்.
“நீதிநூல்களுக்குப் புனைந்துரை வேண்டாம்; போலியான நடிப்புகள் வேண்டாம். உள்ளதை உள்ளபடியே சொல்லித்திருத்தும் வளநெறி வாய்ந்தவை நீதி நூல்கள். சிற்சில நேரங்களில், படிப்பவனும் கேட்பவனும் இலக்கியச் சுவையில் ஆழ்பவனானால் அணிகளையும் குறிப்புரைகளையும் பூண்பது உண்டு. ஆனால் அணிகளும், கட்டுக் கதைகளாகிய புனைந்துரையும் அவனுக்கு முக்கியமல்ல. குழந்தையை வளர்க்கிற தாய்க்கு மருந்து முக்கியமே தவிர அதிற் கலக்கின்ற சர்க்கரை முக்கியமன்று. அதுபோல ஒழுக்கங்களை வரையறுக்கும் நீதி நூல்களில் சொற் செறிவு பொருட் செறிவு இருந்தாற் போதும்.”
(திருக்குறள் ஆய்வும் மதிப்பீடும் ப.22)

என்பது தேசிகர் ஐயாவின் கருத்தாகும். காமத்துப் பாலை முழு நீதி நூலாகவே காண்கிறார் இவர். தொல்காப்பியக் களவியல், கற்பியலில் இடம்பெறும் தலைவன் தலைவி முதலானோரின் கூற்றுப் போலவே காமத்துப்பாலும் ஆசிரியர் கூற்றாக அமையாது பாத்திரக் கூற்றாக அமைந்தமை கருதிப் பலரும் இக்குறட்பாக்களை நாடக அமைப்பின எனக் கருதினர். பரிமேலழகர் போசராசன் இயற்றிய இன்ப நூலில் புணர்ச்சி, பிரிவு என இரு கூறுபட வழங்கியவாறே திருவள்ளுவரும் களவியல், கற்பியல் என இரு கூறுபடக் காமத்துப்பாலை யாத்தார் என்பதை மறுக்கும் தேசிகர்,

“இதனால் காமத்துப்பாலை நெறி நூல் பகுதியாகக் கொள்ளாது, புனைந்துரையும் கலந்த - நாடக வழக்குங் கலந்த நூலாக ஆய்வுலகமும் அணுகத் தொடங்கியது.” (மு. நூ. ப. 30)

என்றுக் கூறி பரிமேலழகரின் செய்தியை மறுப்பர்.

திருக்குறள் சுக்கிர நீதி ஒப்பீடு

பண்டிதமணியவர்கள் அர்த்த சாத்திரத்தையும், சுக்கிர நீதியையும் வடமொழியிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்தார். அவற்றுள் சுக்கிரநீதியைத் திருக்குறளோடு ஒப்பிட்டு மகாவித்துவான் வரைந்துள்ள ‘திருக்குறளும் சுக்கிர நீதியும்’ என்னும் கட்டுரை குறிப்பிடத்தக்கது.

சுக்கிரன் அசுர குரு; இவர் அசுரர்களுக்கு நீதி கற்பித்தற் பொருட்டாக ‘ஔசனசம்’ என்னும் பொருள் நூலை இயற்றினார். இந்நூலின் சுருக்கமாகப் பிற்காலத்தே எழுதப்பட்டதே ‘சுக்கிரநீதி’ என்னும் நூலாம். இந்நூல் உரைநடையில் அமைந்தது; ஐந்து இயல்களைக் கொண்டது.

சுக்கிர நீதி அரசியல் நெறிகளையும், மக்கட்குரிய ஒழுக்க நெறிகளையும் கூறும். இந்நூல் எந்நோக்கினது என விளக்கும் ஆய்வறிஞர் தேசிகர்,

“அறநூல்களுக்கு மாறுபாடில்லாமல் பொரு ணூல்களை
ஆராய்தல் வேண்டும் என்றும், (4:5-274) எங்கு அறத்தைப்
பின்பற்றிப் பொருணூல்கள் ஆராய்ச்சி நடைபெறுகிறதோ
அவ்விடமே அறநிலையமாகிய நீதி மன்றம் (4:5-44)
என்றும் கூறுவதால் இந்நூலின் அமைப்பும் போக்கும் அரசியல்
பொருளாதார அடிப்படையிலே தொடங்கி, அதற்கு உறுதுணை
யாக அறத்தையும் விளக்க வந்த நூல் என்பது உறுதி.”
- (திருக்குறட் சிந்தனைகள் ப. 51)

என்று கூறுகிறார். பரிமேலழகர், திருக்குறள் சுக்கிர நீதியைப் பின்பற்றியதாகக் கூறுவதைக் காட்டி, சுக்கிர நீதி காலத்தாற் பிற்பட்டது எனவும் மொழிந்து, இரு நூல்களிலும் ஒப்புமையான கருத்துக்கள் உள்ளன என்கிறார்.

எச்செயல் பலரால் பாராட்டப்படுகின்றதோ அது அறம் என்று சுக்கிர நீதி கூறுவதை மாகாவித்துவான் ஏற்கவில்லை.

“காலத்திற்கும் இடத்திற்கும் மரபிற்கும் ஏற்பச் சில செயல்கள் பலரால் போற்றப் படலாம் தூற்றவும் படலாம். எடுத்துக்காட்டாகக் கள்ளுண்டல், கள்ளுண்பார் நஞ்சுண்பவர் என ஒரு சார் தூற்றப்படுகிறது. அதுவே சிறிய கட்பெறினே எமக்கீயும் மன்னே, பெரியகட் பெறினே யாம்பாடத் தாம் மகிழ்ந்துண்ணு மன்னே எனப் போற்றவும் படுகிறது. அதனால் பலர் போற்றுவதொன்றே அறத்திற்குப் போதுமான இலக்கணம் ஆகாது. இத்தகைய இடையீட்டெண்ணங்கள் விளைதல் கூடாது என்ற ஆழ்ந்த நோக்கால் வள்ளுவர் மனமாசில்லாமையே அறம் (மனமாசகற்றல் அறமென்னாது) என்றதும் செய்யக் கூடியது அறமொன்றுமே என்றதும் எத்துணைச் சிறந்த கருத்துக்கள்.”

என்று கூறுவது ஒப்பீட்டால் ஆராய்ந்து காட்டும் முடிவாகும். சுக்கிர நீதியில் பிறப்பினால் உயர்வு வருவதில்லை என்று கூறப் பெறுகின்றது.

“இவ்வுலகத்தில் அந்தணராதலும், வணிகராதலும், சூத்திரராதலும், மிலேச்சராதலும், பிறப்பினால் இல்லை. குணம் செயல்களாலேயே வேறுபடுத்தப்பட்டன.

(அத்.1:39)

இவ்வாறு கூறிய சுக்கிர நீதி பின்னர் “ஞான முதலிய நற்குணங்கள் உடையவனைப் பிரமன் அந்தணனாக இயற்றினான்”என்கின்றது. மகாவித்துவான் தேசிகர் இம்முரணைச் சுட்டிக்காட்டித் திருக்குறள் “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்” (972) எனக் கூறி அவ்வறத்தை முரண் தேராது மொழிவதையும் காட்டுவார்.

பல பகுதிகள் கருத்தாலும், தொடராலும் திருக்குறளிலும் சுக்கிர நீதியிலும் ஒத்திருப்பதைத் தேசிகர் ஆய்ந்து காட்டியுள்ளார். உரன் என்னும் தோட்டி, அமைச்சர் எண்ணித் துணிதல், தூதரின் இலக்கணம் முதலானவற்றில் இரு நூல்களுக்குமிடையில் கருத்தொற்றுமை இருப்பதை இவர் காட்டியுள்ளார்.

# அரமும் மரமும்

--மறைமலைஇலக்குவனார்

அரம்போலும்கூர்மையரேனும்மரம்போல்வர்

மக்கட்பண்பில்லாதவர்(குறள்-997)

என்னும்குறள்"பண்புடைமை"என்னும்அதிகாரத்தில்இடம்பெற்றுள்ளது.மக்கட்பண்புஇல்லாதவர்கள் அரம் போன்ற கூரிய அறிவு பெற்றிருந்தாலும் மரத்துக்குச் சமமாகவே மதிக்கத்தக்கவர்கள் என்று இதற்குப் பொருள் கூறப்பட்டு வருகிறது.

"மக்கட்பண்பு இல்லாதவர் - நன்மக்கட்கே உரிய பண்பில்லாதவர்; அரம் போலும் கூர்மையரேனும் - அரத்தின் கூர்மை போலும் கூர்மையை உடையரேயாயினும்; மரம் போல்வர் - ஓர் அறிவிற்றாய மரத்தினை ஒப்பர்" " என்றே பரிமேலழகர் உரை வகுத்துள்ளார்.அறிஞர்கள் பெரும்பான்மையும் பரிமேலழகர் உரையினை ஒட்டியே உரைகண்டுள்ளனர்.

"மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர் அரம் போல் கூர்மையான அறிவுடையவரானாலும், ஓரறிவுயிராகிய மரத்தைப் போன்றவரே ஆவர்." "என்னும் மு.வ. விளக்கமும்

"நன்மக்கட்கேயுரிய பண்பில்லாதவர் அரத்தின் கூர்மை போலுங் கூர்மையுடையரேயாயினும், ஓரறிவிற்றாய மரத்தினை யொப்பர்." " என்னும் மணக்குடவர் உரையும் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

வள்ளுவர் மரத்தின் மாண்பை உணராமல் அதனைப் பழித்துரை கூறிவிட்டாரே என இன்றைய 'தமிழறிஞர்கள்' சிலர் திருவள்ளுவரைப் பழித்துரைக்கத் தலைப்பட்டுள்ளனர். மனிதஇனத்தை மாண்புறுத்தும் 'ஒப்புரவு' என்னும் உயரிய பண்புக்குத் திருவள்ளுவர் மரத்தையல்லவா எடுத்துக்காட்டாகக் கூறுகிறார்?

மருந்துஆகித்தப்பாமரத்தற்றால்செல்வம்

பெருந்தகையான்கண்படின் - குறள் 217

பயன்மரம்உள்ளூர்பழுத்துஅற்றால்செல்வம்

நயன்உடையான்கண்படின் - குறள் 216

"உயர்ந்ததன்மேற்றேஉள்ளுங்காலை" என்னும் தொல்லாணை நல்லாசிரியர் கருத்தின் அடிப்படையில் காணும்போது ,ஒப்புரவுக்குக் குறியீடாக மரத்தைத் தெரிவித்து மாண்பு சேர்க்கும் வள்ளுவர், மரத்தைப் பண்பற்றவர்க்கு ஒப்புக்கூறி தாழ்வாக மதிப்பிடுவாரா என்னும் வினா எழுகிறது.

அரம் போலும் கூர்மையான அறிவு இருந்தாலும் மக்கட்பண்பு இல்லாமல் போய்விடுமாயின் அந்த அறிவினால் பயன் இல்லை; அந்தக் கூர்மையான அறிவு தீயசெயல்களுக்கு வழிவகுத்துவிடலாம் என்பதே குறள் (997)தரும் பொருள். அஃது எவ்வாறெனில் அந்த அரத்திற்குக் கைப்படியாக அமையும் மரம் தனது இனமாகிய மரங்களை அறுத்தற்குப் பயன்பட்டுவிடுவதைப் போல எனலாம். இக்குறளில் மரம் என்னும் சொல் உயிருடைய மரங்களைக் குறிக்கவில்லை. அரத்திற்குக் கைப்பிடியாக அமைந்து தன் இனத்திற்கே கெடுதி

செய்யும் மரப்பகுதியையே குறிக்கிறது எனப் பொருள் கொண்டால் இக்குறள் உணர்த்தும் உண்மை தெளிவாகத் தெரிகிறது.

தன்னால் ஒரு செயலையும் செய்ய இயலாமல் அடுத்தவர் கையில் அகப்பட்டுக்கொண்டு தன் இனத்திற்கே கேடு விளைக்கும் இந்த மரத்தை மற்றொரு குறளிலும் எண்ணிப் பார்க்கிறார் வள்ளுவர்.

உரம்ஒருவற்குஉள்ளவெறுக்கைஅஃதுஇல்லார்

மரம்மக்களாதலேவேறு(குறள்600)

என்னும் குறளும் ஊக்கம் என்னும் வலிமையில்லாதவர்கள் அடுத்தவர்கள் கையில் மாட்டிக்கொண்டு குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக்காம்புகளாகத் தீமை பயப்பர் எனக் குறிப்பாக எச்சரிக்கிறார்.

இக் குறட்பாக்களில் மரம் என்னும் சொல் வழங்கும் இப்பொருளைத் தெளிந்துகொண்டால் திருவள்ளுவரின் உவமைநலன் விளங்குவதுடன் அவர் உணர்த்தவந்த அறிவுரையும் பசுமரத்தாணியாக நம் உள்ளத்தில் பதியும் அல்லவா? ஒரே ஒரு குறளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு பொருள் தெளிய முற்பட்டால் தெளிவாகப் பொருள்புரிந்துகொள்ள இயலாது.

வற்றல்மரம்-குறள் 78 முள்மரம் குறள் 879 நச்சுமரம் - குறள் 1008

ஆகியன குறித்தும் நம் சமுதாயத்தில் அத்தகையோரை இனங்காண வள்ளுவர் அறிவுறுத்தியது குறித்தும் மரப்பாவையை வள்ளுவர் இரு குறட்பாக்களில் உவமை கூறுவதையும் எழுதப்புகுந்தால் கட்டுரை விரிவாகிவிடும். வள்ளுவர் மக்கட்பண்பில்லாதவர்க்கு உவமை கூறி மரத்தை இழிவுபடுத்திவிட்டார் என்னும் குற்றச்சாற்று பொருளற்றது என்பதை வலியுறுத்தலே இக்கட்டுரையின் நோக்கம்.

எப்பொருள்யார்யார்வாய்கேட்பினும்அப்பொருள்

மெய்ப்பொருள்காண்பதுஅறிவு - குறள் 423

# உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம்

(International Thirukkural Virtual Institute)

(ஊதியம் கருதாத தன்னார்வத் தொண்டு நிறுவனம்)

திருக்குறளைப் பரப்பவும் குறள்வழிச் சிந்தித்து வாழ்வுமுறையை நெறிப்படுத்திக் கொள்ள ஆற்றுப்படுத்தவும் பல்வேறு குறள் அமைப்புகள் செயற்பட்டுவருகின்றன. இணையதளத்தைப் பயன்படுத்திக் கொண்டு திருக்குறள் கல்வியை மேலும் விரிவாகவும் விளக்கமாகவும் மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெறச் செய்யும் நோக்குடன் உலகத் திருக்குறள் இணையக் கல்விக் கழகம் (International Thirukkural Virtual Institute) இணையதளத்தில் உலாவரத் தொடங்கியுள்ளது.உலகத் தமிழர்கள் http://kuralvirtual.com/ தளத்தில் இணைந்து பயன்பெற வேண்டும்.

பேராசிரியர் சி.இலக்குவனார் தமது வாழ்நாள் முழுமையும் குறள்நெறிபரப்பும் பணியில் உழைத்துவந்தார். குறள்நெறி என்னும் திங்களிருமுறை இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் இருபது ஆண்டுகளுக்கும் மேலாக வெளியிட்டு மக்கள்மன்றத்தில் ஒரு சிந்தனை மலர்ச்சியை ஏற்படுத்தினார். 1966 மே முதல் திசம்பர் வரை ஆறு திங்கள் நாளிதழாகவும் நடத்தினார்.

இன்றைய சூழலில் சிக்கலும் தடுமாற்றமும் பெருகிவரும் இல்லறம் நல்லறமாக நடைபெறும் வகையிலும் அரசியல்நெறி அறவழி இயங்கும் முறையிலும் நன்னெறி காட்டுதற்குக் குறள்நெறி இதழ் தேவைப்படுகிறது. கட்டுரை, கவிதை, இசைப்பாடல், நாடகம், கதை என அனைத்து வகைமைகளிலும் குறள்விளக்கங்கள் வரவேற்கப்படுகின்றன. உங்கள் அனைவரின் ஒத்துழைப்புடனும் குறள்நெறி இதழ் சிறப்பும் சீர்மையும் வலிவும் பொலிவும் பெற்றுப் பீடுநடையிடும் என்பதில் ஐயமும் உண்டோ? சுவைமிக்க சொல்லோவியங்களுடன் திங்கள் தோறும் முதல் நாளிலும் பதினைந்தாம் நாளிலும் உங்களைச் சந்திக்கக் குறள்நெறி உலா வரவுள்ளது. படியுங்கள்! நண்பர்களுக்குப் பகிர்ந்திடுங்கள்! ஞாலமெங்கும் பரப்புங்கள்!

- பேராசிரியர் முனைவர் தமிழியலன்

இயக்குநர்: மறைமலை இலக்குவனார்
இணை இயக்குநர்: பேராசிரியர் முனைவர் தமிழியலன்
துணை இயக்குநர்(ஒருங்கிணைப்பு): பேராசிரியர முனைவர் பெ.வெற்றிநிலவன்
துணை இயக்குநர்(கல்விப்பணி): முனைவர் திருமதி அ.செயசாலினி இரத்தினமேரி
துணை இயக்குநர்(செய்தித்தொடர்பு): திரு.செ.மன்னர்மன்னன்
துணை இயக்குநர்(மகளிர் தொடர்பு ): திருமதி.தாமரை சீனிவாசராவ்
துணை இயக்குநர்(தொழில்நுட்பம்): பொறியாளர் தி.ஈழக்கதிர்
துணை இயக்குநர்(வடிவமைப்பு): திருமதி சுபா அருணாசலம்
உதவி இயக்குநர்(பெருந்தகைகள் தொடர்பு): திரு. சொ.செ.இளங்கோவன்
உதவி இயக்குநர்(ஊடகப் பிரிவு): திரு.நா.முத்துவேலன்

**அயலக ஒருங்கிணைப்பாளர்கள்**

முனைவர் இர.பிரபாகரன் -அமெரிக்கா
முனைவர் அன்புசெயா (சிட்னி,ஆத்திரேலியா)
பேராசிரியர் மன்னர்மன்னன் (மலேசியா)
பேராசிரியர் பெஞ்சமின் லெபோ (பிரான்சு)
கவிஞர் அழ.பகீரதன் (இலங்கை)
பொறியாளர் ச.இராசகுமாரன் (அயர்லாந்து)
திரு.எலியாசு (சிங்கப்பூர்)
திருமதி.மதிவதனி பத்மநாதன் (சுவிட்சர்லாந்து)
திருமதி.தாமரை சீனிவாசராவ் (கம்போடியா)
திரு.ஞானமுருகன் (இங்கிலாந்து)
முனைவர் இராம சுந்தரம் (கொரியா)

***இணையவழி இலவசத் தனிச்சுற்றுக்கு*** ***விற்பனைக்கு அல்ல.***

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 6 | பங்குனி 19, தி.பி 2052 | ஏப்பிரல் 1, கி.பி 2021






## தனிநாயக அடிகளார்

(கட்டுரை உள்ளே)

# குறள்நெறி

நிகழும் திருவள்ளுவராண்டு தை முதல் நாளிலிருந்து கடந்த மூன்று திங்கள்களாகக் குறள்நெறி இணைய இதழாக உங்கள் உறுதுணையுடன் உலகை வலம்வந்து கொண்டிருக்கிறது. பல்வேறு நாடுகளிலிருந்து குறள்நெறி போற்றும் சான்றோர்கள் இதன் சிறப்பாசிரியர்களாக அமைந்து அணிசெய்து வருகின்றனர். படியுங்கள்!பகிருங்கள்!பரப்புங்கள்! என்பதே எங்கள் வேண்டுகோள். இவ்விதழ் பயிலும் பல்துறை வித்தகர்களும் தத்தம் துறையறிவு கொண்டு திருக்குறளின் பல்துறைவிளக்க மாட்சியை ஆய்வு செய்து கட்டுரை வழங்குமாறு அன்புடன் வேண்டுகிறோம். இவ்விதழில் இரண்டு பக்கம் வரும்வகையில் குறுங்கட்டுரையாக அமைந்தாலும் போதும்.

புத்தம்புதிய துறைகளின் மூலமும் ஆழமும் திருக்குறளில் அமைந்துள்ளமை அவ்வத் துறையறிஞர்கள் மூலம் அறிதல் இற்றைத் தேவையாகிறது. இலக்கிய ஆர்வலர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள்,ஆய்வாளர்கள் அலுவலர்கள் எனப் பல்வேறு ழ்க்கைநிலையினரும் பயன்பெறும் வகையில் குறள்விளக்கமும், அதன் துறைநுணுக்கமும், இலக்கிய நலனும், அறிவியல் திறனும் பரப்புதலே இந்த இணைய இதழின் நோக்கம்.

இதனை இணையவழிப் பயில்வோர் தாம் அறிந்த கல்விநிறுவனங்களுக்கும் அலுவலகங்களுக்கும் அனுப்பிக் குறள்நெறி பரவ ஒத்துழைக்குமாறு வேண்டுகிறோம். ஊதியம் கருதாது ஆற்றும் இப் பணியில் உங்களையும் இணைத்துக்கொண்டு குறள்நெறி பரப்பும் பணியில் ஒன்றிணையுமாறு வேண்டுகிறோம். சாதி, சமயம், வட்டாரம், கட்சி எனும் சிமிழ்களில் அடைபட்டுக் கிடக்கும் தமிழர் எழுச்சி கொள்க.

வாழ்க்கை சிறந்திட,மனிதநேயம் மலர்ந்திட அடிமைத்தளைகள் அகற்றிச் சமுதாயம் விடிவுபெறக் குறள்நெறியே தக்க வழிகாட்டியாக விளங்கும்.

படியுங்கள்! பகிருங்கள்! பரப்புங்கள்!

-ஆசிரியக் குழுவினர்.


இயக்குநர்: மறைமலை இலக்குவனார்
இணை இயக்குநர்: பேராசிரியர் முனைவர் தமிழியலன்
துணை இயக்குநர்(ஒருங்கிணைப்பு): பேராசிரியர முனைவர் பெ.வெற்றிநிலவன்
துணை இயக்குநர்(கல்விப்பணி): முனைவர் திருமதி அ.செயசாலினி இரத்தினமேரி
துணை இயக்குநர்(செய்தித்தொடர்பு): திரு.செ.மன்னர்மன்னன்
துணை இயக்குநர்(மகளிர் தொடர்பு ): திருமதி.தாமரை சீனிவாசராவ்
துணை இயக்குநர்(தொழில்நுட்பம்): பொறியாளர் தி.ஈழக்கதிர்
துணை இயக்குநர்(வடிவமைப்பு): திருமதி சுபா அருணாசலம்
உதவி இயக்குநர்(பெருந்தகைகள் தொடர்பு): திரு. சொ.செ.இளங்கோவன்
உதவி இயக்குநர்(ஊடகப் பிரிவு): திரு.நா.முத்துவேலன்

# நீரின்றி அமையாது உலகு

**- செயசாலினி இரத்தினமேரி**



*முனைவர் செயசாலினி இரத்தினமேரி நிறுவனச் செயலாண்மைத் துறையில் பட்டப்படிப்பும் எம்.எசு.சி.எம்.ஏ.எம்.எட்.. எனும் முதுகலைப் பட்டங்களும் இளமுனைவர் பட்டமும் பெற்ற கல்வியாளர்.பூங்காநகர் இறைப்பணி உயர்நிலைப்பள்ளியில் பதினைந்து ஆண்டுகளாக ஆசிரியர். ஆசிரியப் பணியில் தொடர்ந்து ஆறு ஆண்டுகளாக மாணவர்கள் பொதுத்தேர்வில் 100% தேர்ச்சி பெறச் செய்த இவர் திறமையைப் பாராட்டி அரிமாக் கழகம், தமிழ்வளர்ச்சித்துறைஆகியவை இவருக்கு நல்லாசிரியர் விருது வழங்கிப் பாராட்டியுள்ளன.மேலும் பல்வேறு விருதுகள் இவர்தம் சிறப்புத் திறனுக்குச் சான்றுகூற அணிவகுத்து நிற்கின்றன.பல்வேறு தமிழ் அமைப்புகளில் பட்டி மன்றப் பேச்சாளராகவும் நடுவராகவும் வெற்றிவலம் வரும் இவர், திங்கள்தோறும் இருபத்துநான்காம் நாள் நம் கல்விக்கழக வெளியீடாக வெளிவரும் 'குறள்விருந்த' இணைய இதழின் இணையாசிரியர் ஆவார்.*

அறிவியலின் ஆயிரம் கரங்களும் அனைத்து திசைகளிலும் பரந்து விரிந்து இவ்வுலகையே ஒரு கைப்பிடிக்குள் கொண்டு வந்துவிட்டது. உலகின் எந்த பகுதியில் வசித்தாலும் அனைத்து விலங்குகளுக்கும் தாவரங்களுக்கும் தண்ணீர் இன்றியமையாத ஒன்று.

இதன் முதன்மை உணர்ந்தே வள்ளுவத்தில் கடவுள் வாழ்த்துக்கு அடுத்த இடத்தில் வான் சிறப்பு சொல்லப்பட்டிருக்கிறது. அதிலும் குறிப்பாக நீரின்றி அமையாது உலகு என்கிறார்.

அதிகரித்து வரும் மக்கள் தொகைக்கும் புவி வெப்பமயமாதலுக்கும் இடையே தண்ணீர் பற்றாக்குறை ஏற்பட்டுத் திணறிக்கொண்டிருக்கும் வேளையில் தண்ணீர் பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்தும் விதமாக 1993 முதல் மார்ச்22 ம் தேதி உலக தண்ணீர் தினம் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

"தண்ணீர்;பருவநிலை மாற்றம்" என்பது இந்த ஆண்டின் மையக்கருத்து.

நீர் இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான் இன்று அமையாது ஒழுக்கு -குறள்-20, வான்சிறப்பு

"நீர் இல்லாவிடின் எந்த உயிரும் வாழாது உலக ஒழுங்கு கெடும்;மழை இல்லாமல் ஒழுக்கமும் நிலைபெறாது" என்பது வள்ளுவர் வாக்கு.

450 கோடி ஆண்டு வயதான இப்பூமி எரிமலைக்குழம்பில் இருந்து தோன்றியபோது பாறைகளுடன் கூடிய கடின அமைப்புக் கொண்டிருந்த்து. இப்பாறைகளில் மழை பொழிந்தபோது சிற்றோடைகளாக ஓடி அவை ஆறுகளாகி பின்னர் ஆறுகள் ஒருங்கிணைந்து கடலாகியது மழை நின்றபின் தேங்கிய நீர் உலகைக் கட்டமைத்தது.

நீரின் பொருண்ம நிலையில் எந்த ஒரு தேக்கமும் புதிய மாற்றத்தை உண்டாக்கும். இத்தகைய மாற்றம் நீரின் தன்மையைச் சொல்லும் நன்னீராக உவர்ப்பு நீராகக் கருதப்படுகிறது.

பல கனிம படிவங்களில் தண்ணீர் பெரும் பங்கு வகிக்கிறது.இவற்றை வெப்பநிலை வேதி மாற்றங்கள், குளிர் நிலை வேதிமாற்றங்கள் என இருவகையாகக் காணலாம்.

இயற்கையில் ஏற்படும் வேதி மாற்றங்கள் பெரும் பூகம்பங்களால் ஏற்டுகின்றன.

குளிர் நிலை மாற்றம் பெரும்பாலும் தண்ணீராலேயே ஏற்படுகின்றன.குளிர்நிலையில் ஏற்கனவே இருந்த கனிமங்கள் குழைய தொடங்குகின்றன.

நீர் ஆவியாகி புதிய மாற்றங்கள் உருவாக்க் காரணமாகிறது. நம் உடல் வேர்த்து மீண்டும் குளிர்கின்றபோது நம் உடலில் உப்பு பூப்பது இதனால் தான் ஆக உலகைக் கட்டமைக்கும் பணியில் நீரின் பங்கு எத்தனை முக்கியம் என்பதை குறிப்பால் உணர்த்தவே நீர் இன்றி அமையாதுஎன்றார் வள்ளுவர் நீர் சேமிப்பு, நீர் பாதுகாப்பு இரண்டினைக் குறித்தும் விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும்.

தூய்மையான நலம் மிக்க எதிர்காலத்தை உருவாக்குவதற்கான பணியாக இதனைக் கருத வேண்டும். நீருக்கு நிறம், மணம் சுவை குணம் ஏதுமில்லை என்றாலும் எத்தனை சுவையான மென்பானத்தாலும் நீரின் இடத்தை இட்டு நிரப்ப முடியாது என்பதே உண்மை.

தாகம் தணிப்பது மட்டுமல்ல நீரின் சமநிலையில் தான் உடலின் சமநிலை காக்கப்படுகிறது. நீர் ஆதாரத்தை எவ்வளவுக்கு எவ்வவு பயன்படுத்த முடியுமோ அவ்வளவு பயன் படுத்திவிட்டு அது பற்றாது என மேலும்மேலும் தண்ணீரைத் தேடிக்கொண்டிருக்கிறோம்

கடவுள் படைப்பில் அனைத்து உயிரிகளும் சமம். அதன் தேவைகளும் சமமே. ஆனால் இதற்கு ஒத்துவராத பேராசை மனங்கள் மற்ற உயிரிகளிடமிருந்து தண்ணீரையும் பறித்து தனக்கே பயன்படுத்திக கொண்டு வருகிறது.

ஆறு, குளம், ஏரி, ஓடை, கிணறு எல்லாம் மறைந்து ஆழ்துளைக் கிணறுகளாகி தண்ணீர் "கேன் வாட்டர் " என்று அழைக்கப்படும் நிலைக்கு வந்துவிட்டது.

எத்தனை நாளைக்கு நிலத்தடிநீரை உறிஞ்ச முடியும்?

நீரைப் பயன்படுத்தும் நமக்கு நீரைச் சேமிக்கும் பழக்கமோ பொறுப்புணர்வோ இருப்பதில்லை இரண்டாயிரத்து ஐம்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவன் உரைத்து குறித்து இன்னும் கவலை கொள்ளாமல் இருக்கிறோம் அறிவியலாளர்களின் கூற்றுப்படி இன்னமும் அக்கறை கொள்ளாவிட்டால் அடுத்த உலகப்போர் நீரின் பொருட்டே நிகழும் சுற்றுச்சூழல் குறித்து அக்கறை கொண்டு முன்னோக்குப் பசுமை திட்டங்களை வகுத்து நீர் மேலாண்மை செய்ய வேண்டும்.

இதனையெல்லாம் உற்று நோக்கினால் உலகின் இயக்கம் ஒரு விதியின் கீழ் ஒழுங்கமைக்கப்பட்டுள்ளதை புரிந்து கொள்ளலாம். அந்த விதியின் அடிப்படையே நீரின் பயன்பாடு ஆகும். நீரின்றி அந்த விதி பயன் படாது

வள்ளுவன் வழி நின்று சொல்லுவோம் நீரின்றி அமையாது உலகு என்பதை மனத்தில் நிறுத்துவோம்.

அடுத்த தலைமுறைக்கான நீரைச் சேமிப்போம்; நீர்வளத்தைக் காப்போம்

# பட்டிமன்றம் ஓர் வரலாறு - 3

- **பேராசிரியர் கண.சிற்சபேசன்**



*முதுபெரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் நம் குறள்நெறி இதழின் நிறுவனர் செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் அவர்களுடன் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் பணியாற்றியுள்ளார். பட்டிமன்றப் பொழிவில், அறுபதுகளில் கோலோச்சிவந்த பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் திருக்குறள் தொடர்பான பட்டிமன்றங்களின் வரலாறு குறித்து ஒரு தொடர்கட்டுரையைக் கடந்த இரு இதழ்களில் வழங்கியுள்ளார். அதன் மூன்றாம் பகுதி இங்கு வெளிவருகிறது. ஆர்வலர்க்கு விருந்தாகத் தொடர்ந்து வெளிவரும்*

நாங்கள் பட்டிமன்ற நிகழ்ச்சிகளுக்குச் சென்று வந்த அனுபவங்களே சுவைமிக்கவை. அவற்றுள் சிலவற்றை நினைவுகூர்கிறேன். ஒரு ஊரில் நிகழ்ந்தது. தென்காசி என்று நினைவு: பட்டிமன்றம் மிகச்சுவையாக நடந்து கொண்டிருந்தது. நிகழ்ச்சி நடந்த இடம் திருக்கோவில் முன்பாக.

நான் நடுவர். பெரும்புலவர் நமச்சிவாயம் ஓரணித்தலைமை, சாலமன் பாப்பையா மற்றோர் அணித்தலைமை. பிற பேச்சாளர்கள் தமது வாதங்களை முடித்து அந்தந்த அணித்தலைவர்கள் தத்தம் கட்சிகளின் தொகுப்புரைகளை வழங்கவேண்டிய நேரம். எங்கிருந்தோ காத்துக்கொண்டிருந்த மழை வேண்டுமென்றே- அல்ல, அல்ல- பட்டிமன்றம் வேண்டாமென்றே பொழியத் தொடங்கியது.

நிகழ்ச்சி அமைப்பாளர்கள் எங்களைக் கோயில் முன் மண்டபத்தில் அமரவைத்துவிட்டு ஒலிபெருக்கிகள் விளக்குகள் ஆகியவற்றை மிக விரைவாகத் திருக்கோயில் முன் மண்டபத்தில் மாற்றியமைத்து வேகவேகமாக எங்கள் பேச்சுக்களைத் தொடருமாறு கேட்டுக்கொண்டார்கள்.

நான் “பெரியோர்களே! தாய்மார்களே இரு அணியினரும் தமது வாதங்களை முடித்திருக்கிறார்கள். இப்போது அணித்தலைவர்கள் இருவரும் தத்தம் கட்சியின் வாதங்களைத் தொகுத்து வழங்குவார்கள். நேரத்தின் அருமை கருதி இருவரையும் ஆளுக்குப் பதினைந்து மணித்துளிகள் பேசுமாறு வேண்டுகிறேன்” என்று கூறினேன்.

முன் வரிசையில் அமர்ந்து இதைக் கேட்ட ஒரு தொண்டுகிழவர் (அந்த ஊரில் தொண்டுசெய்தே கிழவர் ஆனவர் என்று பின்னர் தெரிந்துகொண்டேன்) எழுந்து நின்று,என்னைவிடஉரத்த குரலில் “15 மணித்துளிகள் என்னய்யா 15 மழைத்துளிகள்! அவர்கள் இருவரும் நோக்கம் போலப் பேசட்டும். அதற்கப்புறம் நீங்கள் விருப்பப்பட்ட நேரம் பேசுங்கள், நாங்கள் எல்லாம் எங்கே வெளியே போகப் போறோம், மழை விடியற வரையிலே விடாது போல இருக்கே” என்று முழங்கியவர் கூட்டத்தைப் பார்த்து “என்னய்யா! நான் சொல்றது சரிதானே”? என்று கேட்க, கூட்டத்தினர் அனைவரும் ஒரேகுரலில் “நீங்க சொன்னா சரிதான் பெரியவரே” என்று இசைவு நல்கினர்.

பிறகுதான் பார்த்தேன் பெரியவர் கையில் இரும்புப் பூண் போட்ட பெரிய தடி இருந்தது.

பட்டிமன்றத்தின் தலைப்பு : *"திருவள்ளுவரின் கருத்தின்படி நாடு செழிக்கப் பெரிதும் காரணம் வான்மழையா? கோன்முறையா?"*.

அன்றைக்கு நான் மட்டும் கோன்முறை என்று தீர்ப்பு சொல்லியிருந்தால் என்னைக் கோன்முறை செய்திருப்பார்கள் ஊர்மக்கள். ஆனால் பட்டிமன்ற நிகழ்ச்சி முடிகிறவரை எனது கவனம் முழுதும் கனமழையின் மீதே இருந்தது. மழைவிட்டால் ஒரு நிலையில் மகிழ்ச்சி. மழை விடாது பெய்தால் மற்றொரு நிலையில் மகிழ்ச்சி. இதில் விந்தை என்னவென்றால் நிகழ்ச்சி முடிவில் தேடிப்பார்த்தால் மக்களுக்கு வாக்களித்து அவர்களது வாக்குறுதிகளையும் பெற்றுக் கொண்ட பெரியவரைக் காணவில்லை. நான் சுற்றும் முற்றும் பார்ப்பதைப் பார்த்த கடலை விற்றுக் கொண்டிருந்த சிறுவன் சொன்னான் "ஐயா பெரியவரைத் தேடறீங்களா? அவரு அப்பவே வூட்டுக்குப் போயிட்டாரு. நீங்க என்ன முடிவு சொல்றீங்கன்னு கேட்டுக்கிட்டு மறக்காம நாளைக்கு என்னை வந்து சொல்லச் சொல்லியிருக்காரு. சொல்லிட்டு என் குடையைத் திரும்ப வாங்கிக்கச் சொல்லி யிருக்காரு. எனக்கு நீங்கதான் ஒரு நல்ல முடிவா சொல்லணும். இல்லன்னா என் குடையும் பிஞ்சு என்முதுகும் பிஞ்சு போயிடும்" என்று தழுதழுத்த குரலில் சொல்லிய அந்தப் பிஞ்சு உள்ளத்திற்கு என் மனம் இரங்கியது. என் பக்கத்திலிருந்த குடையை எடுத்து அவனை மேடைக்கு அழைத்து வழங்கினேன். குடை யாருடையதோ? கொடைமட்டும் என்னுடையது!

அந்தச் சிறுவனைப் பார்த்தபோது

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே".

என்ற வரிகள் என் நினைவிற்கு வந்ததைவிட

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்குக் கீழ்த் தங்கும் உலகு"

என்ற நாயனாரின் திருக்குறள் எனக்கு அதிகம் நினைவில் வந்து வாட்டியது. கைக்கும் என் சொற்களைப் பொறுத்துக் கொண்ட அந்தச் சிறுவனின் தலை அப்பொழுதே கவிகைக் கீழ்த் தங்கிற்றே!

# சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி

- முனைவர் இர. பிரபாகரன் (மேரிலாந்து, அமெரிக்கா)



*இக் கட்டுரையாசிரியர் முனைவர் இர.பிரபாகரன் கடந்த பத்தாண்டு ஆண்டுகளாக வலைத்தளங்களில் சங்க இலக்கியம் மற்றும் திருக்குறள் சார்ந்த பாடல்களுக்கு உரைகளும் அவற்றோடு தொடர்புள்ள கட்டுரைகளும் எழுதிவருகிறார். உலகெங்கும் பல்வேறு நாடுகளிலிருந்து முனைவர் இர.பிரபாகரன் அவர்களின் கட்டுரைகளைப் படித்து மகிழ்ந்தனர். வெல்க இவரது தமிழ்ப்பணி!*

பிறர் நமக்குத் தீங்கிழைத்தாலோ, நம்மை அவமதித்தாலோ, நம்மிடம் முறை தவறி நடந்து கொண்டாலோ, நம்மீது சினங்கொண்டாலோ, நாம் எதிர்பார்த்தது நடைபெறாவிட்டாலோ நாம் சினமடைகிறோம். 'சினங்கொள்வதுமனிதஇயல்பு.' என்றும் "சினம் என்பது ஒரு வலிமையான உணர்வு. சிலர் மற்றவர்களைவிட அதிகமாகச் சினங்கொள்கிறார்கள்." என்றும் உளவியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

மேலும், "சராசரியாக, ஒரு மனிதன் ஒருநாளைக்கு ஒருமுறை சினங்கொள்கிறான்; மூன்று முறை எரிச்சலோ அல்லது சலிப்போ அடைகிறான்." என்பது சில உளவியல் அறிஞர்களின் கருத்து. வேறு சில உளவியல் அறிஞர்கள், சராசரியாக ஒரு மனிதன் ஒருநாளைக்குப் பதினைந்து முறை கோபமடைகிறான் என்று கூறுகின்றனர்.

நம்முடைய சினத்தின் வலிமையையும், ஒருநாளைக்கு எத்தனை முறை சினங்கொள்கிறோம் என்பதையும் பொறுத்து நம்முடைய சினம் நமது உடலையும் உள்ளத்தையும் பாதிக்கிறது என்பதில் மருத்துவர்களும் உளவியல் அறிஞர்களும் கருத்தொற்றுமை உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

### சினத்திற்கு எங்கும் இடமில்லை

நம்மைவிட மெலியவர்கள் (நம்குழந்தைகள், நம்மைவிட இளையவர்கள் அல்லது நம்மிடம் பணிபுரிபவர்கள் போன்றவர்கள்) நாம் விரும்பாத செயல்களைச் செய்தால், நம்மில் பலரும் அவர்களிடம் சினங்கொள்கிறோம். இது நமது சமுதாயத்தில் பல குடும்பங்களில் நடைபெறும் நிகழ்ச்சி. தம்மைவிட மெலியவர்களிடம் சினங்கொள்வதற்குத் தமக்கு உரிமை இருப்பதாகவே பலரும் கருதுகிறார்கள். ஆனால், நம்மைவிட வலியவர்களிடம் (நம்மைவிட மூத்தவர்களிடம், நம்முடைய மேலதிகாரிகளிடம், நம்மைவிட வலிமை மிகுந்தவர்களிடம்) நமது சினத்தைக் காட்டுவது முறையன்று என்று கருதியோ அல்லது நமது சினத்தை வெளிப்படுத்தினால் தண்டனை கிடைக்கும் என்ற அச்சத்தாலோ, அவர்களிடம் நம்மில் பலரும் சினங்கொள்வதில்லை. சினங்கொள்வது தவறு என்று உணர்ந்தால், மெலியவர்களிடமும் சினங்கொள்ளாமல் இருக்கவேண்டும். அதை விட்டுவிட்டு சினங்கொள்ளமுடியாத இடங்களில் நாம் சினங்கொள்ளாமல் இருப்பதால் என்னபயன் (குறள் – 301) என்று வள்ளுவர் கேட்கிறார். சினங்கொள்ள முடியாத வலியவரிடத்தில் சினங்கொண்டால், அது தனக்குத் தீமையாய் முடியும்; சினம்

செல்லக்கூடிய மெலியவரிடத்தில் அதுதோன்றினாலும், அதைவிடத் தீமை தருவன பிற எதுவும் இல்லை (குறள்-302). சினத்தால் தீமைகள் தொடர்ந்து வருவதால், வலியார், மெலியார்என்றுகருதாமல், யாரிடத்திலும் சினங்கொள்வதை மறந்துவிடவேண்டும் (குறள் – 303) என்பது வள்ளுவரின் கருத்து.

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கின்என் காவாக்கால் என்? (குறள் – 301)

செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற. (குறள் – 302)

மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும். (குறள் – 303)

வள்ளுவரைப் போலவே, பிளேட்டோ (Plato) என்ற கிரேக்க மெய்ப்பொருளியலாளர், "யாரிடம் சினங்கொள்ள முடியுமோ அவர்களிடத்தும், யாரிடம் சினங்கொள்ளமுடியாதோ அவர்களிடத்தும் சினங்கொள்ளக் கூடாது." என்கிறார். அதாவது, யாரிடத்தும் சினங்கொள்ளக்கூடாது என்றுஅவர்கூறுகிறார். வேறு பல அறிஞர்களும் சினங்கொள்வது ஒரு தீயசெயல் என்பதில் வள்ளுவரோடு கருத்து ஒற்றுமை உடையவர்களாகக் காணப்படுகிறார்கள்.வள்ளுவர் வகுத்த வாழ்வியல் நூலாகிய குறள்நெறி போற்றுவோம்! கூடா ஒழுக்கமெனக் கருதிச் சினத்தைத் தவிர்ப்போம்!!

# திருவள்ளுவரின் உறுதி

**- முனைவர் மு.முத்துவேலு**

---

*முனைவர் மு.முத்துவேலு ஆட்சிமொழிக்குழு ஆணைய உறுப்பினராக விளங்கி ஆட்சித்தமிழ்ச் சொற்கோவை வளர்ச்சியுறப் பணியாற்றி வருகிறார்.கூட்டுறவுத் தணிக்கைத் துறையில் ஒன்பதுஆண்டுகளும் தலைமைச் செயலகத்தில் மொழிபெயர்ப்புப் பிரிவில் ஐந்து ஆண்டுகளும் பணியாற்றியபின் கல்லூரிக்கல்வித் துறையில் அரசினர் கல்லூரிகளில் இருபத்துமூன்று ஆண்டுகள் பேராசிரியப் பணியாற்றியுள்ளார்.மத்தியச் செம்மொழித் தமிழாய்வு நிறுவனத்தில் ஐந்து ஆண்டுகள் பதிவாளராகப் பணியாற்றி அதன் வளர்ச்சிக்கு வலிமையான அடித்தளம் அமைதற்குத் தம் பங்களிப்பை வழங்கியுள்ளார்*



---

தமிழ் மொழிக்கு வழங்கும் அடைமொழிகள் வெறும் அழகுமொழிகள் அல்ல: அவை, பொருள் பொதிந்தவை. 'என்றுமுள தென்றமிழ்' என்றான் கம்பன். தமிழின் தொன்மையைக் கண்டறிய இயலாது என்பதை 'விண்ணோடும் உடுக்களோடும் எங்கள் அன்னை பிறந்தாள்' என்றார் பாவேந்தர். இந்த இறவாப் புகழுடைய தமிழுக்கு இழுக்கு வந்துவிடுமோ என்று ஒருகால் எண்ணிய பாரதி, 'அவ்வாறு வருவதற்கு எந்நாளும் வாய்ப்பில்லை' என்று வலியுறுத்திக் கூறுகிறார்.

வண்டமிழ் வானும் மண்ணும் வாழும் நாள் வரையிலும் வாழும் என்பதற்குக் காரணங்களாக, பாரதி தமிழில் இருக்கும் மூன்று இலக்கியங்களின் பெயர்களைக் கூறுகிறான். முதலில் சிலப்பதிகாரச் செய்யுளைக் குறிப்பிட்டு, அடுத்ததாக வள்ளுவத்தைக் குறிப்பிடும் போது,

'சிலப்பதிகாரச் செய்யுளைக் கருதியும்,
திருக்குறள் உறுதியும் தெளிவும், பொருளின்
ஆழமும், விரிவும், அழகும் கருதியும்' (தமிழச் சாதி – 20 - 22)

என்று குறட்கருத்துக்களின் ஐந்து இயல்புகளை அடுக்கிக் காட்டுகிறான்.

திருக்குறள் கூறும் கருத்துக்களில் காணப்படும் உறுதி, தெளிவு, பொருளின் ஆழம், விரிவு, அழகு என்ற இவ்வைந்தனுள் நான் உறுதியென உணர்ந்த சில குறட்பாக்களில் சிலவற்றை மட்டும் விளக்கிட விழைகிறேன்.

திருவள்ளுவர் தான் உறுதியாக உரைக்கும் கருத்துக்களைச் சுட்டுவதற்கு 'யாம்' என்னும் தன்மைப் பன்மையைப் பயன்படுத்துவதைக் காணலாம்.

மக்கட் பேற்றை உயர்வாகக் கூறும் இடத்தில்,

'பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற' ( மக்கட்பேறு, குறள்: 61)

என்றும், வாய்மை என்னும் அறத்தை வலியுறுத்தும்போது,

'யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற' ( வாய்மை, குறள்: 300)

என்றும், உறுதியாகக் கூறுவதைக் காணலாம்.

அடுத்த நிலையில் ஓர் அறத்தைக் கடைப்பிடிக்கும் போது அதன் நிலையில் இருந்து சிறிதும் தளராமலுல் அசையாமலும் இருக்க வேண்டும் என்பது வள்ளுவம்.

மனிதன் பழிமலைந்து பொருள் செய்தலோ, வஞ்சனையால் பொருள் ஈட்டுதலோ வள்ளுவனுக்கு உடன்பாடில்லை என்பதை 'வினைத்தூய்மை' அதிகாரத்தில், விளக்குகிறான். ஒருவனுக்கு வாழ்க்கையில் எத்துணைத் துன்பங்கள் தொடர்ந்து வந்தாலும், தன் உயிரே போனாலும் தீயவை செய்து, அறம் தவறிய செயலாற்றி, உயிர் பிழைப்பது கூடாது என்பது வள்ளுவன் கொள்கை. தன் உயிருக்காக இல்லை அதைவிட உயர்ந்தது அவன் தாயின் உயிர். ஒரு மனிதனை இந்த உலகிற்கு வழங்கிய அவன் கண்முன்னே தோன்றுகிற கடவுளாகக் காட்சி தருகிற அவனது தாயே பசியில் வருந்துகிறாள். அவள் உயிர் போகும் என்றாலும், சான்றோர் பழிக்கும் வினையைச் செய்யக் கூடாது என்கிறார் வள்ளுவர். இதில் தான் வள்ளுவர் எத்தனை உறுதியாக இருக்கிறார் என்பதை எண்ணிப் பார்க்கும்போது வியப்பெழுகிறது.

'ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க

சான்றோர் பழிக்கும் வினை' (வினைத்தூய்மை, குறள்: 656)

செயலுக்கான 'காரணம்' எத்துணை இன்றியமையாததாக இருந்தாலும் கூட அறம் நீங்கிய செயலைச் செய்யவே கூடாது; என்பதில் வள்ளுவர் வலியுறுத்தும் வினைத்தூய்மையின் உறுதி வெளிப்படுகிறது.

தீவினை செய்பவர்களைக் கெடுதல் விடாமல் சென்று சேரும் என்பதை வள்ளுவரின் உள்ளம் உறுதியாக நம்புகிறது.

'ஒருவனுடைய நிழல் அவன் செல்லும் இடங்களில் எல்லாம் அவனைத் துரத்திக் கொண்டே வருவதைப் போல, ஒருவன் செய்த தீவினையால் உண்டாகும் கேடும் அவனை விடாது துரத்திக் கொண்டே வரும்' என்னும் உவமையில் வள்ளுவர் இக்கருத்தை விளக்குகிறார்.

இக்குறளைப் படித்த இளைஞர், 'ஒருவரது நிழல் எப்போது தோன்றும்; அவர் வெளிச்சத்தில் இருந்தால் தானே தோன்றும்; அவர் மீது ஒளி விழுந்தால்தானே நிழல் தோன்றும், அவர் இருளில் ஒளிந்து கொண்டால் அவரது நிழல் எப்படித் தோன்றும்? என்ற வினாவை எழுப்புகிறார். வள்ளுவர் 'ஒரு மனிதனை விட்டு நிழல் எப்போதும் நீங்குவதே இல்லை; இருளிலும் அவன் நிழல் அவனைத் தொடர்கிறது. ஆம்! இருளில் ஒருவனது நிழல் அவன் உள்ளங் கால்களுக்குக் கீழே தங்கியிருக்கிறது. அந்த மனிதன் இருட்டில் இருப்பதால் அவனால் அந்த நிழலைப் பார்க்க முடியவில்லை' என்று அழுத்தம் திருத்தமாக உரைக்கின்றார்.

'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று' ( தீவினையச்சம், குறள்: 208)

என்னும் குறளைப் பாருங்கள்! உள்ளுந்தோறும் உள்ளுந்தோறும் உள்ளம் உருக்கும் வள்ளுவரின் உறுதியை உணரலாம்.

தன்னைத் தான் காத்துக்கொள்ள ஒருவன் சினத்தைக் காக்கவேண்டும். என்று, வெகுளாமையை வலியுறுத்தும் வள்ளுவர், சினத்தால் கேடு வருவது உறுதி, அதனை மறுப்பதற்கில்லை என்பதை நம் மனத்தில் பதிய வைப்பதற்கு ஓர் எடுத்துக்காட்டைக் கூறுகிறார்.

'ஒருவன் தரையில் தன் கையால் ஓங்கி அறைந்தால் அவன் கை வலிப்பது உறுதி அல்லவா? அதைப்போலவே ஒருவன் சினம் கொண்டு செயலாற்றினால் அவனுக்குக் கேடு வருவது உறுதி' என்பது வள்ளுவரின் வாதம்.

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. (வெகுளாமை, குறள்: 307)

ஒரு செயலுக்கு எதிர்வினை உண்டு என்று உறுதிபடக் கூறுவதற்கு வள்ளுவர் காட்டும் இந்த உவமையினும் வேறென்ன விளக்கம் அமைய முடியும்?

உலக மொழிகளில் உலவும் அற நூல்களில் வள்ளுவம் உயர்ந்தோங்கி நிற்கின்றது. இதற்கு முதன்மைக் கூறாக இருப்பது, அது கூற வந்த அறக் கருத்தை உறுதிபடக் கூறுவதாகும். எவ்விதச் சாய்வும், தளர்வுமின்றி அமையும் வள்ளுவத்தின் உறுதிப்பாடே தமிழரின் அறக்கோட்பாட்டின் ஆணி வேராக இருந்து பெருமை சேர்க்கிறது, என்பதில் ஐயமில்லை.

# தனிநாயக அடிகளாரின் ஒப்பாய்வு நோக்கில் திருக்குறள்

- **மறைமலை இலக்குவனார்**

உலகமெலாம் தமிழைப் பரப்பும் பணியையும் தமிழ் இலக்கியங்களை உலகமொழிகளுக்குக் கொண்டுசெல்லும் பணியையும் வரலாறு போற்றும் வண்ணம் தம் வாழ்நாளெல்லாம் ஆற்றிய தமிழறிஞர். வணக்கத்திற்குரிய தந்தை தனிநாயக அடிகளார் ஆவர்.

தமிழறிஞர்களுள் மட்டுமன்று-உலகத்தில் அவர் காலத்திலும் இக் காலத்திலும்-மொழியறிஞர்களுள்ளே அவருக்கு இணையாக வேறொருவரைச் சுட்டல் இயலாது. தனிநாயக அடிகளார் தமிழ், ஆங்கிலம், வடமொழி, கிரேக்கம், இலத்தீன், எபிரேயம், பிரெஞ்சு, செர்மனியம், இத்தாலியம், போர்த்துகீசியம், எசுபானியம், உருசியம், சிங்களம், மலாய் என்னும் பதினான்கு மொழிகளில் புலமைவாய்ந்தவர். இலங்கையில் யாழ்ப்பாணத்தை அடுத்த கரம்பொன் என்னும் ஊரில் பிறந்த அடிகளார், இந்தியா, மலாயா,சிங்கப்பூர், தாய்லாந்து, கம்போடியா, வியத்துநாம், அமெரிக்க ஐக்கியநாடு, பனாமா, மெக்சிகோ, பெரு, அர்சண்டீனா, ஈக்குவதோர், சிலி, பிரேசில், உருகுவே, டிரினிடாட்,, மாற்றினிக், சோவியத்துஒன்றியம், இங்கிலாந்து, பிரான்சு, இத்தாலி, செருமனி, ஆத்திரியா, கிரீசு, போர்த்துகல், சுபெயின், நார்வே, சுவீடன், தென்மார்க்கு, பின்லாந்து,சுவிட்சர்லாந்து,ஆலந்து,பெல்சியம், செனகல், காங்கோ, அல்சீரியா, துனீசியா, எகிப்து, சூடான், எத்தியோப்பியா, உகாண்டா, கென்யா, தான்சானியா, மொரீசியசு, துருக்கி, இலெபனான், ஈராக், ஈரான், பர்மா, இந்தோனேசியா, சப்பான் ஆகிய ஐம்பத்தொரு நாடுகளில் பயணம் செய்து வரலாறு படைத்த அறிஞராவார்..தாம் சென்ற நாடுகளில் வழங்கும் மொழிகளில் தமிழ் இலக்கியம், கலை, பண்பாடு ஆகியவற்றை விளக்கும் விரிவுரைகளை வழங்கியுள்ளார். தமது உலகப் பயணத்தின்மூலம் உலகின் எந்தவொரு நாட்டிலும் எந்த மொழியறிஞரும் ஆற்றாத அருஞ்செயலைச் செய்துள்ளார்

### தனிநாயக அடிகளாரின் ஒப்பியல் ஆய்வுப் பணிகள்:

தமிழறிஞர்களுள் ஒரு தனித்த சிறப்புவாய்ந்த நாயகராகத் தனிநாயக அடிகளார் புகழ்நிறுவியுள்ளார்.பதினான்கு மொழிகளில் புலமையும், ஐம்பத்தொரு நாடுகளில் பயணம் செய்து மக்களொடு பழகிப் பல்வேறு பண்பாட்டுச் சூழல்களையறிந்த பட்டறிவும், வாய்க்கப்பெற்ற தனிநாயக அடிகளார், தமது அறிவின் விரிவினாலும், புலமையின் ஆழத்தாலும் ஆய்வுலகின் கலங்கரைவிளக்கமாகத் திகழ்ந்தார்.அவரது முன்னோடிப் பணிகள் நெடுங்காலத்திற்குத் தமிழ் ஆய்வாளர்களுக்கு வழிகாட்டும் ஆற்றலும் தொலைநோக்கும் கொண்டவை.

பன்மொழிப்புலமை, இடைவிடாத உலகப் பயணம் ஆகியவற்றின் விளைவாக அடிகளார் எழுதிய அனைத்து நூல்களுமே ஒப்பாய்வுநோக்கில்தான் அமைந்தன.

### முன்மாதிரியான ஒப்பியல் ஆய்வாளர்:

'பண்டைத் தமிழ் இலக்கியத்தில் கல்விச் சிந்தனை' என்னும் தமது முனைவர் பட்டத்திற்கான ஆய்வேட்டில் 'ஒப்பியல் கல்வி' அல்லது 'கல்வி ஒப்பாய்வு'என்பதனைக்

கருப்பொருளாகக் கொண்டு கல்விச் சிந்தனை பண்டைய இந்தியாவில்(கி.மு.600-கி.பி.300) விளங்கிய திறத்தை ஒப்பாய்வு நோக்கில் விளக்கியுள்ளார்.பழந்தமிழ் இலக்கியம் கல்வி தொடர்பாக வழங்கும் சிந்தனைகளுடன் சமண,பௌத்த,வைதீக நூல்கள் 'கல்வி-ஆசிரியர்-மாணவர்' தொடர்பாக வழங்கும் செய்திகளைத் தக்க எடுத்துக்காட்டுகளுடன் ஒப்பாய்வு செய்துள்ளார். கிரேக்க, உரோமானிய, சீனச் சிந்தனைகளையும் தமது ஒப்பாய்வுக்குப் பயன்படுத்தியுள்ளார்.

"கிறித்துவுக்கு முற்பட்ட காலத்தில் நிலவிய பண்டைய இந்தியக் கல்விமுறை குறித்த ஆய்வு துல்லியமாகவும், அனைத்துமளாவியதாகவும் விளங்கவேண்டும் என்பதற்காக இலக்கியச் சான்றுகளுடன் அமைவுறாது,நினைவுச்சின்னங்கள், கல்வெட்டுகள், தொல்லியல்துறை வழங்கும் தரவுகள் ஆகியவற்றையும் ஆய்வுமூலமாகக் கொள்ளல் இன்றியமையாதது.இலக்கியச் சான்றுகள் என்னும் வகையில் (தமிழுடன்) பண்டைய சமற்கிருத இலக்கியங்களை மட்டுமன்றி,பண்டைய பாலி இலக்கியங்களையும் -(சமற்கிருத இலக்கியத்தில் கூறப்படாத சமூக அமைப்புகள் பற்றிய தரவுகளுக்காக) ஆய்வுமூலமாக இணைத்துக்கொள்ளல் தேவையாகிறது.அயல்நாட்டுச் செய்திகளுக்காக கிரேக்க,இலத்தீன்,சீன இலக்கியங்களையும் பயன்படுத்திக்கொள்ளவேண்டும்."

'கல்வி ஒப்பாய்வு'(Comparative Education) என்னும் புதிய அறிதுறை வளரவேண்டும் என்பதற்காக ஐந்து வேறுபட்ட (சமற்கிருதம், கிரேக்கம், இலத்தீன்,சீனம்,ஆங்கிலம்) மொழிப்புலங்களிலிருந்து தரவுகளைத் திரட்டித் தமது ஆய்வை மேற்கொண்டு அரியதோர் ஆய்வுநூலை அடிகளார் வழங்கியுள்ளார். கருவிநூற் பட்டிகையில்,மேற்குறித்த மொழிகளுடன், செருமானிய நூல்களையும் பிரெஞ்சு நூல்களையும் கண்ணுறும்பொழுது, அடிகளாரின் உழைப்பு நம்மை மலைக்கவைக்கிறது.

### திருவள்ளுவர்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறளைப் பற்றி அடிகளார் ஆற்றிய சொர்ணம்மாள் அறக்கட்டளைப் பொழிவு "திருவள்ளுவர்" என்னும் தலைப்பில் நூலாக வெளியிடப்பெற்றுள்ளது.இப் பொழிவில்,

1.வள்ளுவரும் கிரேக்க ஒழுக்க இயலும்

2. வள்ளுவரும் உரோமியஒழுக்க இயலும்

3. வள்ளுவரும் புத்தரின் ஒழுக்க இயலும்

என்னும் மூன்று தலைப்புகளில் திருக்குறளுக்குத் தனித்தன்மை வாய்ந்த ஒப்பாய்வு நிகழ்த்தியுள்ளார்.

"வள்ளுவரும் கிரேக்க ஒழுக்க இயலும்" என்னும் தலைப்பிலமைந்த முதற்பொழிவில் உலக ஒழுக்க இயல் வரலாற்றினைச் சுருக்கமாகத் தமது முன்னுரையில் வழங்கியுள்ளார்.ஒழுக்க இயல் வரலாற்று வல்லுநர் ஒழுக்கத்தை,வழக்கு ஒழுக்கம்(Customary Morality),உணர்ச்சி ஒழுக்கம்(Conscious Morality),பகுத்தறிவு ஒழுக்கம்( Rational Morality) என வகுத்துள்ளமையை விளக்குகிறார்.

பண்டைத் தமிழ்மக்கள் ஒழுக்கத்தின் உணர்ச்சியில் வளர்ந்து விழுமியங்களையும் நல்லறங்களையும் பேணிவந்தனர் எனவும் மெய்யுணர்வின்

விரிந்து பரந்த வளர்ச்சிக் காலத்தில் திருக்குறள் எழுதப்பெற்றிருக்க வேண்டுமெனவும் அடிகளார் கருத்துரைக்கிறார்.

ஒழுக்க இயல் குறித்த தொன்மையான எழுத்துச் சான்றுகள் எகிப்தில் தோன்றியவை.பிதாகோதேப் என்னும் அமைச்சரின் நூலையும் அமென் ஒமப்பே என்பவருடைய "பழமொழிகள்'என்னும் நூலையும் அடிகளார் சான்றாகக் காட்டுகிறார்.

பிளாத்தோ,அரித்தாட்டில் ஆகியோரின் ஒழுக்கக் கோட்பாடுகளை விரித்துத் திருக்குறளுடன் ஒப்புநோக்குகிறார் அடிகளார்.இருபக்கமும் சாராமல் எதிர்ப்பண்புகளுக்கு நடுவில் நிற்கும் தன்மையது அறம் என்பது அரித்தாட்டிலின் கோட்பாடு.எடுத்துக்காட்டாக ஈகையை விளக்குவதாயின் அஃது ஊதாரித்தன்மைக்கும் உலோபியின் தன்மைக்கும் இடையில் நிற்கும் பண்பு என்பர் அரித்தாட்டில்.'வாய்மை'என்பது மிகைபடக் கூறலுக்கும் தன்னையே இகழ்வதற்கும் இடையில் தோன்றும் பொய்யாமை என்னும் பண்பு என்பது அரித்தாட்டில் வழங்கும் விளக்கம்.

"வள்ளுவரோ வாய்மையின் உச்சநிலைமையைக் கூறினாரேயொழிய அஃது இரு எதிர்ப்பண்புகளுக்கு நடுவிலியங்கும் என்று வரைந்தார் அல்லர்."என அறுதியிடும் அடிகளார்

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும் குறள்: 296

எனக் குறளையும் மேற்கோள் காட்டுகிறார்.

பிளாத்தோ - அரித்தாட்டில் வழங்கிய ஒழுக்கக் கோட்பாடுகளுக்கும் திருக்குறளுக்குமிடையே விரிவான ஆய்வை நிகழ்த்தியுள்ளார், அடிகளார்.

"பிளாத்தோவினுடைய அரசு இவ்வுலகில் அமையினும்,அது விண்ணுலகில் இருக்கும் ஓர் அரசின் நிழலும் படியுமாம். உண்மையான உலகம் மேலுலகிலேயே உண்டு. இங்கிருக்கும் உயிர்களும் பொருட்களும் மேலுலகில் இருக்கும் உயிர்களின் பொருட்களின் நிழற்படம். இவ்வுலகில் இருக்கும் ஒவ்வொரு பொருளிற்கும், அவ்வுலகில் குற்றமற்ற முதற்பொருள்-மூலப்பொருள் ஒன்று உண்டு. எனவே நிறைவு மேலுலகில்தான் உண்டு.இவ்வுலகில் உள்ளவையெல்லாம் குறைவுபடைத்தவை. வள்ளுவரோ மேல் உலகில் இருக்கும் ஒரு அரசினைப் படம்பிடித்து இவ்வுலகில் நிறுவ முயலவில்லை. திருக்குறளின் அரசு இவ்வுலகிற்கே உரிய அரசு. திருக்குறளின் அரசினுடைய நிறைவினை இவ்வுலகிலேயே மாந்தர் அடைகின்றனர்."

என்னும் அடிகளாரின் துணிபு அவரது ஒப்பாய்வின் விளைவு ஆகும்.

"கிரேக்கத் தத்துவ ஞானிகளின் நூல்கள் வள்ளுவர் நூலுடன் ஒப்பிடுங்கால் கிரேக்கத் தத்துவஞானிகள் மெய்யுணர்வு வல்லுநர்போல் பொருளை ஆராய்கின்றனர். திருவள்ளுவரோ ஒழுக்க இயல் வல்லுநர்போல் ஆராய்ந்து ஆசான்போல் மக்கள் கடைப்பிடிக்கவேண்டிய அறங்களைக் கூறுகிறார்."

என்னும் ஆய்வுமுடிவு திருவள்ளுவரின் தனிச்சிறப்பை விளக்குகிறது.

”வள்ளுவரும் உரோமியஒழுக்க இயலும்” என்னும் தலைப்பிலமைந்த இரண்டாம் பொழிவு செறிவுமிக்க ஒப்பாய்வாகத் திகழ்கிறது.

*“ஸ்டாயிக்வாதம், எபிக்யூரஸ்வாதம்’* என்னும் இரு கோட்பாடுகளையும் விரிவாக விளக்குகிறார். மார்க்கஸ் ஔரேலியசு, செனக்கா எனும் இரு சிந்தனையாளர்களின் கருத்துகளைத் தொகுத்து வழங்கியதுடன் வீரமாமுனிவர் திருக்குறளைச் செனக்காவின் கருத்துகளுடன் ஒப்பிட்டதனையும் சுட்டிக்காட்டுகிறார்.

ஆய்வுமுடிவாக மூன்று கருத்துமணிகளை வழங்குகிறார்.

1.பல கோணங்களிலிருந்து உரோமையர் சொல்வன்மையைப் பற்றியும் நட்பைப் பற்றியும் காதலைப் பற்றியும் யாத்த இலக்கியங்களைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுநோக்குதல் கூடும்.காதலையும் நட்பையும் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துக்கள், தன்னலம் கருதாது பிறர் நலத்திற்காகத் தம்மை முற்றும் நல்கும் வாழ்க்கையை வற்புறுத்துகின்றன.

2.உரோமையரின் காதல் இலக்கியத்தை வள்ளுவரின் காமத்துப்பாலுடன் ஒப்பிடுங்கால் வள்ளுவரின் கருத்துகள் உரோமையினும் பன்மடங்கு உயர்ந்தவையாக இருப்பதைக் காண்கிறோம். *பிலவுட்டஸ்* (Plautus), *கத்துலஸ்* (Catullus), *ஓவிட்* (Ovid) போன்றவர்கள் களவையும் கற்பையும் பற்றிய உயர்ந்த கருத்துகளைப் போற்றவில்லை.

3.நாம், நம்மவர் என்ற செருக்குடன் உரோமைய ஆசிரியர் உரோமருக்குப் பயன்படும் முறையில் எழுதுகின்றனர். ஆனால் வள்ளுவரோ எல்லா உலகிற்கும் எல்லா மக்களுக்கும் பயன்படும் முறையில் தமிழோ,தமிழ்நாடோ என்ற குறிப்பேதும் இல்லாமல் உலகெலாம் தழுவுதற்குரிய பான்மையில் தம் நூலை யாத்துள்ளார்.

அடிகளாரின் இலத்தீன்மொழிப் புலமை நமக்கு அரியதோர் ஒப்பாய்வு கிடைக்க வழிவகுத்துள்ளது.

”வள்ளுவரும் புத்தரின் ஒழுக்க இயலும்”என்னும் தலைப்பிலமைந்த மூன்றாம் பொழிவில் பாலிமொழியில் இயற்றப்பெற்ற விநயபிடகம்,சூத்திரபிடகம் என்னும் தொகைநூல்களை அடிப்படையாகக் கோண்டு திருக்குறள் ஒப்பாய்வு நிகழ்த்தியுள்ளார். சூத்திரபிடகத்தில் அமைந்துள்ள சுத்தநிபாதம் என்னும் நூல் திருக்குறளுடன் ஒப்பிடத்தக்கது என்பது அடிகளாரின் கருத்து.

”தருமபதத்துடனும் ஏனைய நூல்களுடனும் வள்ளுவரின் நூலை ஒப்பிடுங்கால் வள்ளுவரின் நூல் இல்லறத்தின் சாசனமாக விளங்குவதைக் காண்கிறோம்.”

“புத்த ஒழுக்க இயல் “Pessimism” என்னும் இயற்பண்பினை அடிப்படையாகக் கொண்டது, வள்ளுவருடைய ஒழுக்கஇயலோ “Optimism” என்னும் இயற்பண்பினை அடிப்படையாகக் கொண்டது.”

என்னும் அடிகளாரின் முடிபுகள் குறிப்பிடத்தக்கவை.

இப் பொழிவுகளின் முடிவில்

“வருங்காலத்தில் வள்ளுவரின் ஒழுக்க இயலை எபிரேயருடைய ஒழுக்க இயலுடனும் இச்லாமிய ஒழுக்க இயலுடனும், தர்மசாத்திரங்களின் ஒழுக்க இயலுடனும் சீன ஒழுக்க இயலுடனும் ஒப்பிட்டுப் பயில எண்ணி உள்ளேன்.”

என்று அடிகளார் குறிப்பிட்டுள்ளார்.எனினும் அத்தகைய ஒப்பாய்வுக்குரிய சூழல் அமையாது போனது நமக்கு இழப்பே.

தேமதுரத் தமிழோசை உலகமெலாம் முழங்கி ஒப்பற்ற தொண்டாற்றிய இந்த அறிஞருக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைமைப் பொறுப்பை வழங்கத் தமிழ்நாட்டு அரசுக்கு மனம் வரவில்லையே!அவர் கனவுகண்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சூம்பிப் போன சவலைப் பிள்ளையாக இன்று தள்ளாடுகிறதே!உலகத் தமிழ்மாநாடுகள் உப்புமா-காப்பி மாநாடுகளாகப் பயனற்றுப் போயினவே! IATR அமைப்பு தமிழறிஞர்களின் தொடர்பற்ற வெற்றுமடங்களாயினவே!

அவர் பணியாற்றிய மலாயாப் பல்கலைகழகத்தில் அவரது நினைவைப் போற்றுவாரில்லை; உலகத் தமிழ் மாநாடு தொடங்கி அவர் எழுச்சியூட்டிய மலாயாநாட்டவர் அவர் ஈழத்தமிழர் என்பதால் அவரை மறந்தனர்.ஈழத்தில் அவரை எண்ணிப் பார்க்க எவருக்கும் நேரமில்லை.தாயகத் தமிழரும் புறக்கணித்தொதுக்கினர்.

வரலாறு அவர் நினைவை வரும் தலைமுறையினர்க்கு எடுத்துரைக்கும்.

தமிழ் இமயம் என அவரைப் போற்றலாம்.ஆனால் அவரது தன்னலமற்ற தொண்டின் உயரத்தின் முன் இமயமும் குள்ளமாகவே காட்சியளிக்கிறது.எனவே ‘தனக்குவமை இல்லாத தனிநாயக அடிகளார்’ எனப் போற்றிப் புகழ்வணக்கம் செலுத்துவோம்.

(தனிநாயக அடிகளாரின் மேற்கோள்களில் இடம் பெற்ற பிறமொழிச் சொற்களும் அயல் எழுத்துக்களும் மூலத்தை மாற்றக்கூடாது என்பதற்காக தமிழ்நெறிக்கிணங்க ஒலிபெயர்க்கப்பெறவில்லை.)

இக் கட்டுரையில் கூறப்பட்டுள்ள தரவுகளுக்கு அடிப்படையாக விளங்கிய நூலடைவு :

1) தவத்திரு தனிநாயக அடிகளாரின் படைப்புகள்-(தொகு) தவத்திரு தனிநாயக அடிகளார் நூற்றாண்டுவிழாக்குழு-பூம்புகார் பதிப்பகம்,சென்னை-600 108-2013

2) தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள்-உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை-600 113-2002

3) தமிழ்ப்பேரறிஞர் தனிநாயக அடிகளார்-முனைவர் ச.சு.இளங்கோ- பூம்புகார் பதிப்பகம்,சென்னை-600 108-2013

4) Complete Works of Thaninayaga Adigalar, (Compiled by) Thaninayaga Adigalar Centenary Celebration Committee, Poompuhar Pathippagam, Chennai-600 108.Vol.I

5) Complete Works of Thaninayaga Adigalar,(Compiled by) Thaninayaga Adigalar Centenary Celebration Committee, Poompuhar Pathippagam, Chennai-600 108.Vol.II

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 7 | சித்திரை 3, தி.பி 2052 | ஏப்பிரல் 16, கி.பி 2021



-



## குறள்நெறி போற்றிய முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்

(கட்டுரை உள்ளே)

# இவறல்

- **கவிஞர். தமிழ் இயலன்.**



*கவிஞர் தமிழ் இயலன் அவர்களின் இயற்பெயர் தனசேகரன் என்பதாகும். அடிப்படையில் இவர் ஒரு பொறியியல் பட்டதாரி.மின்வாரியத்தில் இருபத்தாறு ஆண்டுகள் சிறப்பாகப் பணியாற்றிய பிறகு தமது நாற்பத்தெட்டாவது வயதில் செயற்பொறியாளர் நிலையில் விருப்ப ஓய்வு பெற்றவர். தமிழ், ஆங்கிலம் இருமொழிகளிலும் முதுகலைப் பட்டமும், இந்தி மொழியில் பிரவீன் பட்டமும் பெற்றிருப்பவர்*

*உதவிப் பேராசிரியர்களுக்கான நுழைவுத் தேர்வில் ((சூன் 2019) 99.89 விழுக்காடு மதிப்பெண்களுடன் தேசிய அளவில் முதலிடம் பெற்றவர். மாற்றுத்திறனாளிகள் பிரிவில் தேசிய அளவிலான நீச்சல் வீரர். நான்கு கவிதை நூல்களின் ஆசிரியர். குறும்படம், ஆவணப்படங்களின் நடிகர்- இயக்குநர். திரைப்படப் பாடலாசிரியர். பல்வேறு இலக்கிய - சமூக அமைப்புகளில் மையப் பொறுப்பாளராய் இருப்பவர். 'நான் ஓர் ஐ.ஏ.எஸ்'.-அகாடமி யின் இயக்குநர். ஐ.ஏ.எஸ் மாணவர்களுக்கான தமிழ் விருப்பப்பாட வகுப்புகளை நடத்தி வருபவர்.நம் உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தின் இணை இயக்குநர்.*

'இவறல்' என்ற சொல்லை நீங்கள் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?

கேள்விப்பட்டிருக்க வாய்ப்பு குறைவு தான். சங்க இலக்கியங்களில் கூட இச்சொல் மிகுதியாக கையாளப்பட்டதாய்ச் சான்றுகள் ஏதுமில்லை எனலாம். ஆனால் திருக்குறளில் இச்சொல் இடம்பெற்றிருக்கிறது.

'இவறல்' என்ற சொல்லை திருவள்ளுவர் 'குற்றம்கடிதல்' அதிகாரத்தில் மூன்று குறட்பாக்களில் பயன்படுத்திள்ளார்.

முதல் குறள் :

இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு (432)

'இவறல்' என்றால், '**பொருள் கொடுத்து உதவாத தன்மை என்று**' - பொருளாகும். பேச்சுவழக்கில் சொல்வதென்றால் 'கஞ்சத்தனம்' என்றும் சொல்லலாம்.

அந்த அடிப்படையில் மேற்காணும் குறளுக்கான பொருள் இவ்வாறு அமையும்;. 'பொருள் கொடுத்து உதவாத தன்மையும், பெருமையில்லாத தன்மானமும் தகுதியில்லாத மகிழ்ச்சியும் - ஆகிய மூன்றும் நாட்டை ஆளும் மன்னனுக்குக் குற்றங்களாக அமையும்.'

‘இவறல்’ என்ற சொல் இதே அதிகாரத்தில் இடம்பெறும் மற்ற இரண்டு இடங்களைக் காண்போம்.

இரண்டாம் குறள் :

செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பாலது அன்றிக் கெடும். (437)

செய்யக்கூடிய நன்மைகளைச் செய்யாமல் கஞ்சத்தனமாக சேர்த்து வைக்கப்படும் செல்வமானது அவன் பயன்படுத்தாமலே அழிந்து போகும்.

மூன்றாம் குறள் :

பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன்று அன்று. (438)

பொருளின் மீது பெரும்பற்றுக் கொண்டு மற்றவர்களுக்கு உதவாமல் இருக்கும் கஞ்சத்தனம் மற்ற குற்றங்களை விடப் பொுய குற்றமாகும்.

இவ்வாறு “குற்றம் கடிதல்” ‘குற்றத்தை நீக்குதல்’ - என்று பொருளில் திருவள்ளுவர் ஒரு வேந்தனுக்கு பல்வேறு பொருண்மைகளில் அறிவுரை வழங்குகிறார்;.

‘குற்றம்கடிதல்’ அதிகாரத்தில் ஒரு மன்னன் நீக்க வேண்டிய குற்றங்களாக வள்ளுவர் பின்வருவனவற்றைக்; கூறுகிறார்.

செருக்கு, சினம், சிறுமை, பெருமையில்லாத தன்மானம், தகுதியில்லாத மகிழ்ச்சி, அழிவைத்தரும் குற்றம், தொலைநோக்கு இல்லாமை, பிறர்குற்றத்தை மட்டும் காணல், தற்புகழ்ச்சி, நன்றியை விளைவிக்காத செயல்கள் - இவ்வாறு ஒரு பட்டியலையே தருகிறார் திருவள்ளுவர்!

இப்பட்டியலில் ‘இவறல்’ என்கிற கஞ்சத்தனத்தை மூன்று முறை மீண்டும் மீண்டும் பதிவுசெய்து, அதனைத் தவிர்க்கவேண்டும் என்று வலிறுத்தி இருக்கிறார்.

பொருள் ஈட்டலும், பாதுகாத்தலும், பகிர்ந்து அளித்தலும் மன்னனின் இன்றியமையாத கடமைகள் ஆகும்.

‘ஈதலும், இசைபட வாழ்தலுமாக’ இருந்த சங்ககாலச் சமூகத்தில் ‘இவறல்’ கண்டிக்கத்தக்க குற்றமாக விளங்கியதால் வியப்பேதும் இல்லை.

இச்செய்தி மன்னனுக்கு கூறப்பட்டிருந்தாலும் தனிமனிதனுக்கும் பொருந்துவதே ஆகும்.

**இவறல் தவிர்ப்போம்! ஈதல் வளர்ப்போம்!.**

# இலக்குவனாரின் திருக்குறள் விளக்கம்

## தென்புலத்தார்



"படைப்புக் காலத்து அயனால் படைக்கப்பட்ட கடவுட்சாதி; அவர்க்கு இடம் தென் திசையாதலின் தென் புலத்தார் என்றார்" என்பது பரிமேலழகர் கூறும் உரையாகும். உலகத்தை அயன் படைத்தான் என்பதும் அப்பொழுது படைக்கப்பட்டவர் தென்புலத்தில் உளர் என்பதும் அறிவுக்குப் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. அவர்கள் ஏன் படைக்கப் பட்டார்கள்? அவர்களுடைய கடமை யாது? தென் திசையில் அவர்கள் யாண்டு வாழ்கின்றார்கள்? அவர்களை மக்கள் போற்ற வேண்டியது ஏன்? என்பன போன்ற கேள்விகட்கு விடை கூறுவார் இலர். ஆதலின் பரிமேலழகர் உரை இங்குப் பயனற்று விடுகிறது.

தென் நாட்டார் என்பதே நேர் பொருளாகும். திருவள்ளுவர் காலத்தில் வடநாட்டார் தென்நாட்டில் குடியேறிக் கொண்டிருந்தனர். அவர்களைத் தென் தமிழ் நாட்டார் போற்றி வரவேற்று அவர்கட்கு வேண்டும் யாவும் அளித்தனர். தன் நாட்டவர்க்கு உதவுதல் மறுத்தும் அவ்வாறு செய்திருக்க வேண்டும். அதனைக் கண்ணுற்ற வள்ளுவர் பெருமான் தம் நாட்டவரை தென் நாட்டவரைப் போற்றுதலைத் தலையாய கடன்களில் ஒன்ப்க வலியுறுத்தியுள்ளார் என்பதே சாலப் பொருத்தமாகும்.

"யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்று உலகத்தையே ஒரு குடும்பமாகக் கருதி வாழ்ந்த தமிழர் தம் பகுதியினரைப் போற்றாது பிற பகுதியிலிருந்து வருபவரைப் போற்றத் தலைப்பட்டமை கண்டு வள்ளுவர் பெருமான் உளம் நொந்து நாட்டுப் பற்றுதலை வற்புறுத்தியுள்ளார். உலகப் பற்றுக் கொள்ளுமுன் தந்நாட்டுப் பற்றுக் கொள்ள வேண்டுமென்பது உலகப் பொதுமறை உரைத்த ஆசிரியரின் கருத்தாகும்.

## தெய்வம்

'தெய்வம்' என்பது தூய தமிழ்ச் சொல்லே. இச்சொல் தொல்காப்பியத்தில் கருப்பொருள்களில் ஒன்றாக முதன்மையிடத்தில் வைக்கப்பட்டுள்ளது.

> தெய்வம் உணுவே மாமரம் புள்பறை
>
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇய
>
> அவ்வகை பிறவும் கருவென மொழிப.

உணவுக்கு முந்தியதாகத் 'தெய்வம்' கூறப்பட்டுள்ளதிலிருந்து தெய்வ உணர்வு மாந்தர் வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாதது எனத் தமிழ் முன்னோர் கருதி வந்துள்ளனர் என்பது அறியற்பாலது.

தெய்வத்தை ஓம்புதல் என்பது எவ்வாறு? ஒவ்வோர் உடலும் இறைவன் உறைவிடமாகும். ஆகவே, உயிர்கட்குச் செய்யும் தொண்டே கடவுள் தொண்டாகும். தன்னாட்டுப் பற்றுடைய மாந்தன் பிறவுயிர்களையும் போற்ற வேண்டும் என்பதனைக் கருதி அடுத்துத் தெய்வத்தை வைத்துள்ளார்.

## விருந்து

புதிதாகத் தம் வீட்டை நாடி வரும் அயலார் யாவரே யாயினும் அவரை உவந்து வரவேற்று ஓம்புதல் அக்காலத்து மிகவும் வேண்டப்பட்டதாகும். சிற்றுண்டி விடுதிகளும் பேருண்டி இல்லங்களும் இக் காலத்தில் உள்ளனபோல் அக் காலத்தில் இருந்திருக்க இயலாமையால் வெளியூர்களிலிருந்து வருவோர்க்குப் புகலிடம் வீடுகள்தாம். ஆகவே, விருந்தினரைப்புதிதாக வருவோரைப் புரக்க வேண்டுவதும் இல்லறத்தான் கடமையாய் விட்டது.

இக்காலத்திலும் வெளிநாடுகளில், ஏன் நம் நாட்டில் சில பகுதிகளிலும் அயலவரைத் தம் வீட்டில் தங்க வைத்து உணவு உறையுள் அளித்து ஓம்புகின்றனர். அவற்றிற்கெனக் கட்டணமும் பெற்றுக் கொள்கின்றனர். அவ்வயலவர் 'கட்டணம் செலுத்தும் விருந்தினர் (Paying Guests) என்று அழைக்கப்படுகின்றனர்.

## ஒக்கல்

செல்வ நிலையிலிருப்போர் செல்வமற்ற தம் சுற்றத்தாரை ஓம்புதல் மிகமிக வேண்டற்பாலது. இதனைச் 'சுற்றம் தழாஅல்' என மீண்டும் (பொருட்பால் 53) தனியியலில் வள்ளுவர் பெருமான் வலியுறுத்துகின்றார்.

சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வம்தான்
பெற்றத்தால் பெற்ற பயன் (திருக்குறள் 524)

என்பதூஉம் காண்க.

## தான்

தன்னை யோம்புதல் மிகமிக இன்றியமையாதது. தானின்றி உலகேது? தான் நன்கு வாழ்ந்தாலன்றோ எல்லாக் கடன்களையும் நன்கு ஆற்ற இயலும்! ஆகவே, தன்னையும் ஓம்புதல் அறநெறியின் பாற்பட்ட கடன்களுள் ஒன்ப்க வைக்கப்பட்டுள்ளது. தன்னைப் போற்றுதலைக் குற்றம் என்போரும் உளர். 'அழியும் உடலை அழிய விடு' என உதட்டளவில் பிறர்க்கு உரைத்து, உள்ளத்தால் பற்றுவிடாது கரவு முறையில் தம் ஊன் பெருக்குவார் உள்ளீடு இது. ஆகவே, வள்ளுவர் பெருமான் வெளிப்படையாகவே "உன்னையும் போற்றிக் கொள்" என உலகறிய உரைக்கின்றார்.

பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல் (திருக்குறள் 44)

பழி அஞ்சி=குற்றங்களை அஞ்சி(பொருளை ஈட்டி), பாத்து ஊண்=பிறருடன் பகுத்து உண்ணும் உணவை, உடைத்தாயின்=பெற்றிருக்குமாயின், வாழ்க்கை=இல்லற வாழ்க்கை, வழி எஞ்சல்=அற்றுப் போதல்,எஞ்ஞான்றும்=எப்பொழுதும்,இல்=இல்லை.

இல்லற வாழ்க்கை மக்களது நாகரிகப் பண்பாட்டின் முதிர்ச்சியாகும். உழைத்துப் பொருளீட்டி இல்லாதார்க்குப் பங்கிட்டு உண்ணுதலே இல்லறப்பண்பின் முதிர்ச்சியாகும். பிறர்க்கு அளித்து வாழாதார் இல்லறம், இல்லறமேயன்று.

*(வள்ளுவர் கண்ட இல்லறம் – சி.இலக்குவனார்: -இலக்குவனார் திருவள்ளுவன்)*

# பட்டிமன்றம் ஓர் வரலாறு – 4

## வற்றாயிருப்பு தமிழ் ஊற்று வற்றாத ஓர் இருப்பு

### “மக்களைப் பெரிதும் ஈர்ப்பது இசையா? நாடகமா?”

**- பேராசிரியர் கண.சிற்சபேசன்**



அன்புள்ள வாசகப் பெருமக்களே! எனது 60 ஆண்டு காலப் பட்டிமன்ற அனுபவத்தை குறள் நெறிக்காக எழுதிவருகிறேன். நாங்கள் சென்று பட்டிமன்ற நிகழ்ச்சிகள் நடத்தி வந்த ஊர்கள் எண்ணிலடங்கா; என்னிலடங்கா. அவற்றுள் மதுரையை அடுத்த வற்றாயிருப்பு என்ற நல்லூரும் ஒன்று. பெரியவர் நல்லுசாமி இப்போதும் தமது 94 அகவைக்கு மேலாக அவ்வூரில் வாழ்ந்து வரும் தமிழ்க் காதலர்- தமிழ்க்காவலர். தமிழ் மொழியின் மீதும் தமிழ்க்கலைகளின் மீதும் அளவற்ற பற்று உடைய பெரியவர்.

“கே.பி.சுந்தராம்பாள் அம்மையார் குழுவின் இன்னிசை நிகழ்ச்சியும் பேராசிரியர் கண.சிற்சபேசன் குழுவினரின் பட்டிமன்ற நிகழ்ச்சியும் எங்கள் ஊர்த் திருவிழாவின்போது ஒவ்வொரு ஆண்டும் கண்டிப்பாக நடைபெறும்” என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டவர்.

அவர் என்னிடம் நாளைக் குறிப்பிட்டுச் சொல்வார். பட்டிமன்றப் பொருள், பங்குபெறுவோர் இவற்றையெல்லாம் முடிவுசெய்வது எனது பொறுப்பு. கூட்டம் கடைசிவரைக் கலையக்கூடாது, களைக்கக் கூடாது இவை மட்டுமே அவரது கவலை. அதை எங்கள் குழு கடைசிவரை நிறைவேற்றியது.

ஓர் ஆண்டில் வழக்கம்போல கே.பி.சுந்தராம்பாள் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சிக்கு மறு நாள் எங்கள் பட்டிமன்றம். “மக்களைப் பெரிதும் ஈர்ப்பது இசையா? நாடகமா?” என்று தலைப்பு கொடுத்திருந்தேன். பெரியவர் நல்லுசாமி அவர்கள் மன மகிழ்ச்சியோடு பட்டிமன்றத் தலைப்பை ஏற்றுக் கொண்டார்கள். அருமையாகப் பாடும் திறன் வாய்ந்த பேராசிரியர் சீனி. சௌமிய நாராயணன் (மதுரைக் கல்லூரியின் அன்றையத் தமிழ்த்துறைத் தலைவர்) ‘இசையே’ என்ற அணிக்குத் தலைமை. ‘நாடகமே’ என்ற அணிக்கு, இன்று வையப் புகழ்கொண்ட பட்டிமன்றம் பாப்பையா தலைமை.

நிகழ்ச்சிக்குப் பந்தல் கொள்ளாத கூட்டம். வரவேற்புரை நல்கிய பெரியவர் நல்லுசாமி அவர்கள் பெருமிதத்தோடு இப்படிக் கூறியது எனது நினைவில் இன்றும் பசுமையாக உள்ளது. அவர் சொன்னார்: “எனது ஊர்ப்பெருமக்களே! நேற்று இசைப்பேரரசி அம்மையார் கே.பி.சுந்தராம்பாள் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி இதே பந்தலில் நடைபெற்றது. அப்போதும் பந்தல் நிறையக் கூடியிருந்தீர்கள். ஆனால் இன்று ஐயாவின் பட்டிமன்ற நிகழ்ச்சிக்குப் பந்தல் கொள்ளாமல் நிறைந்து வழிகிறீர்கள். வெளி ஊர்களில் இருந்தும் ஏராளமானோர் வந்துள்ளீர்கள். அனைவரும் நிகழ்ச்சியின் இறுதிவரை அமைதியாக இருந்து இந்த அருமையான பட்டிமன்றத்தைக் கேட்டுப் பயன்பெறவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்” என்று வரவேற்புரை நிகழ்த்தினார்.

அன்று 'இசையே' என்ற அணிக்குத் தலைமை ஏற்ற பேராசிரியர் சீனி. சௌமிய நாராயணன் அருமையாகப் பாடி அசத்திவிட்டார். இசையின் பெருமையை அழகாக எடுத்துச் சொல்லியும் பல தேவார, திருவாசகப் பாடல்களைப்பாடியும் அவர் மிகவும் உவந்துடைமையாகக்கொண்ட ஆழ்வார் பாசுரங்களையும் பாடியதோடு கண்ணதாசனின் திரையிசைப் பாடல்களையும் பாடியவர் முத்தாய்ப்பாக "ஞானப் பழத்தைப் பிழிந்து ரசம் ஐந்தினொடும் உண்ணவும் கொடுத்த நல்லகுருநாதன்" என்றும் "வேலைப் பிடித்தது என்ன" என்ற கே.பி.சுந்தராம்பாளின் பாடலைப் பாடியதும் கைதட்டல் விண்ணைப் பிளந்தது.

அடுத்து வந்த பட்டிமன்றம் பாப்பையா விடுவாரா? முன்னர்பேசிய சௌமிய நாராயணன் பாடிய அனைத்துப் பாடல்களையும் சுட்டிக் காட்டி அவை பாடப்பட்ட சூழல் நாடகக் காட்சியாகக் கேட்போர் மனதில் தோன்றவில்லையெனில் பாடலை எப்படிச் சுவைக்கமுடியும் என்று கேட்டவர் சிவபெருமான் ஆடிய 64 திருவிளையாடல்களும் நாடகம் தானே என்று கூறிவிட்டு " இந்த சிவனின் நாடகத்திற்கு இந்த நாராயணன் (எழுந்தருளப்பண்ணியிருந்த நடராசர் திருமேனியையும் பெருமாள் திருமேனியையும் மாறி மாறிச் சுட்டிக்காட்டியபடி) பதில் சொல்வாரா, இல்லை, போய்விட்டு அடுத்த ஆண்டு வருவாரா?" என்று கேட்டதோடு பிட்டுக்கு மண்சுமந்து சிவனார் ஆடிய நாடகத்தைச் சுட்டிக்காட்டி முத்தாய்ப்பாக கே.பி.சுந்தராம்பாள் நடித்த 'அவ்வையார்' படத்தில் வந்த 'சுட்ட பழம் வேண்டுமா, சுடாத பழம் வேண்டுமா' காட்சியை நடித்தே காட்டினார். அப்படிச் சுட்டபழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று கேட்டபோது மேசையில் என் முன் வைத்திருந்த பழங்களைச் சுட்டிக்காட்டி சௌமிய நாராயணனைப் பார்த்துக் கேட்டபோது விண்ணையும் தாண்டியது கரவொலி. கரவொலியல்ல அது வானொலி! வானொலியிலும் நிகழ்ச்சி ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது.

இவ்வாறு பிற பேச்சாளர்களும் பேசிமுடித்தபிறகு எனது நடுவர் பணி தொடங்கியது. நான் பாடியும் நடித்தும் பலவேறு வித்தைகளைக் காட்டினேன். மக்களைப் பெரிதும் ஈர்ப்பது நாடகமே என்றுதான் எனது தீர்ப்பு இருக்கும் என்று எல்லோரும் நினைத்துக்கொண்டிருந்தனர். ஆனால் நான் இப்படி ஒரு கேள்வியை எழுப்பி அனைவரையும் திகைக்கவைத்தேன். "கீழ்ப்பறவைச் சாதியையும் விலங்குகளையும் மக்களாக உயர்த்தி ஈர்க்க வல்ல ஆற்றல் இசைக்கு உண்டா? இல்லை நாடகத்திற்கு உண்டா? நீங்களே சொல்லுங்கள்" என்று கேட்டேன். "இசைக்கே உண்டு என்று" கூவி ஒட்டுமொத்தக் கூட்டமும் மண்ணுக்கும் விண்ணுக்குமாகக் குதித்து ஆரவாரித்தது. இதில் 'நாடகமே' என்று வாதிட்ட பாப்பையாவின் குழுவினரும் ஆமோதித்து மேடையில் எழுந்து ஆடியதோடு பாப்பையா தனக்கு அணிவித்த பொன்னாடையை எடுத்து ஓடிவந்து எனக்குச் சூட்டிப் பெருமைப் படுத்தினார்.

இசை என்ற சொல்லே இசைவிப்பது என்று பொருளாகி அதாவது இணங்கவைப்பது என்பதைச் சொன்னதோடு "தச்சர்கள்- ஆசாரிகள் இரண்டு மரச்சட்டங்களைச் செதுக்கிச் சேர்க்கும்போது என்ன செய்வதாகச் சொல்வார்கள்"? என்று கேட்டேன். அந்த ஊரிலேயே புகழ்வாய்ந்த மரவாண்டி என்ற தச்சர் எழுந்து "இசை சேர்க்கிறது என்று சொல்லுவோம் ஐயா" என்றார்.

அதேபோல "இசையாத அதாவது ஒத்துப்போகாத மனங்களைச் சேர்ப்பது எப்படி" என்று கேட்டேன். அமைதி. "சரி இப்படிக்கேட்கிறேன், இரண்டு தங்கத்துண்டுகளை எப்படிச் சேர்ப்பது" ? "உருக்கித்தான் ஐயா' என்று உரக்கச் சொன்னது ஒரு குரல். பொன்னாயா ஆசாரி என்ற பொற்கொல்லராம் அவர்.

இவ்வாறு மனங்களை உருக்கி ஒன்று சேர்க்கும் வலிமை பெற்றது இசை என்று சொன்னதோடு இசை எவ்வாறு மாக்களை மக்களாக்குகின்றது என்பதற்குச் சில மேற்கோள்களையும் எடுத்துக் காட்டினேன்:

அங்குசத்திற்கு அடங்காது யாழிசைக்குக் கட்டுப்பட்ட யானை:

“காழ்வரை நில்லாக் கடுங்களிற்று ஒருத்தல்
யாழ்வரைத் தங்கியாங்கு”

பாகனின் அங்குசத்திற்குக் கட்டுப்படாமல் மதங்கொண்ட ஒரு பெரிய ஆண்யானை யாழிசைக்கு அடங்கி ஆடாமல் அசையாமல் நின்றதாம். அதேபோல நண்பனின் அறிவுரைப் பேச்சுக்குக் கட்டுப்படாத தலைவன் காதலியின் அன்பான இசைபோன்ற பேச்சுக்குக் கட்டுப்பட்டு நின்றானாம் என்ற சங்கப் பாடலையும் மேற்கோள் காட்டினேன்.

## ஆனாய நாயனார்

பெரிய புராணத்தில் ஆனாய நாயனார் என்று ஓர் அடியவர். அவர் ஆடு-மாடு மேய்க்கும் இடையர் குலத்தவர். தேன் சொட்ட ஊன் உருக உயிர் உருகக் குழல் வாசிக்க வல்லவர். அவரது இசைகேட்டு என்ன நடக்குமாம் தெரியுமா? புல்லை வாயில் வைத்தபடி அதைத் தின்னாமலும் அசைபோடாமலும் ஆடாமலும் அசையாமலும் மான்கள் மயங்கி நிற்குமாம். எங்கே? அதே குழலிசை கேட்டு மயங்கிக் கிடக்கும் புலிகளின் வாய் அருகே! இதைச் சேக்கிழார் “புல்வாய புல்வாயும் (மானும்) புலிவாய” என்று பாடி மகிழ்கிறார். இவ்வாறு கொடும்புலியையும் தன் கொடுமை துறந்து கேட்கவைக்கும் ஆற்றல் இசைக்கு உண்டு.

## அசுணமா:

இசைகேட்டு மயங்கி நிற்கும் அசுணம் என்ற ஒரு விலங்கினத்தைப் பற்றித் தமிழ் இலக்கியங்கள் பேசுகின்றன. இசைகேட்டு மயங்கி நிற்கும் இந்த விலங்கு இசையை நிறுத்திவிட்டுத் திடீரெனப் பறையை ஒலித்தால் அக்கணமே இறந்து வீழ்ந்துவிடுமாம். இந்த அரிய குறிப்பைச் சொன்னபோது அவ்வூர் மக்கள் தாங்கள் இதுவரை கேட்காத செய்தி என்று மகிழ்ந்து கைதட்டி ஆரவாரித்தார்கள்.

வற்றாயிருப்பு என்ற ஊரில் அன்று தேவார திருவாசகத் தேன்சிந்தும் பாடல்களும் ஆழ்வார் அமுதும் பாரதியாரின் பாடல்களும் ஒருபுறமும், தமிழ் முதற்காப்பியமாகிய சிலப்பதிகாரமும், திருவிளையாடற்புராணமும், பெரியபுராணமும், இராம நாடகமும், பாரதியாரின் பாஞ்சாலி சபதமும் மறுபுறமும் மாறி மாறி மக்களுக்கு விருந்தாயின.

அன்று எனது காரில் திரும்பியபோது ஒரே கூத்தும் பாட்டுந்தான். நான் விளையாட்டாகச் சொல்வதுண்டு. “ஐயாக்களா! இப்படியே போனால் ஒரு நாளைக்கு எனது மகிழுந்து ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கும்’ என்றேன். அதை கேட்ட பாப்பையா “ஐயா! அது (உங்க காரு) ஆடினாலும் சரி பாடினாலும் சரி. ஆடாட்டியும் சரி பாடாட்டியும் சரி ஆனால் எப்படியாவது ஓடினால் சரி” என்று சொல்லி நிறைவு செய்த மறு நிமிடம் ‘டக் டக்’ என்று இரண்டு விக்கலோடு எனது மகிழுந்து நின்றே போனது. பிறகு என்ன? அந்த வழியாக வந்த ஒரு இரவுப் பேருந்தில் ஏறி ஒரு வழியாக இல்லை இல்லை பலவழியாக அவரவர் இல்லங்களை அடைந்தோம்.

# சொல்லும் செயலும்

## - முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்



*முத்தமிழ்க்காவலர்,கலைமாமணி,முதுமுனைவர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள் தமிழியக்க முன்னோடிகளுள் ஒருவர்.தமது வாழ்நாளெல்லாம் தமிழ் மொழி,இனம்,நாடு உயர்வடையப் பல்லாற்றானும் உழைத்த பெருந்தகை.குறள்நெறி பரப்புதற்கு நாடெங்கும்-ஏன்?உலகெங்கும்-சென்று பொழிவாற்றியும் ,இதழ்களில் எழுதியும்,நூல்கள் படைத்தும் முனைந்து இயங்கிய அறிஞர் பெருந்தகை.சிரிக்கவைத்துச் சிந்திக்கத்தூண்டும் அவர்தம் படைப்பாற்றலை இக் கட்டுரைவழி அறியலாம்.*

இன்னாசிமுத்து உபதேசியார் என்றால் ஈச்சம்பட்டி மக்கள் அனைவர்க்கும் நன்கு தெரியும். அவருக்கு பைபிள் மனப்பாடம்; எந்த வசனத்தையும் அவர் பாராமல் ஒப்புவிக்கும் ஆற்றல் படைத்தவர். சிற்றூர்களுக்குச் சென்று பாமர மக்களுக்கு பைபிளைப் போதித்து வர ஒரு உபதேசியார் தேவை என்று சாண்டகிரின் பாதிரியார் அந்த வட்டத்து 'நாட்டய்யர்' அவர்களிடம் கூறியிருந்தார். ஆதலால் அவருடைய பரிந்துரையின்பேரில் அந்த வேலை இன்னாசி முத்து உபதேசியாருக்கே கிடைத்து விட்டது.

அவர் ஒரு நல்ல பேச்சாளி; அவருடைய உணர்ச்சி கலந்த பேச்சு எவருடைய உள்ளத்தையும் உருக்கிவிடும். அவரது அருமையான தொண்டு காரணமாக ஊர்மக்கள் பலரும் கிறிஸ்து சமயத்தைப் பற்றி நன்கறிந்து கொண்டார்கள். சிலர் கிறிஸ்தவராகவும் மதம் மாறினர். சிலர் மதம் மாறும் நிலையிலும் இருந்து வந்தனர்.

இந்த நிகழ்ச்சி பனைமரத்துப்பட்டியிலுள்ள பரம சிவம் பிள்ளைக்கு ஒரு கலக்கத்தை உண்டு பண்ணி விட்டது. அவர் சிவபக்தியுள்ள ஒரு பெரிய நிலக்கிழார். இன்னாசிமுத்து உபதேசியாரின் பேச்சால், பிரசாரத்தால், இந்து மதமே அழிந்து போய்விடும் என்ற பயமும் அவருக்கு வந்து விட்டது. 'இதற்காக என்ன செய்யலாம்?' என ஆலோசித்தார். கூட்டினார் ஊர்க் கூட்டத்தை.

இறுதியாக சென்னையிலிருந்து ஒரு நல்ல பேச்சாளியை வரவழைப்பதென்றும், அவரைக் கொண்டு எல்லாக் கிராமங்களிலும் திருக்குறள் பிரசாரம் செய்வது என்றும், அவருக்குக் கொடுக்க வேண்டிய சம்பளத்தைப் பனைமரத்துப் பட்டி பரமசிவம்பிள்ளையே கொடுப்பது என்றும் முடிவு செய்யப் பட்டது-அடுத்த நாளே யாவும் திட்டப்படி நடை பெறத் தொடங்கிவிட்டன.

பட்டினத்திலிருந்து வந்த பழனியப்ப முதலியாருக்கு 'திருக்குறள் பிரசங்கியார்' என்ற மறு பெயரும் உண்டு எல்லாப் புலவர்களையும்போல அவரும் வறுமை வாய்ப்பட்டு வாடி வருந்தி வந்தவர். இருந்தாலும் பரமசிவம் பிள்ளையின் ஆக்கமும் ஊக்கமும், அவருக்கு ஆறுதலும் தேறுதலும் அளித்தன அவர் பல்வேறு கிராமங்களுக்கும் சென்று, தனது வேலைகளை மிகத் திறமையாகச் செய்து வந்தார்.

ஈச்சம்பட்டியைவிட்டு இன்னாசிமுத்து உபதேசியார் ஏழெட்டு ஊர்களுக்குச் சென்று வந்தால், பனைமரத்துப் பட்டியைவிட்டு பழனியப்ப முதலியார் பத்துப்பதி னைந்து ஊர்களுக்குப் போய் வருவார் உபதேசியார் பைபிளைப் பற்றியும்

பிரசங்கியார் திருக்குறளைப் பற்றியும் தகுந்த மேற்கோள்களுடன் அழுத்தந் திருத்தமாய்ப் பேசி, கிராம மக்கள் மனதில் நன்கு பதியவைத்து வந்தனர்.

காலப் போக்கில் பிரசாரம் போட்டிப் பிரசாரமாக மாறிவிட்டதால், ஒருவர் பேச்சை மற்றொருவர் கண்டித்துப் பேசுவது இயல்பாகவே நடைபெறத் தொடங்கிவிட்டது. இதற்காகப் பிரசங்கியார் பைபிளையும், உபதேசியார் திருக்குறளையும் ஆழ்ந்து படித்து ஆராயத் தொடங்கினர். அந்த ஆராய்ச்சி அவர்களின் பேச்சுக்குப் பெருந்துணையாக இருந்து வந்தது.

“இரு பேச்சர்ளிகளும் எந்த ஊரிலும் நேருக்கு நேராகச் சந்திக்கவில்லை. வாது புரியவுமில்லை. ஒருவரை ஒருவர் அறியார்” என்பது தான் ஊராரின் நம்பிக்கை. உண்மையில் உபதேசியாரின் பேச்சுமுறை எப்படி? என்பதைப் பிரசங்கியாரும், பிரசங்கியாரின் பேச்சுப்போக்கு எத்தகையது? என்பதை உபதேசியாரும் ஒளிந்திருந்து பலமுறை கேட்டிருக்கிறார்கள் என்பதை ஊரார்கள் எப்படி அறிவார்கள்?

ஒருவர் பேச்சை ஒருவர் கேட்டப்பிறகு பேசத் தொடங்கியதால், அவர்களின் பேச்சு முறையிலேயே ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டுவிட்டது. திருக்குறள் பிரசங்கியார் தமது பேச்சில் திருவள்ளுவர் கூறிய நீதிநெறிகளையே அதிகமாகப் பேசுவார் என்று தெரிந்ததும், இன்னாசிமுத்து உபதேசியார் ஏசுபெருமான் கூறிய நீதிநெறிகளை ஏராளமாகக் கூறத் தொடங்கி விட்டார். இதனால், கிராமங்களிலுள்ள பொதுமக்கள் இவர்கள் இருவரையும் நன்கு வரவேற்று வந்தார்கள். “எந்த மதமானால்தான் என்ன? எந்தப் பிரசங்கமானால் தான் என்ன? கிராமத்தில் உண்மையும், ஒழுக்கமும், நிதியும், அன்பும் நிலைபெற்றாற் போதும்” என்பதே பொதுமக்களின் எண்ணமாக இருந்துவந்தது. சில கிராமத்தினருக்கு இப்பேச்சுகளைக் கேட்பது ஒரு பொழுது போக்காகவுங்கூட இருந்து வந்தது அதற்காக ஒவ்வொரு கிராமத்தினரும் தங்கள் ஊருக்கு எந்தப் பிரசங்கியார் வந்தாலும் மகிழ்வோடு வரவேற்று அன்போடு உபசரித்து அனுப்புவார்கள் அதிகமாகக் கூறுவானேன்? அடுத்த ஊருக்குப் போய்ச் சேர்வதற்கு என்று கட்டுச் சோறு கட்டிக் கொடுத்தனுப்புவது கூட, சில கிராமத்தினரின் வழக்கமாய்ப் போய்விட்டது.

பட்டப்பகல் 12 மணி, பங்குனி வெயில், நடந்த களைப்பு, பசி மயக்கம் இத்தனையும் சேர்ந்து வாட்டியது இன்னாசிமுத்து உபதேசியாரை. ஈச்சம்பட்டி போய்ச் சேர இன்னும் 3 கல் நடந்தாக வேண்டும் நடக்கவும் முடியவில்லை. நாவறட்சி வேறு என்ன செய்வார்? பாவம் கண்ணுக்கு எட்டிய தொலைவில் தினைச் செடிகளையும், தென்னை மரங்களையும் கண்டார். அங்குக் கட்டாயம் கிணறு இருக்கும் என நம்பித் தள்ளாடிச் சென்றார். அவர் எண்ணம் வீண்போகவில்லை கிணறும் இருந்தது. கிணற்று மேட்டில் திருக்குறள் பிரசங்கியார் தமது கட்டுச் சோற்றை அவிழ்த்து வைத்து உண்டு கொண்டிருந்தார். சோற்றையும், திருக்குறள் பிரசங்கியாரையும் கண்டதும் கட்டாயம் தமக்குச் சோறு கிடைக்கும், களைப்பும் ஒழிந்து விடும் என்று இன்னாசிமுத்து உபதேசியார் நம்பி, ஒருவாறு ஆறுதல் அடைந்தார். காரணம் தான் ஒளிந்திருந்து கேட்ட பிரசங்கத்தில் திருக்குறள் பிரசங்கியார் விருந்தின் பெருமையை எடுத்து விரிவாக விளக்கிப் பேசியிருந்தார் என்பதேயாகும்.

கட்டுச்சோறு கரைந்து கொண்டேயிருந்தது. திருக்குறள் பிரசங்கியார் இன்னாசிமுத்து உபதேசியாரை உணவு உண்ண அழைக்காதது மட்டுமல்ல,

பாராமற்கூட உண்டு கொண்டேயிருந்தார். தான் வந்திருப்பது ஒரு வேளை அவருக்குத் தெரியாதோ? என எண்ணி அருகிற் போய் நின்றார். ஒரு கனைப்பும் கனைத்துப் பார்த்தார். என்ன செய்வது? இன்னும் ஐந்தாறு உருண்டைகளே எஞ்சியிருந்தன.

அதாவது கிடைத்தால் களைப்பு நீங்குமே என்றெண்ணிக் கட்டுச் சோற்றுக்கு எதிரிற் போய் உட்கார்ந்து பார்த்தார். இரண்டே உருண்டைகள் தானிருந்தன, இதுவும் போய்விட்டால். எப்படி ஊர்போய்ச் சேர்வது? என்ற கவலை இன்னாசிமுத்து உபதேசியாரை வாட்டி வதக்கியது. அறிமுகம் இல்லை. பேசவும் நாவெழவில்லை. கேட்கவும் வெட்கம் பசி மயக்கமும் மற்றொரு பக்கம். என்ன செய்வார்? திருக்குறளையாவது ஞாபகப்படுத்திப் பார்க்கலாம் என்று நினைத்து.

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று

என மெதுவாகக் கூறினார். “கிடைத்தற்கரிய அமுதமாயினும் விருந்தினர் அருகிலிருந்தால், தனித்து உண்ணாதே” என்பது அக்குறளின் கருத்து திருக்குறட் பிரசங்கியார் குறளையுங் கேட்டுக்கொண்டு கடைசி உருண்டையையும் வாயிற் போட்டுக்கொண்டார். உதறினார் சோறு இருந்த துணியை எடுத்தார் ஒரு அரைச்சோற்றை அதை ஒரு சிறிய இலையில் வைத்து இருகைகளாலும் தாங்கிப் பிடித்து, எழுந்து நின்று, உடலை வளைத்து வணங்கி,

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன் றெரிவார்

எனக் கூறி நீட்டினார்.

எதிர்பாராத இச்செயலைக் கண்ட உபதேசியார் வெட்கிப் போனார். கிணற்றில் தட்டுத்தடுமாறி இறங்கி நீரருந்திக் களைப்பை மாற்றிக்கொண்டு, எவ்வாறோ ஈச்சம்பட்டிக்குப் போய்ச் சேர்ந்துவிட்டார்.

எண்ணி இருபத்தெட்டாம்நாள் திருக்குறள் பிரசங்கி பட்டினம் பழனியப்ப முதலியார் எங்கெங்கோ சுற்றி விட்டு, பகல் 1 மணிக்குப் பசிக்கு உணவு கிடைக்கும் என எண்ணிப் பயற்றம்பாறைக் கிராமத்திற்கு வந்து சேர்ந்தார். அன்று அவ்வூரில் திருவிழா ஆதலின், தேர் நிலைக்குப் போய் நின்ற பிறகுதான் அவ்வூரார்கள் சோறுண்டார்கள் என்றும், அது மாலை 4 மணி ஆகும் என்றும் தெரிந்ததனால், அங்கும் சிறிதும் நிற்காமல், மணல்மேடு கிராமத்திற்குப் போய்விடலாம் எனப் புறப்பட்டுவிட்டார். வழியில் களைப்பும், மயக்கமும் கலந்து கால்களைத் தள்ளாடச் செய்தன; “இன்னும் கால்மைல் தூரம் சென்றாலும் ஒரு காட்டாறு வரும்: அதில் ஊற்று இறைத்தேனும் நீரருந்தலாம்” என நம்பி, உயிரைப் பிடித்துக்கொண்டு உருண்டும் எழுந்ததும் ஒருவாறு போய்ச் சேர்ந்தார். கடைசியாக ஒரு ஆள் காட்டாற்றில் ஊற்று இறைத்துவைத்து அதனருகில் உணவு உண்பதையும் கண்டுவிட்டார். உயிர் பிழைத்தோம் என எண்ணி. அவ்விடத்திற்கு மகிழ்ச்சியோடு ஓடிச் சென்று பார்த்தார்.

ஆம். அவர் இன்னாசிமுத்து உபதேசியார்தான். அவர் கட்டுச்சோற்றை அவிழ்த்துத் தமது வேலையைச் செய்து கொண்டிருந்தார். கதை எதற்கு? கடைசிலாவது தமக்குக் கொஞ்சம் சோறு கிடைக்கும் என நம்பி அந்தச் சுடுமணலிற் சுருண்டும், தவித்தும், துடித்தும், கிடந்தும், பார்த்தார். திருக்குறளாரைப் பார்த்தும் பாராதது போலப் பைபிளார் சோற்றை உண்டுகொண்டேயிருந்தார். ஒரே ஒரு உருண்டைதான் மீதியிருந்தது.

அதுவும் போய்விட்டால் ஆபத்தாகிவிடுமே! எனப் பயத்த பழனியப்பர், இன்னாசியாரின் எதிரில் உட்கார்ந்து, தன்னைப்போல் பிறரையும் நேசிப்பாயாக!

என்று கூறி, ஏசு பெருமான் கட்டளையை நினைவூட்டினார். என்ன செய்வார் இன்னாசியார்? அந்தச் சோற்றையும் அள்ளி வாயிற் போட்டுக்கொண்டு, பிறர்பொருளை இச்சியா திருப்பாயாக! என்று கூறிவிட்டு, துண்டை உதறித் தோளிற் போட்டுக் கொண்டு போய்விட்டார்.

தனது சொல்லுக்கும் செயலுக்கும் திருக்குறளில் ஆதாரம் தேடி வைத்திருப்பதாகப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்த திருக்குறளார். இன்னாசிமுத்து உபதேசியாரும் அப்படிப் பைபிளில் தேடி வைத்திருக்கிறார் என்பதைக் கண்டதும், வெட்கப்பட்டு விரைந்து சென்றார்.

கதை எப்படி? 'நல்ல கதை? நகைச்சுவைக் கதை' அப்படித்தானே? உங்களுக்குச் சிரிப்புக்கூட வந்திருக்கும் ஆம். கதை எழுதுவதும் சிரிக்கத்தான்! படிப்பதும் சிரிக்கத்தான்! ஏன் பத்திரிகைகளைச் சிலர் நடத்துவதுங் கூடச் சிரிக்கந்தான்! நம் நாட்டில் இருக்கிற துன்பங்களை, துயரங்களைச் சிரித்து ஆற்றுவது என்பது ஒரு வழி. அதைத்தவிர வேறு வழியில்லை என்பதைக் கண்ட பிறகுதான், சில பத்திரிகாசிரியர்கள் சிரிப்பாய்ச் சிரிக்கிற கதைகள் பலவற்றை எழுதி வெளியிட்டு வருகிறார்கள்.

கதையை அல்ல; கருத்தை உணருங்கள். கதையை நினைத்தால் சிரிப்புத்தான் வரும். கருத்தை நினைத்தால் கண்ணீரே வரும். இந்த உபதேசியாரைப் போலவும், பிரசங்கியாரைப் போலவும் எத்தனை மக்கள் இன்று நம் நாட்டில் இருந்து வருகின்றனர்! இத்தகைய மக்களின் வாழ்வு நமது நாட்டின் நலனுக்குக் கேடு தரும் அல்லவா அதனை எண்ணியே திருவள்ளுவர்,

கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

என்று கட்டளையிட்டிருக்கிறார்.

"படி! நன்றாகப்படி? படிக்க வேண்டியவைகளைப் படி? பிழையறப் படி படித்தபின் அதன்படி நடந்து ஒழுகு!" என்பதே இதன் கருத்து. எல்லாவற்றையும் கற்ற இந்த இருவரும் இதைக் கற்றவர்களா? கற்றிருந்தால் பிறருக்குப் போதிப்பவைகளில் சிலவற்றையாவது தங்கள் செயலில் காட்டியிருப்பார்கள் அல்லவா வள்ளுவர் இம்மட்டோடு நிற்கவில்லை. இத்தகைய இழிந்த மக்களைக்கண்டு வருந்திச் சிறிது அதிகமாகக் கடிந்துங் கூறி, நம்மை எச்சரிக்கையும் செய்கிறார்.

கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு

என்று, "சொல் வேறு செயல் வேறுபட்டவர்களோடு தொடர்பு கொள்ளாதே! கொண்டிருந்தால் விழித் திருக்கும் போது மட்டுமல்ல; உறங்கும்போது மட்டு மல்ல; கனவிலுங் கூட அது உன்னைத் துன்புறுத்தும்" என்பது இதன் கருத்து.

பனைமரத்துப்பட்டிப் பரமசிவம் பிள்ளைக்கு இந்தக் கதை தெரிந்தது இன்னாசிமுத்து உபதேசியார் தன்னைக் காப்பாற்றாமல் காட்டாற்றில் தவிக்கவிட்ட செய்தியைப் பரவசிவம் பிள்ளையிடம் திருக்குறளார் கூறிவிட்டார். பரமசிவம்

பிள்ளை மிகவும் வருந்தி, இச்செய்தியை ஈச்சம்பட்டிப் பாதிரியாருக்குத் தெரிவித்தார். ஈச்சம்பட்டிப் பாதிரியார் இன்னாசிமுத்து உபதேசியாருடன் பனைமரத்துப்பட்டி பரமசிவம் பிள்ளையிடம் வந்து நடந்ததை விசாரிக்கச் சொன்னார். அவர் தென்னை மரத்தடியில் பனைமரத்தளவு சோறு தந்த திருக்குறள் பிரசங்கியாரின் செயலைத் தெளிவாக எடுத்துக் கூறினார் உண்மைகள் விளங்கி விட்டன.

பரமசிவம் பிள்ளையும், பாதிரியாரும் ஒன்றுபட்டுத் தனித்தும் பேசினார்கள். இத்தகைய திருக்குறள் சொற்பொழிவாளர்களைக் கிராம மக்களிடம் தலைகாட்டவிடுவது நாட்டிற்கே கேடாகும் என்றார் பரமசிவம் பிள்ளை. இத்தகைய உபதேசியார்களை ஏசுபெருமான் மன்னிக்கவே மாட்டார் என்றார் பாதிரியார். கடைசியாக இருவரும் அவரவர்க்குரிய சம்பளத் தொகைகளை அவரவர்களிடம் கொடுத்து "மக்களைச் சீர்திருத்தியது போதும், இனி நீங்கள் உங்களையே சீர்திருத்திக் கொள்ளுங்கள்" என்று கூறி அனுப்பிவிட்டார்கள். கருத்தக் கலங்கினார் திருக்குறளார்: கண்கலங்கினார் இன்னாசியார் இருவரும் ஒன்றுகூடி வழி நடந்தார்கள். வரும் வழியில், "அண்ணே திருக்குறளில் எல்லாம் இருக்கிறது என்று அன்று கூறினீர்களே! நம்முடைய இந்த நிலைபற்றியும் அதில் ஏதும் இருக்கிறதா?" என்றார். உபதேசியார்.

"ஆம்" படித்தும், அறிந்தும், பிறர்க்கு உபதேசம் செய்தும், தான்மட்டும் அதன்படி நடந்தொழுகாத மூடனை விடச் சிறந்த மூடன் உலகத்தில் ஒருவனுமில்லை யென்று நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது அண்ணே" என்றார் திருக்குறளார்.

"குறளைச் சொல்லமாட்டீர்களா?" என்றார் இன்னாசியார்.

"ஓதி உணர்ந்தும், பிறர்க் குரைத்தும், தானடங்காப் பேதையிற் பேதையாரில்" என்றார் பழனியப்பர்.

"அண்ணே! இதைக் காட்டாற்றங்கரையிலேயே நினைவூட்டக்கூடாதா?" என்றார் உபதேசியார்.

"தென்னைமரத்து நிழலிற்கூட, இது என் நினைவிற்கு வரவில்லையே! என் செய்வது?" என்றார் பிரசங்கியார்.

தம்பி! கட்டுரையைப் படித்தாயா? எப்படி இருக்கிறது? நன்றாயிருக்கிறது என்று நினைத்தாயா? இன்னும் நன்றாக எழுதலாமே என்று நினைக்கிறாயா? அதுதான் கூடாது. படிப்பது எழுதுவதற்காக என்றும், பேசுவதற்காக என்றும் நினைக்கிற நினைப்புத்தான் நம் நாட்டு மக்களைக் குட்டிச்சுவராக்கிவிட்டது. படிப்பது நடப்பதற்காக என்ற எண்ணம் நம் நாட்டில் வளர வேண்டும்! இன்றைக்கு நீயும் அந்த முடிவுக்குத்தான் வரவேண்டும்.

படி! நன்றாகப் படி பிழையறப் படி! எது நல்லது? என்று ஆராய்ந்து உணர்! நல்ல முடிவுக்கு வா! உடனே செய்! பிறரையும் செய்யச் சொல்! தீர ஆராய்ந்து சொல்! செய்வதற்காகச் செய்ய வேண்டியதைச் சொல். செய்து கொண்டே சொல்!

சொல்வேறு செயல்வேறு பட்டவர்களுடைய கூட்டுறவி லிருந்து விலகு; உடனே விலகு! ஏனெனில் அது நல்வாழ்விற்கு ஏறறதொரு நல்ல வழி!

# திருக்குறளும் உங்கள் விளக்கமும்

*இந்தப் புதிய பகுதிக்கு உங்கள் கவனத்தைக் கவர்ந்த குறளும் நீங்கள் கூறும் விளக்கமும் எழுதி அனுப்புங்கள்.*

1 **மகன்தந்தைக்காற்றும்உதவிஇவன்தந்தை**
**என்நோற்றான்கொல்லெனும்சொல் (மக்கட்பேறு-70)**

- **முனைவர் வதிலை பிரதாபன்** வழங்கும் குறள் விளக்கம்



*தலைவர்,தமிழ்எழுத்தாளர்மன்றம் - மகாராட்டிரா- புரவலர் - .காஞ்சி இயல் இசை நாடகம் நாட்டுப்புறக் கலைகள் சங்கம், இணைத் தலைவர் - மகாகவி பாரதி கலை இலக்கியப் பேரவை, மதிப்புறு தலைவர் - மராத்திய மாநில சமூக நீதி அமைதி மற்றும் வல்லுனர் பேரவை.*

பெற்று வளர்த்தெடுப்பது மட்டுமல்ல; கல்விகேள்விகளில் திறன்மிக்கவனாக ஆக்கி நற்குணங்களில்மிகச்சிறந்தோனாகஉருவாக்குவது தந்தையின் கடமை.

அதன்விளைவாகத் தனது மகன் ஆன்றோர் அவையினில் நன்மதிப்புள்ளவனாகவும் சொல்லிலும் செயலிலும் ஊரார் வியக்கும் வண்ணம் மேன்மை பெற வேண்டும். இத்தகு அருந்திறன் கொண்ட இவனைப் பெற இவன் தந்தை என்னதான் தவம்செய்திருப்பாரோ என்று ஊரும், உலகும் போற்றவேண்டும். அதனால் கிட்டும் பெருமையைத் தன்தந்தைக்கு வழங்கக்கூடியவனாக இருப்பதே ஒருமகன் தன் தந்தைக்கு செய்யும் உதவி. பொன்னும் பொருளும் ஈந்து மகிழ்வுபடுத்துவது அல்ல என்று பொருட்படும்படிவிளக்கியுள்ளார். அதாவது ஒழுக்கத்திலும் அறிவிலும் சிறந்த மகனைப் பெற்ற தந்தையை மகிழ்வுபடுத்துவது வேறெதுவுமில்லை என்கின்ற பொருட்படக் குறிப்பிட்டுள்ளார்.

தன்தந்தையின் பெருமைக்கு வித்திடுபவனாக உருவான ஒருபிள்ளை பிறர் வெறுக்கும் நிலையில் தன்னை மாற்றிக்கொள்ள மாட்டான். தான் செய்கின்ற ஒவ்வொரு செயலிலும் எச்சரிக்கை உணர்வுடன் இருக்கக்கூடிய ஒருபிள்ளை, தனது நட்புவட்டத்திலும் அதேபோன்று ஒத்த உணர்வும், திறனும், ஆற்றலும், நற்பண்புகளும் கொண்டுள்ளவருடன்தான் நட்புக் கொண்டிருக்க விரும்புவான். ஒருவனுடைய நட்பும் பழக்கவழக்கங்களும் நல்ல சிந்தனையோடு ஆக்கப்பூர்வமானதாக இருக்கும்போது அதன் விளைவுகளும் நற்கனிகளாகச் சுவைதரும் என்பதில் எந்தவித ஐயமுமில்லை.

அப்படி ஒவ்வொரு பிள்ளையும் இத்தகைய பண்புநலன்களை அணிகலன்களாகப் பெற்றிருக்கும் போது வீடுமட்டுமல்ல; நாடும் - ஒட்டுமொத்த உலகும் தூய சமுதாயங்களின் கூட்டமைப்பாகத்தான் இருக்கும்.

உயர்ந்த படிப்புகள் அத்தனையும் படித்த ஒருவன் தன்னை ஈன்றவளுக்கும் தனக்கு உயிரளித்து உணர்வினையும் அளித்த, தன் தந்தைக்கும் பெருமைகளைத் தேடித்தர இயலாதவனாய் இருக்கின்றான் என்றால் அவன் படித்த படிப்பால்என்னபயன்?

'தந்தை மகிழவும் தரணி ஒளிரவும்' என்கின்ற வகையில் தந்தையின் பெருமையை உலகுக்கு உணர்த்தவும்; பெற்று ஆளாக்கியவருக்கு இதமான மகிழ்வைக் கொணர்வதற்கும்; ஊரும் உலகும் மகிழ்வுறுவதற்கும்; இத்தகு சிறப்பிற்குரிய ஒருபிள்ளை பணியாற்றுவான். நாளை இல்லறவாழ்வை எட்டுகின்றபோதும் பிள்ளைச்செல்வங்களைப் பெறுகின்றபோதும் தன் தந்தையின் வழியில் கற்றுணர்ந்தவற்றைத் தனது பிள்ளைகளுக்கும் சொல்லிவளர்க்கும்

நிலையிலிருந்து தவறாதவனாகத் தானிருப்பான். எனவே, அய்யன் வள்ளுவனின் அறத்துப்பாலில் உள்ள மக்கட்பேறு அதிகாரத்தில் உள்ள குறள்என் 70 உரைக்கும் செய்தியானது பண்புகளின் குவியலாக ஒற்றைத் திருக்குறளில் குவிந்துகிடக்கின்றது.

# 2

**இதனை இதனால் இவன்முடிப்பன் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல் (தெரிந்துவினையாடல்-517)**

-**பேராசிரியர் செ.இரா.செல்வக்குமார்** வழங்கும் குறள் விளக்கம்



*கனடா,வாட்டர்லூ பல்கலைகழகத்தில் பேராசிரியராகப் பணிபுரியும் முனைவர் செ.இரா.செல்வக்குமார் இணையதளத்தில் நூற்றுகணக்கான அறிவியல் கட்டுரைகளை வழங்கி அறிவியல் தமிழ்வளர்ச்சிக்கு ஆக்கம் வளர்க்கின்றார்.*

"இதனை" எனக் குறிப்பிட்டுச் சொல்லியதால், செய்ய வேண்டிய வினையோ திட்டமோ வரையறை செய்யப்பட்டுள்ளதை அறியலாம் முதற்பணி இப்படித் துல்லியமாக வரையறுத்துக்கொள்ளப்படுவது.. வரையறை செய்யாமல் தீர்வு காணல் இயலாதே.

"இதனால்" என்று கூறியதால் என்னென்ன திறன்களால், வல்லமைகளால், செய்து முடிக்கக்கூடிய வளங்களிருப்பதால் எனத் திறமைகளை செய்ய வேண்டியிருக்கும் வேலைக்கு ஏற்றதாயிருக்கின்றதா என எண்ணிப்பார்க்க வேண்டும்.

"'இவன்" என்கிறார். ஆகவே அப்படியான திறமைகள் இருப்பவர்கள் பலர் இருக்கலாம், ஆனால் அவர்களில் நுண்ணிதாய் ஆய்ந்து செய்யக்கூடியவன் மட்டுமன்று, செய்து **முடிக்கக்கூடியவன்**, திறம்படச் செய்து முடிப்பவன் என **ஆய்ந்து** (மேலோட்டமாகவன்று) *இவன்* என அடையாளம் கண்டு துணிய வேண்டும். யாரோ உறவினன், வேண்டப்பட்டவன் என்றெல்லாம் அல்லாமல் திறமையின் அடிப்படையில் துணிதல்.

முடிப்பது பற்றியும் ஆய்வு பற்றியும் மேலே சொன்னது முக்கியம். அப்படியெல்லாம் துணிந்த பின் *அதனை* , *அவன்*கண் = அவனிடத்தில், அவன் பொறுப்பில் விட்டுவிடுதல் வேண்டும். இடையே புகுந்து micromanage என்பார்களே அப்படியெல்லாம் இடையிடையே தொல்லை செய்யாமல் அவர் பொறுப்பில் விட்டுவிட வேண்டும் என்பதை விடல் என்றார். இன்றைய மேலாண்மையின் கருவாய, அடிப்படையான கூறுகள் பலவற்றையும் இந்த ஒரு குறளிலே சொல்லிவிட்டார். ஐ, ஆல், கண் என வேற்றுமையுருபுகளை அழகுறவும், இவன், இது , அவன் அது எனச் சுருக்கமாக சுட்டுகளையும் பயன்படுத்தி விளக்கியுள்ளார்.

# 3

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும் (ஒழுக்கமுடைமை-131)**

**- திருமதி. கேசினி கோணேசுவரன்** வழங்கும் குறள் விளக்கம்



*நிதித்துறை, மேலாண்மையியல் துறைகளில் வித்தகம்வாய்ந்த திருமதி கேசினி நியூ சவுத் வேல்சு மாநிலத்தில் சி.எம்.பிட் குழுமத்தில் கணக்காயராகப் பணியாற்றுகிறார். ( Acountatnt, C.M. Pitt&Co,Strathfield, New South Wales)*

உலகிலே பெறுமதியான பல பொருட்கள் இருக்கின்றன. மாடமாளிகைகள், நவீன வாகனங்கள், பொன் பொருள்கள், ஆடை ஆபரணங்கள் , மனைவி மக்கள், சுற்றத்தார், நண்பர்கள் என ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று முக்கியமாக பாதுகாக்கப் படவேண்டிய விடயம். ஆனால் திருவள்ளுவர் இவற்றைப் பற்றி எதுவும் கூறாமல் , உயிரினும் மேலாக ஒழுக்கத்தைப் பாதுகாக்க வேண்டும் என்கிறார். ஏனென்றால் மேற்கூறியவற்றை நாம் இழந்தால் மீண்டும் பெற்றுக் கொள்ள முடியும்.

மாட மாளிகைகளை கட்டலாம், நவீன வாகனங்களை வாங்கலாம். ஆடை ஆபரணங்கள் , பொன் பொருள்களை உழைத்து பெறலாம், இன்னொரு திருமணம் செய்து மனைவி , பிள்ளைகளை பெறலாம், அவர்களுடைய உறவுகளை சுற்றத்தாராக எண்ணலாம், புதிய நண்பர்களை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் உயிரை இழந்தால் மீண்டும் பெற முடியாது. அதன் காரணமாகவே ஒழுக்கத்துக்கு உவமையாக உயிரை உரைக்கிறார். ஒழுக்கத்துடன் வாழ்வதால் ஒருவருக்கு உயர்வு கிடைக்கும் என்பதால் , ஒழுக்கத்தை உயிரினைப் பாதுகாப்பது போல் பாதுகாக்க வேண்டும் என்று கூறியிருக்கலாமே ? ஏன் உயிரினும் மேலாகப் பாதுகாக்கப் பட வேண்டும் என்று கூறுகிறார் உயிரினை இழந்து விட்டால், பின் எமது உலகியல் வாழ்வும் முடிந்து விடும். ஆனால் ஒழுக்கத்தை இழந்தால் ,பின் உயிர் வாழ்வதில் ஏதும் அர்த்தம் இல்லை. ஒழுக்கத்தை காப்பாற்றி வாழ்ந்த ஒருவன், உயிரை இழந்த பின்பும் உலகத்தாரின் உள்ளங்களில் வசிக்கிறான்.

ஒழுக்கத்தை இழந்து , உயிரைக் காப்பாற்றி வாழ்பவன் நடைப் பிணமாகவே வாழ்கிறான் . "மயிர் நீப்பின் வாழாக் கவரி மா" போல மானமுடைய மனிதர் , ஒழுக்கத்தை இழந்த பின் உயிர் வாழ மாட்டார்கள். இதன் காரணமாகவே உயிரினும் மேலாக ஒழுக்கத்தைப் பாதுகாக்க வேண்டும் என்று பொய்யா மொழிப் புலவர் புகன்றிருக்கிறார். அடுத்தடுத்த நூற்றாண்டுகளில் விஞ்ஞானிகள் இழந்த உயிரைக் கொண்டு வந்தாலும் கொண்டு வரலாம். ஆனால் எத்தனை நூற்றாண்டுகள் சென்றாலும் இழந்த ஒழுக்கத்தை மீண்டும் பெறவே முடியாது. உயிரினும் என்ற சொல்லை ஏன் திருவள்ளுவர் பயன்படுத்தினார் என்று சிந்திக்க ,அவரின் புலமை வியப்பைத் தருகிறது. உயிரை இழந்து விட்ட ஒருவன் உண்மையான பழியைக் கூட இழந்து விடுகிறான். ஆனால் ஒழுக்கத்தை இழந்த ஒருவன் தான் செய்யாத பழி, பாவங்களைக் கூட, தான் செய்யவில்லை என்று சொன்னாலும் உலகம் ஏற்பதில்லை. இதனால் உயிரினும் சிறந்தது ஒழுக்கம் என்றாகிறது. படி இல்லாமல் மாடி ஏறலாம், கால் இல்லாமல் நடந்து செல்லாம், ஒழுக்கமில்லாமல் உயர்வடையவே முடியாது. நாம் எல்லோரும் அற வழியில் நின்று, நல்லொழுக்கத்துடன் வாழ்ந்து , வாழ்க்கையில் உயர் நிலையை அடைவோம். நிறைந்த பணம், வீரம், ஏட்டுக் கல்வி உடையவர்களை விட, ஒழுக்கம் நிறைந்தவர்களே வாழ்வில் உயர்ச்சி பெற்று , சமுதாயத்திற்கும் சேவை செய்கிறார்கள்.

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 8 | சித்திரை 18, தி.பி 2052 | மே 1, கி.பி 2021






## குறள் நெறி பரப்பிய அண்ணல் தங்கோ

(கட்டுரை உள்ளே)

# குறள் நெறி பரப்பிய அண்ணல் தங்கோ

- **செ.அருள் செல்வன்.**

*செ.அருள்செல்வன் அண்ணல்தங்கோ அவர்களின் பேரன் ஆவார்.இவரது தாயார் நாவுக்கரசி அண்ணல்தங்கோ அவர்களின் மூன்றாவது மகள்.தந்தையார் நா.செகந்நாதன் விடுதலைப் போரில் ஈடுபட்டு இலாகூர்ச் சிறையில் தளைப்பட்டவர்.செய்தித்தாள் விற்பனைக் குழுமத்தில் பொறுப்பேற்றுப் பத்தொன்பதாண்டுக்காலமாகப் பணிபுரிந்துவருகிறார். "தூயதமிழ்க் காவலர் கு.மு.அண்ணல்தங்கோ வாழ்க்கை வரலாறு " என்னும் தலைப்பில் பாட்டனாரின் வாழ்க்கைவரலாற்றை நூலாக்கியுள்ளார்.பெரியாரியக்கத்திலும் தமிழியக்கத்திலும் தன்னார்வப் பணிபுரிந்து வருகிறார்.பாட்டனாரின் பெயர்விளங்கச் செயலாற்றிவரும் பெயரன்.*



1904 ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 12 ஆம் நாளன்று முருகப்பர் - மாணிக்கம்மாள் இணையருக்கு முதல் மகனாக அண்ணல்தங்கோ பிறந்தார். அவர் பிறந்தபோது, பெற்றோர் அவருக்கிட்ட பெயர் சுவாமிநாதன். பிற்காலத்தில் தமிழ்ப்பற்றின் காரணமாக தாமே அப்பெயரை அகற்றிவிட்டு'அண்ணல் தங்கோ'என மாற்றிக்கொண்டார்.

இளம் பருவத்திலேயே அவரின் தந்தையார் இறந்துவிட்டதால், அண்ணல் தங்கோ வறுமை காரணமாக பள்ளி சென்று கல்வி கற்கும் வாய்ப்பு கிட்டாமல் போயிற்று. அவர்தம் சொந்த முயற்சியால் ஆங்கிலம், சமற்கிருதம், மலையாளம், கன்னடம், தெலுங்கு மொழிகளைக் கற்றார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியத் துணைக்கண்டம், வெள்ளையரின் ஆட்சி அடக்குமுறையால், கட்டுண்டது. இந்த நெருக்கடியில், தமிழகத்திலும் கடும் இருளான சூழலே. இந்து மகாசபையினரின் ஆதிக்கத்தில் சமூகத்தில் பரவலான மூடநம்பிக்கைகளும், அறிவியலுக்கெதிரான சடங்குகளும் நடைபெற்று நாடே இருளில் மூழ்கி எதிர்காலம் கேள்விக்குறியாக இருந்தது. தமிழ்ச் சமூகத்தில் தமிழுணர்வு சற்றே தலை தூக்கிய நேரமது. அயோத்திதாச பண்டிதர், இரட்டைமலை சீனிவாசன் எனும் முன்னோடிப் போராளிகளையடுத்து, மறைமலையடிகளாரின் தனித்தமிழ் இயக்க வேர், தமிழ் மண்ணில் நன்றாக வேர்விடத் துவங்கியது.

தமிழரின் இல்லங்களில் நடைபெறக்கூடிய திருமணங்களில், தொடர்புடைய மணமகன் - மணமகளுக்கும் புரியாத மொழியில், மணமக்களை வாழ்த்த வந்திருக்கும் உறவினர்கள் நண்பர்கள் அனைவருக்கும் கூட, சிறிதும் புரியாத மொழியில் தவளை கத்துவது போன்ற உச்சரிப்பில் சமற்கிருதத்தில் - தமிழரின் நிகழ்வுகள் நடத்தப்படுவதைத் தவிர, வேறு என்ன அவலம் வேண்டும்? ஏராளமான பொருட்செலவுகளுடன் புரோகிதர்களுக்குத் தண்டப் பணமும், தட்சணையும் கொடுக்க வேண்டிய ஏமாற்று வேலை.

இதையெல்லாம் அண்ணல்தங்கோ அவர்கள் இளமைக்காலம் முதற்கொண்டே, ஊன்றிக் கவனித்துத் தெளிந்தவர். புரோகிதர் சடங்கு செய்யாவிட்டால் அது திருமணம் ஆகாது என்று கருதும் அளவிற்கு அழுத்தம் பெற்றுவிட்ட அறியாமையும், புரோகிதர் சமற்கிருதத்தில் திருமணத்தை நடத்தாவிடின், மணமக்கள் நல்வாழ்வு பெறமாட்டார்களோ அல்லது மணமக்களுக்கு ஏதாவது தீங்கு நேருமோ என்று ஐயுறவு கொள்ளுமளவிற்கு மூடநம்பிக்கை நிலவிய காலம்.

அக்காலத்தில் முருகப்பர் எனும் திருக்குறள் பற்றாளர் [அண்ணல் தங்கோ தந்தையார் பெயரும் கூட முருகப்பர்தாம்] நாள்தோறும் குடியாத்தத்திலும், அருகேயுள்ள சிற்றூர்களுக்கும் மாலை வேளையில் நடந்து சென்று வீட்டுத் திண்ணைகள் தோறும் இளஞ்சிறார்களுக்கு திருக்குறள்பாடம் நடத்தி நெறிபரப்பியவர். அவருக்கும் அண்ணல் தங்கோவிற்கும் நன்கு பழக்கமாயிற்று. இருவரும் திருக்குறளறம் பரப்பும் பணியில் ஈடுபடும்போது, முருகப்பருக்கு - அண்ணல் தங்கோவை மிகவும் பிடித்துவிட்டது. அவரின் மகள் சிவமணி அம்மாளை அண்ணல்தங்கோவிற்கு திருமணம் செய்ய விழைந்தார்.

எவ்விதச் சடங்கும் சம்பிரதாயமுமின்றி புரோகிதர்கள் இல்லாமல், அம்மி மிதிக்காமல், அருந்ததி பார்க்காமல், அக்கினி வலம் வராமல், திருக்குறளை முன்மொழிந்து, சிவமணி அம்மாளை 1927-ல் புரோகித மறுப்புத் திருமணமாக, தமிழ்த் திருமணமாக திருக்குறள் நெறி அடிப்படையில் திருமணம் செய்து கொண்டதே (சுயமரியாதை இயக்கம் தமிழ் நாட்டில் செய்யும் முன்பே) அண்ணல் தங்கோ முதன் முதலில் வரலாற்றில் நடத்திக் காட்டிய சாதனை.

தம்முடைய திருமணத்தைப் புரோகிதம் தவிர்த்து திருக்குறளை முன்மொழிந்து தமிழ்த்திருமணமாகச் செய்துகொண்டது மட்டுமின்றி, ஏராளமான தமிழ்த் திருமணங்களை அண்ணல் தங்கோ தலைமை தாங்கி, திருக்குறளை முன்மொழிந்து நடத்தி வைத்த சாதனைகளை, மறைந்த பேராசிரியர். க. அன்பழகன் தாம் எழுதிய'தமிழர் திருமணமும் - இனமானமும்'எனும் நூலில் வானளாவப் புகழ்ந்து எழுதியுள்ளார்.

அண்ணல் தங்கோவின் பெயர்த்தாளில் [LETTER PAD]-ல் கூட, 'உள்ளுவம் வள்ளுவம்' என வலப்புறத்தில், 'தள்ளுவம் ஆரியம்!' என இடப்புறத்தில் பதிந்துதான் அச்சிட்டார். அவர் எந்த அழைப்பிதழ் அச்சிட்டாலும், அதில் 'திருக்குறள் படிப்போம் ! பொறுப்புடன் இருப்போம்!' எனும் தலைப்பில்,

திருக்குறள் படிப்பவர்கள் செம்மையறி வாலே

ஒருத்தரை வெறுப்பதில்லை! உண்மையுணர்வாலே!

உருக்கம், அறம், ஊக்கம் பல காக்கம் நல் ஒழுக்கம்

பெறுக்கிடும்! உயர்ந்திடும் திருக்குறள் படிப்போம்!

எனவும், 'குறள் தமிழ்ச் சான்றோர் வாழ்க!' எனும்தலைப்பில்

நூறாயிரம்ஆண்டின் - பின்னும்<br>
நூல் தரும் உலகறிஞர்<br>
பேறாய்க் கருதத்தரும் - குறள் தமிழ்ப்<br>
பெரியார் அறம் வாழ்க!

என்றும் அச்சிட்டு, அம்முழக்கத்தையே முன்னிறுத்தியவர் அண்ணல் தங்கோ.

அண்ணல் தங்கோ அவர்கள், அத்வைதம், அர்த்தசாத்திரம், மனுசாத்திரம் - மூன்றையும் தமிழன்னைக்கு ஏற்பட்ட புற்றுநோயாகவே கருதினார். GITA PRESS-GORKHAPUR லிருந்து 1943-இல் வெளியாகிய பகவத் கீதை [THE BHAGAVAD GITA- THE SONG DIVINE] நூலின் உள்முகப்பு முதற்பக்கத்திலேயே பகவத் கீதையை'ஒழுக்கங்கெட்ட கீழ்மாக்களுக்கும் பிறந்த கீழ்மகன் - வியாசனால் உளறப்பட்ட உளறல்கள் - என்றே தம் கைப்பட எழுதி, இப்படிக்கு அண்ணல் தங்கோ என கையொப்பமிட்டுள்ளார் என்பதே - அவர் வடவர் ஆதிக்கத்தை வேரோடு சாய்க்க வேண்டும் என செயலாற்றியவர் என உறுதியாகிறது.

1961-ல் குடியியல் கணக்கெடுப்பின் போது, தமிழர்கள் தங்களைத் 'திராவிடர்கள்' எனக் குறிப்பிடாமல், தமிழ்நாட்டுத் தமிழர் அனைவரும் 'தமிழர்'எனப் பதிவு செய்ய வேண்டும் எனக் கட்டளை விதித்ததோடு, "தமிழர்கள் அனைவரும் தம்மைத் தமிழர் எனவும், தம் சமயம் திருக்குறள் அறம் என்றும், தமது கடவுள் திருவள்ளுவர் உணர்த்தும் அன்புருவாகிய ஒரே கடவுள் என்றும் தமக்கும் ஆரியத்துக்கும் - இந்து சமயத்திற்கும் பகவத் கீதை - வேதம் முதலியவற்றுக்கும் யாவும் தொடர்பு இல்லை என்று குறிக்குமாறு செய்தல் வேண்டும்! - என்ற வேண்டுதலை, திருவள்ளுவர் பெருமானைத் தலைவராகக் கொண்டுள்ள உலகத் தமிழ் மக்கள் தற்காப்புப் பேரவை"யின் சார்பில் கட்டளை யாகவே தெரிவித்தார் என்பது காலப் பதிவு.

அண்ணல் தங்கோ எழுதிய'பராசக்தி'திரைப்படத்தின் இறுதிப்பாடலான,

எல்லோரும் வாழவேண்டும்!
உயிர்கள் இன்புற்றிருக்க வேண்டும் !
அதில் மேலும்
இல்லாதாரைப் படைத்தான் ! என்றொருவன்
இருந்தால் அழியட் டுமே !
'இல்லார்கள்! உள்ளார் ! - என்று - முத்தம்மா
ஏனிந்த வேற்றுமை கள் ?

என்று வெகுண்டெழுந்து எழுதி, நம் கருத்தை வெளிப்படுத்தினார்.

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின்! பரத்து
கெடுக! உலகி யற்றியான்! -திருக்குறள் 1062

பிச்சையெடுத்து, தன் வயிற்றை வளர்க்கவேண்டிய இழிந்த முறையினைக் கைகொண்டுத் திரிந்து அலைந்து நிலையில், இந்த உலகை ஆக்கியவன் மக்களால் துரத்தியடிக்கப்பட்டு ஒழிக்கப்படுவானாக !

என்று வயி றெரிந்து - அறைந்தார்
எங்கள் திருவள்ளுவர் !
அன்றே இரண்டாயிரத் - தைந்நூறு
ஆண்டுகளுக்கு முன்னே !
இன்று காரல் மார்க்சு - சொன்னாரென
ஏந்திப் புகழ்ந்திடுவார் !
நன்றியிலாத் தமிழர் ! தமிழ்நூல்
நாகரிகம் மறந் தோர் !

என இடித்துரைப்பதோடு, திருக்குறளே நம் தேசிய நூலென அறிவிக்க வேண்டும் எனப் போராட முன்னிற்கிறார்.

அண்ணலின் தமிழர் முன்னேற்றத் திருவாய் மொழிகள் - தலைப்பில் திருக்குறள் - அறம் ஓங்குக!

என்றே முழக்கமிட அறை கூவலிடுகிறார்.

மேற்படி அண்ணல் தங்கோ அவர்கள் எழுதியிருந்த நூல்களிலிருந்துதான், சில பகுதிகளை மட்டுமே எடுத்து பயன்படுத்தப்பட்டுள்ளன.

'திருக்குறளும் அண்ணல் தங்கோவும்'எனும் தலைப்பில் ஒரு புத்தகமே எழுதுமளவிற்கு அவரின் வாழ்வை அவர் அமைத்துக்கொண்டார் என்பதை மற்றொரு எடுத்துக்காட்டாக அவர் எழுதியுள்ள'அண்ணல் முத்தம்மாள் பாடல்'நூலில், அவர் குறிப்பிட்டுள்ளதை அப்படியே கீழே தருகிறோம்.

'திருக்குறள் முத்தம்மாள் பாட்டு'என இந்நூலின் தொடராக'அறத்துப்பால், பொருட்பால், இன்பப்பால்'ஆகிய முப்பால் அறிவு மலர்கள் - மூன்று திருக்குறள் முத்தம்மாள் பாட்டு ஏடுகள் வெளிவரும். ஆகவே இவ்வேடு அவற்றின் முரசொலியாக,முன்னறிவுப்புரை - மலராக'அண்ணல் முத்தம்மாள் பாட்டு'எனும் பெயரால் முதலாவதாக ஒலிக்கின்றது, மலர்கின்றது.

'திருக்குறள் முத்தம்மாள் பாட்டு'க்கு எடுத்துக்காட்டுப் பாக்கள் வருமாறு:
**அறம்** :
அகரம் முதலாகும் - மொழிகள்
அத்துணைக்கும் ! அது போல்
பகவன் எனும் இறைவன் ! முத்தம்மாள்!
பாரின் முதல்வனடி!.

**பொருள்**:
வெள்ளத் தனையதடி ! முத்தம்மாள் !
மேவும் மலர் நீட்டம்!
உள்ளத் தனையதடி ! மக்கள்தாம்
உயர்வதும் தாழ்வதுமே !

**இன்பம்:**
'கண்டுகேட்டுண்டுயிர்த்து- உற்றுணர்
காட்சி சேர் இன்பம் ஐந்தும் !
பெண்ணிடம் பெறலாமடி! முத்தம்மா!
பெண்மையின் உண்மை கண்டால்.
- என திருக்குறள் அறத்தை உயர்த்திப் பிடிக்கிறார் அண்ணல்தங்கோ.

அண்ணல்தங்கோவின் நினைவைப் போற்றுவோம்! அவரின் வருணாசிரமத்திற்கு எதிரான போராட்டத்தை, அடுத்த தலைமுறைக்குக் கொண்டு சேர்ப்பதே, அவருக்கு தமிழ்ச்சமூகம் ஆற்றும் நன்றியாம்.

## பட்டிமன்ற வரலாறு 5

# நல்லாத்தான் இருப்பாரா இந்த நடராசன் செட்டியாரு?

## - பேராசிரியர் கண.சிற்சபேசன்



தேனிமலை என்றொரு சிற்றூர் செட்டிநாட்டுப் பகுதியில் உண்டு. அங்குள்ள சிறுகுன்றில் முருகன் கோவில் ஒன்று இன்றும் அழகுற அமைந்துள்ளது.

அவ்வூரில் வாழ்ந்துவந்த செல்வர் ஒருவர் மறைந்த அவரது மனைவியாரின் நினைவாக ஒரு நினைவிடக்கோயிலையேக் கட்டியிருந்தார். அந்த அம்மையார் மறைந்த நாளில் ஒவ்வொரு ஆண்டும் அங்கு சிறப்பு வழிபாடுகள் செய்து அனைவருக்கும் மாலையும் இரவும் விருந்து அளித்து வந்தார்.

என்னுடன் பணியாற்றிய ஆசிரியர் கவிஞர் கதி.சுந்தரம் அந்தச் செல்வருக்கு உற்ற தோழர். இவரது அறிவுரையின்படி பெரியவர் ஆண்டுதோறும் மாலைத் தேனீருக்கும் இரவு உணவுக்கும் இடைப்பட்ட நேரத்தில் ஒரு பட்டிமன்ற நிகழ்ச்சி நடத்த இசைவு தந்து அந்தப் பொறுப்பையும் கவிஞர் கதி.சுந்தரத்திடமே விடுத்தார்.

கவிஞர் கதி.சுந்தரம் ஆண்டுதோறும் பட்டிமன்ற நிகழ்ச்சியை என்னை நடுவராக வைத்து அமைப்பார்.

ஒரு ஆண்டு எங்களுக்கு ஒரு விந்தையான அனுபவம். பட்டிமன்றப் பொருள்: "குறள் நெறியில் குடும்ப நன்மையில் பெரும் பொறுப்பு கணவனுக்கா? மனைவிக்கா?" என்பது.

'கணவனுக்கே' என்ற அணிக்கு மதுரை வெள்ளைச்சாமி நாடார் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிய பேராசிரியர் சொல்விளங்கும் பெருமாள் தலைமை. 'மனைவிக்கே' என்ற அணிக்கு மதுரை ஃபாத்திமா மகளிர் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிய அவரது துணைவியார் பேராசிரியை சக்திப்பெருமாள் தலைமை. கேட்க வந்த ஊர்மக்களுக்கு ஒரே கொண்டாட்டம். அதை ஒரு இலக்கியப் பட்டிமன்றம் என்று கருதாமல் ஒரு குடும்பச்சண்டை என்றே கருதிவிட்டனர்.

ஆனால் நாங்கள் எப்போதும் நமது இலக்கியங்களை மேற்கோள் காட்டித்தான் எங்களது வழக்குகளை வைப்போம்.

திருவள்ளுவர் முதல் பாரதியார் வரை ஆண்பாலார் ஆற்றலையும் பெண்ணின் பெருமையையும் பேசிய திறத்தைச் சொல்லித் திறம்படப் பேசினர் இரு அணியினரும்.

பெண்ணின் பெருமை பேசிய சக்திப் பெருமாள் நடுவராகிய என்னை பார்த்து இப்படிக் கேட்டார்: "நடுவர் அவர்களே எதிர் அணித்தலைவருக்கு 'வாழ்க்கைத்துணை' நலம் என்று பெண்ணைத்தான் வள்ளுவப் பேராசான் சொல்லியிருக்கிறார் என்பது தெரியுமா? என்று கேட்டுச் சொல்லுங்கள்".

உடனே நான் கைகளை அவரை நோக்கிக் கூப்பி 'சரி தாயே' என்று சொல்லிவிட்டு "பெருமாள்! பெரும் ஆளே! உங்களுக்கு அது தெரியுமா?" என்று கேட்டேன். பெருமாள் எழுந்து "எது?" எண்று திருப்பிக்கேட்டார்.

"அதுதான் அது"? என்று கேட்டேன்.

"எது" என்று அவர் கேட்க ஏதோ ஊடல்கொண்ட கணவன் மனைவிக்கிடையே சிக்கித் தவிக்கும் குழந்தைபோல நான் விழிக்க ஒரே கூத்து. ஒரே சக்திக்கூத்து

பிறகுதான் சக்தி பெருமாள் தனது கற்றறிவைக் காட்டினார்கள்.

என்னைப்பார்த்து "நடுவர் அவர்களே

"'மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்ற குறளுக்குப் பரிமேலகர் எழுதிய உரையை நான் வீட்டில் பாடம் சொன்னேனே அதாவது நினைவிருக்கிறதா அவருக்கு என்று கேட்டுச் சொல்லுங்கள்" என்றார்.

இப்போது பெருமாளைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு என் தலையில் விழுந்தது. நான் சொன்னேன் "அவருக்கு இப்போது நினைவில்லையாம், கொஞ்சம் சொல்லுங்களேன் நாங்களும் கேட்டுத் தெரிந்து கொள்கிறோம்" என்றேன்.

"சொல்லுகிறேன் கேட்டுக்கொள்ளுங்கள்" என்று கூறிப் பரிமேலழகர் உரையை அப்படியே சொல்ல கைதட்டல் விண்ணை எட்டியது. அவர் எடுத்துக்காட்டிய பரிமேலழகர் உரை: ஒரு பெண் நற்குணங்களும் நற்செயல்களும் கொண்டவளாக இருக்கவேண்டும். நற்குணங்களாவன துறந்தவரைப் பேணலும், விருந்து அயர்தலும், வறியவர்களிடத்து அருளுடமையும் ஆம். அதேபோல நற்செய்கைகளாவன வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டில் தொழில் வன்மையும் ஒப்புரவு செய்தலும் முதலாயின" என்ற பரிமேலழகர் உரையை அப்படியே சொல்லி முடித்தார் சக்தி அவர்கள்.

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்ற திருக்குறளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய கற்புடைத் தெய்வமாகிய கண்ணகியின் வாழ்க்கையை மனமுருக எடுத்துக்கூறி அவளது கணவனது போற்றா ஒழுக்கத்தையும் பொறுத்துக்கொண்டு கடைசியில் இருவரும் மதுரைக்கு வந்ததற்கு ஏதோ அவள்தான் காரணம் என்பதுபோல" எழுக என எழுந்தாய், என் செய்தனை" என்று அவன் அறிவில்லாமல் கேட்டபோது "ஒரு பெண்ணுக்குரிய துறவோர்ப் பேணலும், விருந்து எதிர்கொள்ளலுமாகிய இல்லறக் காரியங்களைத் தான் செய்யமுடியாமல் செய்தவன் அவன் என்பதை இடித்துக்கூறியதோடு "போற்றா ஒழுக்கம் புரிந்தீர், யாவதும் மாற்றா உள்ள வாழ்க்கையேன் ஆதலின் ஏற்று எழுந்தனன்" என்று கூறினாள் என்று எடுத்துக் காட்டி கண்ணகியாகவே பொங்கி எழுந்த சக்தி பெருமாள் தனது கணவர் பெருமாளைப் பார்த்து மதுரையோடு போதுமா? இல்லை இலங்கை சென்று சீதையையும் அழைத்து வரவா? என்று கேட்டு முடித்தார். "வேண்டாம் கண்ணகியே போதும்" என்று கூட்டத்திலிருந்து ஒரு குழந்தை

இட்ட கூச்சல் சிலப்பதிகாரத்தில் 'இவ்வூர் எரியுண்ணும்' என்று வானில் கேட்ட ஒலியை எனக்கு நினைவூட்டியது

அடுத்து எழுந்த சொல்விளங்கும் பெருமாள். 'ஊம்' என்று பெரிதாகக் கனைத்துக்கொண்டு "பரிதாபம் மிக்க நடுவர் அவர்களே! எதிர் அணித்தலைவர் பாவம், அறியாமல் பேசிவிட்டார், அவரை மன்னிக்கும்படி வேண்டுகிறேன். ஏனென்றால் ஆடவர்களது பெருமை அறியாமல் பேசிவிட்டார். 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன" அதாவது பெருமையும் வீரமாகிய உரமும் எல்லாம் ஆடவர்க்கே உண்டு என்ற தொல்காப்பியத்தை நான் பாடம் சொல்லிக் கொடுத்ததை அவர் அறவே மறந்துவிட்டார்" என்று அவர் தாக்கியபோது மக்களின் ஆரவாரம் வானம் தொட்டது.

வினையே ஆடவர்க்குயிரே என்பதையும் இல்லுறை மகளிர்க்கு ஆடவரே உயிர் என்ற உலக நடையும் அவரது கண்களுக்குத் தெரியவில்லை. பொதுவாகவே அவருக்குக் கண் சரியாகத் தெரியாமல் நேற்றுத்தான் நான் கண்மருத்துவரிடம் அழைத்துச் சென்றுவந்தேன். பாருங்கள் கண்ணாடிகூடப் புதிது" என்று சொன்னவர் தொடர்ந்தார்.

நடுவர் அவர்களே எதிர் அணித்தலைவரின் கவனத்திற்கும் உங்களின் மேலான கவனத்திற்கும் பட்டிமன்றப் பொருளை நினைவு படுத்துக் கடமைப்பட்டிருக்கிறேன். "குறள் நெறியின்படி குடும்ப நன்மையில் பெரும் பொறுப்பு கணவனுக்கா? மனைவிக்கா?" என்பதே பட்டிமன்றப் பொருள். குடும்ப நன்மை என்றால் நாம் ஈட்டுகின்ற பொருளின் தன்மையைப் பொறுத்ததுதானே.

அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்
இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு

என்று வள்ளுவர் சொல்வதுபோல ஒரு குடும்பத்தில் கணவன் தானே பொருள் ஈட்டுகிறான். அப்படியே குடும்பத் தலைவிதான் அந்தப் பொறுப்பு உடையவள் என்று வைத்துக்கொண்டாலும் அவளையும் சேர்த்துக் காக்கும் பொறுப்பு உடையவன் வீட்டுத் தலைவன்தானே. என்று கூறிவிட்டு கடைசியாக கண்ணகியைப் பற்றி இப்படிப் பேசினார். பாவம் கோவலனே மதுரைக்கு வந்ததற்குக் குழம்பிக் கிடக்கிறான். ஏதோ புகாரில் அப்படி இப்படி இருந்தான் என்று அவன் மீது புகார் இருந்தாலும் மதுரைக்கு வந்து நல்வாழ்க்கை வாழ நினைத்து வந்திருக்கிறான். அதற்காகக் குழம்பியும் நொந்தும் கிடப்பவனை மேலும் நோகடிப்பது போல வேலெறிந்த புண்ணில் தீயை நுழைப்பது போல "போற்றா ஒழுக்கம் புரிந்தீர்" என்று சொல்வதுதான் பெண்மைக்கு அழகா? அழகான நடுவராகிய நீங்கள்தான் நல்ல தீர்ப்பாக வழங்கவேண்டும்" என்று சொல்லி முடித்தார். .

இவ்வாறு இரு கட்சியின் வழக்குகளையும் கேட்ட நான்

"மனைமாட்சி இல்லாள் கண் இல்லாயின் வாழ்க்கை
எனை மாட்சியித்தாயினும் இல்" என்ற திருக்குறளை எடுத்துக்காட்டி இல்லாள் என்று சொல்லுக்கு எதிராக இல்லான் என்று சொன்னால் எவ்வளவு விபரீதம் என்று கேட்டதுடன்

"தற்காத்துத் தற்கொண்டான் பேணி தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

உண்மை.திரைக்கலைஞர்களைப் போற்றிக் கொண்டாடும் நாட்டில் தமிழறிஞர்களுக்கு மதிப்பு ஏது?

காலத்தால் அழியாத அவரது ஆய்வுநூல்களைக் கருவூலமாகப் போற்றுவதுடன் அவர் ஆய்வுநெறியில் தொடர்ந்து உழைத்துத் தமிழின் மாண்பை உலகம் போற்றிட ஆவன செய்வதே அவருக்குச் செலுத்தும் நன்றிக்கடனாக விளங்கும்.

அவரது நூல்கள் பட்டியல்:
குமரிக் கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு
தென்னாட்டுப் போர்க்களங்கள்
ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் (மொழிபெயர்ப்பு)
கிருஷ்ணதேவ ராயர்
வெற்றித் திருநகர்

காற்றும் மழையும் (நாடகம்) (சிலம்பு நாடக மன்றத்தால் சென்னை ஒற்றைவாடை தியேட்டரில் அண்ணாதுரை தலைமையில் 22-4-56ஆம் நாள் அரங்கேற்றப்பட்டது)

சரித்திரம் பேசுகிறது
மருதூர் மாணிக்கம்
தென்னாடு

கிருட்டிண தேவராயர், நேதாசி சுபாசு சந்திரபோசு, டேவிட் லிவிங்சுடன், அரியநாத முதலியார், கலையுலக மன்னன் இரவிவர்மா, வின்சுடன் சர்ச்சில், அறிவியல் முனைவர் ஐன்ஸ்டீன், அறிவுலக மேதை பெர்னாட்சா, கன்னட நாட்டின் போர்வாள் ஐதர் அலி ஆகிய வரலாற்று நூல்களுடன் ஆங்கிலப் புலவர் வரலாறு, சங்க காலப் புலவர் வரலாறு, அறிவியலாளர் பெஞ்சமின் பிராங்கிளின் உள்பட பலரின் வாழ்க்கை வரலாறுகளை அரிய பல நூல்களாகப் படைத்துள்ளார்.

மேலும் சங்க காலப் புலவர்களில் பிசிராந்தையார், கோவூர்கிழார், ஔவையார், பெருந்தலைச் சாத்தனார் முதலிய நால்வர் பற்றியும் எழுதியுள்ளார் அப்பாதுரையார். அலெக்ஸாண்டர், சந்திரகுப்தர், சாணக்கியர் ஆகிய மூவரைப் பற்றி ஏ.எசு.பி. ஐயர் எழுதிய நூலை மொழிபெயர்த்துத் தந்துள்ளார்.

இளைஞர்கள் பயிலும் பாடநூல்களுக்காகவே, அருந்திறலாளர்கள் பலரின் வாழ்க்கை வரலாறுகளை எழுதிக் குவித்துள்ளார்.

எந்தப் பல்கலைக்கழகமும் செய்திராத அரும்பணிகள் பலவற்றைத் தமது நூல்வெளியீடு, ஆய்வுப்பணி, மொழிபெயர்ப்புப் பணி, சொல்லாக்கப்பணி ஆகியவற்றின் மூலம் ஆற்றியுள்ள பேரறிஞர் கா. அப்பாத்துரையார் பற்றிச் சுருங்கச் சொன்னாலே அஃது விரிந்த நூலாகிவிடும். அவரைப் பற்றிய பாவேந்தர் பாரதிதாசனாரின் பாடலைக் குறிப்பிட்டு இக் கட்டுரையை நிறைவுசெய்ய விரும்புகிறேன்.

“எப்பாத் துறைக்கும் இவனோர் பழம் புலவன்
அப்பாத் துரையறிஞன் ஆழ்ந்தகன்ற முப்பால்பா
நூலறிவு நூறு புலவர்கள் சேரினியன்
காலறிவு காணார் கனிந்து”

குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 10 | வைகாசி 18, தி.பி 2052 | சூன் 1, கி.பி 2021





## திருக்குறள் ஆய்வுப்பேரொளி

## அறிஞர் க.த.திருநாவுக்கரசு

(உள்ளே)

# அறிஞர் க. த. திருநாவுக்கரசு

*முனைவர் க. த. திருநாவுக்கரசு அவர்கள் குறுகிய காலமே வாழ்ந்தாலும் (1931-1989) காலவெள்ளத்தை எதிர்த்து நிலைபெறக் கூடிய பல ஆய்வு நூல்களைத் தமிழுலகுக்கு வழங்கியவர். இவர் தமிழ்ப் பேராசிரியர், தமிழ் எழுத்தாளர், அறிஞர், திறனாய்வாளர், மொழிபெயர்ப்பாளர் என்னும் பன்முகப்பாங்கான ஆளுமைவீறு பெற்றுப் புகழோங்கிய பெருந்தகை ஆவார்.மேலும் இவர் போன்று வரலாறு, கல்வெட்டு, மொழியியல், சமூகவியல், மானிடவியல், தத்துவம் போன்ற பல்வேறுபட்ட அறிதுறைகளில் புலமை பெற்ற பல்துறை அறிஞர்களை இன்று காணவியலவில்லையே?*

## திருக்குறள் நீதி இலக்கியம்

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பட்டை தீட்டப்பட்ட வைரங்களில் இவரும் ஒருவர்.முனைவர் மு. வரதராசனாரின் படைப்பிலக்கியங்களை ஆய்வுசெய்து முனைவர் பட்டம் பெற்றவர். இவருக்கு சாகித்திய அக்காதெமி நிறுவனம் 'திருக்குறள் மணி' என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டியது. 1974ல் இவர் எழுதிய "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் தலைசிறந்த ஒப்பிலக்கிய ஆய்வுநூலுக்கு சாகித்திய அகாதமி விருது வழங்கித் தன் பெருமையைத் தக்கவைத்துக்கொண்டது.

"திருக்குறள், மனிதன் ஒவ்வொருவனும் அடைய வேண்டிய குறிக்கோள் மட்டும் நன்மை பயப்பதாக இருந்தால் போதாது; அதை அடைவதற்கு அவன்மேற்கொள்ளும் செயல்முறைகளும் தூய்மையானவையாகவும் சிறந்தனவாகவும் இருத்தல் வேண்டும் என்பதை வற்புறுத்தும் ஒப்புயவர்வற்ற நூலாகும்." என்று திருக்குறளின் தனித்தன்மையை விளக்கும் திருக்குறள் மணி க.த. திருநாவுக்கரசு மனுதரும சாத்திரத்துக்கும் திருக்குறளுக்குமிடையேயான வேறுபாட்டைப் பின்வருமாறு அறுதியிட்டுரைக்கிறார்.

"தனது உயிரைக் காக்கவும் தன்னைச் சார்ந்தவர்கள் உயிரைக் காக்கவும் வன்முறைச் செயல்களில் ஒருவன் ஈடுபடலாம்" (8: 347350) எனவும், மூன்று நாள்கள் பட்டினி கிடப்பவன் மறுநாளைக்கும் அதே நிலைதான் என்பதை அறிந்தால், அவன் திருடலாம்" (11:16) எனவும் மனுஉரிமை அளிக்கின்றார். ஆனால், திருவள்ளுவரோ, "தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ மன்னுயிர்க்கு இன்னா செயல்?' என வினவுவதோடு நிற்காமல், "ஈன்றாள் பசி காண்பான் ஆயினும்செய்யற்க. சான்றோர் பழிக்கும் வினை' என அறிவுறுத்துகின்றார். இத்தகைய அடிப்படைக் கொள்கை வேறுபாடுகள் திருக்குறளுக்கும் மனுதரும சாத்திரத்திற்கும் இடையே நிறைய உள்ளன" (திருக்குறள் மணி க.த.திருநாவுக்கரசு:திருக்குறளும் இந்திய அறநூல்களும்: பக்கம்.60)

இவர் எழுதிய திருக்குறள் நீதி இலக்கியம் என்னும் தலைசிறந்த ஒப்பிலக்கிய ஆய்வுநூலைப் பற்றி எழுதத் தொடங்கினால் அதுவே தனியொரு நூலாக விரிந்துவிடும். எனவே சுருக்கமாக அந் நூல் பற்றிய அறிமுகத்தைக் காணலாம்.

நூலின் தொடக்கப்பகுதியில் "அறம்" என்பதற்கு இவர் வழங்கும் விளக்கம் மிகவும் குறிப்பிடத்தக்கது.

"அறம் என்றால் என்ன? என்ற வினா எழுப்பினால் அதற்கு விடை காண்பது கடினமானது. அறம் என்ற சொல்லின் பொருள் என்ன? 'அறு' என்ற வினைச்சொல் அடியாகப் பிறந்ததே 'அறம்' என்னும் சொல். இச்சொல்லுக்கு அறுத்துச் செல், வழியை உண்டாக்கு, உருவாக்கு, துண்டி, வேறுபடுத்து என்ற பலவகைப் பொருள்கள் வழங்கி வருகின்றன. இத்தகைய சொல் ஆராய்ச்சியின் அடிப்படையில் அறம் என்னும் சொல்லிற்குப் பின்வருமாறு விளக்கம் கூறலாம்.

மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியே - முழுநிறை வடிவமே அறம் என்று கூறுவர். 'பிறவிதோறும் மனிதனைப் பற்றிக் கொண்டு வரும் தீவினையை அறுத்தெறிவதே அறம்' என்ற ஆன்மீக விளக்கமும் இதற்குத் தரப்படுவதுண்டு". (திருக்குறள் - நீதி இலக்கியம் - பக் 23)

கிரேக்க, உரோமானிய, சீன, வடமொழி மெய்ப்பொருள்நூல்களுக்கும் திருக்குறளுக்குமிடையேயான வேறுபாட்டை விரிவாக இந் நூலில் விளக்கியுள்ளார்.

## சமற்கிருதமயம் - ஆதிக்கம் குறித்து டாக்டர் க.த. திருநாவுக்கரசு உரை

பெரியார் திறந்தநிலைப் பல்கலைக் கழகம் 9-3-1985, 10-3-1985 ஆகிய இருநாள்களிலும் சென்னையில் அறிஞர் பெருமக்கள் பங்குபெற்ற சமற்கிருதமயம் - ஆதிக்கம் (Sanskritisation) பற்றிய ஒரு கருத்தரங்கத்தை நடத்தியது. சமற்கிருத மயமாக்கப்பட்டமை எனும் பொருள் பற்றிய கருத்தரங்கில், டாக்டர் க.த. திருநாவுக்கரசு ஆற்றிய உரை ஆய்வாளர்களுக்குப் புதிய தெளிவை ஏற்படுத்தும்வகையில் அமைந்தது. அதுவரை மானிடவியல் ஆய்வில் மருட்சி ஏற்படுத்திக்கொண்டிருந்த "சமற்கிருதமயமாக்கல்" "பெரிய மரபு" "சிறிய மரபு" என்னும் மாயச்சொல்வழக்குகளின் பொருந்தாப் பண்பையும் போலித்தனத்தையும் போட்டுடைக்கும்வகையில் க.த.தி. அவர்களின் ஆய்வுரை விளங்கியது.

இன்றைய காலச்சூழலுக்குத்தேவையான கட்டுரை என்பதாலும் அதன் செறிவும் சுருக்கமும் கருதியும் விடுதலை நாளிதழில் வெளியிடப்பெற்ற அக் கட்டுரையை அப்படியே வழங்கியுள்ளேன்.

இந்திய நாட்டில் பல்வேறு வகைப் பண்பாடுகள் உள்ளன. பண்பாடு என்பதனை எளிதில் விளக்க இயலாது. அறிவுத் துறைகள் பலவற்றிலும், எது பண்பாடு? எனும் வினாவிற்கு வெவ்வேறு வகையான விளக்கங்கள் தரப் பட்டுள்ளன. எனினும், எல்லாத் துறைகளுக்கும் பொருந்தக் கூடிய ஒரு பொதுவான விளக்கத்தைத் தருவதற்கு முயலலாம்.

### பண்பாடு

இக்காலத்தில் வரலாறு என்பது, ஓர் இனத்தின்-நாட்டின்- நாகரிகத்தினை விளக்குவதாக, பண்பாட்டினைப் படம்பிடித் துக் காட்டுவதாக அமைய வேண்டும் என்று வரலாற்றுப் பேரறிஞர் அர்னால்டு டாயின்பி மொழிந்துள்ளார். இங்கே சுட்டப்பட்டும் இரு சொற்களின் பொருளைப் புரிந்து கொள்ளுவோமானால், நம்முடைய நோக்கத்தை நன்கு வெளிப்படுத்த இயலும்.

உலக வாழ்க்கையில்-புறவாழ்வில் மனிதன் அடைகின்ற வியத்தகு முன்னேற்றங்கள், பெறுகின்ற பேறுகள் போற்றிப் பின்பற்றப்படுகின்ற நாள் வண்ணம், இன்பம் தரும் பகட்டு மிகு வாழ்க்கை வசதிகள் போன்ற யாவும் நாகரிகத்தின் கூறுகள் ஆகும்.

வாழ்க்கையில், மனிதன் முழு நிறைவை அடைவதற்கு முயலும் முயற்சியின் பயனாக அமைவது பண்பாடு. முழு நிறைவான வாழ்க்கை இனிமையும், ஒளியும் உடையதாக அமையும். முழு நிறைவான வாழ்க்கையைப் பெற மனிதர் கள் ஒன்றாகக் கூடி வாழ்வதால் உருவாகும் சமூக அமைப்பு களின் இயல்புகளாக அமைவது பண்பாடு. சமூகங்கள் பல சேர்ந்து ஒரு சமுதாயமாகப் பின்னிப் பிணைந்து இயங்கும்பொழுது, உருவாகும் வாழ்க்கை நெறி, பழக்க வழக்கங்கள், கலையுணர்வு, ஆட்சி அமைப்புகள், சிந்தனை முதிர்ச்சி ஆகிய அனைத்தும் இணைந்து ஒருவகைச் சமுதாய சிந்தனையாக வெளிப்படுவதே பண்பாடு எனலாம்.

இந்த வரையறையைக் கருத்தில் கொண்டு, தமிழ் நாட்டின் அரசியல் அமைப்புகள், வாழ்வியல், சமூக நிலை, சமயவுணர்வு, கலை வளர்ச்சி போன்றவற்றை மதிப்பிடுவதே இந்த ஆய்வரங்கின் நோக்கமாகும்.

## சமற்கிருத மயமாக்குதல்

கடந்த இருபது ஆண்டுகளாக, இந்திய அறிவரங்கில், சமற்கிருத மயமாக்குதல் எனும் தொடரைப் பலர் பயன்படுத்துவதை அடிக்கடி நாம் கேள்வியுறுகிறோம். சமற்கிருத மயமாக்குதல் என்பதற்கு என்ன பொருள்? இந்தப் பாரத நாட்டில் எல்லாவற்றையும் சமஸ்கிருத மொழி வழிப்பட்ட பண்பாட்டின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வருவதற்கு மேற்கொள்ளப்படும் முயற்சிகளுக்கு, மானிட இயல் (Anthropology) அறிஞர்கள் சூட்டியுள்ள புதுமைப் பெயரே சமஸ்கிருத மயமாக்குதல் என்பதாகும்.

இந்தியாவில் சமற்கிருத மொழி வழிப்பட்ட நாகரிகமும் பண்பாடுமே சிறந்தவை. மற்ற மொழி வழிப்பட்ட பண்பாடு கள் எல்லாம் காட்டுவாழ் மக்களின் வாழ்க்கை நெறிகள். அவை யாவும் மட்டமானவை; கடுமையும் கொடுமையும் நிறைந்தவை; அவற்றில் உயர்ந்த சிந்தனைக்கும், கவர்ச்சிமிகு கலைகளின் வளர்ச்சிக்கும் இடமே கிடையாது எனும் எண்ணப்போக்கின் அடிப்படையில் எழுந்ததே இக்கருது கோளாகும்.

எனவே, இந்தியப் பண்பாட்டின் தலையூற்றாய் விளங்குவது சமஸ்கிருத மொழிவழிப்பட்ட பண்பாடு. அதனுடைய தாக்கத்தினாலேயே, இந்தியா முழுமையும் நாகரிகமும், பண்பாடும் வளர்ச்சியுறத் தொடங்கியதுஎனும் கருத்தை நிலைநாட்ட முயலுவதே சமற்கிருத மயமாக்குதலின் அடிப் படை நோக்கமாகும்.

கிரேக்கர்கள் பண்டைக்காலத்தில், தாங்கள்தான் உலகி லேயே நாகரிகம் அடைந்தவர்கள்; மற்றவர்கள் எல்லாம் காட்டுமிராண்டிகள் என்று கூறினர். இதைப் போன்றே, சமற்கிருத மொழிப் பண்பாட்டாளர்கள், மற்றவர்களை மிலேச்சர்கள் எனும் சொல்லால் சுட்டினர்.

மிலேச்சர்களையும், காட்டுமிராண்டிகளையும் நாகரிகம் அடையச் செய்ததையே சமற்கிருத மயமாக்குதல் எனும் தொடரால், இக்கால அறிஞர்கள் சுட்டுகின்றனர்.

இதனால், புலனாவது யாது? சமற்கிருத மொழிவழிப்பட்ட பண்பாட்டை உடையவர்களே, உலகிற்கு - சிறப்பாக இந்தி யாவிற்கு நாகரீக ஒளியைக் கொண்டுவந்து புகுத்தியவர்கள்; சமற்கிருத மொழியாளர் இந்தியாவிற்கு வராமல் போய் இருந்தால், இந்தியா இன்னும் காட்டுமிராண்டிகளின் நாடாகவே இருந்திருக்கும் எனும் தன்முனைப்பு வாய்ந்த எண்ணப்போக்கை வெளிப்படுத்துகிறது.

## ஆரிய மயம்

சென்ற நூற்றாண்டு முதல் இந்த நூற்றாண்டின் இடைப் பகுதி முடிய, உலக அறிஞர்களின் சிந்தனையில் ஆரிய மயமாக்குதல் (Aryanization) எனும் கருத்து நிலை வீறுடன் விளங்கியது.

உலக வரலாற்றில் சிறந்தவை, உயர்ந்தவை, போற்றத் தக்கவை, முன்னேற்றத்திற்கு வழிகாட்டுபவை எனக் கருதப்பட்ட நாகரிகப் பண்பாட்டுக் கூறுகள் அனைத்துமே ஆரியருக்கு உரியவை என்று நம்பப்பட்டது. இதனால், எல்லாரும் இந்தியப் பண்பாட்டை, ஆரியப் பண்பாடு எனவும், இசுலாமியர் வருகைக்கு முற்பட்ட இந்திய அரசுக ளையும், ஆட்சிகளையும் ஆரியரின் ஆட்சி (Aryan Rule) என்றே குறிப்பிட்டனர். இதைத்தான், அறிஞர் அண்ணா அவர்கள் ஆரிய மாயை எனும் பெயரால் அழைத்தார்.

இந்திய வரலாற்றின் தொடக்கக் காலத்தில் ஆரியரும், ஆரியர் அல்லாதவரும் பேரளவிற்குக் கலந்து உறவாடியதன் மூலம், புதியதொரு பண்பாட்டினை உருவாக்கினர் என்ப தில் யாருக்கும் அய்யம் இருக்காது. ஆனால், அந்தக் கலப்பின் விளைவாக உருவான புதிய பண்பாட்டில் உள்ள முனைப்பான தலைமைக் கூறுகள் யாவும், ஆரியருக்கு உரியனவாகும்; அவர்களுடைய மொழியே காட்டுமிராண்டி மொழிகளாக இருந்து வந்த பழங்குடி மக்களின் மொழிகளை அழித்து, அவற்றின் இடத்தைப் பிடித்துக் கொண்டது; அல்லது அவற்றை எழுத்து வடிவம் பெற்று, இலக்கிய வளர்ச்சி அடையுமாறு செய்தது! என்பது பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரின் கருத்தாகும்.

இந்நிலையில், ஆரிய மயமாக்குதல் எனும் பெயரினை ஏன் கைவிட்டுவிட்டு, சமற்கிருத மயமாக்குதல் எனும் புதிய திருப்பெயரை அறிமுகப்படுத்தினார்கள்? எனும் எண்ணம் எழுவது இயல்பாகும். இதற்கு இரு காரணங்கள் உள்ளன. ஒன்று, இரண்டாவது உலகப் போரினால் மனித இனம் பட்ட அல்லலாகும். ஆரியர்களே உலகில் ஆளப் பிறந்தவர்கள்? எனும் இட்லரின் (Hitler) இனவெறியே, அப்போர் உண்டா வதற்கு மூலகாரணம் என்பதை யாவரும் உணர்ந்தனர். இதனால் யுனெஸ்கோ (UNESCO) நிறுவப்பட்டதும், உலகின் பல பகுதிகளில், இனம் என்பது ஒரு பொய்க்கதை (Race is a myth) எனும் பொருள்பற்றி மாநாடுகளும், கருத்தரங்குகளும் நடத்தப்பட்டன. இவற்றின் முடிவாக, உலகில் எங்குமே கலப்பற்ற-தூய்மையான-இனம் ஒன்று கூட இன்று இல்லை என்று அறிஞர்கள் முழங்கினர்.

மற்றொரு காரணம் தமிழ்நாட்டில் திராவிட இயக்கம் தோன்றியமையாகும். இந்த இயக்கத்தின் நோக்கையும் போக்கையும் கண்டு, உள்ளார்ந்த தன்னல நோக்கம் கொண்டவர்கள் அஞ்சினர். இதனால் ஆரியராவது-திராவிடராவது? எனும் கருத்தைப் பரப்பத் தொடங்கினர். பிராமணர்கள் ஆரியர் அல்லர்; தமிழர்களே எனும் கருத்தைப் பரப்ப முயன்றனர்.

இதன் விளைவாகவே, மொழிவழிப் பண்பாடு பற்றிய எண்ணப் போக்கினை இந்திய அறிஞர்கள் வளர்த்தனர். இந்த நிலையில், பிறப்பால் பிராமணரும் இந்திய மானிட இயல் அறிஞருமான டாக்டர் எம்.என். சிறீநிவாசன், சமற் கிருத மயமாக்குதல் எனும் தொடரைத் தம்முடைய இந்திய கிராமங்களின் நிலை சிறப்பாக கூர்க்கு கிராமங்கள் எனும் ஆய்வேட்டில் 1956 அளவில் பயன்படுத்தினார். இப்புதுமை யான பெயர், உலக அரங்கில் மிக விரைவாகப் பரவியது. இதனால் சமற்கிருத மயமாக்குதல் எனும் தொடர் பெரு வழக்கிற்கு வந்தது.

## பெரிய-சிறிய மரபுகள்

இந்திய மானிட இயல் அறிஞர் படைத்த இப்பெயரை ஏற்றுப் போற்ற, அமெரிக்கர்கள் தயங்கினர். இதனால், புதியதொரு பெயரை அவர்கள் படைத்து வழங்கலாயினர்.

சமஸ்கிருத வழிப்பட்ட எண்ணப் போக்கையும், வாழ்க்கை முறையையும் இணைத்து, பெரிய மரபு (Great Tradition) எனும் பெயரால் சுட்டினர். வடமொழியின் தாக்கத்திற்கு இரையாகாத பிற மொழிகளின் எண்ணப் போக்கையும், பண்பாட்டையும் சிறிய நெறி (Little Tradition) எனும் பெயரால் குறிப்பிடலாயினர். பெரிய மரபாக மாற்றுதல் என்பது இவர்கள் சமற்கிருத மயமாக்குதலுக்குக் கொடுத்த பெயராகும்.

இன்று மேற்கு நாட்டு அறிஞர்களுள் பலர், பெரிய நெறி, சிறிய நெறி எனும் தொடர்களையே பயன்படுத்துகின்றனர்.உருசிய, ஆசிய நாடுகளின் அறிஞர்களே சமற்கிருதமயமாக்குதல் எனும் தொடரினைப் பயன்படுத்துகின்றனர். இவ்விரு பெயர்களும், பண்பாட்டைச் சமற்கிருத மயமாக்குதலையே உணர்த்துகின்றன.

ஆனால், நீலகண்ட சாத்திரியார் போன்ற வரலாற்று அறிஞர்கள், ஆரிய மயமாக்குதல் எனும் தொடரையே, தொடர்ந்து பயன்படுத்தியுள்ளனர். அறிஞர் க.த.திருநாவுக்கரசு காட்டிடும் ஆய்வுநெறியே இன்றைய ஆய்வாளர் பின்பற்றவேண்டிய நெறி என்பதில் ஐயமில்லை. ஆயின் இன்றைய பேராசிரியர்கள் பொழுதுபோக்கு எழுத்துகளுக்கும் புலமைப்படைப்புகளுக்கும் வேற்றுமை தெளியவியலா வெள்ளந்திகளாய் விளங்குகின்றனர்.விளம்பரத்துக்கு வீங்குபவர்களாகவும் வெளிச்சம் தேடும் விட்டில்களாகவும் கலங்குகின்றனர்.

ஆய்வுப்போக்குகள் ஆரியமாயை வழிப்பட்டதாகவும் தமிழின் முதன்மையை இருட்டடிப்புச் செய்பனவாகவும் அமைந்துவருகின்றமை வெள்ளிடைமலை.

எருமன் தீக்கன்,செலுதன் போலோக்கு எனப் பெருகிவரும் ஆரியவழிப்பட்ட ஆய்வாளர்கள் செல்வாக்குப் பெற்று ஆய்வுப்பாதையையே மடைமாற்றிவருவதை இற்றைப் பேராசிரியர்கள் சற்றும் உணர்ந்திலர்.இவர்களுக்கு க.த.தி.அவர்களின் இந்தக் கட்டுரை ஓர் விழிப்புணர்வை வழங்கும் என நம்புகின்றேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராகப் பணியாற்றிக் கொண்டிருந்தபோது பணிஓய்வு பெறச் சில திங்கள்களே இருந்த சூழலில் டாக்டர். க. த. திருநாவுக்கரசு இயற்கை எய்தினார்.அரிய ஆய்வுகள் பலவற்றை வழங்கவிருந்த பேரறிஞரைக் காலம் கவர்ந்துசென்றது தமிழுக்குப் பேரிழப்பு.

தமிழர் அனைவரும் பயன்பெறும்வகையில் இவர் இயற்றிய நூல்களுள் குறிப்பிடத்தக்கவை:

**அ) ஆங்கிலம்**

Studies in Tamil and Greek Literature

Chieftains of the Sangam age

A Critical study of Dr. Mu.Va's works

**ஆ) தமிழ்**

சிந்துவெளி தரும் ஒளி (1959)

வாழ்வும் வரலாறும் (1960)

தமிழர் நாகரிக வரலாறு - விடிவெள்ளி (1962)

தம்மபதம், (1971), பாரி நிலையம், சென்னை.

முதலாம் ராசராச சோழன் (1975) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை

வரலாற்று வஞ்சி (1976)

திருக்குறள் நீதி இலக்கியம் (1977), சென்னை பல்கலைக்கழகம், சென்னை.

அறிஞர் அறவாழி (1978) மணியகம், சென்னை

இலங்கையில் தமிழ்ப்பண்பாடு (1979)

பர்மாவில் தமிழ்ப்பண்பாடு (1982)

தாய்லாந்தில் தமிழ்ப்பண்பாடு (1982)

தமிழ் நிலவு

திருக்குறளும் இந்திய அறநூல்களும்,

சான்றோர் கண்ட திருவள்ளுவர்

அடிமை விலங்கு

பழந்தமிழ் மொழியியல்

வாழ்வும் இலக்கியமும்

சிந்துவெளி எழுத்து வடிவங்கள் (1982)

திருக்குறள் கற்பனைத் திறனும் நாடக நலனும், (1982) சென்னை பல்கலைக்கழகம், சென்னை.

தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு, (1987) , உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

திருக்குறள் நூலடைவு, தமிழுறவு வெளியீடு, சென்னை

தொல்காப்பிய நூலடைவு, தமிழுறவு வெளியீடு, சென்னை

தமிழ்ப்பண்பாடு, (2009) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

ஒளி விளக்கு

மானிடவியல் சொல்லகராதி, (1972), திருநெல்வேலி தென்னிந்தியா சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

**மொழிபெயர்ப்பு**

ராஜாராம் மோகன் ராய் : இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை, சாகித்ய அகாதெமி

ஜீவானந்த தாஸ் : இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை, சாகித்ய அகாதெமி

லட்சுமிநாத பெசுபருவா : இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை, சாகித்ய அகாதெமி

**பதிப்பித்தவை**

திறனாய்வு அணுகுமுறைகள், (1989) (கு. பகவதி இணைப்பதிப்பாசிரியர்), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

மானிடவியல்,தொல்லியல்,அகழ்வாய்வியல்,வரலாறு,மெய்ப்பொருளியல்,ஒப்பிலக்கிய ஆய்வு,இலக்கியக்கோட்பாட்டியல்,மொழியியல்,வரலாறு எனப் பல்வேறு துறைகளிலும் பட்டை தீட்டப்பெற்ற வைரமாகக் க.த.தி.மிளிர்ந்தார்.இவரது நூல்கள் அறிவுக் கருவூலமாகப் புதிய பல ஆய்வுகளுக்கு வழிகாட்டுகின்றன. புனைகதைகளிலும் பொழுதுபோக்கு எழுத்துகளிலும் பெருநாட்டம் செலுத்திவரும் இன்றைய பேராசிரியர்கள் க.த.தி.நூல்களைக் கற்று அவரது ஆய்வுநெறியில் அணிதிரளும் காலம் மலருமா?

### பட்டிமன்றம் தொடர்

# கிராமத்தில் பட்டினத்தான் பட்ட பாடு

## - பேராசிரியர் கண.சிற்சபேசன்



**நிகழ்ச்சி நடந்த இடம்: காந்திகிராமம்- திண்டுக்கல்**

**பொருள்: அண்ணல் காந்தியடிகள் பின்பற்றியவற்றுள் ஆற்றல் மிகவாய்ந்தது வாய்மை நெறியா? ஒத்துழையாமை நெறியா? அருளுடமை நெறியா?**

இந்தப்பட்டிமன்றம் என்னால் மறக்கமுடியாத நிகழ்ச்சி. ஏனென்றால் காந்திகிராமப்பல்கலைக்கழகத்தை நிறுவிய பெருமக்கள் அமர்ந்து கேட்ட பட்டிமன்றம் இது. இரவு 12 மணிவரை இனிதே நடைபெற்ற நிகழ்ச்சி.

எங்கள் நிகழ்ச்சியில் பங்குபெற்றோர். வாய்மை (சத்திய) நெறியே என்ற அணியில் சாலமன் பாப்பையா, ஒத்துழையாமை (சத்தியாக்கிரக)நெறியே என்ற அணியில் கவிஞர். கதி. சுந்தரம், அருளுடைமை (அகிம்சை) என்ற அணியில் பேராசிரியர் சீனி.சொளமியநாராயணன்.

நான் எனது முன்னுரையில் திருக்குறளின் பெருமையை எடுத்துக்கூறிக் காந்தியடிகளுக்கு திருக்குறளின்மீது இருந்த பற்றினையும் அதை அவர் முழுமையாகக்கற்றுக் கொள்ளாமைக்கு வருந்தியதையும், அவர் தென் ஆப்பிரிக்காவில் இருந்தபோது தமிழ்மக்களோடு கொண்டிருந்த ஆழ்ந்த நட்பையும் குறிப்பாகத் தில்லையாடிய வள்ளியம்மை செய்த போராட்டத்தை அவர் மதித்த திறத்தையும் குறிப்பிட்டேன். பிறகு அணித்தலைவர்களாகிய பெரும் பேச்சாளர் மூவரும் தங்கள் வாதங்களை அழகுற எடுத்து வைத்தனர். அவர்களும் திருக்குறளை மையப்படுத்திப் பேசினர்.

வாய்மை என்ற அதிகாரம்தான் திருக்குறளின் அச்சாணி என்று தனது வாதத்தைத் தொடங்க்கினார் சாலமன் பாப்பையா.

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற
செய்யாமை நன்று"

என்ற திருக்குறளின் அடிப்படையில் அடிகள் தனது வாழ்க்கையை அமைத்துக்கொண்ட வகையையும் அதற்குச் சோதனை வந்தபோது அவர் எப்படி அவற்றை எதிர்கொண்டு வெற்றியடைந்தார் என்றும் அழகுறப் பேசினார். காந்தியடிகள் வாய்மையைக் கடைப்பிடிப்பதற்கு எவ்வளவு இடர்ப்பாடுகளை எதிர்கொண்டார் என்பதை மனமுருகக் கூறினார்.

ஒத்துழையாமை இயக்கத்தைக் கடைப்பிடித்தமைதான் காந்தியடிகளின் தனிச்சிறப்பு என்று கவிஞர் கதி.சுந்தரம் முழங்கினார். ஆங்கிலேயரை இந்திய மண்ணைவிட்டு விரட்டிய ஆயுதமே ஒத்துழையாமைதான். தீமைக்கு அடங்கிப் போகாமல் அதை அறம் என்ற கூரான ஆயுதம் கொண்டு வெல்லவேண்டும்-கொல்லவேண்டும் என்று இதனைத்தானே திருவள்ளுவர் தனது நூல் முழுமையும்

சொல்லியுள்ளார் என்று சொன்னார். உண்ணா நோன்பைக் குழந்தைகளிடம் இருந்தும் பெண்களிடமிருந்தும் தான் காந்தியடிகள் கற்றுக்கொண்டிப்பார் என்று சொல்லிக் கைதட்டல் வாங்கிக் கொண்டார்.

அடுத்து அருளுடமை என்ற அணியில்பேச வந்த சவுமியநாராயணன் அருளுடைமை என்ற அதிகாரத்திலிருந்து

"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்"

என்ற திருக்குறளை எடுத்துக்காட்டிக் காந்தியடிகள் அருளுடைமையினால்தான் வலிமைபெற்று ஆங்கிலேயரை இந்திய மண்ணைவிட்டு விரட்டினார் என்றார்.

எல்லோரும் பேசிமுடித்து நான் தீர்ப்புரை வழங்க எழுந்தபோது எனக்குப் பெரிய இடையூறு முளைத்தது.

வேறொன்றும் இல்லை. அவர்கள் அழைத்திருந்த நடிகர் ஜெயசங்கர் கொடைக்கானலிலிருந்து வந்து சேர்ந்துவிட்டார். சிறிது நேரத்திற்குமுன் கூட்டம் பெருகிக் கொண்டே வந்ததன் காரணம் இப்போதுதான் எனக்குப் புரிந்தது. நான் என் தீர்ப்புரைக்குத்தான் கூட்டம் பெருகுகின்றது என்று தப்புக் கணக்குப் போட்டுவிட்டேன். இப்போது எனது பைத்தியம் படீல் எனத்தெளிந்தது. யாருக்காகக் கூட்டம் பெருகியது என்று விளங்கியது. சரி அவரோ திரைப்படநடிகர், ஒப்பனையோடு வந்திருந்தார். காந்திகிராம அதிகாரிகள் என்னிடம் "என்ன செய்யலாம்" என்று கேட்டனர். நான் சொன்னேன் அவரைப் பேச அனுமதிப்போம். அதன்பிறகு நான் யார் இருந்தாலும் இல்லாவிட்டாலும் பேசுகிறேன் அது எனக்குப் பழக்கம் என்றேன்.

ஜெய்சங்கர் மேடை ஏறினார். அ;ப்போது "ஜெய்சங்கர் அவர்களே எவ்வளவு கூட்டத்தை நான் உங்களிடம் தருகிறேன். இதே அளவுகூட்டத்தை என்னிடம் தந்துவிட்டுத் தான் நீங்கள் மேடையிறங்கவேண்டும்" என்று சொல்ல. அவரும் "அப்படியே செய்கிறேன் ஐயா" என்றார். கூட்டம் கைதட்டி ஆரவாரித்தது. அன்றுமுதல் அவர் என்னுடன் இறுதிநாள்வரை நட்புக் கொண்டிருந்தார்.

ஆனால் அவர் பேசிமுடித்தபிறகு அவருக்காக வந்த கூட்டம் அவருடன் போய்விட்டது. காந்திக்காக வந்த கூட்டம் எனக்காகக் காத்திருந்தது. எனது தீர்ப்புரையைச் சொன்னேன். வாசகர்கள் நம்ப மாட்டீர்கள். அரைப்பங்கு மக்கள் அப்படியே அமர்ந்திருந்தனர். நடிகர் ஜெய்சங்கரும் அமர்ந்து கேட்டார். இந்த நிகழ்ச்சியை எங்கள் பட்டிமன்றக் குழுவில் அன்று நானும் நடிகர் ஜெயசங்கரும் பட்டபாட்டைக் குறிக்கும் வண்ணம் "கிராமத்தில் பட்டினத்தான் பட்ட பாடு" என்று குறிப்பிட்டு மகிழ்வோம்.

**எனது தீர்ப்புரை:**

அருளுடைமை நெறி ஒரு தனி மனித வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு துணைசெய்யும். ஆனால் ஒரு சமுதாய முன்னேற்றத்துக்கோ ஒரு நாட்டின் விடுதலைக்கோ துணை நிற்காது.

ஒத்துழையாமை நெறி ஒரு தனி மனித வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு துணைசெய்யாது. ஆனால் ஒரு சமுதாய முன்னேற்றத்துக்கோ ஒரு நாட்டின்

விடுதலைக்கோ துணை நிற்கும். ஆனாலும் அது ஒரு தற்காலிக வெற்றியே தவிர வாய்மை நெறி போன்று என்றும் நிலைத்து நிற்கும் வெற்றியன்று.

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யமை நன்று" குறள் 297

என்ற திருக்குறளின் விளக்கத்தைச் சொன்னேன்.

வாழ்க்கையில் பல இடர்ப்பாடான இடங்களில் எல்லாம் வாய்மைதான் காந்தியடிகளுக்கு ஒளிகாட்டி வழிகாட்டியது.

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு" – குறள்-299

அதனினும் மேலாக காந்தியடிகள் தமது வாழ்க்கையைத் திருக்குறளின் நெறியாகிய வாய்மை வழியில் நடத்தியதால் இன்று மட்டுமல்ல என்றும் உலக மக்களின் உள்ளத்துள் எல்லாம் நிற்பார் என்று சொல்லி நிறைவு செய்தேன்.

"உள்ளத்தால் பொய்யாக ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன் –குறள் 294

# பேராசிரியர் சி.இலக்குவனாரின் குறள் விளக்கம்



## காமத்துப்பால் (அதிகாரம்-109)

### தகையணங்குறுத்தல்

தலைமகன் தலைவியைக் காணுங்கால் அவள் அழகால் உந்தப்பட்டு அதனால் உளம் வேறுபடுதல். அமைதியாக இருந்த ஆடவரின் உள்ளம் பெண்ணின் தோற்றத்தால் வருந்தத் தொடங்குதல்.

'தகை அணங்குறுத்தல்' என்றால் 'அழகு வருத்தத்தை அடைவித்தல்' என்பதாகும். தலைவியைக் கண்ட தலைவன் கூறுகின்றான்.

**"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலும்என் நெஞ்சு"**

அணங்குகொல்=வருத்தும் அழகுத் தெய்வமோ?

ஆய்மயில் கொல்லோ=ஆராய்ந்தெடுக்கப்பட்ட அழகிய மயிலோ?

கனங்குழை மாதர்கொல்=கனத்த காதணியை அணிந்துள்ள பெண்தானோ?

என் நெஞ்சு=என் உள்ளம்.

மாலும்=ஒன்றும் அறிய இயலாது மயங்கும்.

ஒரு பெண்ணை ஓர் ஆடவன் விரும்புவதற்கு முதல் துணையாக அமைவது அவள் அழகே. அழகிய பெண்ணைக் கண்ட தலைமகன் அவன் அழகு நலத்தில் மயங்கிக் கூறுகின்றான்

"கனங்குழை=கனவிய குழைய உடையாள்" எனக் கூறி ஆகுபெயர் என்பர் பரிமேலழகர். `கனங்குழை மாதர்' என்பது பொருத்தமுற அமைந்திருக்கும் போது `கனவிய குழை' என்று பிரித்துப் பொருள் கூறுவதன் சிறப்பு ஒன்றுமில்லை.

'கொல்' என்பது ஐயத்தையும் வினாவையும் உணர்த்தி நிற்கின்றது.

பண்டைத் தமிழர் வியப்பு, வினா, ஐயம் முதலியவற்றை உணர்த்த இடைச் சொற்களையே பயன்படுத்தினர். இவ்வடையாளங்கள் பிற்காலத்தில் கொண்டவே.

**"நோக்கினாள்; நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைக்கொண் டன்ன துடைத்து"**

நோக்கினாள்=என்னைப் பார்த்தாள்;

நோக்கு= என பார்வைக்கு.

எதிர்நோக்குதல்=எதிராகப் பார்த்தல்.

தாக்கு அணங்கு=வருத்தும் தெய்வம்.

தானை= படையையும்.

கொண்டன்னது உடைத்து=உடன்கொண்டு வந்துள்ள தன்மையை உடையது.

அவன் நோக்கினாள்; அவளும் நோக்கினாள். அவன் நோக்கும்போதே அவளும் எதிர்நோக்குதலைக் கண்டு அப்பார்வையால் கவரப்பட்ட அவன், இயல்பாகவே அழகால் வருத்தக்கூடி அவள் கூர்ந்து நோக்கியமையான், வெல்வதற்குப் படையையும் கொண்டு வந்து விட்டாள் எனத் தான் அவளுக்கு அடிமையாகிவிட்டதை அறிவிக்கின்றான்.

**"பண்டறியேன் கூற்றென் பதனை;இனிஅறிந்தேன்
பெண்தகையால் பேரமர்க் கட்டு"**

கூற்று என்பதனை=உயிருண்ணும் 'எமன்' என்று சொல்லப்படுவதனை.

பண்டு அறியேன்=முன்பு அறியாதவனாய் இருந்தேன்.

இனி அறிந்தேன்= இனிமேல் அறிந்தவனாகி விட்டேன்.

பெண் தகையால்=அது பெண் தன்மையுடன்.

பேரமர்க் கட்டு=பெரியனவாய் அமர்த்த கண்களை உடையது.

கூற்று என்பது உயிரைக் கொண்டு செல்லும் ஒன்றாகக் கதைகளில் கூறப்படும் கற்பனையின் பாற்பட்டது.

தலைமகளைக் கண்டவுடன் வருந்தத் தொடங்கியதால் தன்னைக் கொல்ல வந்த கூற்று எனப் புனைந்து கூறுகின்றான் தலைமகன். தலைமகள் வடிவில் வந்துள்ள கூற்று பெண்ணழகுடன் பெரிய கண்களையும் கொண்டுள்ளது என்கின்றான்; கண்கள் அங்குமிங்கும் அசைந்து கொண்டேயிருப்பனால் அமர்த்த - பொருகின்ற தன்மையுள்ள – கண்கள் என்கின்றான்; இவ்வாறு அவள் அழகின்பால் கவர்ச்சியுற்று வருந்துவதனை வெளிப்படுத்துகின்றன.

**"கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தால் பெண்தகைப்
பேதைக் கமர்த்தன கண்."**

பெண்தகை=பெண்ணிற்சிறந்த.

பேதைக்கு=இளம் பெண்ணிற்கு.

கண்=கண்கள்.

கண்டார் உயிருண்ணும்=தம்மைப் பார்த்தவர் உயிரைக் கொண்டு செல்லும். தோற்றத்தால்=வடிவத்தோடு.

அமர்த்தன=பொருந்தி இருந்தன. (அல்லது தம்முள் பொருதுகொண்டு இருந்தன.)

காதலியின் கண் பார்வையே காதலனை வயப்படுத்த வல்லது. அவளை அடையும்வரை அவன் தன்னைச் செயலற்றவனாகவே கருதுவான்; ஆகவே. உயிர் உளதோ இலையோ என்று ஐயுற்று வருந்துவான்.

அவள் கண்கள் தன் உயிரைக் கொண்டு சென்றதாகவே கருதித் தலைவன் வருந்துகின்றான்.

**"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம்இம் மூன்றும் உடைத்து"**

கூற்றமோ=(என் உயிரைக் கொண்டு செல்ல உள்ளன போல் காணப்படுவதால்) எமன்தானோ?

கண்ணோ=என்னைக் காண்பதனால் கண்கள் தாமோ?

பிணையோ=அங்கும் இங்கம் நாணி ஓடுவதனால் பெண்மானோ?

மடவரல்=அழகிய இப்பெண்ணின்.

நோக்கம்=கண்பார்வை.

இம்மூன்றும்=இம்மூன்றன் தன்மைகளையும்.

உடைத்து=பெற்றுள்ளது.

தன்னை வருத்தும் தன்மையால் கூற்றம் என்றும், மாபோல் ஓரிடத்தில் நிலைத்து நில்லாது ஓடிக் கொண்டுள்ளமையின் பிணையென்றும் கண்களைச் சிறப்பித்துக் கூறுகின்ற நயம் பாராட்டத்தக்கது.

**"கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்**
**செய்யல மன்இவள் கண்."**

கொடும்புருவம்=வளைந்த புருவம்.

கோடா=நடுபிலை தவறாது.

மறைப்பின்=மறைத்தால்.

இவள் கண்=இவள் கண்கள்.

நடுங்கு=நடுங்குதற்குக் காரணமாய்.

அஞர்=துன்பத்தை.

செய்யலமன்=செய்ய மாட்டா.

கண்கள் புருவத்தால் மறைக்கப்படலாம். ஆனால், இவள் புருவங்கள் இவள் கண்களை மறைக்கவில்லை. 'கொடிய புருவம்' என்னும் பொருளிலும் கொள்ள 'கொடும்புருவம்' என்றான். ஒன்றும் செய்யாதவரைத் துன்புறுத்துதல் கூடாது. கண்ணோடு நெருங்கியிருக்கும் புருவம் நட்புரிமையால் கண்களைத் தடுத்து நிறுத்தலாம். அங்ஙனம் தடுக்காததனால் நடுநிலை தவறிவிட்டது என்று கூறுகின்றான் தலைவன்.

'கோடா' என்பதற்கு மலையாக, கரையாக என்றும் பொருள் கொளளலாம். உயரமான ஒன்று இடையே நின்றால் பொருளைக்க காண முடியாதன்றோ? ஆகவே, புருவம் கோடு-கரை போன்று மறைக்கலாமே என்று தலைவன் கருதுகின்றான்.

**"கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்**
**படாஅ முலைமேல் துகில்"**

மாதர்=இப்பெண்ணின்.

படாமுலைமேல்=சாயாத முலைகளின் மேல் உள்ள.

துகில்=ஆடை. கடா=மதம் பொருந்திய.

களிற்றின்மேல்=யானை மீது இடப்பட்டுள்ள.

கட்படாம்=கண்ணை மறைக்கும் முகபடாம் போன்றதாகும்.

பெண்களின் உறுப்புக்களுள் முலைகளும் ஆண்களை வருத்தும். முலைகளின் மேல் ஆடை பொருந்தியிருப்பதை யானையின் முகத்தில் இடப்பட்டுள்ள அழகிய திரைக்கு ஒப்பிடுகின்றான் தலைவன்.முகபடாம் யானையின் கண்களை மறைத்துக் கொண்டு இருக்கும். கண்கள் மீது பொருந்தியிருப்பதனால்'கட்படாம்' எனப்பட்டது.

**"ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்**
**நண்ணாரும் உட்கும்என் பீடு"**

ஞாட்பினுள்=போரின்கண்.

நண்ணாரும்=நேரிடையாகப் பொராத பகைவரும்.

உட்கும்=கேள்வியுற்று அஞ்சுற்கு ஏதுவாய.

என் பீடு=என் வலிமை.

ஒண்ணுதற்கோ ஒ--ஒள்நுதற்கோ ஒ=ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண்ணிற்கோ

உடைந்ததே=அழிந்ததே.அழகிய பெண்ணைக் கண்டு வலியிழந்த ஆடவர் வரலாறு எல்லா மொழிகளிலும் உண்டு.

நண்ணார்=பொருந்தாதவர், பகைவர். இங்கு 'நண்ணார்' என்பதற்குப் போரின்கண் வந்து பொருந்தாதார் என்று கூறியது அதில் உள்ள 'உம்'மையால். அஃது உயர்வு சிறப்பும்மை.

'ஒண்ணுதற்கு' என்பதனை ஒளிபொருந்திய நெற்றிக்கு என்பதினும், ஆகுபெயரால் பெண் என்றே கூறுவது பொருத்தமுடையது.

**"பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்**
**கணிஎவனோ ஏதில தந்து."**

பிணைஏர்=மான் பிணையை ஒத்த.

மடநோக்கும்- அழகிய பார்வையும் போன்றதாகும்.

நாணும்=கண்டாரைக் கவரவல்ல நாணினையும்.

உடையாட்கு=பெற்றிருப்பவட்கு.

ஏதில தந்து=தொடர்பற்ற-செயற்கையான நகைகளைப் புனைவித்து.

அணி எவனோ=அணிதல் எற்றுக்கோ?

இயற்கையழகே இவள்பால் சிறப்பாக அமைந்திருக்கின்றது. இவ்வழகே கண்டாரை வருத்தும். இன்னும் செயற்கை நகைகளை அணிவித்து அழகை மிகுதிப்படுத்தித் தன்னை வருந்துதல் வேண்டா என்று கூற நினைத்த தலைவன் அணிகள் இவட்கு வேண்டாவே என வருந்துகின்றான்.

**"உண்டார்கண் அல்ல தடுநறாக் காமம்போல்**
**கண்டார் மகிழ்செய்தல் இன்று"**

அடு நறா=உண்டாக்கப்படும் கள்.

உண்டார்கண் அல்லது=உட்கொ ண்டவர் மாட்டுக் களிப்பை உண்டுபண்ணுவதல்லாது. காமம்போல்=காதலுக்குரியார் போல்.

கண்டார்=கண்டார் மாட்டு. மகிழ் செய்தல்=மகிழ்ச்சியைச் செய்தல். இன்று=இல்லை.

அறிவை மயக்கும் செயலில் கள்ளும் காதலும் ஒரு தன்மையனவே. ஆனால், காதலுக்குரியரை (நினைக்குந்தோறும்)பார்க்குந்தோறும் மகிழ்ச்சியுண்டாகும். கள்ளோ உண்டவர்க்குத்தான் மகிழ்ச்சிதந்து மயக்கும்; கண்டவர்க்கு மகிழ்ச்சியைத் தாராது.காதலுக்குரிய பெண்ணையும் கள்ளையும்ஒப்பிட்டுள்ளதன் நயம் எண்ணத்தக்கது. கள்ளுண்ணாமையை வலியுறுத்திய வள்ளுவர் கள்(நறா)ளையும் உவமையாகக் கொண்டு வந்தது மக்களியல்பு நோக்கிப் போலும்!

'நறவு' கள்ளினும் வேறுபட்ட ஒன்றாக அக்காலத்தில் புலவரும் அரசரும் பிறரும் உண்டு வந்த ஒன்றாகும். ஆயினும், நறவும் கள்ளும் தன்மையில் ஒன்றுதான்.

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 11 | ஆனி 2, தி.பி 2052 | சூன் 16, கி.பி 2021






## குறள் நாள்

## பெரியாரின் ஆவல்

(உள்ளே)

## திருக்குறள் பட்டிமன்ற வரலாறு

-பேராசிரியர் கண.சிற்சபேசன்



முதுபெரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் நம் குறள்நெறி இதழின் நிறுவனர் செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் அவர்களுடன் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் பணியாற்றியுள்ளார்.பட்டிமன்றப் பொழிவில், அறுபதுகளின் தொடக்கத்திலிருந்தே கோலோச்சிவரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் திருக்குறள் தொடர்பான பட்டிமன்றங்களின் வரலாறு குறித்து ஒரு தொடர்கட்டுரையைக் கடந்த ஆறு இதழ்களில் வழங்கியுள்ளார்.அதன் ஏழாம் பகுதி இங்கு வெளிவருகிறது.ஆர்வலர்க்கு விருந்தாகத் தொடர்ந்து வெளிவரும்.

---

**பட்டிமன்றப் பொருள்: நாடு சீர் கெட்டிருப்பதற்குப் பெரிதும் காரணம் செய்தக்க செய்யாமையா? செய்தக்க அல்ல செயலா?**

**இடம்: சங்கரன்கோயில் - திருவள்ளுவர் கழகம். ஆண்டு: 1975**

எங்கள் கல்லூரியில் திருமலை முத்துச்சாமி என்றொரு நூலகர் இருந்தார். நூலகத் துறையில் மிகுந்த தகுதியும் திறமையும் கொண்டவர். அவருடைய இளவல் சங்கரவள்ளிநாயகம் ஆண்டுதோறும் தங்கள் ஊராகிய சங்கரன்கோயிலில் தமது திருவள்ளுவர் கழகத்தின் சார்பாக இலக்கிய விழா நடத்துவார்.

ஓர் ஆண்டு பட்டிமன்றப் பொருள் "நாடு சீர் கெட்டிருப்பதற்குப் பெரிதும் காரணம் செய்தக்க செய்யாமையா? செய்தக்க அல்ல செயலா?" என்பது. நிகழ்ச்சியில் 'செய்தக்க அல்ல செயலே' என்ற அணியில் பேராசிரியர் சொ.சத்தியசீலனும் 'செய்தக்க செய்யாமையே' என்ற எதிரணியில் பேராசிரியர். அ.வ.இராசகோபாலனும் அணி செய்தனர். இருவரும் திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்தவர்கள். இருவரும் கேட்போரைப் பிணிக்கும் வகையிலும் கேளாரும் வேட்பவும் பேச வல்லவர்கள். ஒருவர் மீது மற்றொருவர் எல்லையற்ற மதிப்பு உடையவர்கள். அவர்களையடுத்துப் பேசிய அனைவரும் அருமையாகப் பேசினர்.

பெரும்பாலும் எல்லோரும் நமது நாடு அடைந்திருந்த அவல நிலையைக் கேலியாக எடுத்துச் சொல்லிப் பேசினர். கூட்டத்தினர் வெளியே நகைத்தாலும் தமக்குள் அவமானத்தில் எவ்வளவு குறுகிப்

போயினர் என்பது அவர்கள் ஒரு வலியோடு சிரிப்பதிலிருந்து எனக்குத் தெளிவாகத் தெரிந்தது.

ஒரு பொருள் எப்படி இருக்கிறது? என்பது ஒரு கேள்வி
ஒரு பொருள் எப்படி இருந்தது? என்பது அடுத்த கேள்வி
எப்படி இருந்த ஒரு பொருள் எப்படி இருக்கிறது? என்பது அடுத்த கேள்வி

இந்த மூன்று வினாக்கள்தான் எந்தப் பொருளையும் ஆராயத் துணை நிற்பவை.

ஒரு தனி மனிதனாயினும், ஒரு சமுதாயமாயினும், ஓர் அரசாயினும் எப்படி அமைகின்றதோ அதை பொறுத்துத் தான் அந்த நாடு தழைப்பதும் அழிவதும் உள்ளது. இதை எப்படி அறிந்துகொள்வது? இதோ வள்ளுவர் காட்டும் வழி:

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு" -குறள் 355

திருவள்ளுவர் உடன்பாட்டுமுறையானும் அறம் சொல்லுவார். அதாவது இன்னின்னவற்றை செய் என்பார்.

"செய்க பொருளைச் செறுநர் செருக்கு அறுக்கும்
எஃகு அதனின் கூரியது இல்"–குறள் 759

எதிர்மறையானும் அறவுரை சொல்லுவார்:

"கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்" -குறள் 184

இவ்வாறு இரு அணியினரும் திருக்குறளை மேற்கோள் காட்டி அருமையாகப் பேசினர். வழக்கம்போல எனது தூண்டுதலும் வழிகாட்டுதலும் ஊடே ஊடே இருந்தன.

எனது தீர்ப்புரைக்கு ஆன நேரம் வந்தது. நான் இவ்வாறு சொன்னேன். பல இடங்களில் திருவள்ளுவர் பொருள்களின் இயல்பை உள்ளது உள்ளவாறுதான் சொல்கிறார். ஆங்கிலத்தில் சொல்வதானால்: He portrays things as they are, leaving us to choose our own path.

உள்ள நிலைமையை எடுத்துக்காட்டி "இதுதான் உள்ள நிலை இதிலிருந்து நீ மேற்கொள்ள வேண்டிய அறத்தை நீயே ஆய்ந்து எடுத்துக்கொள்". பொறுமையை எடுத்துச் சொல்லவேண்டிய இடத்தில்

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை

இகழ்வார்ப் பொறுத்தல் தலை–குறள் 151

என்று கூறி நீ மேற்கொள்ளவேண்டிய அறம் தன்னை வெட்டி அகழ்ந்துகொண்டு போகிறவனையும் தாங்கிக் கொண்டு அவன் தன்னை மேலும் மேலும் தோண்டிக்கொண்டு போவதற்கு நிலம் துணை நிற்பது போல தம்மை இகழ்பவரையும் பொறுத்து அவரைத் தாங்கிக்கொண்டு நிற்பதுதான் என்கிறார்.. பொறுமையின் பெருமை இது என்று சொல்கிறாரே தவிர நீ அதனைக் கடைப்பிடி என்று சொல்லவேயில்லை.

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற
செய்யாமை செய்யாமை நன்று"- குறள் 297

முதலில் இவ்வாறு வாய்மை என்ற அறத்தை வலியுறுத்திய திருவள்ளுவர் அடுத்து அதனைக் கொல்லாமை என்ற அறத்துடன் ஒப்பிட்டு

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்று அதன்
பின் சாரப் பொய்யாமை நன்று-- குறள்-323

கொல்லாமையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பொய்யாமையாகிய அது இரண்டாம் இடத்தைத்தான் பெறமுடியும் என்று அறம் கூறுகிறார்.

இப்படித் தனி மனிதனாகச் செம்மைப்பட்டு வாழ்கிறவன் சமுதாயம் என்று வளர்கிறபோது விலங்கு உணர்ச்சிக்கு ஆட்படுகிறான். அவனுக்கும் அறம் உணர்த்துகிறார். 'உலகம்' என்று பல இடங்களில் அவர் குறிப்பிடுவது சமுதாயத்தைத்தான்.

"உலகம் தழீயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு" குறள்-- 425

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவு இல்லாதார்"–குறள் 140

இனி அதற்கு மேலாக அரசு செம்மையுற நடக்க வேண்டும். அரசின் அங்கங்களாகிய அரசன், அமைச்சன், ஒற்றன் அனைவரும் நேர்மையாக இருக்கவேண்டும். ஒரு நாடு என்பது ஆறு அங்கங்களைக் கொண்டது. இந்த ஆறு அங்கங்களும் செம்மையுற இருந்தால் அந்த அரசு தலைதூக்கி முதலிடம் பெற்றுநிற்கும் என்கிறார்.

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு அரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு–குறள் 381

இவ்வாறு ஒவ்வொன்றினுக்கும் தனித் தனி இலக்கணங்களை வகுத்துக் காட்டிய திருவள்ளுவர் அன்றையப் பட்டிமன்றத் தலைப்பிற்கு

ஏற்ப நாம் எடுத்துக்கொண்ட திருக்குறளில் எல்லாவற்றுக்குமான உயர்ந்த பொது அறத்தை விளக்கமுற உரைக்கிறார்.

"செய்தக்க அல்ல செயக் கெடும், செய்தக்க
செய்யாமையானும் கெடும்"–குறள் 466

உலகிலிரண்டு வகையாகக் கெடுதி செய்யலாம். ஒன்று செய்யக்கூடாததைச் செய்வது; இன்னொன்று செய்யவேண்டியதை செய்யாமல் விடுவது. இதைத் தான் இரண்டு அணிகளாக வாதிட்டார்கள். இதை நான் ஒரு எடுத்துக்காட்டினால் விளக்கினேன். நாம் ஒரு செடி வளர்க்கிறோம். அதற்கு நீரூற்ற வேண்டியது நமது கடமை. அது செய்தக்க செயல். நாம் அதற்கு நீர் ஊற்றாமல் புறக்கணிக்கிறோம். அதனால் அந்தச் செடிக்கு அதிகக் கெடுதியா? அல்லது அதை வேரோடு பிடுங்கிப் போடுவது அதிகக் கெடுதியா? இது செய்தக்க அல்ல செயல். சொன்னவுடன் நமக்கே விளங்கிவிடும். செய்தக்க அல்ல செய்வதே மிகக்கெடுதி என்று. அதனால் தான் திருவள்ளுவர் "செய்தக்க அல்ல செயக்கெடும்" என்று முதலிலே சொல்லிவிட்டு செய்தக்க செய்யாமையானும் கெடும் என்று அடுத்து உம்மை போட்டுச் சொல்லுகிறார். (இந்த இடத்தில் பொதுமக்களைச் சுட்டிக்காட்டி "உம்மைப் போட்டுப்பார்க்கிறார்" என்று சொன்னேன்). இதைத் தான் "நல்லது செய்தல் ஆற்றீராயினும், அல்லது செய்தல் ஓம்புமின்" என்று சங்கப் பாடல் குறிப்பிடுகின்றது.

இவ்வாறு இரண்டு வாதங்களையும் ஆய்ந்து நாடு சீர்கெட்டிருப்பதற்குப் பெரிதும் காரணம் "செய்தக்க அல்ல செயலே" என்று எனது தீர்ப்பை எடுத்துக்கூறி இனியேனும் நாம் இந்த இருவகைக் கெடுதிகளையும் செய்யாமல் நமது திருநாட்டை வளமாக்குவோம் என்று தாழ்ந்து பணிந்து வேண்டுகோள் விடுத்தேன். இந்தப் பட்டிமன்றம் நடந்து இன்றைக்கு ஏறத்தாழ 40-45 ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால் நமது திருநாடு அப்படித் திருந்தி விட்டதா என்று அடியேன் அறியேன் பராபரமே.

# திருக்குறளின் ஆழமும் அருமையும்

முனைவர் மு.முத்துவேலு

---



முனைவர் மு.முத்துவேலு ஆட்சிமொழிக்குழு ஆணைய உறுப்பினராக விளங்கி ஆட்சித்தமிழ்ச் சொற்கோவை வளர்ச்சியுறப் பணியாற்றி வருகிறார்.கூட்டுறவுத் தணிக்கைத் துறையில் ஒன்பதுஆண்டுகளும் தலைமைச் செயலகத்தில் மொழிபெயர்ப்புப் பிரிவில் ஐந்து ஆண்டுகளும் பணியாற்றியபின் கல்லூரிக்கல்வித் துறையில் அரசினர் கல்லூரிகளில் இருபத்துமூன்று ஆண்டுகள் பேராசிரியப் பணியாற்றியுள்ளார்.மத்தியச் செம்மொழித் தமிழாய்வு நிறுவனத்தில் ஐந்து ஆண்டுகள் பதிவாளராகப் பணியாற்றி அதன் வளர்ச்சிக்கு வலிமையான அடித்தளம் அமைதற்குத் தம் பங்களிப்பை வழங்கியுள்ளார்.

---

அறத்தை எந்தவித அசைவும் இல்லாமல் உறுதியாகக் கூறுவதும், கருத்துக்களை ஐயமின்றித் தெளிவாக எடுத்துரைப்பதும் திருக்குறளின் சிறப்புகளில் முதலில் நிற்பன. அடுத்த நிலையில் அமைவது குறளின் பொருள் ஆழம். திருக்குறள் எளிமையான சொற்களால் இயற்றப்பட்டது. ஆனால் ஆழ்ந்த பொருளுடையது என்பதையும் பாரதி எடுத்துக்காட்டுகிறார். அவ்வகையில் திருக்குறள் உணர்த்தும் பொருள் ஆழத்தைச் சுட்டிக்காட்டும் நோக்கில் சில எடுத்துக்காட்டுகளை இக்கட்டுரையில் விளக்க முயல்கிறேன்.

திருவள்ளுவர் பொருளதிகாரத்தில் 'இறைமாட்சி' அதிகாரத்திற்கு அடுத்த அதிகாரமாக 'கல்வி' அதிகாரத்தை வைத்துள்ளார். அவர் சமுதாய வாழ்க்கையில் கல்விக்குத் தரும் இன்றியமையாமையைக் காட்டுகிறது. கல்வி அதிகாரத்தில்,

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. (குறள்: 396)

என்னும் குறள் மிகவும் ஆழமான பொருள் உடையது ஆகும்.

மணல் கேணியைத் தோண்டத் தோண்ட நீர் ஊறுவதைப் போல மனிதனுக்குக் கற்க கற்க அறிவு ஊறும் என்பது இக்குறளின் பொதுவான பொருளாகும்.

திருவள்ளுவர் கேணியைத் தோண்டுவதைப் பற்றிக் கூறும் போது ஏன் மணற்கேணி என்று குறிப்பிட்டார் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

மணலில் தோண்டப்படும் கிணற்றில் தோன்றும் ஊற்று ஒரு முறை தோண்டி விட்டால் அது என்றும் அப்படியே இருந்து விடாது, நாள்தோறும் தோண்டவில்லை என்றால் அந்தக் கேணியின் மேல் இருக்கும் மணல் சரிந்து விழுந்து அந்தக் கிணற்றின் ஊற்றுக் கண்ணை மூடி விடும். எனவே மணல் சரிந்து விழாமல் இருக்க நாள்தோறும் மணலைத் தோண்டி எடுத்து வெளியே போட்டு வரவேண்டும். இதைத்தான் வள்ளுவர் கல்விக்கு ஒப்பிடுகிறார்.

கல்வியையும் ஒருமுறை கற்றபின்பு அதனை நிறுத்தி விடக் கூடாது. நாள்தோறும் கற்றால்தான் அறியாமை என்னும் மணல் சரிந்து விழாமல் அறிவுக் கண் மூடாமல் இருக்கும். கல்வி என்பது ஒரு தொடர் நிகழ்வாக இருக்க வேண்டும், என்பதை உணர்த்தவே வள்ளுவர் மணலில் தோண்டப்படும் கேணிக்கு உவமையாகக் கூறினார்.

ஒருவன் தொடர்ந்து கற்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் வண்ணம் சாகும் வரையில் எவன் ஒருவன் படித்துக்கொண்டே இருக்கிறானோ அவனுக்குத் தான் எல்லா நாடும், அவனது சொந்த நாடாகும். எந்த ஊரும் சொந்த ஊராகும் என்று கூறுகிறார்.

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. (குறள்: 397)

அடுத்த நிலையில் கிணற்றைத் தோண்டுவதில் இரு செய்திகள் உள்ளன. ஒன்று தோண்ட எடுத்துக் கொள்ளப்படும் கருவி மற்றொன்று முயற்சி.

மணற்கேணியைத் தோண்ட உரிய கருவிகளைத் தேர்வு செய்வதைப் போல நமது அறிவுக் கேணியைத் தோண்டுவதற்குக் கருவிகளாகப் பயன்படுவை நூல்கள். எனவே தான் பாடத் திட்டம் வகுப்போர் மாணவர் படிக்கவேண்டும் என்று குறிப்பிடுகிற நூல்களைக் 'கருவி நூல்கள்' என்று பட்டியலிடுகின்றனர்.

இந்தக் கருவி நூல்களைக் கொண்டு கற்றல் என்னும் முயற்சியால் தோண்டினால் அறிவுக்கண் திறக்கும்; அறிவுத் திறன் ஊற்றாகச் சுரக்கும்.

நூல்களைக் 'கற்றல்' என்பதும் தோண்டுதல் என்னும் பொருளை உடையதாகும். கல்வி என்னும் சொல்லின் அடிச்சொல்லான 'கல்' என்பது வினைச் சொல்லாகித் தொழிற் பெயராகி வரும்பொழுது 'கல்லுதல்' (தோண்டுதல்) என்னும் பொருளைக் குறிக்கிறது என்பதும் இங்குச் சுட்டிக் காட்டத்தக்கதாகும். ஆதலின் கருவி நூல்களைக் கொண்டு ஒருவர் தன்னைத் தானே தோண்டும் (கல்லுதல்) போது அறிவு தோன்றுகிறது.

இந்த அறிவு ஒருவர் பயன்படுத்தும் கருவி நூல்களின் வகைகளைப் பொறுத்து அமைகிறது. ஒருவர் மருத்துவ நூல்களைக் கருவி நூல்களாகக் கொண்டு தோண்டினால், கற்றால் அவரிடத்தில் இருக்கும் மருத்துவ அறிவு வெளிப்படுகிறது. அவரே பொறியியல் நூல்களைக் கருவி நூல்களாகக் கொண்டு கற்றல் என்னும் முயற்சி மேற்கொண்டால் அவரிடத்தில் இருக்கும் பொறியியல் அறிவு புலப்படுகிறது. எனவே அறிவு என்பது அனைவரிடத்தும் இருக்கிறது. அவரவர் தேர்வு செய்யும் கருவி நூல்களுக்கு ஏற்ப அந்தந்த துறைசார் அறிவு அவர்களிடத்தில் இருந்து வெளிப்படுகிறது என்னும் உண்மையையும் இக்குறள் விளக்குகிறது.

"ஒவ்வொரு மனிதனிடத்தும் உலக அறிவுக் கூறுகள் அனைத்தும் அமைந்துள்ளன. ஒருவர் தேர்வு செய்யும் கருவிக்கு ஏற்பவே அவரது அறிவுத் திறனால் அவர் அடையாளம் காணப்படுகிறார்" என்பதையும் இக்குறள் எடுத்துக்காட்டுகிறது. இது, "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்னும் வள்ளுவரின் வாக்கு அறிவுக் கூறுக்கும் பொருந்தி வருவதை நம்மால் காணமுடிகிறது.

இரண்டாவதாகக் கல்லாமை அதிகாரத்தில் வரும்,

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர் (குறள்: 410)

என்னும் குறளில் பொருந்திருக்கும் ஆழமான கருத்தினைக் காண முயல்வோம்.

"கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் உள்ள வேறுபாடு மக்களுக்கும் விலங்குகளுக்கும் உள்ள வேறுபாடாம்" என்பது இக்குறளின் பொதுவான கருத்து; அனைவருக்கும் முதல் நோக்கில் தோன்றும் கருத்து.

மக்களுக்கும் விலங்குகளுக்கும் இடையே இருக்கும் வேறுபாடுகள் பலவாறு உள்ளன. 'விலங்கு குறுக்காக வளரும்; மக்கள் மேல் நோக்கி வளரும் இயல்பினர்' என்பது தொடங்கிப் பல்வேறு கூறுகளைப் பட்டியலிடலாம்.

மக்களுக்கும் விலங்குகளுக்கும் அறிவின் அடிப்படையில் இருக்கும் வேறுபாடு மக்கள் ஆறறிவு உடையவர்கள்; விலங்குகள் ஐந்தறிவு உடையன.

'மாவும் மாக்களும் ஐயறி வினவே'
'மக்கள் தாமே ஆறறி வுயிரே'

என்று விளக்கும் தொல்காப்பியர்,

ஒன்று முதல் ஐந்து அறிவுடைய விலங்குகளின் அறிவுக்கூறுகளைப் பட்டியலிடும் போது, 'ஆறறிவதுவே அவற்றொடு மனனே!'என்று குறிப்பிடுகிறார்.

எனவே மனிதனை விலங்குகளிடம் இருந்து வேறுபடுத்துவது ஆறாவது அறிவாகிய மனம் ஆகும். இந்த மனம் தான் மக்கட் பண்பிற்கான ஊற்றாக உள்ளது.

அடுத்த நிலையில் விலங்குகளின் வாழ்க்கையை உற்று நோக்கினால் அவற்றிற்கு நாள்தோறும் இரண்டு வித தேடல்கள் மட்டுமே உள்ளன. 1. வயிற்றுக்கு உணவு தேடல்; 2. உணர்வுக்கு இணை தேடல், வயிற்றுப் பசியைப் போக்குவதும் இனப்பெருக்கப் பசிக்கு இரைத்தேடுவதும் தான் அவற்றின் வாழ்நாள் குறிக்கோள். எனவே மனிதர்களாகப் பிறந்தவர்களிலும் இந்த இருவித தேடல்களின் மட்டும் ஈடுபட்டுத் தம் வாழ்க்கைகளைக் கழித்து வருபவர்களை வள்ளுவர் விலங்குகள் என்றும் மாக்கள் என்றும் இழிவாகச் சுட்டுகிறார்.

இந்த விலங்கு நிலையில் இருந்து உயர வேண்டுமானால் ஒருவனுக்குக் கல்வி வேண்டும். கல்வி ஒருவனுக்கு ஆறாவது அறிவைப் பெறுவதற்கு வழிகாட்டும், அந்தக் கல்விதான் அவனுக்கு 'மனம்' என்பதை உருவாக்கும். மனம் மட்டுமே ஒருவனை மனிதனாக்கும். இந்த மனம் தோன்றி முறைப்படி வளருமானால், அவனுக்கு நன்று எது தீது எது என்பது தெரியவரும். அப்போதுதான் உலக உயிர்களிடத்து அன்புக் காட்டும் மனித நெறிக்குள் அவன் வருவான்.

மனம் ஒருவனுக்கு அறம் சுட்டும்; நீதியை உணர்த்தும், பிறரது துன்பத்தை உணரும் தன்மை பொதுவாக விலங்குகளின் இயல்பு இல்லை. ஆனால் மனச்சான்று உள்ள மனிதன் நீதி தவறாமல் நடப்பான்; அவனை நீதியின்பால் நிறுத்துவதற்கு அவனிடத்தில் மனம் வளர்ந்திருக்க வேண்டும். அது ஆறாவது அறிவினால் மட்டுமே வளம் பெறும். அந்த ஆறாவது அறிவைப் பெறுவதற்குக் கல்வி இன்றியமையாததாகும்.

தேடிச் சோறு நிதம் தின்று, பல சின்னச் சிறுகதைகள் பேசி, நரை கூடிக் கிழப்பருவமெய்தி வேடிக்கை மனிதர்களாய் வாழ்ந்து மடியும் மாக்களாக இல்லாமல், நீதி, உயர்ந்த மதி, கல்வி, அன்பு நிறைய உடையவர்களாக தானும் மகிழ்ந்து மக்கட் சமுதாயத்திற்கும் பயன்பட்டு வாழும் உயர்ந்த வாழ்க்கை நிலையைச் சுட்டவே கற்றவர்கள் மக்கள்; கல்லாதவர்கள் மாக்கள் - விலங்குகள் என்று வேறுபடுத்திக் காட்டியுள்ளார். இதனை உணரும்போது குறளின் ஆழம் நமக்கு வியப்பளிக்கிறது.

அடுத்து விருந்தோம்பல் அதிகாரத்தில் இருந்து,

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். (குறள்: 85)

என்னும் குறளில் புதைந்து கிடக்கும் பொருட்களைக் காணலாம்.

'வந்த விருந்தினருக்கு உணவளித்துவிட்டு எஞ்சியதை மட்டும் தான் உண்டு வாழும் ஒருவனது நிலத்தில் விதைக்கவும் வேண்டுமோ? என்னும் வினாவை எழுப்பி வள்ளுவர், விதைக்கத் தேவையில்லை என்னும் விடையை நம்மை பெற வைக்கிறார்.

வருகிறவர்களுக்கெல்லாம் விருந்து படைக்கும் ஒருவன், விருந்து வந்தபோது தனது உணவுக்கான நெல் தீர்ந்து விட்ட போதிலும், விதை நெல்லையும் எடுத்துச் சமைத்து விருந்து படைத்து விடுவான். அந்த நிலையில், விதைக்க வேண்டிய காலத்தில் முதல் நாள் இரவு பெய்த மழையின் ஈரம் நிலத்தில் காய்ந்து விடுவதற்கு முன்னர், மறுநாள் காலையில் விதைத்து விட வேண்டும். சிற்றூர்ப் புறங்களில் ஒரே நாளில் அனைவருக்கும் வேண்டிய உழவு மாடும் விதைக்க கிடைப்பது அரிது. அப்படியான இக்கட்டான நேரத்திலும் வந்த விருந்தினரை வரவேற்று விருந்து படைத்துக்கொண்டு இருக்கும் ஒருவனைப் பார்ப்பவர்கள், அவன் விருந்தோம்பலினால் மகிழ்ந்தவர்கள், "நீங்கள் இல்லத்தில் இருங்கள்; உங்கள் நிலத்தில் நாங்கள் சென்று விதைக்கிறோம்" என்று உள் அன்போடு ஓடிவரும் நிகழ்வுகளை வேளாண் குடி மக்கள் நிறைந்து வாழும் ஊர்ப்புறங்களில் காணமுடியும்.

மற்றொரு நிகழ்ச்சி விருந்தினரைப் பேணுவதற்கு ஏற்ற சூழ்நிலை இல்லாத வறிய நிலையில் இருக்கும் ஒருவரது இல்லத்திற்கும் விருந்தினர்கள் வரக்கூடும். அந்த நேரத்தில், தனது விதை நெல்லை வைத்து அவர்கள் சார்பாக இவர் விருந்து படைக்கிறார். இதனால் தன் உள்ளூர்காரரின் பெருமையும் மனத்தையும் காப்பாற்றுகிறர். தான் இக்கட்டில் இருந்து மீண்ட இந்த நிகழ்வை நெஞ்சில் புதைத்திருக்கும் வறிய நிலையில் உள்ள அவர் மழை பெய்த அடுத்த நாளில் வேறு எவருக்கும் விதைக்க செல்லாமல் விதை நெல்லைத் தந்து விருந்து படைத்தவரின் நிலத்திற்குத் தாமே சென்று விதைப்பார் என்பது இன்றும் நாம் காணும் நிகழ்வாகும்.

எனவே 'விருந்தோம்புவான் நிலத்தில் விதைக்க வேண்டியது இல்லை' என்னும் தொடருக்குள் வள்ளுவர் வேளாண் குடி மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்து அதனைப் பொருத்தமான இடத்தில் அமைத்துக் காட்டியிருப்பது இங்குச் சுட்டிக்காட்டத்தக்கதாகும்.

"ஓதுதற்கு எளிது; உணர்தற்கு அரிது" எனும் திருவள்ளுவ மாலையின் கூற்றுத் திருக்குறளில் அமைந்திருக்கும் ஆழமான பொருளைத் தேடும்

முயற்சியில் ஈடுபடும்போது முற்றிலும் உண்மை என்று தோன்றுகிறது. இத்தகைய அரிய பொருள்களை வெளிக்கொணர திருக்குறளை அகழ்ந்து எடுக்கும் முயற்சியில் அறிஞர் பெருமக்கள் ஈடுபடுவது வள்ளுவத்திற்கும் பெருமை சேர்க்கும் என்று உறுதியாக நம்புகிறேன்.

# திருக்குறள் என்றென்றும்

மறைமலை இலக்குவனார்

(கோலாலம்பூரில் நடைபெற்ற முதல் உலகத் திருக்குறள் மாநாட்டில் வழங்கப்பெற்ற மையக்கருத்துரையின் ஒரு பகுதி)

திருக்குறள் என்னும் பேரறிவுக்கருவூலம் வாழ்வியற்பல்கலைக் களஞ்சியமாகவும் மனிதநேயத்திற்கு வழிகாட்டும் ஒளிவிளக்காகவும் மனிதஅறிவைத் துலங்கச்செய்யும் அறிவுவளர்ச்சிக் கருவியாகவும் போரும் பிணக்கும் பூசலும் தவிர்த்து உலக அமைதிக்கு வழிகாட்டும் உலகப்பொதுமறையாகவும் விளங்குகிறது.இதன் அருமை அறியார், வாழ்வை வறிதே கழிக்கும் உயிர்ப்பிணமாகவே கருதற்குரியர். வள்ளுவத்தின் மேன்மையையும் சீர்மையையும் அறிந்து வள்ளுவர் வாய்மொழி வழுவாது போற்றுவோர் வையகத் தலைமைகொள்ளும் பெருமையெய்தி வரலாறு படைத்துவருவதனை நாளும் கண்டுவருகிறோம்.

சமயச்சாத்திரநூல்கள் மனிதனைச் சமயச்சிமிழுக்குள் அடைத்து அறிவைத் தளைப்படுத்திவிடுகின்றன. ஆயின் திருக்குறள் மனிதனுக்கு விரிந்துபரந்த சிந்தனை வழங்கித் தன்னாண்மையுடன் அறிவுத்தேட்டம் மிக்கவனாக மாற்றும் ஆற்றல் பெற்றிலங்குகிறது. சமயங்களால் வேறுபட்டுப் பிளவுற்று முடங்கிவிடாமல் மனித இனத்தை ஒற்றுமைப்படுத்தி உலக ஒருமைப்பாட்டுணர்வை வழங்குவதே திருக்குறளின் தனிச்சிறப்பாகும்.

தென்னாப்பிரிக்காவில் வழக்கறிஞர் தொழில் நடத்தச்சென்ற மோகன்தாசு கரம் சந்து காந்தியை அண்ணல் காந்திஅடிகளாக மாற்றிய பெருமை திருக்குறளுக்கே உரியது.தமது ஆசானாக அவர் போற்றிய இலியோ தால்சுதாய் அவர்களிடம் தமக்குரிய வழிகாட்டுமொழிகளாகச் சிலவற்றைக் கூறுமாறு அவர் மடல் வரைந்தபொழுது திருக்குறளில் கொல்லாமை,இன்னாசெய்யாமை என்னும் இரண்டு அதிகாரங்களைத் தால்சுதாய் பரிந்துரைத்தார். மிக இன்றியமையா மேற்கோள்களாக இன்னாசெய்யாமை அதிகாரத்தில் ஆறு குறள்களை அவர் குறிப்பிட்டிருந்தார்.(குறள்.311-315 & 319)அவற்றுள்

பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா
பிற்பகல் தாமே வரும்(குறள்.319)

என்னும் குறள் காந்தியைக் கவர்ந்தது.அது போன்றே 'கொல்லாமை' என்னும் அதிகாரத்துள்

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்று அதன்
பின்சாரப் பொய்யாமை நன்று(குறள்.323)

எனும் பொய்யாமொழியைத் தம் வாழ்வியல் குறிக்கோளாகக் காந்தி மேற்கொண்டார்.'அகிம்சை, சத்தியாக்கிரகம் எனும் காந்திய நெறிமுறைகளுக்கு வள்ளுவமே வித்தூன்றியது. 2009வரை இணையவெளியில் காணக்கிடைத்த தால்சுதாய்க்கும் காந்தியடிகளுக்குமிடையிலான கடிதப்போக்குவரத்து இப்போது இருட்டடிப்புக்குள்ளானது. எனினும் 1909-ஆம் ஆண்டு தால்சுதாய் காந்தியடிகளுக்கு எழுதிய "ஓர் இந்துவுக்கு மடல்" என்னும் அறிக்கை மட்டும் இப்போது இணையதளங்களில் உலாவருகிறது. இம் மடலில் காணப்படும்பல மேற்கோள்களில் திருக்குறள்பாக்களும் இடம்பெற்றுள்ளன. திருக்குறளைப் பெரிதும் போற்றிய காந்தியடிகள் தமிழ்மொழியை அப்போது டர்பன் நகரிலிருந்த தில்லையாடி வேதியன் பிள்ளையிடம் தமிழைத் தனிப்பயிற்சி மூலம் கற்றுக் கற்றுக்கொண்டார்.காந்தியடிகள் வேதியன் பிள்ளையிடம் தமிழைக் கற்றுக்கொண்ட செய்தியும் அவர் மூலம் திருக்குறளைத் தெளிவுறத் தெரிந்துகொண்ட செய்தியும் ஆவணப் பதிவு பெறாமல் போயின. தாமே புத்தகத்தின் மூலமாகச் சொந்தமாகக் கற்றுக்கொண்டதாகவே பலர் குறிப்பிட்டுள்ளனர்.எனவே காந்தியடிகளுக்குத் தமிழ் பயிற்றுவித்த தில்லையாடி வேதியன் பிள்ளை குறித்த கட்டுரையைப் பின்னிணைப்பாக இணைத்துள்ளேன். காந்தியடிகள் தமது 'அரிசன்' இதழில்(சூன் 6-1935) வள்ளுவர் பற்றியும் வ.வே.சு.ஐயரின் குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு பற்றியும் அடிகள் எழுதியுள்ளமை ஆவணப்படுத்தப்பட்டுள்ளது.

வான்புகழ் வள்ளுவம் காந்தியடிகளிடமும் அவரது தாக்கத்தால் நெல்சன் மண்டேலாவிடமும் ஆப்பிரிக்க அமெரிக்கர் தலைவர் மார்ட்டின் லூதர் கிங் அவர்களிடமும் செலுத்திய தாக்குரவு, குருதி சிந்தும் சூழலைத் தவிர்த்து, அறவழியிலான உரிமைப்போர்களுக்கு வழிவகுத்தமை வரலாற்றில் குறிப்பிடத்தக்க திருப்புமையமாகும். கடந்த இரண்டாயிரத்து ஐம்பது ஆண்டுகளாகச் சமூகத்திலேற்பட்ட பல்வேறு மாற்றங்களாலும் தன் தாக்கத்தை இழக்காத அதே நேரத்தில் சமூகத்தில் தொடர்ந்து தன் தாக்குரவையும் செல்வாக்கையும் நிலைநாட்டிக்கொண்டிருக்கும் ஒரே நூல் உலகில் திருக்குறள் ஒன்றேயாகும். மேலும் தமிழ் இலக்கியப்பரப்பில், சங்க இலக்கியத்திலிருந்து இன்றைய இலக்கியம் வரை அனைத்து இலக்கியங்களிலும் குறிப்பிடத்தக்க தாக்கத்தை ஏற்படுத்தியுள்ள, ஏற்படுத்திவருகின்ற ஒரே இலக்கியம் திருக்குறளே.

உலகத் தத்துவ வரலாற்றில் தனியிடம் பெறுவதும் திருக்குறளே.

திருவள்ளுவரின் சிந்தனைகளை இந்தியச் சிந்தனைகளுடன் ஒப்பிட்டு - குறிப்பாக, வேதம், சமணம், பவுத்தம், மனுநீதி, பகவத் கீதை போன்றவற்றுடன் ஒப்பிட்டு - ஆல்பர்ட் சுவைட்சர் எழுதி இருக்கும் கருத்துக்கள் சிறப்பானவை. "வாழ்வுக்கு உரிய அன்பு நெறியைக் கூறும் உயர்ந்த நூல். உயர்ந்த ஞானத்தைப் புகட்டும் செம்மொழிகளின் தொகுப்பு. இது போல் உலக இலக்கியத்தில் வேறு எங்கும் இல்லை" எனத் திருக்குறளை உளமாரப் போற்றும் சுவைட்சர், 'திருக்குறள் ஒப்புயர்வற்ற நூல்' என அறுதியிட்டு உரைக்கின்றார். திருவள்ளுவரிடம் ஆல்பர்ட் சுவைட்சர் காணும் சிறப்பு - உலக இலக்கியத்தில் வேறு எந்த அறநூலிலும், தத்துவ இயலிலும் காணப்படாத தனிப்பெருஞ் சிறப்பு - அவரது உடன்பாட்டுக் கொள்கை ஆகும்; உலகு, வாழ்வு பற்றிய எதிர்மறைச் சிந்தனையை - வள்ளுவரிடம் மருந்துக்கும் கூடக் காண முடியாது."என அறுதியிட்டுரைக்கும் சுவைட்சர் 'இந்தியச் சிந்தனையும் அதன் வளர்ச்சியும்' என்னும் தம் புகழ் பெற்ற நூலில் அவர் முப்பத்து மூன்று குறட்பாக்களை மேற்கோள் காட்டி இருப்பது குறிப்பிடத்தக்கது.("Indian thought and its development" 200-2o8 XIV. From the Bhagavad-Gita to Modern Times)

இந்தியாவில் வேதங்களும் உபநிடதங்களும் பிராமணங்களும் சாத்திரங்களும் உலகவாழ்வை அற்பமாகக் கருதியும் வாழ்வுக்குப் பிந்தைய மறு உலகவாழ்வை மேலானதாகக் கருதியும் அமைந்திருத்தலைக் கண்ட சுவைட்சர் வையத்துள் வாழ்வாங்கு வாழுமாறு நெறிப்படுத்தும் குறளே சாலச் சிறந்தது எனப் போற்றினார்.

தரும சாத்திரங்கள் என இயற்றப்பட்டவை நால்வகைச் சாதிப் பாகுபாடு இறைவனால் உருவாக்கப்பட்டது எனக் கூறி நாலாம் வருணத்தை விலங்கினும் கீழாக விதித்து மனித இனத்தின் பெரும்பகுதியை அடிமைப்படுத்தி ஆளும் வருணதருமமே 'தருமம்' என வரையறுத்தன

தருமசாத்திரங்கள் என்றும் தரும சூத்திரங்கள் என்றும் வடமொழியில் வழங்கிவருவன அடிப்படை மனிதநீதிக்கே முரணானவை.வருணதருமப் பாகுபாட்டைச் சட்டமாகக் கொண்டு மனிதருள் பெரும்பகுதியினரை அடிமைப்படுத்தி வாழ்வதற்கு வழிவகுப்பன.

சுவைட்சர் "மனுதரும சாத்திரம் பிராமணர்களால் பிராமணநலன்காக்க பிராமணர்களே வகுத்தளித்த சட்டம்" என்று மனுதரும சாத்திரத்தைப்பற்றிச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கிறார்.

வள்ளுவர் மனு இயற்றிய சட்டத்தை அடியோடு மறுத்துரைத்துச் சமநீதியையும் சமூகநலனையும் காக்க வழிவகுத்துள்ளார்.

மிஞ்சிய உணவையோ,கடவுளுக்குப் படைத்த படையலையோ சூத்திரனுக்குக் கொடுக்கக்கூடாது.சூத்திரனுக்குத் தவம் புரியும் உரிமையுமில்லை. அவனுக்குச் சமயச்சடங்குகளையும் விளக்கக்கூடாது. அறிவுரை கூட வழங்கக்கூடாது."(மனு:4-80) என்னும் மனுவின் கூற்றை எள்ளி நகையாடுவதைப் போன்று

"இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்–குறள்-229) என்று வள்ளுவர் மொழிந்துள்ளதைக் காண்க.ஆசிரம தருமத்தில் முதல்நிலையாகிய பிரமச்சரியம் பேணுவோர் வீடுவீடாகச் சென்று பிச்சையெடுக்குமாறு அறிவுறுத்தும் மனுதருமம் அங்ஙனம் பிச்சையெடுத்தற்குரிய வழிமுறைகளையும் கூறுகிறது.

நல்லாறு எனினும் கொளல் தீது மேல் உலகம்
இல் எனினும் ஈதலே நன்று.(குறள்-222) எனக் கூறும் வள்ளுவர்

ஆவிற்கு நீர் என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்.(குறள்-1066) என்று எவ்வகையிலும் இரத்தல் கூடாது என எச்சரிக்கிறார்.

மனு, கீதை ஆகியவற்றுக்கும் வள்ளுவருக்கும் இடையிலான வேறுபாட்டை விரிவாக விளக்கும் சுவைட்சர் மானுடத்தின் மேன்மைக்கு வழிகாட்டும் ஆக்கநிலைக்கூறுகள் திருக்குறளில் அமைந்துள்ளமை போன்று வைதிகத்திலும் புத்தமதத்திலும் கீதைநெறியிலும் இல்லை என அறுதியிட்டுரைக்கிறார்.("Indian thought and its development" -Ethics in Indian Popular thought. The Kural 205)

ஆயின் இந்த உண்மையை மறந்து திருக்குறள் தரும சாத்திரங்களின் சாரமே என்னும் கருத்தை வலியுறுத்தி இந்தியத்தொல்லியல் வல்லுநர் நாகசாமி ஓர் ஆங்கில நூலை இயற்றியுள்ளார்.( Thirukkural-An abridgement of sastras)இரண்டே அடிகளில் மனோன்மணியம் சுந்தரனார் இதற்கு விடையளித்துள்ளார்.

"வள்ளுவர்செய் திருக்குறளை மருவற நன்குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி-ஒரு குலத்துக்கொரு நீதி?"

பிறப்பினால் உயர்வுதாழ்வு கற்பித்து உழைக்கும் மக்களை 'இழிவானவர்கள்' என ஒதுக்கித்தள்ளி அவர்களுக்குக் கல்வி உரிமை, வழிபாட்டுரிமை,சமூகத் தகுநிலை கிடையாது என மறுத்து ஒடுக்குகின்ற தருமசாத்திரங்களின் பிழிவாகவா திருக்குறள் அமைந்துள்ளது.?

'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா

செய் தொழில் வேற்றுமையான்'(குறள்-972) என்று அனைத்து உயிர்களையும் சமமாக மதிக்கக் குறள் வலியுறுத்துகிறது. கௌதம தருமசூத்திரம், போதாயன தருமசூத்திரம், ஆபச்தம்ப தருமசூத்திரம், மானவ தரும சாத்திரம்(மனு) என்று எந்தத் தருமசாத்திரமாக இருப்பினும் பூவுலகத் தெய்வங்களாக விளங்கும் பிராமணர்களின் வாழ்க்கைமுறைகளையும் ஏனையோர் அவர்களுக்குக் குற்றேவல் புரியவேண்டிய கடப்பாடுகளையும் தெரிவிக்கும் நூலாகவே விளங்குகின்றன. ஆபச்தம்ப தருமசூத்திரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஆலிவெல் கூறும் கருத்து சிந்திக்கத்தக்கது.1364 சூத்திரங்கள் கொண்ட ஆபச்தம்ப தருமசூத்திரத்தில் 1,206 சூத்திரங்கள் (88%) பிராமணர்களின் வழமைநெறிகளைப் பற்றியே அமைந்துள்ளமையும் 158 சூத்திரங்கள் (12%) ஏனைய செய்திகளைக் குறித்து அமைந்துள்ளமையும் தருமசாத்திரங்களின் நம்பகத்தன்மையைக் கேள்விக்குறியாக்குகின்றன.

காலிலே பிறந்த சூத்திரன் கடைநிலையினன் என்று இழிவுபடுத்தும் மனுதருமசாத்திரத்தைப் பற்றிக் கூறவும் கூசுகின்றது.மனுதரும சாத்திரத்தின் பிழிவு திருக்குறள் என்னும் தவறான கருத்து நாகசாமிக்கு ஏற்பட்டதற்குப் பரிமேலழகரின் உரையே அடிப்படையாய் அமைந்திருக்கும்.

“அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்.

அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்.

வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேற் செல்வது. அது கடன்கோடன் முதற் பதினெட்டுப் பதத்ததாம்.

தண்டமாவது அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத்தக ஒறுத்தல்.” என்று மனுவை அடிப்படையாய்க் கொண்டு திருக்குறளுக்குப் பரிமேலழகர் வகுத்த உரையே நாகசாமிக்கு அடிப்படையாய் அமைந்தது. அவர் சொல்லாத பலவற்றையும் நாகசாமியே இட்டுக்கட்டிக் குறளுக்குப் புதிய பொருளைக் கற்பிக்கத் துணிந்துள்ளார்

வரலாற்றறிஞர் பி.டி.சீனிவாச ஐயங்கார்,தமிழ்மரபுக்கும் வடநூல் மரபு அல்லது ஆரியமரபுக்கும் இடையேயான வேறுபாட்டைத் தெள்ளத்தெளிவாக அறுதியிட்டுரைக்கிறார்.

“ஆரியமரபு தீவழிபாட்டை அடிப்படையாகக் கொண்டது. ஒற்றைத் தீ அல்லது முத்தீ வளர்த்து அத் தீயையே தெய்வங்களின் வாயாகக் கற்பனைசெய்து பலிப் பொருளை அளித்து வணங்குவது(அக்கினி) ஆரியமரபு. ஆனால் தமிழ்மரபு தீயைப் பயன்படுத்தா (அனக்னி) மரபாகும். சமய அடிப்படையிலான பிரித்தாளும் நெறி ஆரியருடையது. சமத்துவ மக்களாட்சி முறை தமிழருடையது.

பிற்காலத்தில் சிந்துநதிக்கரையிலிருந்து கங்கை நதிக்கரை வந்து தெற்கே ஆரியர் வரத் தலைப்பட்டபொழுது தம்மிடையே நிலைபெற்றிருந்த நால்வகை வருணமுறையைத் தமிழர் சமுதாயத்தில் நிலைநாட்ட முடியவில்லை.எனவே முற்றாக அடிமைப்படுத்தித் தம் மேலாண்மையைத் திணிக்கத் தலைப்பட்டனர்.”என்று விளக்கமளிக்கிறார்.(p.20.Pre-Aryan Tamil Culture BY P. T. Srinivasa Iyengar M.A.,ASIAN EDUCATIONAL SERVICES ,NEW DELHI ,1985)

இவர் அளிக்கும் விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போதுதான் வள்ளுவர் தீயை எதிர்மறைப் பொருளாகக் குறிப்பிடுதற்குரிய காரணம் புலனாகின்றது. சினத்துக்குத் தீயை ஒப்பிடுகிறார். தீயைச் சேர்ந்தாரைக்கொல்லி என்கிறார்.(குறள்-306)பசியைத் தீக்கு ஒப்பிடுகிறார்.(குறள்-947)வறுமையை நெருப்புடன் ஒப்பிடுகிறார்(குறள்-1049).நாகசாமி போன்றோர் திருக்குறளை முறையாகக் கற்றால் சாத்திரங்களின் பிழிவு திருக்குறள் எனப் பொருந்தாது கூறத் துணியார்.

திருக்குறளுக்கு உரை திருக்குறளே எனத் தெளிந்து பயின்றால் நவில்தொறும் அதன் நயம் தலைப்படும் என்பதில் ஐயமுமுண்டோ?ஒரு சில எடுத்துக்காட்டுகளை வழங்கவிழைகிறேன்.

எழுத்து என்பது இலக்கியங்களையும் எண் என்பது அறிவியலையும் குறிக்கும். எனவேதான் எண், எழுத்து இரண்டும் மாந்தர்க்குக் கண் என்கிறார். இன்னும் சற்று விரிவாக நோக்கி எண் அறிவியலையும் எழுத்து கலையியலையும் குறிப்பதாகக் கொண்டு வள்ளுவர் அறிவியலையும் கலையியலையும் (Science &Humanities) இரு கண்களாகக் குறிப்பிட்டார் எனப் பொருள்விரிவாக்கம் செய்கிறார் பேராசிரியர் சி.இலக்குவனார்.

இலக்கியம் நெடுங்கணக்கை அடிப்படையாகக் கொண்டது.நெடுங்கணக்கு இன்றேல் இலக்கியம் சமைக்க இயலாது.ஆயின் இலக்கியத்தைக் கற்கப் புகுவோர் அவ்விலக்கியத்தில் எத்துணைக் ‘க’கரம் இடம்பெற்றுள்ளன,எத்துணைச் ‘ச’கரம் இடம் பெற்றுள்ளன என்றா ஆய்ந்துகொண்டிருப்பர்?அது போலவே மூலமுதற்பொருளாகிய ஆதிபகவன் அண்டசராசரமாகிய இலக்கியத்தின் முதற்பொருளாய் அமைந்துள்ளது;

எனினும் இப் பேரண்டத்தைக் காண்போர் அதன் அமைப்பையும் அழகையும் பயனையும் காண்பதை விடுத்து முதற்பொருள் எங்கே எப்படி அமைந்துள்ளது என ஆயப் புகுதல் தேவையற்ற வேலை என்பதனைத் தமது முதற்குறளிலேயே தெளிவாக்கிவிடுகிறார் வள்ளுவர்.

தூய அறிவை வழிபடுதல் வேண்டும்(குறள்-2),மென்மைமிக்க அழகியலைப் போற்றவேண்டும்(குறள்-3),விருப்பும் வெறுப்பும் கடந்த உயிர்நேயம் வணங்குதற்குரியது(குறள்-4),பேரண்டத்தில் விளங்கும் அத்துணை பொருள்களிலும் சென்று தங்கியிருக்கும் (இறு>இறை>இறைவன்) இறையியல்பைத் தெளிந்தார் மாட்டு மனத்தையும் அறிவையும் இருள்சூழச் செய்யும் ஐயமும் குழப்பமுமாகிய இருவினைகளும் சேரா(குறள்-5), ஐம்புலன்களையும் அடக்கியாள்பவர் நெடிய புகழ்வாழ்வு பெற்றுப் பொலிவர்(குறள்-6), பிறருக்கு எடுத்துக்காட்டாகவோ அல்லது பிறரை எடுத்துக்காட்டாகக் கொண்டோ வாழும்வழியை வகுத்துக்கொள்ளாமல், உவமான உவமேயம் அற்றுத் தனித்தன்மை பெற்ற மூலப்பொருள் போன்றே, தனித்தன்மை பெற்றுத் திகழ்வோர்க்கு எவ்வித மனக்கவலையும் ஏற்படாது(குறள்-7),அறக்கடலாகப் பொலியும் இறைவனின் ஒரு துளியாக அறச்செயல் ஆற்றுவோர் பிறவிக்கடலை இனிதின் நீந்தும் பெரும்பேறெய்துவர்(குறள்-8),பிரபஞ்சப் பெருவெளியின் ஒவ்வொரு பண்புநலனையும் ஆரத் துய்க்கும் அறிவில்லாதவர்க்குப் புலன்களால் எந்தப் பயனுமில்லை (குறள்-9), உயிர்-உயிரற்றவை, நிலைத்தன-நிலையில்லாதவை என இருவேறுபட்டுத் திகழும் இப் பேரண்டத்தில் ஒவ்வோர் அணுவிலும் இறைவன் இயங்கும் திறமறிந்தோர் பிறவியாகிய பெருங்கடலை முழுவதுமாகக் கடந்துசெல்லும் ஆற்றல்பெற்று விளங்குவார்கள்,அங்ஙனம் இறையியங்கும் திறமறியார் பிறவிக்கடலை நீந்தும் திறனின்றி வாணாளை வீணாளாக வறிதே கழிப்பர் (குறள்-10) என்று குறள் அமைந்தவாறே பொருள்கொண்டால் எந்தச் சமயப்பூசலுமின்றி அனைத்துச் சமயத்துக்கும் பொதுவாய்த் திகழும் பேராற்றலையே வள்ளுவர் பாடியுள்ளார் எனத் தெளியலாம்.

எந்தக் குறளிலும் இடம் பெறாமல் ஆனால் எல்லாக் குறளிலும் இருப்பதாகக் கருதக்கூடிய பரம்பொருளே கடவுள் என்பதால் எந்தக் குறட்பாவிலும் இல்லாத ஆயின் அனைத்து அணுக்களிலும் இருக்கும் கடவுள்(கட+உள்) என்னும் சொல் அதிகாரத்திற்கு மகுடமாக அமர்ந்தது.

பசித்துயர் நீக்கும் விருந்தோம்பலும் உழவுத்தொழிலும் சிறக்க மழை தேவை;மழைநீரைப் போற்றிப் பாதுகாத்தலை வலியுறுத்தும் முகமாக வான்சிறப்பு இரண்டாவது அதிகாரமாக வைக்கப்பெற்றது.வானத்தில் விளங்குவதாகக் கூறப்படும் கைலாயம்,வைகுண்டம் அனைத்தையுமே உழவு சிறந்தால் இவ்வுலகத்திலேயே காணமுடியும் எனக் கூறுமுகத்தான் வான்சிறப்பு எனத் தலைப்பமைத்தார்..வானத்திற்கு மழை ஒன்றுதான்

சிறப்பு வேறு சிறப்பில்லை என அறுதியிடுவதாக அதிகாரத்தலைப்பு அமைந்து விண்ணுலகம்,இந்திரவுலகு எனும் பொய்ம்மாயப் புராணங்களைத் தகர்க்கிறது.

ஒரு நாடு உருவாகும்போது அந்த நாட்டுக்காக உழைத்தவர்கள், போராடியவர்கள்,இயற்கைச்சீற்றங்களிலிருந்து காத்தவர்கள் என எண்ணற்றவர்கள் அந் நாட்டு உருவாக்கத்தில் பங்கு பெற்றவர்களாக இருப்பார்கள்.நன்றியுணர்வு சிறிதுமின்றி அத்தகைய முன்னோடிகளை மறந்துவிடுதல் கொடுமையான வழக்கம்.எனவே அத்தகைய தியாகிகளைப் பனுவலில் பதிந்து எந்நாளும் நினைந்து போற்றவேண்டும் என்பதனை நீத்தார் பெருமை முதற்பாவில் வள்ளுவர் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. இதுபோன்றே நாட்டுக்காக உழைத்து நல்லுயிர்நீத்த அறிவியல் வல்லுநர்கள், தொழிலியல்முன்னோடிகள் ஆகியவர்களையும் மக்களின் மனச்சான்றை விளக்கமுறச்செய்யும் துறவிகளையும் ஒருங்கிணைத்தே நீத்தார் எனும் சொல்லால் குறிக்கின்றார் எனப் பொருள்கொள்ளும்போது வள்ளுவத்தின் காலங்கடந்த தொலைநோக்கு தெள்ளிதின் புலனாகின்றது.

இங்ஙனம் 133 அதிகாரங்களையும் வள்ளுவர் துணையுடனேயே பயிலலாம்.

இக்கால அறிவியல் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு குறளின் நுண்மையை மேலும் விளங்கிக்கொள்ளலாம்.

அணங்கு-கொல் ஆய் மயில்-கொல்லோ கனம் குழை
மாதர்-கொல் மாலும் என் நெஞ்சு - (குறள் 1081)

என்னும் குறளில் 'ஆய் மயில்'என்னும் தொடருக்குப் பொருள் என்ன?அழகிய மயில் என்றும் சிறந்த மயில் என்றும் பொருள் கூறுவர்.'படைத்தோன் விசேடமாக ஆய்ந்து படைத்த மயில்' என்பர் பரிமேலழகர்.

அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்கு தரும் - குறள் 911

வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆய்இழை சாதல்
அதற்கு அன்னள் நீங்கும் இடத்து - குறள் 1124

என்னும் குறட்பாக்களில் பரிமேலழகரால், ஆய்தல் இறைவன் செயலாகக் குறிக்கப்பெறவில்லை.இந்தக் குறளில் மட்டும் ஏன் இறைவனைத் துணைக்கு அழைக்கவேண்டும்?ஆய்தல் இங்கே அந்தப் பெண்ணுக்குரிய செயலே.

ஊறு ஒரால் உற்ற பின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறு என்பர் ஆய்ந்தவர் கோள் - குறள் 662

இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து
அதனை அவன்கண் விடல் - குறள் 517

ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான் சாம் துயரம் தரும் - குறள் 792

அழ சொல்லி அல்லது இடித்து வழக்கு அறிய
வல்லார் நட்பு ஆய்ந்து கொளல் - குறள் 795

என்று ஆராய்ச்சியைக் குறிப்பிடுவதைப் போன்றே "அணங்குகொல்" எனும் குறளில் ஆராய்ச்சியைக் குறிக்கிறார்.இங்கேதலைவி ஆராய்ச்சி செய்யும் மயிலுக்கு ஒப்பிடப்படுகிறாள்.ஏன்?இற்றை உயிரியலார் மயில் இணைதேடும் முறைமை ஆய்ந்து கண்டறிந்துள்ளார்.ஒரு பெண்மயில் தனக்கேற்ற ஆண்துணையைத் தேடும்போது ஆண்மயில்கள் நிறைந்திருக்கும் கூட்டத்திற்குச் செல்லுமாம்.இளைஞர் கூடும் கூட்டத்தை'கேங்'(Gang) எனும் ஆங்கிலச்சொல்லால் குறிப்பதை போன்று ஆண்மயில்கள் கூடும் கூட்டத்தை 'லெக்'(lek) எனக் குறிப்பிடுவர். இத்தகைய ஆண்மயில்கூட்டத்திற்குச் சென்று வாலின் கடைசிப் பகுதியும் காலின் முன்பகுதியும் வலிமையாக இருக்கும் ஆண்மயிலைக்கண்டறிந்து இணையாக்கிக் கொள்ளுமாம் பெண்மயில்.எனவே வலிமையும் வனப்பும் ஆற்றலும் மிக்க இணையைத் தெரிவு செய்யும் பெண்மயிலைப் போன்றவளாகவிருப்பாளோ எனும் பொருளில் 'ஆய்மயில்' எனத் தலைவியை அழைக்கிறான் வள்ளுவர் காட்டும் தலைவன்.

இவ்வாறு ஒவ்வொரு சொல்லுக்கும் புதுப்புது நயம்காட்டும் இலக்கியமாகத் திருக்குறள் அமைந்துள்ள திறம் விரிக்கிற்பெருகும்.இதே குறளில் 'கனங்குழை'என்னும் சொல்லைக் காண்கிறோம்.குழை என்னும் காதணி செல்வவளமையைக் காட்டும் வகையில் கனமாகச் செய்யப்பெற்று அணிவிக்கப்பெறுதல் இயல்பு.குறளில் ஓரிடத்தில் மட்டுமே இந்தச் சொல் இடம்பெற்றுள்ளதெனினும் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் இந்தச் சொல்லாட்சியைக் காண்கிறோம்.

கோழி எறிந்த கொடும் கால் கனம் குழை - பட் 23
கனம் குழைக்கு அமர்த்த சே அரி மழைக்கண் - நற் 16/9
கயல் ஏர் உண்கண் கனம் குழை இவை நின் - நற் 316/3
கயல் ஏர் உண்கண் கனம் குழை மகளிர் - குறு 398/3
கடிப்பு இகு காதில் கனம் குழை தொடர - பரி 23/33
கடியவே கனம்குழாஅய் காடு என்றார் அக் காட்டுள் - கலி 11/7

கணையினும் நோய் செய்தல் கடப்பு அன்றோ கனம் குழாய் - கலி 57/15

கனலும் நோய் தலையும் நீ கனம் குழையவரொடு - கலி 66/13

ஐய எம் காதில் கனம் குழை வாங்கி பெயர்-தொறும் - கலி 80/22

சொல்லர் சுடரும் கனம் குழைக்காதினர் - கலி 103/8

காண்பாம் கனம்குழை பண்பு - கலி 142/14

மின்னு நிமிர்ந்து அன்ன கனம் குழை இமைப்ப - அகம் 158/3

திருக்குறளில் கனம்குழை என்னும் சொல்லாட்சி இரண்டு குறிப்புப்பொருள்களையளிக்கிறது. கனம் என்பது முதலில் குழையின் எடைமிகுதியைக் குறித்துவந்தாலும் தலைவனின் நெஞ்சு போய்ப் பற்றிக்கொண்டதால் தலைவனின் நெஞ்சையும் சேர்த்துத் தாங்குவதால் அஃது கனம் மிகுதியாயிற்று எனம் பொருள்கொள்ளலாம்.

முதன்முதலாகத் தலைவியைப் பார்ப்பவன் ஏன் காதணியைப் பார்க்கவேண்டும்?தலைவியின் கண்களையோ ஒளிபொருந்திய நெற்றியையோ பார்த்திருக்கலாமே?தலைவியை நேருக்கு நேர் பார்த்தால் அவள் எதிர்மறைக் குறிப்புத் தெரிவித்துவிட்டால் மனம் தாங்காதே எனத் தலைவன் கருதியிருக்கவேண்டும்.அதனால் அவளைப் பக்கவாட்டில் காண்கிறான்.காதணி அவன் கண்ணையும் கவர்ந்து நெஞ்சையும் பிடித்து இழுத்துவிட்டது.ஒரு திரைப்பட இயக்குநர் போன்றே திருவள்ளுவர் இங்கே காட்சியை அமைக்கிறார்.மெல்லப் பக்கவாட்டாக வரும் தலைவன் தலைவியின் காதணியைப் பார்க்கிறான்.இதனைத் தொலைவுக்காட்சியாக (Long shot) அமைக்கும் வள்ளுவர் அடுத்து இடைநிலைக்காட்சியை(Midshot) வழங்குகிறார்.தலைவன் வருகையை அறிந்துகொண்ட தலைவி இப்போது திரும்பிப்பார்க்கிறாள். மின்வெட்டினாற் போன்று அவள் கண்வெட்டு அவனைப் படுத்தும் பாட்டை அடுத்துவரும் ஐந்து பாக்களில் உணர்வுச்சுவைமிக்க நாடகங்களாக வள்ளுவர் வடித்தளிக்கிறார். தலைவியின் கண் தலைவனின் உயிருண்ணும் கூற்றாக, தானை கொண்டு படையெடுத்த அணங்காகத் தலைவனை அச்சுறுத்துகின்றது. இப்போது அண்மைக்காட்சி.(Close-up) தலைவனும் தலைவியும் நேருக்கு நேர் நிற்பதால் அவள் எழுச்சி மிக்க முன் தோற்றம் அவனை மருட்டுகின்றது. யானையின்மேல் இடப்படும் முகபடாம் போன்று அவள் நெஞ்சை மறைக்கும் ஆடை விளங்குவதாக அவன் கூறுவது அவனது காதல் எந்த அளவு முற்றிமுதிர்ந்துள்ளது என்பதைப் புலப்படுத்துகின்றது.பகைவரும் அஞ்சி நடுங்கும்வண்ணம் பீடும் பெருமிதமும் மிக்க தன் ஆளுமை ஒரு பெண்ணால் பின்னுக்குச் சென்றுவிட்டதே என எண்ணுகிறான்.நேருக்குநேர் பார்க்கும் தலைவன்முன் தலைவி நாணிப் பின்வாங்குகிறாள்.அவளுடைய நாணும் மடநோக்கும் தலைவனின் காதலுக்கு மேலும் உரம்பயக்கின்றன.அவளது நாணம் அவனது காதலுக்குத் தலைவி

வழங்கிய அறிந்தேற்பு என்பதால் காய்ச்சப்பட்ட மது அருந்தியவனைப் போன்று காதல்வலையின் பிடியில் கட்டுண்டு விடுகிறான்.தகையணங்குறுத்தல் என்னும் இந்த அதிகாரம் காதலின் முதல் பாடமாக,இருமனம் ஒன்றிணைதற்கு முன்னுரையாக, குறிஞ்சித் திணைக்குப் பாயிரமாக அமைந்துள்ளதுடன் நவில்தோறும் இன்பம் பயக்கும் குறுங்காப்பியமாக விளங்குகிறது.

மலரினும் மெல்லிய காதலை இத்துணைச் செறிவாக,ஆழமாக உணர்த்தும் திறம் வாத்சாயனரின் 'காமசூத்திரத்திற்கு'உண்டா?நாகசாமி வள்ளுவரின் இன்பத்துப்பால் வாத்சாயனர் நூலின் பிழிவு என்பதில் எள்ளளவேனும் உண்மையுண்டா?

இந்தியத்துணைக்கண்டம் முழுமையும் தன் ஆளுகைக்குட்படுத்த நினைத்த மௌரியப்பேரரசும் குப்தப்பேரரசும் தமிழ்நாட்டை எட்டியும் பார்க்க இயலவில்லை. வம்ப மோரியர் அத்தம் அலறத் தாக்கிய வீரச் செருக்கும் குடிநலன் பேணும் செங்கோன்மையும் கொண்ட பெருவேந்தர் ஆண்ட தமிழகத்தின் தனிப்பெரும் புலவர் திருவள்ளுவர் சால்பும் நேர்மையும் சிறிதுமற்ற சாணக்கியரைப் பார்த்தா அரசியல் வகுப்பார்?நாகசாமியே கௌடில்யருக்கு நற்சான்று வழங்குகின்றாரா?வள்ளுவர் மனுவிடமும் சாணக்கியரிடமும் வாத்சாயனரிடமும் கருத்துகளைக் கடன்பெற்றதாகக் கூறும் நாகசாமி இந்த நான்கு நூல்களையும் படித்துத்தான் இவ்வாறு கூறினாரா?அறிவின் ஆழத்தை அறிந்த பெரும்புலவர் வள்ளுவர் அறிவை ஆய்ந்து வகுத்துரைக்கும் திறத்தைக் குறள் மூலம் அறிகிறோம்.

வால் அறிவு(குறள்.2) X கார் அறிவு (குறள்.287)

பேரறிவு (குறள்.215) X புல்லறிவு (குறள்.331&அதிகாரம்.85:881முதல் 890வரை)

அறிவுடைமை(அதிகாரம்.43) X பேதைமை(அதிகாரம்.84)

அறிவின் வகைமைகளாக வள்ளுவர் வகுத்தளித்த மேற்கண்ட முரண் இணைகளை ஆய்வு செய்தால் அறிவாற்றல் உளவியல் ( Cognitive psychology psychology), அறிவாற்றல் நரம்பு விஞ்ஞானம் (Cognitive neuroscience)ஆகிய அறிதுறைகள் மேலும் ஆழம் பெறும்.அறிவின் பல்திறப்பாங்கையும் வள்ளுவர் ஆழச் சிந்தித்துப் பல்வேறு கோணத்தில் எடுத்தியம்புகிறார்.

48.வலியறிதல்

49.காலமறிதல்

50.இடனறிதல்

71.குறிப்பறிதல்

72.அவையறிதல்

85.புல்லறிவாண்மை

என்னும் அதிகாரங்கள் சமூகவாழ்வில் அறிவு செயற்படவேண்டிய பாங்கினைச் சுட்டுகின்றன.

110.குறிப்பறிதல்
128.குறிப்பறிவுறுத்தல்
என்னும் அதிகாரங்கள் காதல்வாழ்வில் காதலர்க்கு வேண்டிய அறிதிறனை விளக்குகின்றன.இத்தகைய வகைப்பாடும் பகுப்புமுறையும் கொண்ட வாழ்வியல்நூலை வேறெம்மொழியிலும் காட்ட இயலுமா?இவை தவிர நுண்மாண்நுழைபுலம்(குறள்.407), ஒட்பம் (குறள் 425) என்பவை இன்றும் ஆழமறிய இயலாக் கலைச்சொற்கள்.

இவையனைத்தும் இன்றைய அறிவியல்வல்லுநர்களால் மேலும் ஆயப்படவேண்டிய அறிவுப்புதையல் திருக்குறளில் அமைந்துள்ளமைக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

இதனைப் போன்றே பல்வேறு அறிதுறைகளின் அடிப்படையில் திருக்குறளை ஆய்ந்தால் பல புதிய கருத்துருவாக்கங்களும் கோட்பாடுகளும் மலரும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

சான்றாதாரங்கள்:

திருவள்ளுவர் கூறும் ஆய்மயில்:

பெண்மயில் தன் இணையைத் தேரும் முறை:

Leks are common in species like the peacock which belongs to the order of Galliformes, heavy-bodied ground-feeding birds. A lek is a group of males – among peacocks, often the ones with relatively less impressive feathers – displaying together.

“By definition, leks are not organised around food or nesting sites or anything else a male could usefully defend. Instead, a female visits a lek to compare and contrast, to see who’s the hottest of them all. Having selected, she mates and goes away again. For a girl this is a great system. She gets to have sex with the guy she likes best – and doesn’t even have to see him in the morning,” wrote Judson, conceding that it’s tough on boys.

“Being judged means you have to compete. That’s why lekking species produce some of the most astounding show of talents, the most bodacious beauty contests on earth,” she wrote in her mock advice to a lousy peacock looking to impress peahens. “If you can’t make it on your own, gangs are often the solution.”

மக்களிடையே திருக்குறளை அறிமுகப்படுத்திப் பரப்புரை மேற்கொள்ளத் திருக்குறளுக்கென ஒரு நாளை வரையறுத்துத் தமிழரனைவரும்

சோவியத் எதிர்ப்பு

அட்லாண்டிக் ஒப்பந்தத்தில் சேர்வதைக் கண்டித்து ஒரு ஆட்சேபணைச்

49,00,00,000 செலவில் 119874 டன் கச்சா பருத்தியை இறக்குமதி செய்திருப்பதாகத் தெரிகிறது. —குளோப்

# பெரியார் ஈ. வெ. ரா. வேண்டுகோள்

★

## 12—4—'49 — குறள் நாள்

இந்த மாதத்தில் சென்னையில் குறள் நாள் வெகு ஆடம்பரமாகக் கொண்டாடப்பெறவேண்டும் என்று ஆசை கொண்டிருந்தேன். பெரியார் திரு. வி. க. அவர்களையும் அதில் கலந்து கொள்ள வேண்டும் என்று வேண்டிக்கொண்டேன். அவரும் மகிழ்ச்சியோடு இசைந்தார். ஆனால், அதை இந்த மாதத்தில் நடத்த எனக்குப் போதிய வாய்ப்பில்லாமல் போய்விட்டது குறித்து வருந்துகிறேன்.

கோவை ஜில்லா சுற்றுப் பிரயாணமும், பிரசாரப் பள்ளியும் இம்மாதத்தைக் கவர்ந்து கொண்டன. அவற்றை மாற்ற முடியவில்லை. ஆதலால் சமீபத்தில் அடுத்த மாதத்தில் ஒரு நாள் தனிமையாய் சென்னையில் கொண்டாடக் கருதி இருக்கிறேன்.

ஆனாலும் இம் மாதம் 12-ம் தேதி நல்ல முழு நிலவு நாளாக இருக்கும். ஆதலால் 12-ம் தேதியில் தமிழ் நாடு முழுவதும் திராவிட கழகத்தார் உட்பட எல்லாத் தமிழ் மக்களும் அவசியம் தவறாமல் ஒவ்வொரு ஊரிலும், திருவள்ளுவர் நாள் கொண்டாட வேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன்.

தமிழர் பண்பு, திராவிடகழகக் கொள்கைகள் யாவற்றிற்கும் குறளில் ஆதாரங்கள் இருக்கின்றன. குறள் ஜாதிகள், மதங்கள், கடவுள்கள் ஆகியவற்றைக் கடந்த அறிவுநூல்; மூடநம்பிக்கைக்கு ஆளாகாத பகுத்தறிவு நூல்; அன்பையும், ஒழுக்கத்தையும், உயர்ந்த பண்புகளையும் ஜாதியாகவும் மதமாகவும் கடவுளாகவும் கருதச் செய்யும் அரிய நூல்.

எதைக்கொண்டு இப்படிச் சொல்கிறேன் என்றால், மேற்குறிப்பிட்ட தன்மைகளுக்கு எல்லாம் வேண்டிய ஆதாரங்கள் குறளில் இருக்கின்றன.

குறளுக்கு இதுவரை கண்ட உரைகள் பல அவரவர்கள் கருத்துக்கு ஏற்ப கண்டவைகளாகவே காணப்படுகின்றன. ஆதலால் ஜாதி மத கடவுள் உணர்ச்சி கடந்து இயற்கை உணர்ச்சியோடு பகுத்தறிவைக் கொண்டு நடுநிலையில் நின்று உரை கண்டால் அவ்வுரை மூலம் திராவிட கழகம் விரும்பும் கருத்துக்களைக் காணலாம். ஆதலால் குறளைப் போற்றுங்கள்! குறளைப் படியுங்கள்!! குறள் உள்ளத்தைக் காணுங்கள்!!!

**எனவே, ஏப்ரல் 12-ம் தேதியை குறள் நாளாகக் கொண்டாடுங்கள் என்று வேண்டிக் கொள்கிறேன்.**

—ஈ. வெ. ரா

கொண்டாடவேண்டுமென்பது தந்தை பெரியாரின் ஆவல்.

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 12 | ஆனி 17, தி.பி 2052 | சூலை 1, பொ.ஆ 2021






## மொழிஞாயிறு
## ஞா.தேவநேயப்பாவாணர்

(கட்டுரை உள்ளே)

## திருக்குறள் பட்டிமன்ற வரலாறு - தொடர்கட்டுரை

-பேராசிரியர் கண.சிற்சபேசன்



முதுபெரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் நம் குறள்நெறி இதழின் நிறுவனர் செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் அவர்களுடன் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் பணியாற்றியுள்ளார்.பட்டிமன்றப் பொழிவில், அறுபதுகளின் தொடக்கத்திலிருந்தே கோலோச்சிவரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் திருக்குறள் தொடர்பான பட்டிமன்றங்களின் வரலாறு குறித்து ஒரு தொடர்கட்டுரையைக் கடந்த ஆறு இதழ்களில் வழங்கியுள்ளார்.அதன் ஏழாம் பகுதி இங்கு வெளிவருகிறது.ஆர்வலர்க்கு விருந்தாகத் தொடர்ந்து வெளிவரும்.

**பட்டிமன்றப் பொருள்: இளைஞர்கள் திசையறிந்து நடக்கிறார்களா? திசைமாறிப் பறக்கிறார்களா?**

**இடம்: இராணி மேரி கல்லூரி - சென்னை**

இந்தப் பட்டிமன்ற நிகழ்ச்சியில் வழக்கறிஞர் தா.இராமலிங்கம், சிவக்குமார், வழக்கறிஞர் சுமதி, டாக்டர்.சுதாசேஷயன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

வழக்கம்போல மாணவியர் கூட்டம் மிகுந்த ஆரவாரத்தோடு கேட்கத்தொடங்கியது. கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் சாரதா நம்பியாரூரன் வரவேற்புரையிலேயே எங்கள் அனைவரையும் அழகாக அறிமுகப்படுத்தினார். அது மாணவியரை மேலும் தூண்டிவிட்டது. திசையறிந்து நடக்கிறார்கள் என்ற அணியில் பேசிய சிவக்குமார் அணியினர் நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல், இல்வாழ்க்கை போன்ற அதிகாரக்கருத்துக்களை எடுத்துக்கூறி வாதிட்டனர்.

திசைமாறிப் பறக்கிறார்கள் என்ற அணியில் பேசிய வழக்கறிஞர் இராமலிங்கம் அணியினர் இளமையின் கவர்ச்சியை எடுத்துக்கூறி காதல் சிறப்புரைத்தலுக்கு அரணாகத் திருவள்ளுவரது காமத்துப்பால் அதிகாரத்தை எடுத்துக்கூறியதோடு எதிர் அணியினரைத் துறவிகள் எனக் கேலி செய்து 'இவர்களுக்கு காவியுடை வாங்கிக் கொடுங்கள்' என்று வேண்டுகோளும் விடுத்தனர். மாணவியர் கூட்டம் எதிரே கிடந்த கடலைவிட ஆரவாரித்தது.

எனது தீர்ப்புரைக்கான நேரம் வந்தது. நான் எழுந்தவுடன் மொத்த மாணவியர் கூட்டமும் 'திசை மாறிப்பறக்கிறார்கள்' என்று கூச்சலிட்டனர்.

அவர்களை எப்படி சமாளிப்பது? 'அதுதான் எப்படியென்று பார்க்கலாமா?' என்று நான் கேட்க 'ஓ பார்க்கலாமே' என்று மீண்டும் ஓர் அலை.

'முதலில் நடப்போம்' என்று தொடங்கினேன். திருவள்ளுவரின் அறன்வலியுறுத்தல் என்ற அதிகாரத்தை முதலில் சொன்னேன். நமக்குள்ள ஐம்பொறிகளையும் எப்படித் தீமை புகாதவாறு காப்பாற்றிக்கொள்வது என்பதற்கு அரணாக

'உரனென்னும் தோட்டியால் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து' -திருக்குறள் 24

என்ற குறளைச் சொன்னேன். யானையைப் பற்றியும் அது காதை வீசி வரும் கோலத்தையும் வருணித்து அவ்வளவு பெரிய யானை, பாகன் கையில் வைத்திருக்கும் ஒரு சிறு அங்குசத்திற்குக் கட்டுப்படுவதுபோல நமது கண், காது, மூக்கு, வாய், உடம்பு என்ற ஐந்து யானைகளின் அட்டகாசத்தையும் ஒரே அறிவுகொண்டு அடக்கமுடியும். இதை நீங்கள் நம்புகிறீர்களா? என்று கேட்க 'நம்புறோம் ஐயா' என்றது மாணவர் கடல். ஆனால் ஐயன் திருவள்ளுவர் நமது ஐந்து பொறிகளையும் அழித்துவிடச் சொல்லவில்லை. அவற்றைத் தீமை புகாமல் காத்துப் பழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும் என்றுதான் சொல்கிறார். அவர்களுக்கே இந்த உலகம் வசப்படும்.

'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு' -- திருக்குறள் 27

திருவள்ளுவர் சொல்லியவழியில் வாழாதவர்கள் தமது வாழ்க்கையில் எப்படிச் சீர்கெட்டு அழிந்தார்கள் என்பதை நாம் சிலப்பதிகாரத்தில் வரும் கோவலன் வாழ்க்கையாலும் இராம காதையில் வரும் இராவணன் வாழ்க்கையாலும் அறிகிறோம் என்று எடுத்துக்கூறினேன். அதனால் தான் இந்த அணியின் தலைப்பு 'திசையறிந்து நடக்கிறார்கள்' என்று கொடுக்கப்பட்டுள்ளது. நாம் போகிற திசையை அறிந்து மெல்ல நடக்கிறார்கள்.

தாங்கள் போகிற வழியை இவர்கள் முதலிலேயே ஆராய்ந்து அதில் எப்படிப் பயணிப்பது என்பதையும் முடிவு செய்த பிறகே இவர்கள் நடக்கத் தொடங்குகிறார்கள். விரைந்து ஓடுவதில்லை. ஆகவே இவர்கள் பயணத்தில் பதட்டம் இல்லை, பதறல் இல்லை.

'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு' -திருக்குறள் 467

என்பது இவர்களது நெறி.

போதும் இப்போது பறப்போமா? என்று கேட்டேன். 'ஓ பறப்போமே' இது கூட்டத்தின் எதிரொலி. எனது உற்சாகம் பெருகியது. பறப்பதில் இருக்கும்

சுகம் நடப்பதில் ஒரு போதும் கிடைக்காது. நான் பலமுறை வானத்தில் பறக்கும் பறவைகளைப் பார்த்து 'ஐயோ இதுபோல நம்மால் பறக்கமுடிந்தால்' என்று ஏங்கியிருக்கிறேன். பாரதியார்கூட 'வானில் திரியும் புள் எலாம் நான்' என்று பாடியுள்ளார்.

அதிலும் காதற்சிறகை அடித்துப் பறப்பது என்றால் சுகத்திற்கு எல்லையுண்டோ? என்று நான் கேட்க மொத்தக் கூட்டமும் 'இல்லை. இல்லை ' என்று போட்ட கூச்சலில் கடல் சில வினாடிகள் தனது ஒலியை நிறுத்திக்கொண்டது.

'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள' -திருக்குறள் 1101

முன்பு எதிர் அணியினர் கருத்துக்களைக் கூறியபோது ஐம்புலனடக்கம் பற்றிக் குறிப்பிட்டேன். ஆனால் இங்கே திருவள்ளுவர் ஐம்புலன்களின் நுகர்ச்சி அதாவது துய்த்தல் பற்றிச் சொல்கிறார். இருபாலாரும் பெறுகின்ற காதல் இன்பத்தின் சிறப்பையும் அந்தக் காதல் வாழ்க்கையில் அவர்கள் இன்பத்தையும் அவர்கள் அடைகின்ற பிரிவுத் துன்பத்தையும் பலவாறாகக் கூறியுள்ளார் என்று சொல்லி முடித்தேன். பறத்தல் இன்பம்தான். ஆனாலும் எவ்வளவு நேரம் வானில் ஒரு நோக்கமும் இல்லாமல் பறந்து திரியமுடியும்?. பறவைகள்கூட எவ்வளவு பறந்தாலும் கடைசியாகத் தங்களது கூட்டை வந்தடைகின்றன. ஆகவே அவை நாம் நினைப்பதுபோல திசையறியாமலோ திசை மாறியோ பறப்பதில்லை. திசையறிந்தே பறக்கின்றன. வந்தடையவேண்டிய இலக்கின்றி அவை பறப்பதில்லை.

நீங்கள் இங்கே கடற்கரையில் மீனவச் சிறுவர்கள் பட்டம் பறக்கவிடுவதை பார்த்திருப்பீர்கள். அந்தப் பட்டத்தைப் பிணைத்திருக்கும் மெல்லிய நூல் உங்கள் கண்ணுக்குத் தெரியாது, பட்டம் வானில் பறப்பதுமட்டுமே தெரியும். பட்டம் காற்றில் மிகக் களிப்புடன் அசைந்தாடுவதற்குக் காரணம் அந்த நூல்தான். இந்த உண்மையை நூல் அறுந்த மறு வினாடி பட்டம் தலை குப்புற மண்ணைக் கவ்வுவதிலிருந்து நாம் புரிந்துகொள்கிறோம்.

ஆகவே இவர்கள் சொல்வதுபோல திசையறிந்து நடந்தாலும் ஒரு இலக்கை அடையும் நோக்கம் இருக்கவேண்டும். அவர்கள் கூறுவதுபோலத் திசையறிந்து பறந்தாலும் ஒரு இலக்கை அடையும் நோக்கம் இருக்கவேண்டும்.

ஆனால் ஒருபோதும் திசை தெரியாமல் நடக்கக் கூடாது; திசை மாறிப்பறக்க நினைக்கவே கூடாது. ஆனால் பறப்பதிலே கிடைக்கும் இன்பத்திற்காக இளைஞர்கள் பறக்க ஆசைமிகக் கொள்கிறார்கள். பறங்கள். ஆனால் ஒருபோதும் திசைமாறிப் பறக்காதீர்கள்.

## பேராசிரியர் பேசுகிறார்:

(அன்பர்கள்வேண்டுகோளுக்கிணங்க இதழ்தோறும் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள் தம் காலத்தில் முழங்கிய கருத்துரைகள் வெளியிடப்படும்.இவை இன்றளவும் தேவைபடுவன என்பதனைப் படித்தால் உணரலாம்.)

# தமிழ் மாநிலத்திற்கு இருபெயர் எற்றுக்கோ?

(பேராசிரியர் சி.இலக்குவனார் குறள்நெறியில் எழுதிய தலையங்கம்)



---

*சென்னை மாகாணம் எனும் பெயரைத் தமிழ்நாடு என மாற்றுமாறு தியாகி சங்கரலிங்கனார் வலியுறுத்தி உண்ணாநோன்பிருந்து உயிர்நீத்தார். பல்வேறு இலக்கிய அமைப்புகளும் அன்றைய அரசை வேண்டின. பேராசிரியர் சி.இலக்குவனார் தமிழகப்புலவர் குழுச் செயலாளர் என்னும் முறையில் அன்றைய அரசுக்கு வேண்டுகோள் விடுத்தார். அவருக்கும் அன்றைய கல்வி அமைச்சர் சி.சுப்பிரமணியத்திற்கும் இடையே ஒரு பட்டிமன்றமே மடல்வழி நடந்தது. நிறைவாக அழைப்பிதழ்கள் செய்தித் தொடர்புகளில் தமிழ்நாடு எனத் தமிழில் வழங்கலாம் எனவும் ஆனால் அதிகாரபூர்வமாக சென்னை மாகாணம் எனக் குறிக்கும் Madras State தான் பயன்படுத்தப்படும் என அரசு தெரிவித்தது. இதனைக் கண்டிக்கும் பேராசிரியரின் தலையங்கவுரையே இக் கட்டுரை. அறிஞர் அண்ணா ஆட்சிப் பொறுப்பேற்ற பின்னரே தமிழ்நாடு என்னும் பெயர் இம் மாநிலத்திற்கு அனைத்துக் கட்சியினரின் மகிழ்வான இசைவுடன் சூட்டப்பட்டது. இன்றும் சிலர் தமிழ்நாடு என்னும் பெயரைக் கண்டு முகம்சுழிக்கும் கொடுஞ்செயலைக் காண வருந்துகிறோம்*

---

தமிழ் மாநிலத்தைத் தமிழில் தமிழ்நாடு என்றும் ஆங்கிலத்தில் Madras state என்றும் அழைப்பது எட்டுணையும் பொருந்தாது. அறிவுநெறிக்கும் ஒவ்வாதது. ஒரு மாநிலத்தின் பெயரை எந்த மொழியில் கூறினாலும் ஒரே பெயராகத்தான் இருத்தல் வேண்டும். இன்றேல் அது கவர்பொருள்பட்டு அறியாதாரை மயங்கச் செய்யும். வெளிநாடுகளில் Madras state தான் தமிழ்நாடு என்று அறிய இயலாதவர்களும் இருப்பர்.

தமிழ்நாடு என்பது தொன்றுதொட்டு இருந்து வரும்பெயராகும். ஆங்கிலேயர்க்கு அடிமைப்பட்ட காலத்தில்அவர்கள் வசதிக்கு ஏற்பவும், மக்களின் தேசீய உணர்ச்சியையும் நாட்டுப்பற்று, மொழிப்பற்று முதலியவற்றை மறக்கச் செய்யவும் தலைநகரங்களின் பெயரால் மாநிலங்களுக்குப் பெயரிட்டனர். மைசூர், பம்பாய், சென்னை என்னும் தலைநகரங்களின் பெயரால் மாநிலங்களை அழைத்தனர். ஆங்கில ஆட்சி அகன்றதும் மைசூர் கன்னட மாநிலமாகவும், பம்பாய் மகாராட்டிரம், குசராத் மாநிலங்களாகவும் ஆக்கப்பட்டன. ஆனால் சென்னை மாநிலம் மட்டும்

தமிழில் தமிழ்நாடு என்றும் ஆங்கிலத்தில் மெட்ராசு என்றும் குறிப்பிடப்படுவது தமிழ்நாட்டவரின் மொழிப்பற்றற்ற தன்மையையும் அடிமைப்பற்றையும் வெளிப்படுத்துகின்றது. வெளிநாட்டிலிருந்து வருகின்றவர் கூட –வடநாட்டார் உள்பட ஆங்கிலத்தில் தமிழ்நாடு என்றே குறிப்பிடுகின்றனர். அங்ஙனமாகவும் நம் மாநில அரசு ஆங்கிலேயரின் அடிமை அடையாளமாக இருக்கும் ஆங்கிலப் பெயரை விடாது பற்றிக் கொண்டிருப்பது ஏற்றுக்கு? உலகில் வேறெங்கணும் இவ்வாறு ஒரு மாநிலத்திற்கே இருவேறு பெயர்களைக் கொண்டிருக்கும் புதுமையைக் காணல் இயலாது. ஒரு மாநிலத்திற்கு அதன் மொழியில் என்ன பெயரோ அஃதேதோன் ஏனைய மொழிகளிலும் வழங்கும். வேண்டுமானால் வேற்றுமொழியின் ஒலி முறைக்கு ஏற்பச் சிறிது ஒலிமாற்றம் பெறும். England எனும் ஆங்கிலப் பெயரை இங்கிலாந்து என்று தமிழிற் சொல்வது போலவும், தமிழகம் எனும் தமிழ்ப் பெயரை உரோமன் நாட்டில் பண்டு 'தமரிகே' எனக் குறித்தது போலும் மாற்றம் உண்டாகலாம். ஆனால் இவ்வாறு தமிழ்நாடு, Madras என ஒன்றுக்கு ஒன்று பொருந்தாத முறையில் அமைதல் இல்லை.

அண்மையில் தமிழ்நாடு சட்டமன்றத்தில் ஆங்கிலத்தில் தமிழ்நாடு என்றே குறிப்பிட வேண்டும் என்று உறுப்பினர்கள் பலர் வேண்டியபோது, அதனை மறுத்த ஒருவர் தமிழ்நாடு என்பது பிரிவினையைத் தூண்டும் என்று கூறியதாகச் செய்தியிதழ்களில் வெளி வந்துள்ளது. தமிழில் தமிழ்நாடு என்று கூறுவதால் பிரிவினை உணர்ச்சி தோன்றாதபோது ஆங்கிலத்தில் கூறினால் மட்டும் அவ்வுணர்ச்சி தோன்றும் என்பது அறிவு சான்ற கூற்றாகத் தோன்றவில்லை. ஆகவே, பிரிவினை உணர்ச்சிக்கு இடம் கொடுக்கும் என்று காரணம் காட்டித் தமிழ்நாடு என ஆங்கிலத்திலும் கூறுதல் ஆகாது என்பது சற்றும் பொருந்தாது. முன்பே இவ்வாறு இருக்க வேண்டும் என முடிவு செய்துவிட்டோம் அதனால் இப்பொழுது மாற்றுதல் வேண்டியதின்று என்று கூறுவதும் மக்களாட்சி முறைக்கு ஒத்தது ஆகாது. காலத்துக்கு ஏற்ப அரசியல் அமைப்புச் சட்டங்களையே திருத்தும் போது தவறாகச் செய்து கொண்ட ஒன்றைத் திருத்திக் கொள்ளக் கூடாது என்பதும் பொருந்தாது.

பாராளுமன்றத்தில் இதனைப் பற்றி வினா எழுப்பிய ஞான்று இது மாநில மன்றத்தைச் சார்ந்தது என விடையிறுக்கப்பட்டது. இங்கோ ஒன்றுக்கொன்று தொடர்பின்றிக் கருத்துகள் அறிவிக்கப்பட்டுள்ளன.

மொழிப்பற்றும், அடிமை வெறுப்பும், நடைமுறை அறிவும் மேலோங்குமானால் தமிழ்நாட்டுச் சட்டமன்றம் எதிர்க்கட்சியினர் கொண்டு வந்த மாற்றத்தை ஏற்றுத் தமிழ்நாடு என்று எல்லா மொழிகளிலும் அழைப்புக்கு வழி செய்து இருக்கும். எதிர்கட்சியினர் வேண்டுகின்றனர் என்பதற்காக நல்லது ஒன்றை - நாட்டுக்குரியது ஒன்றை - தன்மதிப்பு அளிப்பது ஒன்றைச் செய்ய மறுப்பது மக்களாட்சி நெறிமுறை ஆகாது.

இன்று ஆளும்கட்சியாயிருக்கும் காங்கிரசுக் கட்சியினர் தம்மை மொழிப்பற்றற்றவர்களாகக் காட்டிக் கொள்ளும் முறையில் செயல்புரிவது நன்றன்று என்று சுட்டிக்காட்ட வேண்டியதின்று. மக்கள் விருப்பம் அறிந்து மாநிலத்தை ஆளும் நெறியில் செல்வதே மக்களாட்சி மாண்புறு நெறியாகும்.

**குறள்நெறி மலர்: 1 இதழ் 14, ஆடி 17,1995 (1.8.1964)**

# 'திருவள்ளுவரும் பிராமணியமும்' - மதிப்புரை
## மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர்

தமிழே உலக முதல் உயர்தனிச் செம்மொழியாயும் திரவிடத் திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமுமாயும், தமிழரே உலகெங்கும் ஒளி பரவுமாறு முதல் முதல் நாகரிகப் பண்பாட்டு விளக்கேற்றினவ ராயும், இருந்தும்; இற்றைக்கு 2500 ஆண்டுகட்குமுன் நாவலந்தேயத்திற் குள்ளும் 2000 ஆண்டுகட்கு முன் தென்னாட்டிற்குள்ளும் வந்து புகுந்த பிராமணர் என்னும் ஆரியப் பூசாரியர், தாமுந் தம் எச்சமரபும் பழங்குடி மக்களான தமிழரையும் திரவிடரையும் என்றும் அடிமைத் தனத்துள்ளும் அறியாமையுள்ளும் அமிழ்த்தி மேனத்தாக வாழுமாறு, தம் வெண்ணிறத்தையும் தம் முன்னோர் மொழியின் எடுப்பொலியையும் பயன்படுத்தித் தம்மை நிலத்தேவராகவும் தம் வழக்கற்ற முன்னோர் மொழியைத் தேவமொழியாகவும் காட்டி, தமிழ நாகரிகத்தின் தனிப் பெருஞ் சான்றாயிருந்த பல்லாயிரக்கணக்கான முதலிரு கழக நூல்கள் அத்தனையையும் அழித்துவிட்டனர். இன்று தமிழ் நாகரிகத்தின் தனிச் சிறப்பைத் தாங்கி நிற்கும் இருபெருந் தூண்கள், இடைக்கழகத்திற்கும் கடைக்கழகத்திற்கும் இடையிலெழுந்த தொல்காப்பியம என்னும் இலக்கண நூலும் திருக்குறள் என்னும் இலக்கிய நூலுமே. இவ்விரண்ட னுள், பொதுமக்களும் புலமக்களுமான இருசாரார்க்கும் விளங்குவதும், மன்பதை முழுவதற்கும் உலகுள்ள ளவும் பயன்படுவதும், இன்றும் எம்மொழியிலும் இணையில்லாததும் திருக்குறளாகும்.

இவ்விரு நூல்களையும், தமிழ்நாட்டையே தாய்நாடாகவும் தமிழையே தாய்மொழி யாகவும் கொண்டு தமிழாலேயே பெரும்பாலும் வாழ்ந்து வரும் பிராமணருட் சிலர், நூலாசிரியரும் நுவலாசிரியரும் உரையாசிரியரும் பதிப்பாசிரிய ரும் தாளாசிரியருமாயிருந்து ஆரிய வழியினவாகக் காட்டிக், கட்டுப்பாடா கவும் நன்றிகெட்ட தனமாகவும் தம் முன்னோர் ஏமாற்றை இன்றும் போற்றி வருகின்றனர். நூலாசிரியருட் சிறப்பாகக் குறிப்பிடற் குரியவர் வரலாற்றாசிரியர்.

முன்பு காளிக்கோட்டப் பல்கலைக்கழக வரலாற்றுத் துறை வாசகராகவும், பின்பு சென்னைப் பல்கலைக்கழக இந்திய வரலாற்றுப் பழம்பொருட்கலைப் பேராசிரியராகவும், இருந்த (S) கிருட்டிணசாமி ஐயங்காரால் 1920-ல் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட 'இந்தியக் கலை நாகரிகத்திற்குத் தென்னிந்தியா உதவிய சில கூறுகள்' (Some Contributions of South India to Indian Culture) என்னும் நூல், 1942-ல் காளிக் கோட்டப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப் பெற்றது. அதன் 6ஆம் அதிகாரம் 'குறள் - ஒரு பண்பியல் தமிழ் இலங்கு நூல்' (The Kural - A Characteristically Tamil Classic)என்னுந் தலைப்பினது, அதில், திருக்குறளை ஓர் ஆரியவழி நூலாகவும் திருவள்ளுவரை ஓர் இழிகுல மகனாகவும், தம்மால் இயன்ற அளவு காட்டியுள்ளார்ர் அதன் ஆசிரியர். அதைப் பொறுக்க மாட்டாத உண்மைத் தமிழ்மகனாரும் மானியருமான (M.) சோமசுந்தரம் பிள்ளை என்னும் ஓய்வுபெற்ற தலைமையாசிரியர், 1946-லேயே அதைக் கண்ட துண்டமாக நறுக்கிச் சின்னபின்னமாகச் சிதைத்து வரலாற்றிற்கும் உண்மைக்கும் ஏற்ப வன்மையாகக் கண் டித்துத், 'திருவள்ளுவரும் பிராமணியமும்' (Tiruvalluvar and Brahminism) என்னும் தலைப்பில் ஓர் ஆங்கிலச் சுவடியை இயற்றினார். அஃது இதுவரை புதையுண்டு கிடந்தது. இன்று தெள்ளிய தமிழறிஞரும், தேற்றிப் போற்றும் அருநூற் களஞ்சியரும், தமிழ்ப் பேராசிரியர்க்கெல் லாம் வழிகாட்டும் மொழித் தொண்டரும், கோடி பெறினுங் குன்றுவ செய்யாக் குடிப்பிறந்தாரும், உலகத்

தமிழ்க் கழக நெறியீட்டுக் குழு வுறுப்பினரும், காஞ்சிப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலை வரும், ஆகிய பேரா. கோ. 'இராமச்சந்திரன்' என்னும் நிலவழகனாரால் அது, சுந்தரம் பிள்ளை, பூரணலிங்கம் பிள்ளை, மறைமலையடிகள், கா.சுப்பிரமணியப் பிள்ளை, சோமசுந்தர பாரதியார், துடிசைக்கிழார் முதலிய தமிழச் சான்றோர் இல்லாக் காலத்தில், ஆரிய அடிமை நோய்க்கு அருமருந்தாக எளிய விலைக்கு வெளியிடப்பட்டுள்ளது. திருக்குறளின் பொருட்டமிழ்மையை எவரும் மறுக்கொணாச் சான்று காட்டி ஏரண முறைப்படி நிறுவும் இந் நூல் நெடுங்கால வறக்கந் தெளியும் இற்றைத் தமிழனுக்கு மிகமிக வேண்டியதாம். இதை, ஆசிரியர்,

1. பர். (Dr.) எசு. (S.) கிருட்டிணசாமி ஐயங்கார் பொத்தகத்தி னின்று எடுத்த பகுதி (Extract from Dr. S. Krishnaswamy Iyengar's Book.)

2. திருக்குறளும் பிராமண வாழ்க்கையின் நானிலையும் (The Kural and the Four Stages of the Brahminical Divisions of Life),

3. பரிமேலழகர் திருவள்ளுவரைப் பிறழவுணர்ந்தமைTiruvalluvar Misunderstood by Parimel-Alagar),

4. வரலாற்றாசிரியர் திருவள்ளுவரைத் தவறாகக் காட்டியுள்ளமை (Tiruvalluvar Misrepresented by the Historian),

5. திருக்குறளும் தென்னிந்திய இந்துக் குமுகாயமும் (Kural and the Hindu Society of South India),

6. அருத்தசாத்திரத்திற்குத் திருவள்ளுவர் கடப்பாடு (Tiruvalluvar's Indebtedness to Artha Sastra),

7. திருவள்ளுவரும் அவர் குலமும் (Tiruvalluvar and His Caste).

என்னும் ஏழு பிரிவாக வகுத்துள்ளார். ஒவ்வொன்றும் ஒவ்வொரு கட்டுரை வடிவிலுள்ளது. முதற் கட்டுரைக் கூற்றுகளை மற்ற ஆறும் பகுதி பகுதியாக மறுக்கின்றன.

இரண்டாம் பிரிவில், திருவள்ளுவர் தமிழ முறைப்படி இல் வாழ்க்கை, துறவு என்னும் இருவகை அறவாழ்க்கை நிலைகளையே அறத்துப்பாலில் வகுத்துக் கூறியுள்ளாரென்றும்; ஆரிய அல்லது பிராமண வாழ்க்கையின் நால் நிலையுள் முதலதான பிரமசரியம் அடி யோடு விடப்பட்டுள்ளதென்றும், கிருகத்தன் இன்றியமையாது கடைப் பிடிக்க வேண்டிய வேதமோதுதலும் எரியோம்பலும் கூறப்படவேயில்லை யென்றும், இல்லறத்திற்கு இன்றியமையாத விருந்தோம்பலறம் பிராம ணர்க்கு நெறியிடப்பட வில்லை யென்றும், துறவுநிலை இல்வாழ்க்கையின் தொடர்ச்சியாகாது தனிப்பட்ட தென்றும்; மனைவியோடு காட்டில் வாழும் வானப்பிரத்தம் துறவு நெறியன்மையின் கொள்ளப்படவில்லை யென்றும், துறவுநிலை வானப் பிரத்தமும், சந்நியாசமும் என இரண்டாகாது ஒன்றேயென்றும், இருவகைத் தமிழ அறவாழ்க்கையும் எல்லார்க்கும் பொதுவாயிருக்க, நால்வகை ஆரிய நிலையும் பிராமணர்க்கே சிறப்பாக வுரியவென்றும்; திருக்குறள் அறத்துப்பால் இங்ஙனம் இம்மியும் ஆரியச் சார்பில்லதென்றும், விளக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் பிரிவில், திருவள்ளுவர் ஆரியத்திற்கு மாறாகவே நூலியற்றி யிருக்கவும், பரிமேலழகர் அதற்குச் சார்பாக அதை இயற்றி யிருப்பதாகக் கூறியிருப்பது காட்டப்பட்டுள்ளது.

நாலாம் பிரிவில், 38ஆம் குறள் மனுதரும சாத்திரம் 5ஆம் அதிகாரத்திலுள்ள 155 அல்லது 156ஆம் சொலவத்தை யொத்த தென்றும், 166ஆம் குறட்கருத்து மகாபாரதப் பீடும பருவத்திலுள்ள தென்றும், 259 ஆம் குறள் மனுதரும சாத்திரம் 5ஆம் அதிகாரத்தி லுள்ள 53ஆம் சொலவத் தொடு ஒப்பு நோக்கத்தக்க தென்றும், வரலாற்றாசிரியர் கூறியுள்ளது மறுக்கப்பட்டுள்ளது.

ஐந்தாம் பிரிவில், திருக்குறள் தமிழ்நாட்டுப் பிராமணரைப் போற்றுகின்ற தென்னுங் கூற்றுப் பொய்ப்பிக்கப்பட்டுள்ளது.

ஆறாம் பிரிவில், 501ஆம் குறள் சாணக்கியரின் அருத்த சாத்திரத்தைப் பின்பற்றியதென்னுங் கூற்றின் புரைமை காட்டப் பட்டுள்ளது.

ஏழாம் பிரிவில், இக்காலக் குலப்பிரிவு அக்காலத்திலில்லை யென்பதும், திருவள்ளுவர் குலம் இன்னும் அறியப்படவில்லை யென்பதும், தெரிவிக்கப்பட்டுள்ளன.அழகிய நடையில் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட இவ் வரிய நூல், பகுதி (Demy) யளவில் வழுவழுப்பான வெண்டாளில், முகவுரையுட்பட, 55 பக்கங் கொண்டுள்ளது. விலை 1 உருபா. பொத்தகம் வேண்டுவோர், பேரா. கோ. இராமச்சந்திரன், எம்.ஏ., தமிழ்த்துறைத் தலைவர், பச்சை யப்பன் கல்லூரி, காஞ்சிபுரம்-3, என்னும் முகவரிக் கெழுதிப் பெற்றுக் கொள்க. ஆங்கிலங் கற்ற தமிழர் அனைவரும் இதை வாங்குதல் தக்கதாம்.ஆயிரக்கணக்காகச் சம்பளம் பெறும் பெரும் பதவித் தமிழ்ப் பேராசிரியர் 'எங்கெழிலென் ஞாயிறெமக்கு' என்றிருப்பவும், தமிழைப் பழிக்கும் ஒரு நூலைக் கண்டித்துத் தமிழ்ப் பெருமையைக் காத்த தலைமையாசிரியரைத் தமிழ்நாட்டு அரசும் பல்கலைக்கழகங்களும் போற்றக் கடப்பாடுடையன. அவை அது செய்யாது போயினும், உலகத் தமிழ்க் கழகம் இவ்வாண்டிறுதியில் நடைபெறும் ஆட்டை விழாவில் அவரைப் பாராட்டி, 'திருக்குறட் காவலர்' என்னும் பட்டமும் அளிக்கும் என உறுதி கூறுகின்றேன்.- 'செந்தமிழ்ச் செல்வி' மே 1970.

# வாய்மையின் நல்ல பிற இல்லை

- முனைவர் இர. பிரபாகரன் மேரிலாந்து, அமெரிக்கா



'உண்மை' என்ற சொல்லுக்கு 'உள்ளது' என்று பொருள். ஒருவன் உண்மை பேசுகிறான் என்றால், 'அவன் உள்ளதை உள்ளவாறு சொல்கிறான்' என்று பொருள். 'உண்மை' என்ற சொல்லை 'உள்ளது' என்ற பொருளிலும், 'மெய்' என்ற சொல்லை 'உடல்' அல்லது 'உண்மை' என்ற பொருளிலும் வள்ளுவர் பயன்படுத்துகிறார். 'பொய்' என்ற சொல்லை 'உண்மைக்குப் புறம்பானது' என்ற பொருளிலும், 'பொய்யாமை' என்ற சொல்லை, 'பொய் கூறாமல் இருப்பது' என்ற பொருளிலும், வள்ளுவர் பயன்படுத்துகிறார். 'வாய்மை' என்ற சொல்லுக்கு, 'உண்மை' என்பதுதான் அகராதி கூறும் பொருள். ஆனால், வள்ளுவர், 'வாய்மை' என்ற சொல்லுக்கு ஒரு புதுவிளக்கம் அளிக்கிறார். அவர் கருத்துப்படி, 'எவருக்கும் எந்தத் தீமையும் விளைவிக்காத உண்மைதான் வாய்மை'. சில சமயங்களில், உள்ளதை உள்ளவாறு கூறுவது பிறர் மனத்தைப் புண்படுத்தலாம்; அவர்களுக்கு வேறுவகைகளில் துன்பங்களையும் தரலாம். ஆகவே, ஒருவன் உண்மை பேசும்பொழுது, அவனுடைய பேச்சால், எவருக்கும் எந்தத் தீமையும் வராமல் இருக்குமானால் அதுவே வாய்மையாகும்.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல். (குறள் - 291)

இதே கருத்தை, சமண மதத்தின் தலைவர்களுள் மிகச் சிறந்தவராகக் கருதப்படும் மகாவீரரும் கூறியிருப்பதாக, தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிடுகிறார்[1].

சில சமயங்களில் பொய்யும் வாய்மையைப் போன்றதாக இருக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார். ஒரு பொய் கூறுவதினால், குற்றமற்ற (புரைதீர்ந்த) நன்மை பிறக்குமானால், அந்தப் பொய்யும் வாய்மையைப் போன்றதுதான் என்பது வள்ளுவரின் கருத்து.

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின். (குறள் - 292)

**தன்நெஞ்சறிவது பொய்யற்க**

"எது உண்மை?, எது பொய்?" என்று நமது மனத்திற்கு நன்கு தெரியும். நம்முடைய மனத்தில் ஒரு உண்மையை அறிந்திருந்தும், அதற்கு மாறாக, அதை மறைத்துப் பொய் சொன்னால் நம் மனமே நம்மை வருத்தும் என்கிறார் வள்ளுவர்.

தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும். (குறள் - 293)

---

[1] . தவத்திரு குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை (திருக்குறள் :தொகுதி -3), பக்கம் 94-95

**பொய்யாமையின் சிறப்பு**

ஒருவன் தன்னுடைய உள்ளத்தில் எது உண்மை என்று கருதுகிறானோ அதற்கு மாறாக நடக்காமல் இருந்தால், அவன் உயர்ந்தோர் அனைவரின் உள்ளத்திலும் நிலையான இடத்தைப் பெறுவான் (குறள் - 294).

உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன். (குறள் - 294)

தன் மனத்தோடு பொருந்துமாறு வாய்மையான சொற்களையே ஒருவன் பேசுவானாயின், அவன் தவமும் தானமும் செய்பவர்களைவிட மேலானவன் ஆவான் (குறள் - 295). தனக்கு நேர்ந்த துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு, பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமல் வாழ்வதே தவத்திற்கு உரிய அடையாளம் என்பது தவத்திற்கு வள்ளுவர் கூறும் இலக்கணம் (குறள் - 261). தானம் செய்வது தன்னிடமுள்ள பொருளைப் பிறர்க்குக் கொடுப்பது. தவமும் தானமும் சிறந்த பண்புகளாகும். இந்த இரண்டு பண்புகளும் ஒருங்கே கொண்டிருப்பவர்களைவிட, தான் அறிந்ததைப் பிறர்க்குத் துன்பம் உண்டாகாதவாறு வாய்மை பேசுபவன் சிறந்தவன் என்று கூறுகிறார் வள்ளுவர்.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. (குறள் - 295)

"பொய் பேசாமல் இருப்பதால் வரும் புகழுக்கு இணையாக வேறு புகழ் இல்லை. பொய் பேசாதவர்களுக்கு, அவர்கள் அறியாமலேயே அறச்செயல்களால் வரக்கூடிய நற்பயன்கள் எல்லாம் தானாகவே வரும் (குறள் - 296)." என்று பொய்யாமையினால் வரும் பயனைக் கூறிப் பொய் பேசாமல் இருப்பதற்கு ஊக்கம் அளிக்கிறார் வள்ளுவர்.

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும். (குறள் - 296)

ஒருவன் பொய் பேசாமல் இருந்தால் அறத்தினால் வரும் பயன் அனைத்தும் அவனுக்குத் தானாகவே வரும் என்று முந்தைய குறளில் கூறிய வள்ளுவர், அடுத்த குறளில், ஒருவன் இடைவிடாமல் பொய்பேசாமல் இருப்பானானால், அவன் வேறு அறச்செயல்கள் எதுவும் செய்ய வேண்டியதில்லை என்று கூறி, பொய்யாமையை வலியுறுத்துகிறார் (குறள்- 297).

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. (குறள் - 297)

**சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு**

சான்றோர் எனப்படுபவர் நற்குணங்கள் அனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றவர்கள். அவர்கள் தங்கள் உள்ளத்தில் உள்ள அகவிருளை (மனத்தில் உள்ள மாசுக்களை) நீக்குவதற்குப் பொய்யாமை என்னும் விளக்கைப் (பண்பைப்) பயன்படுத்துவார்கள் (குறள் - 299).

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்

பொய்யா விளக்கே விளக்கு. (குறள் - 299)

"சான்றாண்மை" என்ற அதிகாரத்தில், ஒரு சான்றோனுக்கு இருக்க வேண்டிய இன்றியமையாத நற்குணங்களைக் கூறும்பொழுது, சான்றாண்மையை ஒரு மண்டபமாக உருவகித்து, அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும் அந்த மண்டபத்தைத் தாங்கி நிற்கும் தூண்கள் என்கிறார் (குறள் - 983) வள்ளுவர்.

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண். (குறள் - 983)

**வாய்மையைவிட நல்லது வேறொன்றும் இல்லை**

"யாம் மெய்யாகக் கண்டவற்றுள், வாய்மையைவிடச் சிறந்தது வேறொன்றும் இல்லை", என்கிறார் வள்ளுவர் (குறள் - 300).

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. (குறள் - 300)

தன்னை முன்னிலைப்படுத்தித் தன்மைப் பன்மையில் வள்ளுவர் அழுத்தமாகக் கூறுமிடங்கள் மூன்று, ஒன்று, "அறிய வேண்டியவற்றை அறியும் அறிவுள்ள மக்களைப் பெறுவதைத் தவிர, ஒருவன் பெறக்கூடிய பேறு வேறு எதையும் யாம் அறியவில்லை (குறள் - 61)" என்று மக்கட்பேறு என்ற அதிகாரத்தில் குறிப்பிடுகிறார். இரண்டு, வாய்மையின் சிறப்பைப் பற்றிக் கூறும்பொழுது, அதைத் தன்மைப் பன்மையில் குறிப்பிடுகிறார். மூன்று, கயமை என்ற அதிகாரத்தில், "கயவர்கள் வடிவால் மற்ற மக்களை ஒத்திருப்பர். அந்த ஒற்றுமையைப்போல் வேறு எந்த இரண்டு பொருட்களிடையே ஒப்புமையுள்ளதை யாம் கண்டதில்லை (குறள் - 1071)." என்று கூறுகிறார். வள்ளுவர் தன்னை முன்னிலைப்படுத்திக் கூறுவது, அவருடைய அனுபவத்தின் அடிப்படையில் அவர் கூறும் கருத்தில் அவருக்கு இருக்கும் ஆழமான நம்பிக்கையைக் குறிக்கிறது.

**முடிவுரை**

எவருக்கும் எந்தத் தீமையும் விளைவிக்காத சொற்களைக் கூறுவது வாய்மை என்றும், குற்றமற்ற நன்மை விளைவிக்கும் சொற்கள் பொய்யாக இருந்தாலும், அவை வாய்மையைப் போன்றவைதான் என்றும் வள்ளுவர் கூறுகிறார். வாய்மையால் உள்ளம் தூய்மை அடைகிறது என்பதும், சான்றோர்கள் பொய்யாமையைத் தவறாமல் பின்பற்றுவார்கள் என்பதும் வள்ளுவரின் கருத்து. முடிவாக, வாய்மையைவிட நல்லது எதையும் தான் கண்டதில்லை என்று தன்னை முன்னிலைப்படுத்திக் கூறி வாய்மையின் சிறப்பைச் சுட்டிக்காட்டுகிறார் வள்ளுவர்.

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 13 | ஆனி 32, தி.பி 2052 | சூலை 16, பொ.ஆ 2021







# மறைமலையடிகள்

## 146-ஆவது பிறந்தநாள் விழாச் சிறப்பிதழ்

# மறைமலையடிகள் போற்றிய குறள்நெறி

-மறை.தி.தாயுமானவன்.க.மு.ஆ.நி.

இக் கட்டுரையாசிரியர் அடிகளாரின் திருமகனார் மறை.திருநாவுக்கரசு அவர்களின் புதல்வர்.பொறிநுட்பம் கற்று ஆவடித் திண்ம ஊர்தித் தொழிற்சாலையில் பொறிநுட்பவியலராகப் பணிபுரிந்து பணிஓய்வு பெற்றவர்.எனினும் இலக்கியத்திலும் முதுகலைப் பட்டமும் இளமுனைவர் பட்டமும் கற்ற இலக்கிய ஆர்வலர்; நூலாசிரியர்; பொழிவாளர்;எனினும் முதன்மையாக அடிகளார் நினைவைப் பொற்றும் நிலைத்த பணிகளைச் செய்வதே தம் வாழ்நாளின் குறிக்கோளெனக் கருதிச் செயற்பட்டுவருபவர்; அடிகளார் புகழ்பரப்பும் மன்றம் நிறுவியும் அவர் பெயரால் கல்வி அறக்கட்டளை நடத்தியும் நூல் பல இயற்றியும் உலகெங்கும் பல நாடுகளுகுச் சென்று அடிகளார் புகழ்பரப்பும் ஆய்வுரைகள் வழங்கியும் ஓயாது உழைத்து வருபவர்.பெயர் விளங்க உழைக்கும் பெயரன் -பேரன் இவரே எனல் மிகையன்று.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான் குறள் 972

உலகிலுள்ள அனைத்து உயிருக்கும் ஒன்று போலத்தான்பிறப்பு!
இனிமேல் தானே வளரவளர தனிச்சிறப்பு!

என்று குறள்நெறி மாந்த இனத்தின் மாண்பை வலியுறுத்துகின்றது. உலகவரலாற்றில் வேறு எந்த மொழி இலக்கியத்திலும் 'மானுட நயன்மைத் தளத்தில் நின்று மாந்தர் பிறப்பால் ஒருவரே; பிறப்பில் பிரிவுகள்,உயர்வு,தாழ்வு இல்லை' என ஓங்கி ஒலித்த ஒரே நூல் திருக்குறளாகும்.எல்லாக் காலத்துக்கும் எல்லா மக்களுக்கும் பொதுவான வாழ்வியல்நெறியை எடுத்துரைத்தாலேயே உலகப்பொதுமறையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மறைமலையடிகளார் திருக்குறளின் பெருமையினைப் படிப்படியாகக் கற்றுணர்ந்தார். தம் பதினாறாம் (16) அகவையில் தொடங்கிய பழந்தமிழ் இலக்கிய இலக்கணப் பயிற்சியானது தம் இருபத்தோராம் அகவைக்குள் பெரும்பாலும் நிரம்பியது எனலாம் எனத் தம் நாட்குறிப்பில் பதிவிட்டுள்ளார் அவரது நூல்பயிற்சி மூலம் கழிஇளமைப் பருவத்திலேயே திருக்குறளின் அனைத்துப் பாக்களையும் நெட்டுருச் செய்துள்ளார்.அதன்பயனாகக் குறளைப்போற்றும் வண்ணம் திருக்குறள் வாத நிராகரணம் என்ற நூலைத் தம் இருபத்தி இரண்டாம் அகவையில் எழுதி வெளியிட்டார்.(1898) அடிகள் எழுதிய முதல்நூலும் இதுதான் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.குறிப்பாக மாந்தர்கள் அனைவருக்கும் எத்துணைச் செல்வம் இருந்தாலும் நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது சான்றோர் வாக்கு. அதன்பொருட்டுக் குறள் வழி வள்ளுவர் காட்டிய மருத்துவ முறைகளை ஆய்ந்தறிந்து,தமக்கு நிறைவு ஏற்பட்டபின்பு அதன் தன்மையறிந்து கடைப்பிடித்தார். சான்றாக உணவு உணவு உட்கொள்ளும் சில நெறிமுறைகளைக் குறள்வழி ஆராய்ந்து

அதன் தொடர்ச்சியாகத் திருவள்ளுவருக்குப்பின் வாழ்ந்த திருமூலரின் பாடல் உரைப்பதையும் மேற்காட்டுகிறார்.

“மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்
மறுப்பது உளநோய் மருந்தெனச் சாலும்
மறுப்பது இனிநோய் வராதிருக்க
மறுப்பது சாவை மருந்தென லாமே” திருமூலரின் மருந்தென மருந்து

ஒருவன் தனக்கு நோய் வராமல் தடுத்துக்கொள்வதே மருந்தாகும்என்பார் திருமூலர். ஆனால் உலகியல் வழக்கில் நோய்வந்த பின்பு அல்லவா மருத்து வரையும், மருந்தையும் தேடுகிறோம்.ஆக நாம் நோய் நீக்குவதே மருந்து எனத் தவறாக எண்ணுகிறோம். ஆனால் உள்ளத்தைச் செம்மையாக வைத்துக்கொள்ளுவதே மருந்து என்கிறார். ஒருவருக்கு உளநோய் வராமல் தடுப்பது மருந்து. எதிர் வரும் காலத்திலும் நோய்வராமல் தடுப்பதும் சாவா மருந்தெனலாகும் என விளக்குகிறார் திருமூலர்.இவர் தமிழ்ச் சித்தமருத்து வராவார். தமிழ் இலக்கியங்களில் தமிழ்ச் சித்தமருத்துவத்திற்கு என்று தனிஇடம் உண்டு.

அடிகளாருக்கு உடல் நலம் அவ்வப்போழ்து குறைப்படுதல் உண்டு கரணியம் தமிழ் இலக்கியக் கூட்டங்களுக்கு வெளியூர்ப் பயணம் அடிக்கடி மேற்கொள்வதே..அவ்விடம் அவ்வக்கால உணவுமுறைகளை உரிய நேரத்தில் கடைப்பிடிக்க முடியாமல் போவதுண்டு. இதன் வெளிப்பாடாக உடல் நலம் பாதிக்கும் சூழ்நிலை உருவாகியது.இதனைப் பட்டறிந்த்தன் விளைவாக, குறளின் வழி உணவுமுறைகளைக் கடைபிடித்தல் சிறந்தது எனக் கருத்துரைக்கிறார்.

அவரவர் உடம்பின் தன்மைக்கு இசைய,தாம் செய்யும் வேலைக்குத் தக்கபடி, பசி எடுக்கும் போதுதான் உணவை உட்கொள்ளவேண்டும். அப்போதுதான் உடலுக்கு ஏற்ற ஆற்றல் நமக்குக் கிடைக்கும். அதுமட்டுமல்ல, நோய் எதிர்ப்பு ஆற்றலும் கூடும் எனத் தமது பட்டறிவால் அறிந்த அடிகளார் "மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி உணின் " என்னும் குறளின் பெருமையை எடுத்தியம்புகிறார். அதுமட்டுமன்றி, நண்பர்கள், உறவினர்கள் என அவரவர் வற்புறுத்தலுக்கிணங்கவும், அவர்கள் மனம் மகிழ்ச்சியடையும் பொருட்டும் நேரம், காலம் பார்க்காமல் உண்கிறோம். இதனால் உடல்நலம் பாதிக்கப்படுகிறது. இதற்கு அடிகளார் எடுத்துக்காட்டும் குறள்

"இழிவறிந்து உண்பான் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய்" ... நோயின்றி வாழும்பொருட்டு உணவு கொள்கின்றோமேயன்றி உணவின் பொருட்டு உயிர் வாழ்வதில்லை என்ற வள்ளுவரின் கருத்தை முன்வைக்கிறார்.

அடிகளார் சைவசமயத்தின்மீது மிகுந்த பற்று கொண்டவர். அதன்பொருட்டு தாம் சொற்பொழிவு ஆற்றும் இடங்களின் சைவஉணவின் மேன்மையை எடுத்துரைப்பார்.

. 1812ஆம் ஆண்டு முதல் திருக்குறள் நூல் அச்சிடப்பட்டதாக தமிழ் இலக்கிய வரலாறு கூறுகிறது. விவிலிநூலுக்கு அடுத்தபடியாக உலக மொழிகளில் அதிகமாக மொழி பெயர்க்கப்பட்ட நூல் என்ற பெருமையையும் பெற்றிருக்கிறது.இத்துணைச்சிறப்புவாய்ந்த திருவள்ளுவருக்குத் தமிழ்நாட்டில் உரிய சிறப்பும் பெருமையும் செய்யவேண்டியது நம் தமிழர்களின் கடமை என்று

அடிகளார் தாம் செல்லுமிடங்களில் எல்லாம் முழங்கினார். அடிகள் தமிழாண்டுக் கணக்கீட்டைக் கி.மு. கி.பி. என்பதற்குப் பதிலாக தி.மு. தி.பி. என்று கொள்ளவேண்டும் என்று இருபது ஆண்டடுகட்கு முன்பே வரையறை செய்து விட்டார். உலகப்பொதுமை கருதி, உலகப் பொதுவான செய்திகளில் கிறித்துவ ஆண்டைக்கையாண்டு கொண்டனர்.

## திருவள்ளுவர் திருநாள் கணக்கீடு

இன்று உலகம் முழுவதும் வழங்கிவரும் ஆண்டுக் கணக்கீடு கிறித்து பிறந்த நாளைக் கொண்டு வழங்கப்பட்டுவருகின்றது. எனினும் உலகிலுள்ள பல நாட்டினரும் தம் நாட்டின் கலை,பண்பாட்டிற்கு ஏற்றவாறு தம் நாட்டுள் தமக்கெனத் தனியாக அடையாளங்களை நிறுவும் பொருட்டு தங்களுக்கான ஆண்டுக்கணக்கீட்டை உருவாக்கிக் கொண்டுள்ளனர் என்பதை கண்கூடாகப் பார்க்கிறோம். நம் இந்திய நாட்டிலும் கலியுகத்தைக் கொண்டும், சாலிவாகன சகாப்தத்தைக் கொண்டும் தென் தமிழ்நாட்டில் கொல்லம் ஆண்டைக் கொண்டும் ஆண்டுகணக்கீடு செய்வதை யாவரும் அறிவர். இவ் வழியன்றித் தமிழகத்திற்கென்ற தனியான ஆண்டுக்கீடு ஒன்றுமில்லை. அது பற்றி யாரும் இது வரையில் எண்ணியதாகவோ,முயற்சி செய்ததாகவோ தெரிய வில்லை தமிழுணர்ச்சியிருந்தாலன்றோ தமிழர்க்குஎன புத்தூழி ஆண்டை வகுக்க இயலும் என்று வருந்திய அடிகளார் வாளாகஇருக்க வில்லை.ஏனெனில் அப்பொழுது ஆங்கிலேயர்ஆட்சிநடைபெற்றுக்கொண்டிருந்தது. எத்துறை யிலும் ஆங்கிலமே முன்னிலை பெற்றிருந்தது.தமிழ்தாழ்ந்து மதிப்பின்றிக் கிடந்தது. தமிழ்மொழியை அடிமையாக்கி ஆங்கிலத்திற்கு முடிசூட்டி அதன் அடிவருடிப் புகழ் பாடியவர் நம்மவரேயாவர். இந்து சமயத்திற்கு வடமொழி, இந்திய ஆட்சிக்கு ஆங்கிலம்,இசைக்குத் தெலுங்கு என்று எல்லாத்துறைகளிலும் பிறமொழிக்கு ஆக்கந்தந்து தம்மை தாழ்த்தியவர் களுக்கு தமிழர்களுக்கு தனியாண்டுக் கணக்கீடு என்ற கருத்து எழுமா என அடிகளார் உணர்ந்துசெயல்பட்டார்.. திருவள்ளுவரையே தமிழுக்குரிய ஆண்டுக் கணக்கீட்டின் முதல்வராகக்கொண்டார். திருவள்ளுவரே தமிழினத் தலைவர் திருக்குறளே தமிழர்களுக்கான பொதுமறை எனச் சூளுரைத்தார். அடிகளாரின் இக்கருத் துகளில் உறுதிகொண்டு பணியாற்றும் புலவர்களில் அக்காலத்தில் தலை சிறந்தவர் இலங்கை அரசின் தமிழாக்கத் துறைத்தலைவர் யாழ்பாணத் திலுள்ள தமிழறிஞர் கா.பொ. இரத்தினம் அவர்கள். இப்புலவர்பெருமான் திருவள்ளுவர் திருநாளை மிகசீரும் சிறப்புடன் மூன்றுநாட்கள் இலங்கையில் நடத்தி வந்துள்ளார். திருக்குறள் ஆராய்ச்சி என்று அடிகள் பல்லாண்டுகளாக ஆய்ந்து வெளியிட்டுவந்த கட்டுரைகளாலும் திருக்குறள்பற்றிய சொற்பொழிவு களாலும் தமிழ்நாட்டில் விழிப்புணர்வு ஏற்பட்டது. இதன்பொருட்டு உண்டான முயற்சியே திருவள்ளுவர் திருநாட்கொண்டாட்டம் என்ற பெருவிழாவாக சென்னை மாநகரில் உருவெடுத்தது.

## திருவள்ளுவர் நினைவுநாள் பெருவிழா.

சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் 1935 ஆம் ஆண்டு மே19ஆம்நாள் மிகச்சிறப்பாக கூடியது.கா.நமச்சிவாய முதலியார் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். அடிகளார் தலைமைதாங்கி இரண்டுமணி முப்பது நிமையங்கள் அளவு திருவள்ளுவர் திருக்குறள் பற்றிய அரிய இனிய சொற் பொழிவாற்றினார்.வரவேற்புக்கழகத்தார் அடிகட்கு வரவேற்புத்தாளைப் படித்து அதனை வெள்ளிப்பேழையில்வைத்து வழங்கினர். உலகிலுள்ள வேறு படுசமயத்தவரும், நாட்டவரும்,இனத்தவரும் ஒன்றுபட்டு நன்னெறிநின்று

இன்புற்றுவாழப் பொதுமறை ஒன்று வேண்டும், அம்மறை திருக்குறளே. திருவள்ளுவரைப் பொதுமையாளரெனவும் ஏற்று கொள்ள இம் மாநாட்டு குழுவினர் இசைவுதெரிவித்தனர். அது திருக்குறள்மட்டுமே என அடிகள் உறுதிபடக்கூறினார். கூட்டத்திலுள்ள புலவர் பெருமக்கள் அனைவரும் முழுமனதுடன் ஏற்றுக்கொண்டனர். இவ் விழாவிற்குப்பிறகு திருவள்ளுவர் மன்றங்கள், குறள்படிப்பகங்கள்,பள்ளிகள் பெருகின. திருவள்ளுவர் விழாவும் பல ஊர்களில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. சென்னை அரசில் அவினாசிலிங்கஞ் செட்டியார் கல்வி அமைச்சராய் இருந்த வேளையில் உயர்நிலைப் பள்ளிக்கூடங்களில்,திருக்குறள் அதிகாரங்கள் பலவும் கட்டாய பாடமாக கற்பிக்கப்பட்டன.




எந்த ஒரு இயக்கம் அல்லது நிகழ்ச்சிகள் மக்களை முழுமையாக சென்றடைந்தால் மட்டுமே வெற்றிபெறும். அவ்வகையில் திருக்குறளை மேனாட்டு அறிஞர் ஜி.யு.போப்அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டு உலகம் முழுவதும் சென்றடைய வழிவகுத்தார். இதன் பெருமையுணர்ந்த மேல்நாட்டு அறிஞர்கள் பலர் அவரவர் தாய்மொழியில் குறளை மொழிமாற்றம் செய்து திருவள்ளுவருக்கும் திருக்குறளுக்குப் பெருமைசேர்த்தனர். இதனைத் தொடர்ந்து தமிழினப்போராளி முனைவர். சி.இலக்குவனார் அவர்கள் திருக்குறள் பரப்பத் திங்களிருமுறை இதழாகக் குறள்நெறி என்னும் இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் நடத்திவந்தார். திருக்குறளிலுள்ள வாழ்வியல் அறநெறி கருத்துகளை மாணவர்களும்,பொதுமக்களும் அதன் பயனறிந்து அதன்படி வாழ்வில் செம்மையையும் நேர்மையையும் போற்றுமாறு வலியுறுத்தினார். திருக்குறளின் பெருமையை நம்தமிழ் மக்களும் அறியும் வண்ணம் குறள்நெறி இதழை பொருள்

இழப்பீட்டிற்கு இடையிலும் குறள்நெறிக்கருத்துகள் அனைவருக்கும் சென்றடைய வேண்டும் என்ற உயரிய சிந்தனையுடன் நடத்திவந்தார் என்பது இங்கு ஈண்டு நோக்கத்தக்க தாகும். திருக்குறளில் காணப்படும் வாழ்வியல் அறக் கோட்பாடுகள் அனைத்தும் சிறப்பாக ஈரடிவரியில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. உலகில்வாழ்கின்ற அனைத்து மக்கள் மட்டுமின்றி அனைத்து உயிர்களிடத் திலும் அன்பு செலுத்து வதைக்கூட திருவள்ளுவர் அறன் வழி குறளில் "அறவினை யாதெனில் கொல்லாமை கோறல் பிறவினை எல்லாம் தரும்" என்று கூறப்பட்டகருத்து அடிகளாரை மிகவும் ஈர்த்தது. அறச்செயல் யாது என்றால் அது ஓர் உயிரையும் கொல்லாமை யாகும்.

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று"

"கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவார் அகத்து"

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதுஊன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்"

"தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னாசெயல்" என்னும் குறளை ஆராய்ச்சி வகையில் நின்று திருவள்ளுவர் சமயம் யாது - திருக்குறளில் கூறப்பெறும் மெய்யுணர்வுக் கருத்துகள் எச்சமயக் கோட்பாட்டிற்கியைந்தவையாக, இருக்கும் என்றால் என்னுடைய ஆய்வின்வழி திருவள்ளுவர் சைவசமயத்தவரே, அவர்தம் மெய்யுணர்வுக் கருத்துகள் யாவும் சைவசித்தாநக் கருத்துகள் என உறுதிபடக் கூறுவோம்..” என அடிகளார் மேற்கண்ட குறளைச் சான்றாக நிறுவுகிறார். அடிகளார் திருக்குறள் முழுமையும் மனனம் செய்த கரணியத்தாலும், மேலைநாட்டு ஆங்கில அறிஞர்களின் நூலைப் படித்திருந்ததாலும் ஆயிரத்து முன்னூற்றி முப்பது குறள்களும் ஈரடியில் உலகத்தில் வாழும் அனைத்து மக்களும் அக்கருத்துகளை எக்காலத்திலும் ஏற்றுக்கொள்ளத்தக்க உலகப் பொதுமறை குறளே என்பதைத் தம் எழுத்திலும் உரையிலும் அழுத்தமுறப் பதிந்தார்.உலகத்தோர் அனைவர்க்கும் பொதுவான நூலாகிய அத் திருக்குறளை நம் தமிழ் மக்கள் படித்து வாழ்வில் அனைத்து நலன்களும் பெறவேண்டும் என்று வலியுறுத்தினார்; திருக்குறளைத் தம் வாழ்நாள்முழுவதும்போற்றினார்.

“**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்**.” என்ற குறள்நெறிப்படி வாழ்ந்து காட்டிய பெருமைக்குரிய தனித்தமிழியக்கத்தந்தை மறைமலையடிகளாரைப் போற்றுவோம்.குறள்நெறியே வாழ்க்கை நெறியெனக் கொண்டு வாழ்வோம்.மொழியிலும் வாழ்விலும் வழுவும் பிழையும் அணுகாது காத்துப் புதிய வரலாறு படைப்போம்.

## அடிகளார் ஆக்கிய நூல்கள்

- பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் (1921)
- மக்கள் நூறாண்டு உயிர்வாழ்க்கை, இரு தொகுதிகள் (1933)
- மனித வசியம் அல்லது மனக்கவர்ச்சி (1927)
- யோக நித்திரை: அறிதுயில் (1922)

- தொலைவில் உணர்தல் (1935)
- மரணத்தின்பின் மனிதர் நிலை (1911)
- சாகுந்தல நாடகம் (சமசுகிருதத்தில் இருந்து மொழி பெயர்த்தது) (1907)
- சாகுந்தல நாடக ஆராய்ச்சி (1934)
- ஞானசாகரம் மாதிகை (1902)
- Oriental Mystic Myna Bimonthly (1908-1909)
- Ocean of wisdom, Bimonthly(1935)
- Ancient and Modern Tamil Poets (1937)
- முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர் (1936)
- முல்லைப்பாட்டு- ஆராய்ச்சியுரை (1903)
- பட்டினப்பாலை-ஆராய்ச்சியுரை (1906)
- சாதி வேற்றுமையும் போலிச் சைவரும் (1911)
- முதற்குறள் வாத நிராகரணம் (1898)
- திருக்குறள் ஆராய்ச்சி (1951)
- முனிமொழிப்ப்ரகாசிகை (1899)
- மறைமலையடிகள் பாமணிக் கோவை (பாடல்கள்) (1977)
- அம்பிகாபதி அமராவதி (நாடகம்) (1954)
- கோகிலாம்பாள் கடிதங்கள் (புதினம்) (1921)
- குமுதவல்லி: அல்லது நாகநாட்டரசி (புதினம்) (1911)
- மறைமலை அடிகள் கடிதங்கள் (1957)
- அறிவுரைக் கொத்து (1921)
- அறிவுரைக் கோவை (1971)
- உரைமணிக் கோவை (1972)
- கருத்தோவியம் (1976)
- சிந்தனைக் கட்டுரைகள் (1908)
- சிறுவற்கான செந்தமிழ் (1934)
- இளைஞர்க்கான இன்றமிழ் (1957)
- திருவொற்றி முருகர் மும்மணிக்கோவை (1900)

- மாணிக்க வாசகர் மாட்சி (1935)
- மாணிக்க வாசகர் வரலாறும் காலமும் (இரு தொகுதி) (1930)
- மாணிக்க வாசகர் வரலாறு (1952)
- சோமசுந்தரக் காஞ்சியாக்கம் (1901)
- சோமசுந்தர நாயகர் வரலாறு (1957)
- கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா (1968)
- திருவாசக விரிவுரை (1940)
- சித்தாந்த ஞான போதம், சதமணிக்கோவை குறிப்புரை (1898)
- துகளறு போதம், உரை (1898)
- வேதாந்த மத விசாரம் (1899)
- வேத சிவாகமப் பிராமண்யம் (1900)
- Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge (1940)
- சைவ சித்தாந்த ஞானபோதம் (1906)
- சிவஞான போத ஆராய்ச்சி (1958)
- Can Hindi be a lingua Franca of India? (1969)
- இந்தி பொது மொழியா ? (1937)
- Tamilian and Aryan form of Marriage (1936)
- தமிழ் நாட்டவரும், மேல்நாட்டவரும் (1936)
- பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம் (1958)
- வேளாளர் நாகரிகம் (1923)
- தமிழர் மதம் (1941)
- பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும் (1906)

ஆகிய 54 நூல்களை எழுதியுள்ளார்.

# உற்றுநோக்கி ஆராய்தல்

## -மறைமலையடிகள்

பல்துறைப் பேரறிஞராகிய அடிகளார் அறிவியலில் கொண்டிருந்த ஆர்வத்தையும் அறிவியல் புலமையையும் இக் கட்டுரை தெளிவுறக் காட்டுகிறது. "தனித்தமிழ் மாட்சி"எனும் தலைப்பிலமைந்த அடிகளாரின் கட்டுரைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள இக் கட்டுரை இன்றைய சூழலுக்கும் மிகவும் பொருந்துகிறவகையில் அமைந்துள்ளது. அறிவியலில் ஈடுபடவும் சுற்றுச்சூழலைக் கூர்ந்தாய்வு செய்யும் வகையில் "உற்றுநோக்கல்" (OBSERVATION) ஓர் அடிப்படை என்பதை அடிகளார் கூறிய முறையைக் காட்டிலும் நயமாகவும் எளிமையாகவும் யாரும் கூறிவிடமுடியாது.

உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சிறியவாயிருப்பினும் பெரியவாய் இருப்பினும் அவை தம்மை உற்றுநோக்கி யாராய்ந்தவர்களே அறிவிற் பெரியராகிப், பல அரும்பெரும் புதுமைகளைக் கண்டறிந்து, நம்மனோர்க்கெல்லாம் அளப்பிலா நன்மைகளைச் செய்திருக்கின்றார்க்ள. எதனையும் உற்றுநோக்கி ஆராய்தலின்றி, ஆடு மாடுகளைப்போற் பொதுநோக்காய்ச் சென்றவர்கள் தாமும் அறிவு விளங்கப் பெற்றதில்லை. பிறர்க்கும் நன்மையாவன செய்ததில்லை. சோற்றுக்குக் கேடும் மண்ணுக்குப் பொறையுமாய் இருந்து அவர்கள் தம் வாழ்நாளை உண்டு உடுத்து உறங்கிக் கழித்தவர்களேயாவர். இலந்தை மரத்திலிருந்து நன்றாய்ப் பழுத்த பழங்கள் உதிர்ந்து கீழ் விழுதலை எத்தனைகோடி மக்கள் முற்காலத்தும் பிற்காலத்தும் பார்த்திருக்கின்றார்கள்! அவர்களுள் எத்தனைபேர் அவைகள் ஏன் அங்ஙனங் கீழ்விழுகின்றன என்று ஆராய்ந்து பார்த்தவர்கள்? நியூட்டன் என்னும் ஒருவரைத்தவிர ஏனைக் கோடி கோடியான மக்கள் எவரும் அதன் உண்மையை அறியவில்லையே ஏன்? உற்று நோக்கி யாராய்ந்து பார்க்கும் அறிவும் முயற்சியும் அவரைத் தவிர மற்றையோர்க்குஇல்லாதுபோனமையாலன்றோ?

மற்று, நியூட்டன் என்னும் பேராசிரியரோ இவ்வுலகியற் பொருட்டன்மைகளை எந்நேரமும் உற்றுநோக்கிய படியாகவும், உற்றுநோக்கியாராய்ந்த் படியாகவுமே தமது அரிய வாழ்நாளை எந்நேரமும் பயன்படுத்திவந்தார். ஒருகால் அவர் ஓர் இலந்தை அரத்தினடியில் அமர்ந்திருக்கையில், அதில் நன்றாய்ப் பழுத்திருந்த ஒரு பழங்கம்பு கழன்று அவரது காலணடையிற் கீழ் விழுந்த்து. அதனைக் கண்ட அவர், உடனே, அஃதேன் அங்ஙனங் கீழ்விழலாயிற்று என ஆராயப்புகுந்தார். அந்நிகழ்ச்சியினைப் புல்லியதென்று விலக்கிவிடாமல், அல்லும் பகலும் அவர் அதனைப் பலவாற்றான் ஆராய்ந்து பார்க்க, மேலுள்ள பருப்பொருள்களைக் கீழே தன்கண் இழுத்துக்கொள்ளும் ஓர் ஆற்றல் இந் நிலவுலகத்திற்கு உண்டென்றும் அரும்பேருண்மையினை அவர் கண்டு கொண்டார். இந் நிலவுலகமாகிய பருப்பொருளுக்கு உள்ள இவ் விழுக்குமாற்றலை அவர் கண்டறிந்த பிறகுதான், வான்வெளியிற் பந்துகள்போற் சுழலா நின்ற ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலான ஏழு உலகங்களும், அவற்றோடொத்த அளவிடப்படாத எண்ணிறநத் வான்மீன் மண்டிலங்களுந் தத்தம் பருமனுக்குத் தக்க தொலைவில் நினறு ஒன்றையொன்று இழுத்தபடியாய் ஒன்றையொன்று சுற்றிச்செல்லும் வியப்பான உண்மை நிகழ்ச்சினையும் இன்னும் இதுபோன்ற வேறு பல புதுமைகளையும் கண்டு வெளியிட்டார்.

இப்பேராசிரியரது அறிவுவரலாற்றை யெண்ணிப் பார்க்குங்கால், பகுத்தறிவொடு கூடாத கட்பார்வை பயன் இலாதநிலை உணர்கின்றனம் அல்லமோ? மக்களெல்லாருங் கண்ணினாற் பொருள்களையும் பொருள நிகழ்ச்சிகளையும் பார்த்துண்டாகிய ஓரளவான பகுத்தறிவு கொணடே வாழ்க்கை செலுத்தி வருகின்னரென்பது உண்மையே. என்றாலும், ஒரு பொருட்டன்மை மற்றொன்றின் வேறாதலும், அன்றி ஒன்று மற்றொன்னற ஒத்திருத்தலும், அவ்வாறெல்லாம் அமைந்த அமைப்புகளின் கீழ் அவை தம்மை யமைத்த முதற்பேரறிவு ஒன்று மிளிரும்பான்மையும் எல்ங் கருத்து ஒருங்கி ஆராய்ந்து பார்ப்பவர் அம்மக்களுள் எத்தனைபேர் உளர்? ஒரேயொரு காலங்களில் ஒரேயொருவரே மிக அரியராய் ஆங்காங்குக் காணப்படுகின்றனர். ஒரு கயிற்றிறிகட்டித் தொங்கவிடப் பட்டிருக்கும் ஓர் எடைகல் அங்கும் இங்குமாய் ஊசலாடுவதை எத்தனை யாயிரக்கணக்கான மக்கள் முன்னும் பின்னும் பார்த்திருக்கவேண்டும்! அதலிருந்து நாழிகை யறிவிக்குங் கடிகாரக் கருவியினை யமைக்கும் நுண்ணறிவு கலிலீயோ என்னும் வான்நூலாசிரியர்க்கன்றி வேறெவர்க்கேனுந் தோன்றியதுண்டோ?இல்லையே!

பின்னும் ஒருகால் அவ் வான் நூலாசிரியர் தொலைவுநோக்கி என்னும் ஒரு வியத்தகு கண்ணாடியினை அமைக்கும் முறை கண்டறிந்ததும் மிகவும் வியக்கற் பாலதாயிருக்கின்றது. மூக்குக்கண்ணாடி செய்யும் ஒருவர், தொலைவிலுள்ள பொருள்களைக் கட்புலனுக்கு அருகே காட்டும் ஓர் அரிய கருவியினை அமைத்து அதனை ஒரு செல்வர்க்கு வழங்கிய செய்தியைக், கலிலீயோ என்னும் அப் பேரறிஞர் ஒருநாள் தற்செயலாய்க் கேள்வியுற்றார். கேட்ட அந்நாள் முதல் அவர் அங்ஙனந் தொலைவிலுள்ளவைகளை அருகிற் காட்டுங் கருவியின் அமைப்பைத் தொடர்பாக ஆராய்ந்து செய்து செய்து பாரத்து, கடைசியாகத் ‘தொலைவுநோக்கி’ Telescope என்னும் புதுமையான கருவியை அமைத்து முடித்தார். அக் கருவியானது அமைக்கப்பட்ட பிறகு தான், எத்தனையோ கோடி மைல்களுக்கு அப்பால் உள்ள ஞாயிறு திங்கள முதலான உலகங்களின் இயல்புகளையும், அவை தமக்கும் எட்டாத் தொலைவிலுள்ள ஏனை வான்மீன் மண்டிலங்களின் இயல்புகளையும், எல்லாம் அவரும் அவர் வழிவந்த மற்றைவான் நூலாசிரியர்களும் நன்கறிந்து கண்டு நம்போல்வார்க் கெல்லாம் அவ்வுண்மைகளை நன்கு விளக்கி வருகின்றனர். கலிலீயோ என்னும் அவ்வறிஞர் பெருமானுக்கு அத்துணை விழிப்பான கருத்தும் ஓயாத ஆராய்ச்சியறிவும் ஆராய்ந்தவைகளைச் செய்துமுடிக்கும் விடாமுயற்சியும் இல்லாதிருந்தார், நாம் அம் மேலுலகஙக்ளின் உண்மைகளை உணர்ந்துகொளல் இயலுமோ? அவ்வுண்மைகளை யறியாமல் அவ்வுலகங்களைப் பற்றிய வெறுங் குருட்டு நம்பிக்கைகளிலும் பொய்க்கதைகளிலுமன்றோ நம் வாழ்நாளை நாம் விலங்கினங்களைப்போற் கழிக்கவேண்டும்?

இன்னும் பாருங்கள்! “கூவல் ஆமை குரை கடல் ஆமையைப்” பார்த்துப் பழித்த்துபோலத், தாம் இருக்கும் நாட்டையும் அந் நாட்டிலுள்ள மக்களையுந் தவிர வேற்று நாடுகளையும் அந் நாடுகளில் உள்ள மக்களையும் பற்றிச் சிறிதுமே உண்மை தெரியாமல் அந் நாடுகளையும் அம் மக்களையும் இழித்துப்பேசுவோர் நம்மில் நூறாயிரக் கணக்காய் இருக்கின்றனர்! ஓர் ஊரை விட்டு வேறு ஓர் ஊர்ச்சென்று அதன் இயல்புகளையும் அங்குள்ள உயிர்களின் இயல்புகளையும் நன்குணர்ந்து அதன்கண் வாழ்க்கை செலுத்த விரும்புவார் நம்மில் மிகச் சிலராகவே காணப்படுகின்றனர். தாமிருக்கும் ஊரில் தாம் உயிர்வாழ்வதற்கு வேணடுங் கருவிகள் கிடைக்கப்பெறாமல் வறுமைப்பட்டுத் துன்புறுவோரே அயல்நாடுகள் சென்று குடியேறக் காண்கின்றோம். இவ்வாறாக நம்மனோர் பெரும்பாலுந் தாமிருக்கும்

இடத்தை விட்டுப் பெயராத சோம்பர்களையும், உலகத்தின் பல பகுதிகளையுங் கண்டு அறிவை அகலமாக்கும் விரிந்த நோக்கம் இல்லாதவர்களாயும் இருத்தலறிந்தே நம் பண்டை ஆசிரியர்கள் இந்திய இலங்கை நாடுகள் எங்குங் கடவுளை வணங்குதற்கென்று ஊரவர் வேறு ஊர் சென்று அன்பிலும் அறிவிலும் விரிந்த நோக்கத்திலும் மேன்மேற் பெருகுதற்கு வழிசெய்து வைத்தனர். வைத்துங், கடற்கப்பால் உள்ள நாடுகளுக்குக் கப்பலேறிச் சென்று ஆங்காங்குக் குடியேறக் கருதும் மனத்திட்பம் உடையார் நம்மில் இன்னும் மிகச் சிலராகவே இருக்கின்றனர். கப்பலேறிச் சென்றாற் கடலுக்கு இரையாவோம் என்னும் அச்சம் அவர்கள் உள்ளத்திற் குடிகொண்டிருக்கின்றது! அதுவேயுமன்றிக், கப்பரேறிச் செல்வாரைத் தமது சாதிக்குட்சேர்க்கலாகாது என்னுங் கட்டுபாடுஞ் சில வகுப்பிற் நீர்வளம் பொருள்வளம் நிரம்பிய பெரிய பெரிய நாடுகளிற் சென்று குடியேறி இனிது உயிர்வாழும் பெம்பேற்றையும் உரிமையையும் இழந்து, நம் இந்து மக்களிற் பெரும்பாலார் சிறிய சிறிய வெற்றூர்களிலிருந்து மிடிப்பட்ட குறுவாழ்க்கை செலுத்துகின்றனர்!

ஆனால், மேல்நாட்டவரான வெள்ளைக்கார நன்மக்களோ தாம் பிறந்த ஊர்களில் இருக்குமளவில் மனவமைதிபெறாத பெரு நோக்கமும் பேரறிவும் பெரு முயற்சியும் பேரூக்கமும் அஞ்சா ஆண்மையும் வாய்ந்தவர்களாய் இந் நிலவுலகமெங்கும் உள்ள பெருநிலப்ப்புகளை யெல்லாங் கடல்தாண்டிக் கண்டு கைக்கொண்டு அவை தம்மையெல்லாந் தமக்கு நீங்கா உரிமைகளாக்கி இன்ப வாழ்க்கை செலுத்தி வருகின்றனர். இவர்கள் இவ்வாறு இந் நிலவுலகமெங்கும் பரவி இனிது வாழ்தற்கு, இவர்கள் முன்னோரிற் சிலர் அறிவும் ஆராய்ச்சியும் எதனையும் உற்றுநோக்கி யெண்ணுதலும் அஞ்சா மன உறுதியும் விடா முயற்சியும் வாய்ந்திருந்தமையே காரணமாகும். தாமிருக்கும் ஊரையும் அதற்கு அருகாமையிலுள்ள வேறு சில ஊர்களையுமன்றிச் சேர்மையிலுள்ளவைகளைச் சிறிதும் அறியாதவர்களாய் நம் இந்துமக்கள் மிடிபட்ட வாழ்க்கையில் இருக்க, மேல்நாட்டவர்களின் முன்னோர்களில் ஒருவரான கொலம்பசு எனப்வரோ தாமிருந்த ஸ்பெயின் தேயத்தையடுத்த பெரும்புறக் கடலுக்கும் அப்பால் ஒரு பெருந்தேயம் உளதென்றறிந்து, மூவாயிரத்தைந் நூறு மைலுக்கு மேல் அதனைக் கடந்து சென்று, கி,பி, 1492 ஆம் ஆண்டில் அமெரிக்கா தேயத்தைக் கண்டுபிடித்தார். அப் பெரும்புறக் கடலுக்கும் அப்பால் ஒரு பெருந்தேயம் உண்டென்பதைக் கண்ட அவரது ஆராய்ச்சி யறிவின் தெய்வத்தன்மையை என்னென்றுரைப்போம்! அதன் உண்மையை ஆராய்ந்துகண்ட அளவில் இராமல், தம் நாட்டு அரசற்கும் அரசிக்கும் அதனை மெய்ப்படுத்திக்காட்டி, மூன்று மரக்கலன்களும் நூற்றிருபஃது ஆட்களுந் தாம் அக் கடல் கடந்து செல்லுதற்கு உதவியாகத் தம் அரசற்பாற் பெற்றுக் கொண்டு, முன் எவருமே சென்ற்றியாத அப் பேராழியில் வழிகண்டு சென்ற அவர்தம் அறிவாற்றலையும் அஞ்சா ஆண்மையினையும் எண்ணுந்தோறும் எம் நெஞ்சம் அளவிலடங்கா இறும்பூதுந் திகைப்பும் அடைகின்றது!

இங்ஙனம் அப்பெரும்பௌவங் கடந்துசென்ற கொலம்பசுப் பெரியாரின் பேரறிவின் திறம், அவர்தாம் மேற்கொண்டு சென்ற அவ்வருஞ்செயலை எவ்வாறு பயன்பெறச் செய்த்தென்பதும் நினைவுகூரற்பாற்று. பிறர்க்கு வழிதிசை தெரியாப் பெருவெள்ளக் காடான அப் பேராழியினூடே அவர் எவ்வாறு வழிதெரிந்து சென்றார் என்பதை நினைந்தால் எவர்க்குத்தான் வியப்பெழாது! எவர்க்குத்தான் நெஞ்சந் திகில் கொளாது! இவ்வளவு தெரிந்து சென்றதே ஒரு தெய்வத்தன்மை! இதனினுஞ் சிறந்த ஒரு தெய்வ அறிவும் இவரை அந் நடுக்கடலிற் காப்பாற்றியது. இவ ஐந்து கிழமைகளாக அல்லது முப்பத்தைந்து நாட்களாக அப் பெருநீரில் அம் மூன்று கப்பல்களையுங்

கொண்டு செல்கின்றார். வழிதுறை யொன்றுந் தெரியவில்லை! நாற்புறமுஞ் சூழ ஒரே வெள்ளக்காடு! தேடிச் செல்லும் தேயஞ் சிறிதுந் தென்படவில்லை! அம்மூன்று மரக்கலங்களும் அவருக்கு உதவியாய்ச் சென்ற ஆட்களெல்லாரும் இனி நிலத்தைக் காண்போமோ என்று ஏங்கி நம்பிக்கையிழந்தார்கள்! தம்மை அப் பெருந்தீவுக்கு இரையாக்கவே அவர் கொணர்ந்தாரென எண்ணி, எல்லாரும் அவரைத் துன்புறுத்த தொடங்கிவிட்டனர்!

அந்நேரத்தில், எல்லை சிறிதுந் தெரியாத அப்பெருநீர்ப்பரப்பில், தமக்கு உதவியாய் வந்த துணைவர்களே நம்பிக்கையற்று மனங்கலங்கித் தம்மைத் துன்புறுத்துவராயின் அப்போது எத்தகைய நெஞ்சமுத்தம் உடையாருந் தந்நெஞ்சந் தடுமாறாதிருத்தல் ஏலுமோ? ஏலாதே; ஆனாலுங், கொலம்பசுப் பெரியார் அந்நேரத்திலும் உள்ளஞ் சிறிதுந் தடுமாறிற்றிலர்! தமது கப்பலுக்க்ருகே கடற்பாசிகள் மிதந்து செல்வதை அவர் உன்னிப்பாய்ப் பார்த்து, “இதோ! நாம் தேடிச்செல்லுந் தேயம் அண்மையில் வந்துவிட்டது. அஞ்சாதீர்கள்”! என்று அவர்கள் எல்லார்க்கும் ஆறுதல் மொழிந்தார். அவர் மொழிந்தவண்ணமே சில நாட்கள் அமெரிக்கா தேயக்கரை அம் மரக்கலங்களிற் சென்றாரெல்லார் கண்களுக்கும் புலப்படலாயிற்று! அப்பெரு நீர்ப்பரவையில் ஆழாது தப்பிய அவரெல்லாம் உவகைக் கடலுள் ஆழ்ந்தனர்! அமெரிக்காக் கரையோரங்களில் உள்ள மலைப்பாறைகளில் ஒட்டி வளர்ந்த கடற்பாசி மிதந்து வருதலைக் கண்டு, அத்தேயத்தின் அருகே தாம் வந்துவிட்டதைக் கொலம்பசுப் பெரியார் அறிந்த அறிவு, அவருடன் சென்ற ஏனைமக்கட்கு இல்லாது போயிற்றே! இதனால், எத்துணைச் சிறிய, எளிய, புல்லிய பொருளையும் புறக்கணித்து விடாமல், அதனையும் அதன் றொடர்பையும் உற்றுநோக்கி யாராயும் அறிவுடையாரே எல்லா வகையிலுஞ் சிறந்தவராவர் என்றறிதல் வேண்டும்.

“அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்”.

# திருக்குறள் பட்டிமன்ற வரலாறு - தொடர்கட்டுரை

-பேராசிரியர் கண.சிற்சபேசன்



முதுபெரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் நம் குறள்நெறி இதழின் நிறுவனர் செந்தமிழ் அரிமா சி.இலக்குவனார் அவர்களுடன் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் பணியாற்றியுள்ளார்.பட்டிமன்றப் பொழிவில், அறுபதுகளின் தொடக்கத்திலிருந்தே கோலோச்சிவரும் பேராசிரியர் கண.சிற்சபேசன் அவர்கள் திருக்குறள் தொடர்பான பட்டிமன்றங்களின் வரலாறு குறித்து ஒரு தொடர்கட்டுரையைக் கடந்த ஆறு இதழ்களில் வழங்கியுள்ளார்.அதன் ஏழாம் பகுதி இங்கு வெளிவருகிறது.ஆர்வலர்க்கு விருந்தாகத் தொடர்ந்து வெளிவரும்.

**பட்டிமன்றப் பொருள்: நாடு எங்கே போகிறது? திட்டமிட்ட பாதையிலா? திசை தெரியாமலா?**

**இடம்: கும்பகோணம்**

கும்பகோணத்தில் கவிஞர் மா.வரதராசன் கொடிகட்டிப் பறந்த காலம் அது. அவர் நிறைய இலக்கிய நிகழ்ச்சிகள் அமைத்து எங்களை அழைப்பார். சந்தனம் மணக்கும் அவரது மாமனாரின் திருமண மண்டபத்தில்தான் நிகழ்ச்சிகள் நடக்கும். அந்த ஆண்டும் அதேபோலத்தான் நிகழ்ச்சியை அமைத்திருந்தார் கவிஞர்.

"திட்டமிட்ட பாதையிலே" என்ற அணிக்கு அண்மையில் அமரரான நாவுக்கரசர் பேராசிரியர் சொ.சத்தியசீலன் அவர்கள் தலைமை. "திசை தெரியாமலே" என்ற அணிக்குப் பேராசிரியர் அ.வ.இராசகோபாலன் தலைவர்.

நாடு என்பதற்குத் திருவள்ளுவர் கூறியுள்ள இலக்கணத்தைத் தான் அளவுகோலாக இரு அணியினரும் கொள்ள வேண்டும் என்றும் அதனடிப்படையில் இன்றைய நிலைகளை ஒப்பிடவேண்டும் என்றும் வரையறுத்துவிட்டேன்.

நாடு என்பதைச் சமுதாயம், அமைச்சு, நீதித்துறை. அரசு என்ற பொருண்மைகளில் எடுத்துக்கொண்டு தனது உரையைத் தொடங்கினார் நாவுக்கரசர் பேராசிரியர் சொ.சத்தியசீலன் அவர்கள். அதனோடு தனிமனிதனையும் சேர்த்துக்கொண்டு தனிமனித ஒழுக்கம், சமுதாய அறம் அரசியல் நீதி ஆகிய மூன்று துறைகளிலும் இன்று நாடு திட்டமிட்ட பாதையிலேயே செல்கிறது என்று சொல்லிவிட்டு வருமுன் காப்பதுபோல "பழுதை-பாம்பு" நியாயத்தை எடுத்துச் சொல்லி "எதைப் பார்த்தாலும் முரண்பட்ட பார்வை கொண்டவர்கள் எதிர் அணியினர்" என்றார்.

"பழுதை-பாம்பு" நியாயம் என்றால் என்ன? அதையும் கொஞ்சம் விளக்கிப் போடுங்கள்" என்று நான் குறுக்கிட்டுக் கேட்டுக்கொண்டேன். கேட்போர் நன்மைக்காக மட்டுமல்ல என் நன்மைக்காகவும் நான் அவ்வப்போது இதுபோன்ற குறுக்கீடுகளைச் செய்வதுண்டு. அவர் விளக்கினார்:

"அதாவது நடுவர் அவர்களே! நீங்கள் இருக்கும் இருக்கைக் கீழே ஒரு தாம்புக்கயிறு கிடக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அது வளைந்து கிடக்கிற ஒரே காரணத்தினால் அது பாம்பாகி விடாது". (இதைக்கேட்ட மாத்திரத்தில் நான் எனது இருக்கைக்குக் கிழே அச்சத்துடன் பார்க்கக் கூட்டம் சிரிப்பில் கூத்தாடியது). "அதைப் பாம்பென மருண்டு தடி எடுத்து அடிக்க முனைபவர்கள் எதிர் அணியினர்" என்றார். அவரையொட்டி அவரது அணியினர் தமது வாதங்களை எடுத்துரைத்தனர்.

அடுத்துப்பேச எழுந்த பேராசிரியர் அ.வ.இராசகோபாலன் அவர்கள் நமது நாட்டில் தனிமனிதர்கள், சமுதாயம், அரசுத்துறைகள் எல்லாம் எப்படித் திசைதெரியாமல் போகிறார்கள் என்று அழகாக வாதிட்டார். "அறநூல்கள் மிகுந்த நாடு நமது நாடு, அறநூல்களுக்கு இங்கே பஞ்சமில்லை ஆனால் அறத்திற்கு மட்டும்தான் இங்கே பஞ்சம். திருவள்ளுவர் சொல்லாத அறமா? தனி மனிதன், ஆண்-பெண், மகன்-மகள், சமுதாயம், அரசன், அமைச்சன், தூதுவன், ஒற்றன், படை இப்படி எல்லாத் துறையினருக்கும் அவர் சொல்லியுள்ள அறங்களைப்போல அறம் உரைத்தவர் வேறு யார்? சாதி என்ற சதிக்குச் சாவுமணி அடித்தவர் அவர். "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும், சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையால்" என்று கூறியுள்ளார்.

"உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும், சேராது இயல்வது நாடு" என்ற திருவள்ளுவரின் இலக்கணப்படியா உள்ளது நாடு"? என்று கேட்டு திருவள்ளுவருக்குக்கூடத் தெரியாத "கையூட்டு" மலிந்து கிடப்பதைச் சுட்டிக்காட்டிப் பேசினார்.

**எனது தீர்ப்புரை:** நான் எனது தீர்ப்புரையில் திருவள்ளுவரது நாடு, அமைச்சு போன்ற துறைகளை எடுத்து சொல்லியதுடன் தனி மனித ஒழுக்கத்தை எவ்வளவு வலியுறுத்துகிறார் என்று சொன்னேன். ஒரு ஆடவனுக்கு ஒழுக்கத்தையும் பெண்ணுக்குக் கற்பையும் அவரைப் போல வலியுறுத்திச் சொல்லியவர் யார் உண்டு?

" ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"--- குறள் 131

என்றும்

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்"—குறள் 54

என்றும் கூறியுள்ளார்.

அதே போல பொருள்செயல் வகையில்

"அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.—குறள் 754

"நடுவு இகந்து ஆம் ஆக்கத்தைத் தவிர்த்து விடவேண்டும்" என்று பொருள் செய்யவேண்டிய அறவழியைத் திருவள்ளுவர் சொல்லியிருப்ப இன்று எத்தனைபேர் அதைப் பின்பற்றுகிறார்கள்? செய்க பொருளை என்று அவர் சொல்வது தானே ஒருவன் முயன்று பொருள் ஈட்ட வேண்டும் என்பதையே தவிர மற்றொருவன் பொருளை வஞ்சித்து வவ்விக்கொள் என்ற பொருளில் அல்ல. அதேபோல

ஈட்டுவதற்குத் தகுந்தாற்போலச் செலவழிக்கவேண்டும் என்பதையும் திருவள்ளுவர் சொல்கிறார்.

"ஆகாறு அளவிட்டிது ஆயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை" –குறள் 478

மேற்காட்டிய நெறி தனிமனிதனுக்கும் பொருந்தும் அரசுக்கும் பொருந்தும். தனது வருவாய்க்கு ஏற்ப இன்றைய மனிதர்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவில்லை. தேவையற்ற பொருள் நுகர்ச்சிப் பழக்கத்திற்கு அடிமைப்பட்டு விட்டனர் இன்று மக்கள். அதனால் கடன் தொல்லைக்கு ஆளாகின்றனர். அரசும் பொருளியல் பற்றாக்குறையில் துன்புறுகின்றது. தனது சேமிப்பை இழந்து அயல் நாடுகளில் கடன் ஏற்கிறது.

ஒரு அரசு எவ்வளவு வரி விதிக்கவேண்டும் என்று சொல்லியுள்ளார் திருமறைக்காவலராகிய திருவள்ளுவர்.

"வேலொடு நின்றான் இடு என்றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு" –குறள் 552

கூரிய வேலைக் கையில் வைத்துக்கொண்டு "உன்னுடைய பொருளையெல்லாம் இதில்போடு" என்று வழிப்பறிக் கொள்ளையன் அச்சுறுத்துவது போன்றது ஒரு மன்னன் மக்களிடம் அதிக வரியை யாசிப்பது.

இன்றைய அரசு இதைக் கடைப்பிடிப்பதாகத் தெரியவில்லை. மக்களின் வலிதெரியாமல் வரி விதிக்கிறார்கள்.

ஒரு நாட்டின் நிலையைத் தனிமனித நிலை, சமுதாய நிலை, அரசு நிலை, பொருளியல் நிலை, பண்பாட்டு நிலை என்று ஆராயவேண்டும். இதை ஆங்கிலத்தில் Individually, Socially, Politically, Economically and Culturally என்று கூறுவார்கள். அப்படி ஆராய்ந்து பார்க்கும்போது நமது நாடு திட்டமிட்ட வழியில் செல்லவில்லை திசை தெரியாமல்தான் போகிறது என்று எனது தீர்ப்பை வழங்கினேன்.

மேலும், நகைச்சுவைக்காக "நமது நாடு திட்டமிட்டே திசை தெரியாமல் போகிறது" என்று சொல்லி முடித்தேன். இத்தீர்ப்பை நான் சொல்லி ஏறத்தாழ அரை நூற்றாண்டு ஆகிவிட்டது. ஆனால் நமது நாட்டின் இன்றைய நிலைக்கும் இது பொருந்தும். ஒரு தமிழறிஞனாகிய எனது பேச்சைப் பொய்யாக்கக் கூடாது என்று நாடு நினைக்கிறது போலும்! இன்னும் எத்தனை ஆண்டு இது நிலைக்கும் என்று பார்ப்போமே!

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 14 | ஆடி 12, தி.பி 2052 | சூலை 28, பொ.ஆ 2021






## தமிழ்க்கடல் புலவர்

# இரா.இளங்குமரனார்

## நினைவுமலர்

*இணையவழி இலவசத் தனிச்சுற்றுக்கு* *விற்பனைக்கு அல்ல.*

# தமிழ்நாட்டு முதல்வர் புகழ்வணக்கம்

*வாழுங் காலத்தின் மாபெரும் தமிழ் மூதறிஞர், நூலாசிரியர், முது முனைவர் இளங்குமரனார் ஆடி 9 (சூலை 25) மதுரையில் உயிரிழந்தார். அவருக்கு வயது 94.*

*இளங்குமரனார் மறைவுக்கு தமிழ்நாட்டு முதல்வர் அவரகள் இரங்கல் தெரிவித்துள்ளார். அவர் வெளியிட்ட இரங்கல் குறிப்பில்,*

"தமிழையே உயிர்மூச்சாகக் கொண்டு வாழ்ந்த முதுபெரும் அறிஞரான அய்யா இளங்குமரனார் மறைவு தமிழ்மொழிக்கும் தமிழ்நாட்டுக்கும் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். இலக்கணச் செழுமையும் இலக்கிய வளமும் கொண்ட தமிழ் மொழியை - அதன் பண்பாட்டைத் தமிழர்களின் இல்லந்தோறும் நிலைநிறுத்திடுவதற்காக தனது 94-ஆவது அகவையிலும் தொடர்ந்து பணியாற்றியவர்.



இளங்குமரனார் தமிழ்மறையாம் குறள்நெறி வழியில் தமிழர்களின் திருமணங்களை முன்னின்று நடத்தியதுடன், வள்ளுவர் தவச்சாலை என்பதை நிறுவி, வெள்ளுடை ஞானியாக வாழ்ந்தவர். புத்தாயிரம் (2000) ஆண்டு தொடக்கத்தில் கலைஞர் அவர்கள் குமரி முனையில் 133 அடி உயரத்தில் அய்யன் திருவள்ளுவர் சிலையை திறந்து வைத்த மகத்தான நிகழ்வில், அய்யா இளங்குமரனார் அவர்கள் பங்கேற்று உரையாற்றியது தனிச்சிறப்பாகும்.

வடமொழி பிறமொழி ஆதிக்கத்திலிருந்து தமிழைப் பாதுகாக்கும் முனைப்புடன், சமக்கிருத மந்திரங்களை முற்றிலும் தவிர்த்து, 4 ஆயிரத்திற்கும் மேற்பட்ட திருமணங்களை திருக்குறள் ஓதியும் - தமிழில் வாழ்த்தியும் நடத்தி வைத்தவர் அய்யா இளங்குமரனார்.

அடுத்தடுத்த தலைமுறைகளிலும் தமிழ் தழைத்திருக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் 500-க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவர். பழந்தமிழர் வாழ்வியல் அடிப்படையில் உடல்நலன் காக்கும் முறைகளையும் அவர் தொடர்ந்து கடைப்பிடித்து நலவாழ்வு வாழ்ந்து, அவற்றை இன்றைய இளைஞர்களும் பின்பற்றும் வழிமுறைகளைக் கற்றுத் தந்தவர். இளங்குமரனாரின் உடை போலவே அவரது உள்ளமும் தூய்மையானது. அயராது அவர் மேற்கொண்ட தமிழ்ப்பணி போற்றுதலுக்குரியது. அய்யா இளங்குமரனாரினன் மறைவால் வாடும் குடும்பத்தினர், உறவினர்கள், நண்பர்கள், தமிழ்ச்சான்றோர்கள் அனைவருக்கும் முதலமைச்சர் என்ற முறையிலும், தனிப்பட்ட முறையிலும் என் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழ் போல் என்றென்றும் நிலைத்திருக்கும் அய்யா இளங்குமரனாரினன் இறவாப் புகழ் " என்று தெரிவித்தார்.

## செந்தமிழந்தணர், என் ஆசான் திருமிகு இரா.இளங்குமரனார் முதுமையால் மதுரையில் மறைந்தார்

என **மதுரை நாடாளுமன்ற உறுப்பினர் சு.வெங்கடேசன்** தெரிவித்துள்ளார். இதுகுறித்து, அவர் வெளியிட்ட இரங்கல் குறிப்பில்,

"இளம்வயதிலேயே தொடக்கப்பள்ளி ஆசிரியராக வாழ்க்கை தொடங்கி, தானே பயின்று புலவர் பட்டம் பெற்று, உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியராக, மேல்நிலைப்பள்ளி பொறுப்புத் தலைமையாசிரியராக, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆய்வறிஞராக, தமிழ்ச் சொற்பிறப்பு அகரமுதலித் திட்டத்தில் மொழியறிஞராகச் சிறக்கப்பணியாற்றிய செம்மல் அவர். பாவலர், சொற்பொழிவாளர், சொல்லாய்வறிஞர், எழுத்தாளர், தமிழாய்வாளர், தமிழிய வரலாற்று வரைவாளர், பதிப்பாசிரியர், உரையாசிரியர், தமிழியக்கச் செயற்பாட்டாளர், தமிழ்நெறி பரப்புநர் எனப் பன்முகங்கொண்டவர் இளங்குமரனார்.



திருநகரில் பாவாணர் நூலகத்தையும் திருச்சிக்கு அருகில் திருவள்ளுவர் தவச்சாலையையும் அமைத்தவர். அதிர்ந்து பேசா பண்பாளர், ஆய்ந்துபேசும் அறிஞர், எழுத்தாளராக வாழ்வதற்காக அரசுப்பணியைத் துறந்தவர், கண்பார்வை இழந்தாலும் தனது எழுத்துப்பணி தடைபடக்கூடாது என்பதற்காக கண்களை மூடியெழுதிப் பழகியவர். திருக்குறளுக்கு உரையை திருக்குறளிலேயே தேடவேண்டுமென வலியுறுத்திய குறளாசன். குறள்வழித் திருமணம், புதுமனை புகுவிழா என குறளியத்தை வாழ்வியல் நெறியாக வகுத்து வாழ்ந்து காட்டியவர். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, உலகில் முதன்முதலாகப் பெண்ணொருத்தியால் எழுதப்பட்ட இலக்கண நூலான காக்கைப்பாடினியத்தை - அது மறைந்துவிட்டது என்று தமிழறிவுலகம் கருதியவேளையில் - கண்டெடுத்து தமிழ்கூறு நல்லுலகிற்கு வழங்கிய தமிழ்ப்பாட்டனார் எங்கள் இளங்குமரனார். என அவரைப்பற்றிய எண்ணங்கள் ஒவ்வொன்றும் விண்மீன்களாய் மனவானில் ஒளிவிடுகின்றன. அவரது இழப்பை மனம் ஏற்கமறுக்கிறது. ஆனால், இயற்கையின் கட்டளையை ஏற்று அவருக்கு வீரவணக்கம் செலுத்துகிறேன்" என்று தெரிவித்தார்.

# செந்தமிழ் அந்தணர் பெரும்புலவர் தமிழ்ப்பெருங்கடல் தமிழறிஞர் இரா.இளங்குமரனார் ஐயா அவர்கள் இயற்கை எய்திவிட்டார்! - செ. இரா. செல்வக்குமார்

ஆற்றொணாத் துயரமான செய்தி! ஈடு செய்யவே இயலாத பேரிழப்பு. தமிழுக்கு ஈடரிய செம்மைமிகு வளங்கள் சேர்த்த பெருமான். அவருடைய அருமைகளையும் பெருமைகளையும் மாண்புகளையும், அவர் பதிந்து வைத்த அறிவுச்செல்வங்களையும் அறிந்தறிந்து போற்றவேண்டும் வழிவழியாய் வரும் தமிழ்மக்கள்! என்றென்றும் வாழ்க ஐயாவின் செம்புகழ்!.

பிறப்பு 30.1.1930 - மறைவு 25.7.2021

"மதுரையில் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற இளங்குமரனாரின் இயற்பெயர் கிருட்டிணன். எட்டாவது குழந்தையென்பதால் வைக்கப்பட்ட பெயர். தனித்தமிழ்இயக்க ஈடுபாடு ஏற்பட்டபின் பெயரை மாற்றிக்கொண்டார். மனைவி செல்வம் மறைந்துவிட்டார். கலைமணி, இளங்கோ, பாரதி, திலகவதி என இவருக்கு நான்கு மக்கள். 500க்கு மேற்பட்ட நூல்களை எழுதிய சாதனையாளர். பாரதிதாசன் பல்கலைக்கழகத்தால் முதுமுனைவர் பட்டம் வழங்கப்பட்டவர். செந்தமிழ்ச்சொற்பொருட்களஞ்சியம் (14தொகுதிகள்) தேவநேயப்பாவாணரின் ஆய்வுப்பிழிவான 'தேவநேயம்' (10தொகுதிகள்) முதலான அரிய நூல்கள் இவர்பெயரை என்றும் பேசுவன. நெல்லை மாவட்டம் வாழவந்தாள்புரத்தில் பிறந்தவர். மதுரை திருநகர் இராமன்தெரு இல்லத்தில் இன்று (சூலை 25) இரவு 7.30க்கு இயற்கை எய்தினார். நாளை (திங்கள் சூலை 26) மாலை 4.00 மணிக்கு இறுதி வணக்கம் நிகழ உள்ளது.

தமிழ்க்காப்புப் போராளி இளங்குமரனார்

செந்தமிழ்அரிமா இலக்குவனார் 1960-ஆம் ஆண்டு தோற்றுவித்த தமிழ்க்காப்புக்கழகத்தின் செயலராக எழுச்சியுடன் பணியாற்றியவர் எங்கள் ஆசான் இளங்குமரனார். 1973-இல் இலக்குவனார் புகழுடல் எய்தும்வரை தொய்வின்றிச் செயலராகக் களம் கண்டவர் இளங்குமரனார்.

கெடல் எங்கே தமிழின் நலம், அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க- என்பதே இதன் கொள்கை, நோகம், செயல்திட்டம்.

1963-ஆம் ஆண்டு மதுரை வந்தபோது பாரதிதாசன் தமிழ்க்காப்புக்கழகக் கூட்டத்தில் கலந்துகொண்டு உரைநிகழ்த்தினார்.

அப்போது "இலக்குவன் ஒருவனால் மட்டுமே இப்படி ஒரு கழகத்தை நிறுவமுடியும். போராடமுடியும்" என்று பாரதிதாசன் பேசியது குறிப்பிடத்தக்கது.

மதுரைமாநகரின் மாடவீதிகளில் உலாவந்து கடைகளின் பெயர்களைத் தமிழில் எழுதுமாறு இலக்குவனாரின் தமிழ்க்காப்புகழகம் அணிதிரண்டு வந்து வலியுறுத்திய தமிழ்க்காப்புப் பெருநடையின் படம் இங்கே வெளியிடப்பட்டுள்ளது.

இலக்குவனாரின் இடதுபுறம் முன்றாவதாக வருபவர் அப்போது அமெரிகன் கல்லூரிப் பேராசிரியராக விளங்கிய வீ.ப.கா.சுந்தரம் அவர்கள்.





இலக்குவனாருக்குப் பக்கத்தில் அவரது வலது தோளையொட்டி நடை வருபவர் நம் ஐயா இளங்குமரனார். அதனை மட்டும் பெரிதாக்கி தனியே வழங்கியுள்ளேன்.

இளங்குமரனார். மட்டுமல்ல பேராசிரியர் வீ.ப.கா.சுந்தரம் அவர்களும் தம் வாழ்நாளெலாம் தமிழ் உரிமைப் போராளியாக வாழ்ந்ததை மறந்துவிடக்கூடாது.

# கொல்லிமலை உலா

*ஆசான் இளங்குமரனார், சிலம்பொலியார், கவிஞர் ஞானச்செல்வன், புலவர் பதுமனார், பெங்களூர் முத்துசெல்வன், இளவரசஅமிழ்தன், செ.இராமானுசன், பால.சீனிவாசன், சுந்தர், மணிமேகலை புட்பராசு ஆகியோர் 11/4,12/4,13/4 என மூன்று நாள்கள் கொல்லிமலை சென்றுவந்தனர்.*

இளவரச அமிழ்தன் அனைவரையும் ஒருங்கிணைத்து அழைத்துச் சென்றார்.

சிலம்பொலியார் அங்கங்கே விழாக்களுக்கும் வரவேற்புகளுக்கும் ஏற்பாடு செய்திருந்தார்.

புலவர் பெருமக்களோடும் சிலம்பொலியாருடனும் ஆசான் இளங்குமரன் ஆகியோருடன் சென்று வந்த பயணம் நினைக்குந்தொறும் இனிப்பது.தமிழ்த்தேன் பொழியும் இலக்கிய அருவிகளில் திளைக்கச் செய்தனர் இளங்குமரனாரும் சிலம்பொலி செல்லப்பனாரும்.

இந்தியத் துணைக்கண்டத்தில் தமிழர்கள் எங்கெல்லாம் சென்று தங்கள் உழைப்பால் தொழில்வளம் சிறக்கச் செய்து பின்னர் விரட்டடப்பட்டார்கள் என்பதனை விவரமாக எடுத்துரைத்தார் முத்துசெல்வன்.










# இளங்குமரன் ஐயாவிற்குக் கனடா இலக்கியத்தோட்டம் வழங்கிய விருது

*புலவர்மணி.முதுமுனைவர் இரா.இளங்குமரன் அவர்களுக்குக் கனடா இலக்கியத்தோட்டம் விருது வழங்கியது. மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விழா. கனடாப் பேராசிரியர் செ.இரா. செல்வகுமார் 20/5/17 முற்பகல் வழங்கினார்.*

அத்தருணத்தில் மறைமலை இலக்குவனார் படித்தளித்த வாழ்த்துப்பா!



வாழிய பெரும! வண்டமிழ் போன்றே!
புலவர்மணி, முதுமுனைவர் இளங்குமரனார்க்கு வாழ்த்து
பளிங்கெனத் துளங்கிடும் பண்புசால் உள்ளம்;
உளங்கவர் முறுவல் விளங்கிடும் திருமுகம்;
தமிழ்நலன் காத்தல் தம்கடன் என்றே
தளரா துழைத்திடும் தறுகண் உறைவிடம்;
மறைமலையார் போல் நிறைவுறு புலமை;
பாவாணர் நெறியில் ஓய்விலா ஆய்வு;
இலக்குவர் வழியில் இயங்கிடும் தமிழ்மறம்;
இனம்,மொழி பேணிட இன்றமிழ் மக்களை
எழுச்சி கொளச்செய உலகெலாம் பயணம்;
ஆய்வுச் செல்வத்தை அனைவரும் துய்த்திட
நூல்பல இயற்றிடும் நுண்மாண் நுழைபுலம்;
மாணவர் தம்மை மதிப்புடன் போற்றி
ஆற்றுப் படுத்திடும் எங்கள் ஆசான்;



இளங்குமரனார் பெருமை இயம்பிட
இயலுமோ எம்மால் இயம்பிடுவீரே!
பகுப்பாய் வுநோக்கில் இவர்பரி மேலழகர்;
நூல்நலன் நுவல்வதில் நச்சினார்க் கினியர்;
அருங்கலை அறிவில் அடியார்க்கு நல்லார்;
தெளிவுறப் புகல்வதில் தெய்வச் சிலையார்;
மேடை மேவிடும் மென்றமிழ்த் தென்றல்;
தமிழ்ப்பகை சாடிடும் நக்கீர நெருப்பு;
மூச்சும் பேச்சும் தமிழெனக் கொண்டு
எண்ணும் எழுத்தும் தமிழ்க்கென ஆக்கி
எமக்குத் தலைவராய் இலங்கிடும் அறிஞரே!
கொள்கை இமயமே! பல்கலைக் கொண்டலே!
அறிவுக் கடலே! அருங்குணப் பொதியிலே!
பல்லாண்டு பல்லாண்டு பாடி வணங்கினோம்!
பண்புளோர் சொல்லாய் பாவலர் பொருளாய்
வள்ளுவன் மறையாய் காப்பியன் நூலாய்
உலகெலாம் போற்றிட வாழி! ஊழி!
வாழ்த்தி மகிழ்கிறோம்! வணங்கிப் புகழ்கிறோம்!
வாழிய பெரும! வண்டமிழ் போன்றே!


மறைமலை இலக்குவனார்
52/3 சௌந்தரியா குடியிருப்பு,
அண்ணாநகர் மேற்கு, சென்னை-600 101.


திருவள்ளுவர் நிலையம்,
7. இராமன் தெரு,
திருநகர், மதுரை-
625006.
30.06.2017

பேரன்புப் பெருந்தகைச் செல்வீர்,
வணக்கம். வாழிய நலனே!

தாங்கள் முன்னின்று வழங்கிய [illegible] - தமிழ்த் தொடை -
வாழ்த்தும், சிறப்பாக அமைந்தது. தாங்கள் [illegible]
எழுதிய, 'வாழிய பெரும வண்டமிழ் போன்றே' என்னும் அகவல்!
தங்கள் பெருந்தக்க வாழ்த்துக்குப் பெருநன்றியேன்!
[illegible] போது யான் கூறிய உறுதிமொழியாகும் [illegible]
[illegible] திட்டம் உருவாகியுள்ளது.
[illegible] தமிழ்ச் சங்கமே வெளியிடும்
தொல்காப்பியத் தெளிவுரையைத் [illegible] யான்
[illegible], யான் பெற்ற [illegible] கொண்டென
[illegible] வழங்கி [illegible]
[illegible] போலவே [illegible] உடையேன். தங்கள் அன்பும்
[illegible] என்றும் [illegible]
[illegible]
உள்ள [illegible] அன்பும் வாழ்த்தும்.
[illegible] அன்புடன்
இரா. இளங்குமரன்

## அந்தணர் இளங்குமரனார் -நாக இளங்கோவன்

அந்தணர் என்ற சொல்லுக்கு இலக்கணமாக வாழ்ந்தவர் புலவர்.இரா.இளங்குமரனார். செந்தமிழ் அந்தணர் என்றே அழைக்கப்பட்டார். இவரின் தனித்தமிழ் இயக்கம் என்ற நூல் அனைவரும் படிக்க வேண்டிய நூல். காவிரிக் கரையில் திருச்சி-குளித்தலை சாலையில் உள்ள அல்லூரில் திருவள்ளுவர் தவச்சாலை என்ற குடிலமைத்து தமிழே தவமாக வாழ்ந்தார். பின்னர் மதிரைக்குப் பெயர்ந்தார் என்று அறிந்தேன். சில கூட்டங்களில் பார்த்திருந்தாலும், தமிழ்க் குடும்பச் சந்திப்பு என்ற வருடாந்திர சந்திப்பு ஒன்றில் (திருவானைக்கா) அவர் நடத்திய தமிழ் நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டது மறக்க இயலாதது.

2009ல், தமிழெழுத்துச் சீரழிப்பு முயற்சியை வா.செ.குழந்தைசாமி நிகழ்த்தியபோது, அதை அறிந்ததும், முதலில் வெகுண்டெழுந்த தமிழ் அறிவுலகின் பெரும்புலவர் இவர் ஒருவரே என்றால் மிகையல்ல. எழுத்துச் சீரழிப்பை எதிர்த்து, புதுச்சேரி வலைப்பதிவர் சிறகம் ( நண்பர் சுகுமாரன் இரா. ) நடத்திய கண்டணக் கூட்டத்தில், இவரின் நூல் வெளியிடப்பட்டது. நல்ல தாக்கத்தை அது ஏற்படுத்தியது என்பதை நண்பர் சுகுமாரனொடு நானும் நாங்களும் இவ்வேளையில் நினைவு கூர்கிறோம்.

வள்ளுவநெறி நின்ற தமிழ் வள்ளல், நிறைவாழ்க்கை வாழ்ந்து இறைவனடி சேர்ந்தார்; உலகியலின்படி. அவரின் ஆன்ம அமைதிக்கு இறையை வேண்டுகிறேன்.

## அழுது அஞ்சலிக்கிறோம் -சோழா நாகராசன்

தமிழே மூச்சென வாழ்ந்த எங்கள் ஐயா இளங்குமரன் மறைந்தார்! ஆசான் தமிழ்க்கூத்தனோடு நாங்கள் குன்றத்தில் குழாமமைத்த காலத்திலேயே அவரை அறிவேன்.

அவரின் திருநகர் பாவாணர் நூலகம் அப்போது எங்கள் கனவகம்!

"கலைவாணரைக் கையிலெடுத்திருக்கிறார்!" - என்று என்னைக் குறித்து பெரியார் நெறியாளர் அருமை நண்பர் வரதராசன் இளங்குமரனாரிடம் ஒருமுறை சொன்னபோது என்னிடம் அன்பொழுக, "அவர் தக்கவர்! அவரைப் பரப்பும் நீ பாராட்டுதலுக்குரியவன்!" என்றார் மனமினிக்க.

திருக்குறளை உயிரெனக் கருதி வாழ்ந்தவரின் இன்னுயிர் இன்று பிரிந்துவிட்டது. பெரும் சோகம்.

இதயத்தால் அழுது அஞ்சலிக்கிறோம் ஐயா!!

# பூங்காவில் இளங்குமரனார் -இராமசாமி செல்வராசு

*வையகத்திலிருந்து விடைபெற்றுச் செல்கிறார் இளங்குமரனார். ஆழ்ந்த இரங்கல்! அவரைப் பற்றிச் சில ஆண்டுகளுக்கு முன்னர் அறியக் கிடைத்தது ஒரு நல்வாய்ப்பு.*

2007 சூலை 29: "அவரவர் கடமையை ஒழுங்காகச் செய்வதே தவம்" என்று தனது எண்பத்தொரு வயதிலும் தமிழுக்காக உழைத்துக் கொண்டிருக்கும் பேராசிரியர் இளங்குமரனாரின் செவ்வி தமிழின்பால் ஆர்வமுள்ளவர்கள் தவற விடக்கூடாத ஒன்று. வட அமெரிக்காவின் தமிழ்ச்சங்கப் பேரவையின் ஆண்டுவிழாவில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டவரை நேர்கண்டு அந்த உரையாடலைக் கடந்த வார 'பூங்கா' இதழ் வெளியிட்டிருக்கிறது.



பேராசிரியராக இருந்து ஓய்வுபெற்றபின்னும் தனது ஓய்வூதியத்தை வைத்துத் திருச்சிக்கருகே திருவள்ளுவர் தவச்சாலை என்று அமைத்துத் தமிழாய்வுக்குத் தொண்டாகவும் பல வசதிகளும் செய்துகொண்டிருக்கும் இளங்குமரனார் சுமார் நானூறு புத்தகங்களை வெளியிட்டிருப்பதாகவும் கூறுகிறார்."

மேலும் தொடர: பூங்காவில் இளங்குமரனார் (http://blog.selvaraj.us/archives/242)

# புலவர் இரா.இளங்குமரன்: நினைத்துக்கொள்ளவேண்டியவர்

-அ. ராமசாமி

சைவசிந்தாந்த நூற்பதிப்புக்கழகச் சொற்பொழிவுகள் வரிசை நூல்களின் ஆசிரியராகவும், அப்பதிப்பகத்தின் பதிப்பாசிரியர் என்ற வகையிலும் அறிந்திருந்த பெயர்.மதுரைப்பல்கலைக்கழகத்தில் முதுகலை மாணவனாக நுழைந்த காலத்தில் வருகைப்பேராசிரியர்கள் என்ற வகைப் பாட்டில் வந்து வேலை செய்து கொண்டிருந்தவர்களுள் ஒருவராக புலவர் இரா. இளங்குமரன் இருந்தார். புலவர்கள் ந.சேதுரகுநாதன், க. வெள்ளைவாரணர் போன்றோரும் அங்கு வந்து பதிப்புப் பணிகளில் ஈடுப்பட்டிருந்தனர். அவர்களைத் துறை பல்கலைக்கழக வளாகத்தில் பார்த்ததுண்டு. ஆனால் தனியாகச் சந்தித்துப் பேசியதில்லை என்னை நவீனத்துவனாக நினைக்கச் செய்தது சிறுபத்திரிகைகளின் வாசிப்பு. அதனால் மரபுத்தமிழ்ப் போக்கிற்கெதிரான மனோபாவம் கொண்டவனாகவும் நினைத்துக்கொண்டிருந்தேன். அதனால் இந்தப் புலவர்களோடு உரையாடுவதற்கு எதுவுமில்லை என்றும் நினைத்துக்கொண்டேன். அப்படி உரையாடுபவர்களோடு அருகிருந்து கவனித்த நிலையில் அவர்களின் சமகாலப்பார்வை பாரதிதாசன் பரம்பரைக்கவிகளின் வழியாகத் தமிழ் இலக்கியத்தைப் பார்க்கும் பார்வையாக இருந்தது என்பதை உணரவும் முடிந்தது.

முதுகலைப்படிப்புக்குப் பின்னால் எனது ஆய்வுத் தலைப்பு, இடைக்காலத் தமிழ் இலக்கியங்களை மையமிட்டதாக மாறியபோது அவர் பதிப்பித்த நூல்களை வாசிக்கவேண்டியவனாக மாறினேன். இடைக்காலம் மற்றும் பின்னிடைக்காலத் தமிழ் இலக்கிய நூல்களைத் தொகுத்து வைத்திருக்கும் நூலகங்களின் பட்டியலைத் தொகுத்துக்கொண்டு ஆய்வுக்கான தரவுகளைத் தேடத்தொடங்கியபோது திரும்பத்திரும்ப என்னை உரசிய பெயர் புலவர் இரா.இளங்குமரன். முதலில் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திற்கும், மதுரைத் தமிழ்ச்சங்க நூலகம் இருந்த செந்தமிழ்க்கல்லூரிக்கும் சென்று அங்கேயே அமர்ந்து வாசிக்க வேண்டியிருந்தது. வீட்டிற்குக் கொண்டுவந்து வாசிக்க முடியாது. தரமாட்டார்கள். தந்தாலும் திரும்பக் கொண்டுவரும்போது அப்படியே திரும்பக் கொடுக்க முடியாது. அந்த நூல்கள் எல்லாம் செம்பழுப்பு நிறத்தில் மிகப்பழையனவாக இருந்தன. நகல் எடுக்கும் எந்திரங்கள் வராத காலகட்டம். நகலெடுக்கும் எந்திரங்களுக்குள் வைத்து எடுத்தால் நொறுங்கிப் போய்விடும் நிலையில் தான் இருந்தன.

இரண்டு நூலகத்தில் இருந்தவர்களும் புலவர் இளங்குமரன் பெயரைச் சொன்னார்கள். மதுரையின் புறநகரான திருநகரில் வசிக்கிறார் என்ற தகவலையும் தந்தார்கள். எனது நெறியாளரோடு உரையாடியபின் அவரை நாடும் முயற்சியைத் தொடங்கினேன். அப்போது மதுரை பெரியார் பேருந்து நிலையத்திலிருந்து கிளம்பி திருப்பரங்குன்றம், திருநகர் வழியாக வடபழஞ்சி என்ற சிற்றூருக்கு ஒரு நகர்ப்பேருந்து உண்டு. அந்த சிற்றூரின் இரயில்வே நிலையத்திற்குப் பெயர் மதுரைப் பல்கலைக்கழகம். எனது முதுகலை வகுப்புத்தோழிகள் இரண்டுபேர் அந்தப் பேருந்தில் வருவார்கள். அவர்களில் ஒருவர் ஆய்வுப்படிப்பிலும் தொடர்ந்தார். அவர் மூலம் புலவரின் வீடிருக்கும் நிறுத்தத்தில் இறங்கி முதல் நாள் சென்று அறிமுகம் செய்துகொண்டு, தஞ்சையிலும், மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் அவர் பெயரைச் சொன்னதைச் சொல்லி அறிமுகம் செய்துகொண்டேன். முதல் சந்திப்பில் என் ஆய்வு, அதன் நோக்கம், அதற்குத் தேவைப்படும் நூல்களின் தொகுப்புகள் போன்றவற்றைக்

கேட்டுக்கொண்டார். அவரும் சிலவற்றைச்சொல்லிப் பட்டியலைப் பெரிதாக்கினார். அத்தொகுப்புகளில் அவரிடம் என்னவெல்லாம் இருக்கின்றன என்று சொன்னார். தாராளமாக வரலாம்; வந்து படிக்கலாம். என்று சொல்லி அவரது சொந்த நூலகத்தின் அறையைத் திறந்துவிட்டார். முறையாக எண்ணிட்டு அடுக்கி வைத்திருந்தார். நூல் பெயரைக் கொண்டு உடனே எடுத்துவிடுவார். ஒவ்வொரு நாளும் போனவுடன் இரண்டு நூல்களை எடுத்துத் தருவார். குறிப்புகள் எடுத்துக் கொண்டு அங்கேயே வைத்துவிடுவேன். ஒருவாரம் முடிந்தநிலையில் சனி, ஞாயிறுகளில் வாசிக்க என்று இரண்டு நூல்களைத் தந்து கவனமாகக் கொண்டுவந்துவிடுங்கள் என்றார். யாருக்கும் தருவதில்லை; நீங்கள் தொடர்ந்து வருவதால் தருகிறேன் என்று சொல்லித் தந்தார்.

இரண்டாவது வாரத்தில் இரவில் படிக்க என்று ஒரு நூலைக் கொடுத்தனுப்பினார். முதல் கட்டத்தில் மூன்று வாரங்கள் தொடர்ந்து போய் வந்தேன். பின்னர் சிறிய இடைவெளி. திரும்பவும் அங்கு சென்றேன். எனது ஆய்வுத்தலைப்பான நாயக்கர் காலத்தமிழ் இலக்கியங்களில் பெரும்பாலான நூல்கள் அவரிடம் இருந்தன. வாசித்தபின் கேட்கும் சந்தேகங்களுக்கு விரிவான பொருளுரைகள் சொல்வார். ரசனை சார்ந்த விளக்கவுரைகளும் கிடைக்கும்.

பெரியார் நிலையம் - திருப்பரங்குன்றம் - வடபழஞ்சி பேருந்து வகுப்புகள் தொடங்கும் நேரத்திற்கு முன்னால் பல்கலைக்கழகம் வந்துசேர்ந்துவிடும். அந்தப் பேருந்து பல்கலைக்கழகத்திற்கு வருபவர்களை இறக்கி விட்டுவிட்டுத் திரும்பும்போது அதில் ஏறித் திருநகரில் இறங்கி அவர் வீட்டிற்குச் சென்றுவிடுவேன். மதிய உணவும் எடுத்துச்செல்வேன். பள்ளிக்காலத்தில் அப்படி மதிய உணவோடு சென்றதுண்டு.

தனித்தமிழ் இயக்க ஆதரவாளராக அறியப்பெற்ற அவரிடம் விவாதிக்க ஒன்றும் இல்லை என்ற மனநிலையை மறந்து எனது ஆய்வுக்கான தரவுகள், விளக்கங்கள் நிரம்பிய நூலத்தைத் தனக்குள்ளும் தன் வீட்டிலும் வைத்திருந்த வழிகாட்டியாக மாறினார். அவரது மறைவு நாளில் நினைத்துக்கொள்ள இந்த நினைவுகள் எனக்குள் இருக்கின்றன.



# தமிழாய்ந்த பெருமகனார்

## -தவத்திரு .தயானந்த சந்திரசேகர சுவாமிகள்

இன்பத்தமிழாய்ந்த பெருமகனார், முதுமுனைவர் இரா. இளங்குமரனார் ஐயா மறைவு செய்தி நமக்கு பெரும் மனத்துயரத்தை அளிக்கிறது. தமிழ்த் துறையில் கரை கண்டவர். அவரது மறைவு தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு பெரும் இழப்பாகும்.

2005-ல் நாம் வெளியிட்ட திருமந்திர ஆய்வுரைக் களஞ்சிய நூலிற்கும், 2011-ல் வெளியிடப்பட்ட முத்தமிழ்க் களஞ்சிய நூலிற்கும் ஆய்வுரைகளை வழங்கி நமது ஆதீனப் பணிக்கு சிறப்பு சேர்த்த பெருந்தகை. நம் மீது அன்பு பூண்டொழுகிய உயர் பண்பாளர். 2013-ல் நமது திருமடத்திற்கு தமிழ் அறிஞர் குழுவோடு (சிலம்பொலியார் சு.செல்லப்பனார், மேனாள் துணைவேந்தர் முனைவர் இ.சுந்தரமூர்த்தி, புதுகை தருமராசன் உள்ளிட்டோருடன்) இணைந்து வந்த போது, நமது பணிகளை பாராட்டியதோடு, தனியாக ஒரு முறை திருமடத்திற்கு வருவதாக கூறினார்கள். நாம் மிகவும் மகிழ்ந்தோம்.

தமிழ் இலக்கியத் துறையில் அவரின் அர்ப்பணிப்பான சீரிய பணி என்றும் நினைவு கூர்ந்து போற்றப்பட்டுக் கொண்டேயிருக்கும்.

ஐயா அவர்களின் குடும்பத்தினர் மற்றும் அவருடன் பயணித்த தமிழாய்ந்த அறிஞர்கள், மாணவர்கள் அனைவருக்கும் நமது ஆழ்ந்த இரங்கலை தெரிவித்துக் கொள்கிறோம்.

தவத்திரு .தயானந்த சந்திரசேகர சுவாமிகள்
ஆதீனகர்த்தர், திலகவதியார் திருவருள் ஆதீனம்,
புதுக்கோட்டை.



# தமிழ்க்கடல் இரா. இளங்குமரனார் மறைவு!

## -முனைவர் மு.இளங்கோவன்,புதுச்சேரி

திருவள்ளுவர் தவச்சாலையை நிறுவி அன்னைத் தமிழுக்கும் அருமறையாம் திருக்குறளுக்கும் தொண்டாற்றிய மூதறிஞர், தமிழ்க்கடல் இரா. இளங்குமரனார் இன்று (25.07.2021) இரவு 7.30 மணியளவில் தம் மதுரை இல்லத்தில் இயற்கை எய்தினார் என்ற செய்தியறிந்து, பெருந்துயருற்றேன்.

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தமிழ் அறிஞர் பெருமக்களுள் தமிழ்க்கடல் இரா. இளங்குமரனார் குறிப்பிடத் தகுந்தவர். தமிழ் இலக்கண இலக்கியங்களில் ஆழ்ந்த பயிற்சியுடைய இரா.இளங்குமரனார் பள்ளி ஆசிரியராக விளங்கியவர். பின்னர் நூலாசிரியர், பாவலர், பதிப்பாசிரியர், உரையாசிரியர், தொகுப்பாசிரியர், இதழாசிரியர், உரையாளர் எனப் பல முகங்களைப் பெற்றுத் தமிழுக்கு ஆக்கமான பல பணிகளைச் செய்துள்ளார். இவர் எழுதிய நூல்கள் பல நூறாக விரியினும் இலக்கண வரலாறு, தமிழிசை இயக்கம், தனித்தமிழ் இயக்கம், பாவாணர் வரலாறு, குண்டலகேசி, யாப்பருங்கலம், புறத்திரட்டு, திருக்குறள் தமிழ் மரபுரை, காக்கைபாடினியம், தேவநேயம் உள்ளிட்ட நூல்கள் இவர்தம் தமிழ்ப்பணிக்கு என்றும் நின்று அரண் சேர்க்கும். திருக்குறள் வழியில் வாழ்க்கையை அமைத்துக்கொண்ட திரு. இளங்குமரனார் வாழும் வள்ளுவராகவே விளங்கியவர்.

திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் காவிரிக்கரையின் தென்புறம் அமைந்துள்ள அல்லூர் என்னும் ஊரில் திருவள்ளுவர் தவச்சாலை அமைத்துப், பாவாணர் நூலகம் கண்டு, தவப் பள்ளியில் உறைந்த நாள்போக எஞ்சிய நாளெல்லாம் தமிழகம் முழுவதும் சுற்றிச் சுழன்று திருக்குறள் உரைப்பொழிவுகள் வழங்கியும் திருமணங்களைத் தமிழ்வழியில் நடத்தியும் நல்லற மணமக்களை இல்லறப்படுத்தியும் வாழ்ந்தவர்.

கடந்த முப்பது ஆண்டுகளாக நம் ஐயாவுடன் பழகும் பெரும்பேறு பெற்றிருந்தேன். அவர்தம் திருவள்ளுவர் தவச்சாலையில் இருந்த பாவாணர் நூலகத்தை மிகச் சிறப்பாகப் பயன்படுத்தியவர்களுள் யானும் ஒருவன். ஐயாவின் உரைகளைப் பலமுறை செவிமடுத்துள்ளேன். உரையாடியுள்ளேன். என் நூல்களுக்கு அணிந்துரை வழங்கியும், நான் ஏற்பாடு செய்த பல நிகழ்வுகளில் கலந்துகொண்டு ஊக்கமொழிகள் வழங்கியும் என்னைப் பெருமையுறச்செய்தவர். என் நூலொன்றில் "இளங்கோவனார் அழுந்தக் கற்கும் ஆர்வலர். நிறையறிவுபெறுவான் நெடிதுழைப்பாளர். முத்தமிழ்த் திறமும் முத்திரை பதிக்கத் திகழவிருக்கும் முனைவர்" என்று என்னை அன்பொழுக அறிமுகம் செய்துள்ளார்(1995). அவர்தம் உரைகள் சிலவற்றைப் பதிவு செய்து இணையவெளியில் பலரின் பார்வைக்கும் வைத்துள்ளேன். தமிழ்ப் பெருங்கடலாக விளங்கிய ஐயா இளங்குமரனாரின் இழப்பினை உலகத் தமிழர்கள் தங்கள் குடும்பத்து இழப்பாக எண்ணி வருந்துவர். அந்த அளவு அவர் உலகப் பெருந்தமிழராக விளங்கியவர். அன்னாரை இழந்துவருந்தும் குடும்பத்தினர், உறவினர்கள், நண்பர்கள், தமிழ் உணர்வாளர்கள் அனைவருக்கும் என் ஆழ்ந்த இரங்கலை உரித்தாக்குகின்றேன். ஐயாவின் வாழ்க்கை குறித்து முன்பு எழுதிய என் பதிவினை மீள்பதிவாகப் பதிவுசெய்கின்றேன்.

## இரா. இளங்குமரனாரின் தமிழ் வாழ்க்கை:

இரா.இளங்குமரானார் அவர்கள் திருநெல்வேலி மாவட்டம் வாழவந்தாள்புரம் என்னும் சிற்றூரில் 1930 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முப்பதாம் நாள் பிறந்தவர். தந்தையார் படிக்கராமர், தாய் வாழவந்தம்மையார். தந்தையாரிடம் இருந்த தமிழறிவு, கணக்கு அறிவு மகனாரிடத்து நின்று நிலவியது. தொடக்கப்பள்ளி ஆசிரியராகத் தம்மை ஆயத்தம் செய்து கொண்டு தம் பச்சிளம் பருவத்திலேயே 08.04.1946 இல் ஆசிரியர் பணிமேற்கொண்டவர்.

பின்னர்த் தனியே தமிழ் கற்றுச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் வழியாகப் புலவர் தேர்வில் முதல் வகுப்பில் வெற்றிபெற்றவர்(1951). பள்ளிப்பருவத்தில் சொற்பொழிவாற்றும் திறன் பெற்றிருந்த இரா.இளங்குமரனார் தம் பதினான்காம் அகவை முதல் பாடலியற்றும் திறன்பெற்றிருந்தவர். இப்பயிற்சி பின்னாளில் குண்டலகேசி என்னும் காவியம் உருவாக வழிவகுத்தது. இக்காவியம் 1958 ஆம் ஆண்டு மதுரை அங்கயற்கண்ணி ஆலயத்தில் அரங்கேற்றப்பட்டது.

மதுரை பாரதி புத்தக நிலையத்தின் வாயிலாகப் பல நூல்கள் வெளிவரத் தொடங்கின. பல ஆண்டுகளாகத் தமிழாசிரியர் பணிபுரிந்தாலும் இவர் விரும்பிச்செய்தது நூலாக்கப் பணிகளேயாகும். பல்வேறு அமைப்புகளில் இணைந்தும் பணிபுரிந்துள்ளார். தமிழ்க்காப்புக் கழகச்செயலாளர், மதுரை மாவட்டத் தமிழாசிரியர் கழகச்செயலாளர், தேர்வுக்குழு அமைப்பாளர் உள்ளிட்ட பல பொறுப்புகளை வகித்துத் திறம்படப் பணிபுரிந்தவர். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் சில காலம் அறிஞர் தமிழண்ணல் முயற்சியால் விருந்து பேராசிரியராகப் பணிபுரிந்தவர்.

அறிஞர் இரா.இளங்குமரனார் அவர்களின் நூல்கள் யாவும் தமிழ்மண் இளவழகனார் அவர்கள் வழியாக மறுபதிப்பும் செம்பதிப்புமாக வெளிவந்துள்ளன. அயல்நாடுகள் பல சென்று தமிழ்ப்பொழிவு ஆற்றிய பெருமைக்கு உரியவர். தமிழக அரசு இவர்தம் தமிழ்ப்பணியை மதித்துப் பல சிறப்புப் பரிசில்கள், விருதுகளை வழங்கியுள்ளது. முனைவர் மு.தமிழ்க்குடிமகன், முனைவர் கா.காளிமுத்து உள்ளிட்ட அரசியல் சார்புற்ற தமிழ் அறிஞர்கள் இரா.இளங்குமரனாரைப் போற்றி மதித்தவர்கள். தமிழ்வழிக் கல்விக்காகவும் குறளியக் கருத்துக்காகவும் தொடர்ந்து குரல் கொடுத்தவர். பல்வேறு அமைப்புகளும், கல்வி நிறுவனங்களும் இவரைப் பாராட்டிப் போற்றியுள்ளன.

## தொடர்புடைய கட்டுரைகள்:

https://muelangovan.blogspot.com/2008/10/blog-post_22.html
https://muelangovan.blogspot.com/2010/04/blog-post_17.html
https://muelangovan.blogspot.com/2011/09/blog-post_05.html

## காணொளிகள்:

தனித்தமிழியக்கம் குறித்து https://www.youtube.com/watch?v=6nYDsaUJswg
தொல்காப்பியச் சிறப்புகள் குறித்து: https://www.youtube.com/watch?v=fURvAXvwjvc
தமிழ் மரபுத்திருமணங்கள் நடத்துவது எப்படி?
https://www.youtube.com/watch?v=bo09sOb3y3Q

# மொழியறிஞர் இரா.இளங்குமரனார் மறைவு

## - தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் கலைஞர்கள் சங்கம் இரங்கல்

தமிழகத்தின் மூத்த மொழியறிஞர், ஆய்வறிஞர், தமிழிய வரலாற்று வரைவாய்வாளர், பதிப்பாசிரியர், உரையாசிரியர், தமிழியக்கச் செயற்பாட்டாளர் இரா.இளங்குமரனார் அவர்களின் மறைவுக்கு தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் கலைஞர்கள் சங்கத்தின் மாநிலக்குழு சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் தமிழ்ச் சொற்பிறப்பு அகரமுதலி திட்டத்தில் மொழியறிஞராக செயலாற்றிய அவர், திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தால் முதுமுனைவர் பட்டம் அளிக்கப்பட்டு கவுரவிக்கப்பட்டவர். திருக்குறளுக்கு பேருரை எழுதியவர்.

காணாமல் போய்விட்டது எனக் கருதப்பட்ட தமிழ் இலக்கண நூலாம் காக்கை பாடினியத்தை கண்டுபிடித்து பதிப்பித்தவர். தமிழில் பல்வேறு துறைகளில் ஐநூறுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவர்.

தனித்தமிழ் இயக்கத்தில் பற்றுகொண்ட அவர், தேவநேயப் பாவாளரின் ஆய்வுப்பிழிவான ‘தேவநேயம்’ பத்துத் தொகுதிகளை தொகுத்தவர். அதேபோன்று செந்தமிழ் சொற்பொருள் களஞ்சியம் 14 தொகுதிகளைக் கொணர்ந்தவர்.

சமக்கிருதச் சடங்குகளை மறுத்து குரள் வழியில் தமிழ் வழியில் திருமணம், புதுமனை புகுவிழா உள்ளிட்ட நிகழ்வுகளை தமிழில் நடத்துவதை ஓர் இயக்கமாக முன்னெடுத்தவர். அவருடைய தனித்துவமான ஆய்வுகள் அவருக்கு என்றென்றும் பெருமை சேர்க்கும்.

அவரைப் பிரிந்து வாடும் குடும்பத்தாருக்கும் தமிழ் ஆய்வுலகத்திற்கும் தமுஎகச சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு,
மதுக்கூர் இராமலிங்கம் மாநிலத்தலைவர் (பொ)
ஆதவன்தீட்சண்யா- பொதுச்செயலாளர்

# தமிழ்நாட்டு முதலமைச்சர் அவர்களுக்கும் மற்றும் அவரது சிறப்பு மிகுந்த அமைச்சர்கள் மற்றும் கட்சியினருக்கும் மிக்க நன்றி

தமிழ் அறிஞர்களின் கோரிக்கையை ஏற்று மூதறிஞர் தமிழ் கடல் செந்தமிழ் அந்தணர், இளங்குமரனார் அய்யா அவர்களது உடல் நல்லடக்கம் இன்று (சூலை 26) நடந்தபோது தமிழ்நாடு அரசின் சார்பில் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் தங்கம் தென்னரசு அவர்கள் வருகை தந்து அன்னாரது உடலுக்கு மரியாதை செய்தார்.

மேலும் அரசு மரியாதை அளிக்கப்பட்டு காவல்துறையினர் துப்பாக்கி ஏந்தி முறைப்படியான மரியாதை செய்தனர் இது தமிழுக்கு செய்யப்பட்ட மரியாதையாகவே கருதப்படுகிறது எனவே மிகுந்த மரியாதைக்குரிய அவருக்கு மிகுந்த மரியாதைக்குரிய வகையில் தமிழ்நாடு அரசு சார்பாக மரியாதை செய்யப்பட்டதற்கு நன்றி மலர்களை காணிக்கையாக்குகிறோம்.

இப்படிக்கு,
தமிழ் இராசேந்திரன் செயலாளர்
கரூர் தமிழ்ச்சங்கம்



# ஆய்வுக்கு ஓய்வு! இளங்குமரன் ஐயா

## - இலக்குவனார் திருவள்ளுவன்

*நம்மை விட்டுப் பிரிந்தார்!*

*உண்ணச் சிறிது போதும்!*

*உறங்கப் படுக்கைத் தேடேன்!*

*எண்ணப் பொழுது வேண்டும்!*

*எழுத உரிமை வேண்டும்!*

என்பதை முழக்கமாகக் கொண்டு வாழ்ந்த ஆய்வறிஞர், தமிழ்க்கடல், முதுமுனைவர் இரா.இளங்குமரனார் இன்று(ஆடி 09, 2052 / 25.07.2021) இரவு 7.45 மணிக்குத் திருநகரில் அவரது இல்லத்தில் மறைந்தார். பள்ளி ஆசிரியர், நூலாசிரியர், பாவலர், பதிப்பாசிரியர், உரையாசிரியர், ஆய்வாளர், தொகுப்பாசிரியர், இதழாசிரியர், சொற்பொழிவாளர், தமிழ் அமைப்புகளின் பொறுப்பாளர் எனப் பல்வேறு நிலைகளில் வாழ்க்கைப் பயணத்தை நடத்தியவர் பயணத்தைக் காலன் முடித்து விட்டான்.

இளங்குமரனார் திருநெல்வேலி மாவட்டம் வாழவந்தாள்புரம் என்னும் சிற்றூரில் படிக்கராமர் – வாழவந்தம்மையார் இணையருக்கு எட்டாம் திருமகனாகப் பிறந்தார். அதனால் கிருட்டிணன் எனப் பெயர் சூட்டப்பட்டார். பின்னர் இப்பெயரை அகற்றி இளங்குமரன் என்னும் தமிழ்ப்பெயரைச் சூட்டிக் கொண்டார். அவர் பிறந்தநாள் வெவ்வேறு வகையாக அவர் குறித்த கட்டுரைகளில் இடம் பெற்றுள்ளது. ஆனால், ஐயா, தம்முடைய 'ஒரு புல்' என்னும் தன் வரலாற்று நூலில் 30.01.1930 எனக் குறித்துள்ளார். எனினும் இந்நாள் பள்ளியில் சேர்க்கும்பொழுது ஆசிரியர் தந்த நாள் என்றும் குறித்துள்ளார்.

பள்ளிப்பருவத்திலேயே, தம் 15-ஆம் அகவையிலேயே சொற்பொழிவாற்றும் திறனும் பாடலியற்றும் திறனும் பெற்றுச் சிறப்புற்றிருந்தார். தம் 18-ஆம் அகவையிலேயே ஆசிரியராகப் பணியாற்றத் தொடங்கினார்.

இவரது நூல்கள் ஏறத்தாழ 400.2004இல் வெளிவந்த இவரின் தன்வரலாற்று நூலில் 232 நூற்பட்டியல் அளிக்கப்பட்டுள்ளது. அதன் பின்னர் சொல் வளமே 80 தொகுதிகள் வந்தன. மேலும் பல தொகுப்பு நூல்கள் வந்துள்ளன. "செந்தமிழ் சொற்பொருட் களஞ்சியம்" நூல் மட்டுமே நாலாயிரத்துத் தொண்ணூறு பக்கங்களைக் கொண்டதாகும். 'காக்கைபாடினியம்' என்னும் இலக்கண நூலை மீட்டுருவாக்கம் செய்து தமிழுலகிற்கு அளித்தது காலத்தால் அழியாத பணியாகும். திருக்குறள் கட்டுரைத் தொகுப்பு(10) என்னும் இவரது நூலை 1963 ஆம் ஆண்டு நேரு வெளியிட்டார். சங்க இலக்கிய வரிசையில் புறநானூறு என்னும் இவரது நூலை 2003 ஆம் ஆண்டு அபுதுல் கலாம் வெளியிட்டார்.

2012 ஆம் ஆண்டு வாணாள் அருவினையாளருக்கான பச்சமுத்து பைந்தமிழ் விருது இவருக்கு வழங்கப்பட்ட விருதுகளில் குறிக்கத்தக்கது. அதுபோல் பாரதிதாசன் பல்கலைக் கழகம் இவருக்கு முதுமுனைவர் (D.Lit.) பட்டம் வழங்கியுள்ளதும் சிறப்பான செய்தியாகும்.

11.நடையில் மென்மை
12.வகுத்தும் தொகுத்தும் விவரித்தல்
13.சொல்விளக்கமும் இலக்கணக் குறிப்பும்
14. அறிவியல்பார்வை
15. புரட்சி எண்ணம்

இவையனைத்தையும் விளக்கிப் பின்னர் விரிவான நூல் எழுதுவேன்.அதற்குரிய தோற்றுவாயாக இந்த உரைவழங்கும் வாய்ப்பளித்தமைக்கு நன்றி.

**குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்**

என்னும் இலக்குவனாரின் முழக்கத்தோடு இந்த உரையை நிறைவுசெய்கிறேன்.

# பேராசிரியர் சி.இலக்குவனாரின் திருக்குறள் உரைத்திறன்

-முதுமுனைவர் ம.சா. அறிவுடைநம்பி

*இவர் மதுரைப் புலவர் ச.சாம்பசிவனாரின் அருந்தவப் புதல்வர்;தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி அங்கேயே முதுமுனைவர் பட்டமும் பெற்றுப் பின்னர் புதுவைப் பல்கலைக்கழகம் சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலத்தில் பேராசிரியராகப் பணியாற்றிவந்தார்.சில ஆண்டுகளுக்கு முன்னர்ப் புகழுடல் எய்திவிட்டார்.*

உலகப் பொதுமறையாம் திருக்குறளுக்கு இன்றுவரை ஏறத்தாழ இருநூற்றுக்கும் மேற்பட்ட உரைகள் வந்துள்ளன; வந்து கொண்டிருக்கின்றன. உரை,பொழிப்புரை, கருத்துரை, விளக்கவுரை, தெள்ளுரை, தெளிவுரை, பதவுரை,விருத்தியுரை, உரைவளம் என்ற நிலைகளில் பலரும் உரை எழுதியுள்ளனர்.

அந்த வகையில் சி. இலக்குவனார் திருக்குறளுக்கு எளிய பொழிப்புரை எழுதி 1963இல் வெளியிட்டுள்ளார். இவர் உரைத்திறன் குறித்து இக்கட்டுரை ஆராய்கிறது.

## அமைப்பு

நூல் தொடக்கத்தில் அதிகார அகராதி, நூல் இறுதியில் குறள் முதற்குறிப்பகராதி (எண்கள் குறள் எண்கள் தரப்பட்டுள்ளன) ஆகிய இரு அகராதிகள் உள்ளன. அதிகாரத் தலைப்பு முதலில் தரப்பட்டு அடுத்த வரியில் பிறை வளைவிற்குள் அந்த அதிகாரத்தின் விளக்கம் தரப்பட்டுள்ளது.

## சான்றுக்குச் சில :

1. 1. கடவுள் வாழ்த்து (கடவுளின் சிறப்பைக்கூறி வணங்குதல்.)

2. 53. சுற்றந்தழால் (தம்மைச் சுற்றியிருப்போரைத் தழுவிக்கொள்ளுதல். அவர்களுடன் விருப்பாய் நடந்து தம்மை விரும்புமாறு செய்தல். அரசர்க்கும், அரசியல் தலைவர்க்கும் ஏனையோர்க்கும் பொருந்தும்.)

3. 65. சொல்வன்மை (தம் உள்ளக் கருத்தைப் பிறர் உள்ளம் கொள்ளுமாறு சொல்லும் ஆற்றல்.)

4. 83. கூடா நட்பு (மனத்தினால் கூடாதிருந்தே தமக்குவாய்க்குமிடம் பெறுமளவும் வெளித்தோற்றத்தில் நண்பரைப் போல் கூடி நடப்பவர் நட்பு.)

5. 117. படர்மெலிந்து இரங்கல் (தலைவனுடைய பிரிவைப் பொறுக்க முடியாத தலைவி, தான் அடைகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்துக் கொண்டு இருத்தலின், அந் நினைவால் மெலிந்து இரங்குதல்.)

6. 122. கனவு நிலை உரைத்தல் (கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல்.)

இவற்றுள் அதிகாரங்கள் 53, 83, 117 ஆகியவற்றிற்குரிய விளக்கங்கள் சுருக்கமாக இல்லாமல் விரிவாக உரையாசிரியர் தந்துள்ளார்.

'ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி' (குறள். 25)

என்ற திருக்குறளுக்குரிய பொழிப்புரையில், 'ஐம்பொறிகளையும் அடக்கியவனுடைய வலிமைக்கு அகன்ற வானத்துள்ளார் தலைவனாம் இந்திரனே சான்றாவான்' என்று உரை வரைந்த ஆசிரியர் இதன் அடிக்குறிப்பாக 'இக்குறளின் பொருள் முடிபை நோக்க, இது இடைச்செருகல் போல் காணப்படுகின்றது'' (ப. 14) என்று தருகின்றார், வேறு எந்தக் குறளுக்கும் இவ்வாறு அடிக்குறிப்புத் தரவில்லை. அதேபோன்று,

'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு' (குறள். 392)

என்ற திருக்குறளுக்குரிய பொழிப்புரையில், 'எண்' என்று சொல்லப்படும் அறிவியலும் (Science) 'எழுத்து' என்று சொல்லப்படும் கலை இயலும் (Arts) உண்மையாக வாழ்கின்றவர்கட்குக் கண்கள் என்று சொல்லுவார்கள்'' (ப. 90) என்று உரை தந்துள்ளார். இக்குறளில் 'அறிவியல்' என்பதற்கு 'science' என்றும் 'கலை இயல்' என்பதற்கு 'Arts' என்றும் ஆங்கிலச் சொற்பொருளைப் பிறை வளைவிற்குள் தந்துள்ளார். இந்த ஒரு குறளுக்கு மட்டுமே இவ்வாறு உரையாசிரியர் ஆங்கிலச் சொற்பொருளைத் தந்துள்ளார்.

திருக்குறள் அமைப்பைப் பொறுத்த அளவில் அறம் (பாயிரம், இல்லறம், துறவறம், ஊழ்), பொருள் (அரசு, அங்கம், ஒழிபு), இன்பம் (களவு,கற்பு) என்றவாறு ஒழுங்குபடுத்தியுள்ளார். அறத்துப்பால், பொருட்பால்,இன்பத்துப்பால் என்றோ இல்லறவியல், துறவறவியல், ஊழியல், அரசியல், அங்கவியல், ஒழிபியல், களவியல், கற்பியல் என்றோ சி. இலக்குவனார் பிரித்துப் பொழிப்புரை தரவில்லை.

மிகப் பெரும்பாலான பதிப்புகளிலும் உரைகளிலும் இன்பத்துப்பாலில் இடம்பெற்ற 25 அதிகாரங்கள் (109-133) களவு, கற்பு என்ற இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அத்துடன் செவ்வியல் இலக்கியமரபுப்படி

தலைவி கூற்று (113 (6-10), 121, 122, 123, 125, 126),
தலைவன் கூற்று (109, 111, 112, 113 (1-5), 114, 115 (1-5), 129, 130),
தோழி கூற்று (110, 115 (6-10),
தலைவன் தன் நெஞ்சுக்குச் சொல்லியது (124),
தோழிக்குத் தலைவி கூறியது(116, 117, 118, 119),
தலைவி தனக்குள் சொல்லியது (120),
தலைவன் தனக்குள் சொல்லியது (127, 133),
தலைவன் தோழிக்குக் கூறியது (128, 132),
தலைவிக்குத் தலைவன் கூறியது (131) என்ற முறையில் உரை எழுதிச் சென்றுள்ளனர்.

ஆனால் சி. இலக்குவனார் எழுதிய இப்பொழிப்புரையில் தலைவன் கூற்று என்றோ, தலைவி கூற்று என்றோ எழுதவில்லை. களவு, கற்பு என்று பிரித்துள்ளார். அதில் எவ்வித மாற்றமும் இல்லை. 'நாணுத் துறவுரைத்தல்' என்ற அதிகாரத்தில் (114)

இடம்பெற்ற முதல் குறளின் பொழிப்புரையில் பிறை வளைவிற்குள் 'தலைவன் கூற்று' என்று எழுதியுள்ளார். 'கனவு நிலை உரைத்தல்' என்ற அதிகாரத் தலைப்புக் (122) கொடுத்து அதன் விளக்கத்தைத்தருகின்ற பொழுது 'கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல்' என்று தருகின்றார். 'பொழுதுகண்டு இரங்கல்' என்ற அதிகாரத்தில் (123)'மாலைப் பொழுதைக் கண்டு தலைமகள் இரங்குதல்' என்கின்றார்.

'நெஞ்சொடு கிளத்தல்' என்ற அதிகார விளக்கத்தில் (125) 'தலைமகள் தன் நெஞ்சொடு கூறுதல்' என்கின்றார். 'பிறை அழிதல்' என்ற அதிகாரவிளக்கத்தில் (126) 'தலைமகள் மனத்தில் அடக்க வேண்டியதை அடக்கமுடியாமல் வாய்விட்டுக் கூறல்' என்கின்றார். 'குறிப்பு அறிவுறுத்தல்' என்ற அதிகார விளக்கத்தில் (128) 'தலைமகன், தலைமகள், தோழி என்ற இவர்கள், ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல்' என்கின்றார்.

தலைவன், தலைவி என்று கூறுவதில்லை மாறாக, தலைமகன், தலைமகள் என்றே சி.இலக்குவனார் உரை முழுக்கக் கூறிச் செல்கின்றார்.

மூலத்தைப் பதிப்பித்த முறை

திருக்குறள் மூலத்தைப் பதிப்பிக்கின்ற பொழுது,

'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பும் மிகை" (குறள். 345)

என்றவாறு சீர் பிரிக்காது பதிப்பித்துள்ளார். அதாவது,

'மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்புஅறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை' என்றவாறு சீரைப் பிரித்துப் பதிப்பிக்கவில்லை.

விளக்கம் தருதல்

திருக்குறளுக்கு விளக்கம் தருகின்றபொழுது (1) குறுகிய அளவிலும் அதாவது சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் உரை தந்துள்ளார்.

ஒருசில சான்றுகள் :
'கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி' (குறள். 418)

நல்ல நூற்பொருளைக் கேளாத காதுகள், ஓசையைக் கேட்கும் இயல்பின ஆயினும், செவிடாம் தன்மையவே ஆம்.

'குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்'(குறள். 601)

'குடி' என்று சொல்லப்படும் அணையாத விளக்கு, சோம்பலாகிய இருள் படர அணைந்துவிடும்.

'ஊதியம் என்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்' (குறள். 797)

ஒருவர்க்கு இலாபம் என்று சொல்லத் தகுந்தது அறியாதாரின் நட்பினை நீக்கிவிடுதலாகும்.

'கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்வீவள் கண்'(குறள். 1086)

வளைந்த புருவங்கள் நடுநிலை தவறாமல் மறைத்தால் இவள் கண்கள் நடுங்கும் துன்பத்தைச் செய்யமாட்டா.

'வீழும் இருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு' (குறள். 1108)

காற்று இடையே நுழைந்து பிரிக்கப்படாத கூட்டுறவு, விரும்பும் காதலர் இருவர்க்கும் இவீமையைத் தருவதே.

சில இடங்களில் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதிலும் குறளைக் காட்டிலும் சிறுத்த வரிகளில் குறளுக்கான பொருளை உரையாக வரைந்து செல்வதில் இவர் தனித்து நிற்கிறார். சான்று :

'உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறியென் நெஞ்சு'' (குறள். 1249)

என் நெஞ்சே! காதலர் உன்வீடத்தில் இருப்பாராகவும் நீ நினைத்துச்

செல்கின்றது யாரிடம்?

'என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை' (குறள். 652)

புகழொடு நன்மை பயவாத வினைகள் எக்காலத்தும் ஒழிதல் வேண்டும்.

(2) ஒருசில திருக்குறளுக்கு நீண்ட அளவில் உரை தந்துள்ளார்.

ஒருசில சான்றுகள் :

'இயற்றலும் ஈட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு' (குறள். 385)

நாட்டுக்குப் பொருள் வரும் வழிகளை உண்டாக்குதலும், நாட்டில் கிடைக்கப் பெறாதனவற்றைக் கிடைக்குமிடங்களிலிருந்து சேர்த்தலும், உள்ள பொருள்களை வீணாக்காமல் காப்பாற்றுதலும், காப்பாற்றியுள்ள பொருள்களைப் பயன்படும் வழிகளில் வகுத்துச் செலவிடுதலும் ஆகிய இவற்றுள் வல்லவனே அரசு செய்வதற்குரியவன்.

'உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்' (குறள். 1316)

பிரிந்த காலத்தில் இடைவிடாது நினைத்துக் கொண்டிருந்தேன் என்னும் கருத்தால் யான் நினைத்தேன் என்றேன்; அதனை ஒருமுறை மறந்து பின் நினைந்தேன் என்றதாகக் கருதி என்னை இடையே மறந்தீர் என்று சொல்லி முன் தழுவுதற்குப் பொருந்தியவள் அஃதொழிந்து ஊடற்கு அமைந்தாள்.

(3) பொழிப்புரை தருகின்றபொழுது ஒருசில குறள்களுக்குப் பிறை வளைவிற்குள் சுருங்கிய அளவிலும், நீண்ட அளவிலும் விளக்கங்களைத் தந்துள்ளார். ஒருசில சான்றுகள் :'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை

பொறுத்தானோ டூர்ந்தான் இடை' (குறள். 37)
பல்லக்கைத் தூக்கிச் செல்வாரையும் அதில் வீற்றிருப்பாரையும் காட்டி இதுதான் அறத்தின் பயன் என்று கூறுதல் விரும்பத்தக்கதன்று

(புண்ணியம் செய்தவன் பல்லக்கில் ஏறிச் செல்கின்றான்; பாவம் செய்தவர் பல்லக்கைச் சுமந்து செல்கின்றார் என்று கூறும் வழக்கை மறுத்துரைக்கின்றார்).

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை' (குறள். 43)

தென்நாட்டவர், கடவுள், விருந்தினர், சுற்றத்தார், தான் என்று சொல்லப்பட்ட ஐந்து இடத்தும் செய்யும் அறநெறித் தொண்டினைத் தவறாமல் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம். (தம் நாட்டு மக்களைப் போற்ற வேண்டியது தவிர்க்கலாகாக் கடமை என்பதனை வலியுறுத்தவே தென்புலத்தாரையும் சேர்த்துள்ளமை குறிப்பிடத் தகுந்தது.)

'அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று' (குறள். 78)

மனத்தின்கண் அன்பில்லாத உயிர் இல்லறத்தில் வாழ்தல், வலிய பாலை நிலத்தில் வற்றல் மரம் தளிர்விட்டதை ஒக்கும். (பாலை நிலத்தில் வற்றல் மரம் தளிரும் விடாது; அன்பில்லாதவர் இல்லறத்தில் சிறக்க வாழவும் மாட்டார்.)

'ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்'(குறள். 133)

நல்ஒழுக்கம் உடைமையே நற்குடிப் பிறப்பாகும்; அவ்வொழுக்கத்தில் தவறுதல் தாழ்ந்த குடியாகும் (நல்ல ஒழுக்கமுடையவர் உயர்ந்த சாதியென்றும் தீய ஒழுக்கமுடையவர் தாழ்ந்த சாதியென்றும் கூறப்படுகின்றது).

'உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொ னோற்பாரிற் பின்' (குறள். 160)

உண்ணாமல் உற்ற நோயைப் பொறுத்துக் கொள்ளுபவர் எல்லாரிலும் பெரியர்; ஆனால் அவரும் பிறர் சொல்லும் கடுஞ் சொல்லைப் பொறுத்துக் கொள்பவர்க்கு அடுத்துதான் பெரியார் ஆவார். (கடுஞ்சொற்களைப் பொறுப்பவரே உண்ணா நோன்பினரைவிடப் பெரியவர்.)

'படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன்
உடல்சுவை யுண்டார் மனம்' (குறள். 253)

கொலைக் கருவியைக் கொண்டவர் மனத்தைப் போல வேறோர் உயிரின் உடலின் சுவையை உண்டு கண்டவரின் மனம் அருளைக் கருதாது.

(கொல்லும் கருவியைக் கொண்டோர் கொலையையே எண்ணுவர்; அதுபோல ஊனைத் தின்று சுவை கண்டவர் ஊன் தின்னுதலையே எண்ணுவர்.)

''பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்' (குறள். 475)

மென்மையாகவுள்ள மயிலிறகினையும் வண்டி தாங்கும் அளவுக்கு மேல் ஏற்றினால் அச்சு முறியும். (தன் வலிமைக்கு மேற்பட்ட செயலைச் செய்யத் தொடங்குவதனால் அழிவேற்படும். எவ்வளவு வலிமையுடையவராயினும் மெலியார் பலரானால் வெல்ல முடியாது.)

'காலாழ் களரின் நரியடுங் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு' (குறள். 500)

பாகர்க்கு அடங்காதனவாய் வேலாட்களைக் கோத்த கொம்புகளை (தந்தங்களை) உடையனவாய் இருக்கின்ற யானைகளை, கால்கள் புதைகின்ற சேற்று நிலத்தின்கண் நரிகள் கொல்லும். (பெரிய யானை சிறிய நரியால் கொல்லப்படுவது யானைக்கு ஏற்ற இடம் இல்லாமையால், அதுபோலச் சிறியவரும் பெரியவரை வெல்லக்கூடும் பொருத்தமல்லா இடத்தில் இருப்பின்.)

'அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று'(குறள். 523)

சுற்றத்தோடு நெஞ்சு கலந்து உறவாடாதவன் வாழ்க்கை, குளப்பரப்புக் கரையில்லாமல் நீர் நிறைந்தால் போன்றதாகும். (கரையில்லாக் குளத்தில் நீர் நிலைத்து நில்லாதவாறு சுற்றமில்லாதவன் செல்வம் பாதுகாக்கப்படாமல் அழிந்து விடும். இங்குச் சுற்றம் என்பது சுற்றியிருந்து பணிபுரிவோரைக் குறிக்கும்.)

'ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு' (குறள். 1038)

பயிர்க்கு உழுதலினும் எரு விடுதல் நல்லது. களையெடுத்த பின்னர் அதனைக் காத்தல் நீர் விடுதலினும் நல்லது. (உழுதல், எருப்போடுதல்,களையெடுத்தல், நீர் பாய்ச்சுதல், காத்தல் என ஐந்தும் உழுதொழிற்கு இன்றியமையாதன.)

'தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்குமிவ் வூர்' (குறள். 1150)

யாம் விரும்புகின்ற அலரை இவ்வூர் கூறுகின்றது, தாம் விரும்பினால் காதலர் இனிதாக ஒப்புக் கொள்வர். (அதனால் இவ்வலர் உடன்போக்குக்குத் துணை செய்ய நன்றாய் வந்துள்ளது.)

'காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்' (குறள். 1227)

இக் காதல் நோய், காலையில் தோன்றி, பகல் முழுவதும் உருவாகி, மாலைப் பொழுதில் மிகும். (காதல் பூ காலையில் காயரும்பாகிப் பகலில் பேரரும்பாகி மாலையில் மலராக விரியும்.)

(4) பொழிப்புரை தருகின்றபொழுது சிலவற்றுக்குப் பிறை வளைவிற்குள் சொற்பொருள் விளக்கங்கள் தருவதையும் காணமுடிகின்றன.

சான்றுக்கு ஒருசில :

1. ஆதிபகவன் - முற்பட்டுள்ள கடவுள் (1).
2. தோட்டி - யானை ஓட்டும் கருவி (24).
3. அந்தணர் - அழகிய அருளினை உடையவர் (30).
4. மூவர் - மாணவர், தொண்டர், அறிவர் (41).
5. மறம் - வீரம்; பாவம் எனப் பொருள் கொள்ளின் பாவத்தைப் போக்குவதற்கும் என்று கூறுதல் வேண்டும் (76).
6. என்பு இலது - புழு (77).
7. எழுமை எழு பிறப்பு - தமக்கு உண்டாகும் பலவகை நிலைமைகள் (107).
8. எச்சம் - தனக்குப் பிறகு நிலைத்திருப்பது (238).
9. உயர்ந்த தோற்றம் - கல்வியால், பதவியால், புகழால் பெரியோராய் விளங்குதல் (272).
10. சினம் பலிக்குமிடம் - தம்மைவிட எளியவர். சினம் பலியாதவிடம் - தம்மைவிட வலியவர் (302).
11. தினை - சிறிய அளவினைக் குறிக்கும் பெயர். பனை – பெரிய அளவினைக் குறிக்கும் பெயர் (433).
12. எழுமையும் இல் - மிகுதியும் உயர்ச்சியும் இல்லை என்றும் கூறலாம் (538).
13. அறுதொழில் - உழவு, நெய்தல், அமைச்சு, அரசு, கற்பித்தல், வாணிபம் (560).
14. மறையை - இரகசியத்தை (590).
15. ஐந்துடன் - மேற்குறட்பாவில் கூறிய ஐந்துடன் என்பர்;

அதில் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளன நான்குமாம். செய்கையை, தொடங்கும் உபாயம், முடிக்கும் ஆறு என இரண்டாக்குவர். இக்குறட்பாவிலேயே, 'கற்று அறிதல்' என்பதனைக் கற்றல் என்றும் அறிதல் என்றும் இரண்டாகவும் பிரிப்பர் (632).

16. விழுப்புண் - போரில் முகத்திலும் மார்பிலும் பட்டபுண்(776).
17. பருகுவார் போலினும் - நீர் வேட்கையுற்றோர் நீரைக் குடிப்பதற்கு எவ்வளவு ஆர்வமுடையவராக இருக்கின்றாரோ அவ்வளவு ஆர்வம் நண்பரிடம் பழகுவதில் காட்டுதல் (811).
18. முகடி - மூதேவி (936).
19. மூன்று - காற்று, நீர், உணவு (941).
20. காடி - புளித்த தண்ணீர் (1050)
21. இரவு - யாசித்தல் (1068).
22. கீழ்மகன் - கயவன் (1074).
23. நகை - புன்முறுவல் (1094).
24. மாதர் - காதலி (1118).
25. பிணம் - கொழுப்பு (1260).

(5) இரண்டு திருக்குறள்களுக்கு மட்டும் 'வேறு பொருள்' என்று பிறை வளைவிற்குள் தந்து உரை தந்துள்ளார்.

'தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று' (குறள். 236)

ஒன்றில் ஈடுபட்டால் புகழ் உண்டாகுமாறு ஈடுபடுக. அங்ஙனம் ஈடுபட முடியாதார், ஒன்றில் ஈடுபட்டுப் புகழ் இன்றி இருத்தலைவிட, ஈடுபடாமல் இருத்தலே நல்லது.

(வேறு பொருள்) உலகத்தில் பிறந்தால் புகழை உண்டு பண்ணுதல் வேண்டும். இல்லையேல் பிறவாமல் இருத்தலே நல்லது. பிறந்தும் புகழற்ற வாழ்க்கை பயனின்று.

'ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு'' (குறள். 835)

எழு பிறப்பிலும் தான் புகுந்து வருந்தக்கூடிய நரகத்தை இவ்வொரு பிறப்பிலுள்ளே செய்து கொள்ள வல்லவன் பேதை.

(வேறு பொருள்) மிகுதியும் தான் புகுந்து வருந்தக்கூடிய துன்பத்தை ஒரு செயலால் செய்வான் அறியாதான்.

சி. இலக்குவனார் திருக்குறள் ஆராய்ச்சியில் ஈடுபட்டுத் திருக்குறள் கருத்துக்களைப் பொது மக்களிடையே பரப்புவதில் அளவிலா இன்பம் கண்டு தம் வாழ்நாளைக் கழித்தவர். இதனை மெய்ப்பிக்கும் வகையில் அவர் எளிய நடையில் பொழிப்புரை எழுதியுள்ளமையை அறிந்து கொள்ள முடிகிறது. மேலும் அரசன் என்று வருகின்ற இடங்களில் தலைவர்களுக்கும் பொருந்தும் என்றவாறு உரை எழுதிச் சென்றுள்ளதைக் காண்கின்ற பொழுது உரையாசிரியர் வாழ்ந்த காலத்திற்கேற்பத் திருக்குறள் கருத்துக்களைச் சொல்லிச் செல்வதைக் காணமுடிகிறது.

'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை'' என்ற திருக்குறளில் கூட (9) 'மக்களால் பினைப்பதற்குரிய குணங்களையுடைய கடவுளின் அடிகளை வணங்காத தலைகள், பயனில்லாத உறுப்புகளைப் போலப் பயனற்றனவே'' என்றே உரை எழுதுகின்றார். எட்டு வகைக் குணங்கள் என்றோ தாம் சார்ந்த சமயத்திற்குரிய கடவுளின் இலக்கணமாகவோ கூறவில்லை. பொதுவாகக் கடவுள் என்ற நிலையிலேயே உரை வரைந்திருப்பதைக் காணமுடிகிறது.

# தமிழ்ப் போராளி இலக்குவனார்

## தமிழர் தலைவர் கி.வீரமணி



பேராசிரியர் சி.இலக்குவனார் தமிழறிஞர்கள் வரிசையில் தனித்தன்மையானவர்.

தான் படித்த படிப்பு, சம்பாத்தியம் குடும்ப வளமைக்கு மட்டுமே என்னும் கண்ணோட்டம் அவருக்கு இருந்திருந்தால் அவர் வாழ்க்கை என்பது இவ்வளவுத் தொடர் தொல்லைகளுக்கும், அலைச்சலுக்கும் ஆளாகிஇருக்காது.

இலக்குவனார், தஞ்சாவூர் மாவட்டம் வாய் மேடு என்னும் கிராமத்தில் சிங்காரவேலர்-ரத்தினம் அம்மையார் ஆகியோரை பெற்றோராக கொண்டு எளிய குடும்பத்தில் 17-11-1910 அன்று பிறந்தார். உள்ளூர் தொடக்கப்பள்ளியில் படித்த அவர் பி.ஓ.எல். மற்றும் முதுகலை பட்டங்களையும் பெற்றார்.

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளையும் கற்றுத்தேர்ந்தவர். 'தமிழர் தலைவர்' நூலை எழுதிய சாமி.சிதம்பரனாரின் மாணவர் ஆவார். தொல்காப்பியத்தை அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார் என்பது அசாதாரணமானது. மறைந்த முன்னாள் முதல்-அமைச்சர் அண்ணா, போப் ஆண்டவரை சந்தித்த போதும், யேல் பல்கலைக்கழகத்துக்கு சென்ற போதும், அந்நூலை நினைவுப் பரிசாக அளித்தார்.

எழிலரசி உள்ளிட்ட கவிதை நூல்கள், தமிழ்க் கற்பிக்கும் முறை, அமைச்சர் யார், தொல்காப்பிய ஆராய்ச்சிகள், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், வள்ளுவர் வகுத்த அரசியல் உள்ளிட்ட ஆய்வு நூல்கள், என் வாழ்க்கைப்போர், கருமவீரர் காமராசர் எனும் வரலாற்று நூல்கள்.

திருக்குறள் எளிய பொழிப்புரை, தொல்காப்பிய விளக்கம், தொல்காப்பிய எழுத்ததிகாரம் உள்ளிட்ட உரை நூல்கள் மற்றும் தொல்காப்பியம் உள்ளிட்ட ஒன்பது ஆங்கில அரிய நூல்கள் வாழும்வரை, அவற்றை படைத்த பேராசிரியர் இலக்குவனாரும் நாட்டு மக்களின் இதயங்களில் கோலோச்சுவார்.

சங்க இலக்கியம், குறள் நெறி, திராவிடக் கூட்டரசு உள்ளிட்ட ஏடுகளின் ஆசிரியராக இருந்ததோடு, திராவிடன் பெடரேசன் என்ற ஆங்கில இதழையும் நடத்தியுள்ளார். இவற்றையெல்லாம் அவர் நடத்தினார் என்றாலும் பொருளாதாரக் கண்ணோட்டத்தில், தன் கையைச் சுட்டுக் கொண்டார் என்றே கூறவேண்டும்.

ஆனாலும் இனம், மொழி மேம்பாட்டுக்கான மேட்டிமை அவரை ஆட்கொண்டது. அவர் தமிழாசிரியராக, விரிவுரையாளராக, பேராசிரியராக, துறைத்தலைவராகப் பரிணமித்தவர். திருவாரூரில் தமிழாசிரியராக பணியாற்றிய போது அவரின் மாணவராக இருந்தவர்தான் மு.கருணாநிதி(பிற்காலத்தில்முதல்-அமைச்சர் கலைஞர்).'தமிழ் உணர்வுடன் சுயமரியாதைப் பண்பையும் எனக்கு ஊட்டியவர் இலக்குவனார்' என்று 'நெஞ்சுக்கு நீதி' நூலில் கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.

திருவாரூரிலிருந்து தொடங்கி குலசேகரன்பட்டினம், நெல்லை ம.தி.தா. இந்துக்கல்லூரி, விருதுநகர் செந்தில்குமார் நாடார் கல்லூரி, ஈரோடு மகாஜனக்

கல்லூரி, மதுரை தியாகராயர் கல்லூரி, நாகர்கோவில், சென்னை மாநிலக் கல்லூரி, ஆந்திராவின் உஸ்மானிய பல்கலைக்கழகம் வரை (1936-1968 இடைவெளியில்) பந்தாடப்பட்டவர்.

அந்த வகையில் தமிழ்நாட்டின் மண்ணை அளந்த மணவாளர் அவர்! என்ன காரணம்? பணியில் தொய்வா? திறமைக் குறைவா? அல்ல அல்ல. சென்ற இடங்களில் எல்லாம் அவர் வகித்த துறையில் முத்திரை பதித்தவர். தமிழ் உணர்வோடு மாணவர்களை வார்த்தெடுத்தவர். அவருடைய மாணவர்களுள் ஒருவர்தான் ஆர்.நல்லக்கண்ணு; பின் ஏனிந்தப் பந்தாட்டம்?

அவர் தமிழ் உணர்வாளர், இன உணர்வாளர், பெரியார் வழி சுயமரியாதைக்காரர். இவைதான் இவர் மீது ஏவப்பட்ட அம்புகள். ஒரு கல்லூரியில் இருந்து அவர் வெளியேற்றப்பட்டதற்கு சொல்லப்பட்ட காரணம்தெரியுமா?

பெரியார் நடத்திய திருக்குறள் மாநாட்டிலும், இந்தி எதிர்ப்பு மாநாட்டிலும் பங்கு கொண்டார். இலக்குவனார் கருஞ்சட்டை இயக்கத்தில் தீவிர ஈடுபாடு காட்டி வருகிறார் என்று பொதுக்கல்வி இயக்குநர், ஆட்சிக்குழுவுக்கு தாக்கல் செய்தது. ஆட்சி மன்றக்குழுவின் கருத்து இதற்கு எதிராக இருந்தாலும் வேறு வழியின்றி இலக்குவனாரை வெளியேற்ற நேர்ந்தது. அந்த கல்லூரியில் அவருக்கு இழைத்த அநீதி கண்டு 'துரத்தப்பட்டேன்' என்று கவிதை வரிகளில் குமுறினார்!

கல்லூரிப் பேராசிரியர்கள் சார்பாக சென்னைப் பல்கலைக்கழகத்தின் அகாடமிக் கவுன்சில் உறுப்பினராகவும், சென்னைப் பல்கலைக்கழக ஆசிரியர் குழுவின் துணைத் தலைவராகவும், தமிழகப் புலவர் குழு செயலாளராகவும் பொறுப்பேற்று செயபேரிகை கொட்டியவர்.

இந்தி எதிர்ப்புப் போராலும், தமிழ் உணர்வு பெரு நடைப் பயணத்தாலும் சிறைவாசமும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் தனிமைச் சிறையும் பதவி இழப்பும் தான் அவர் பெற்ற பரிசுகள்.

தமிழ்நாட்டில் கல்லூரி முதல்வர்கள் குறைந்த அளவேனும் தமிழ்ப்புலமை பெற்றிருக்க வேண்டும். கல்லூரிப் பாடத்திட்டத்தில் தமிழே முதற்பாடமொழியாகவும் ஏனைய மொழிகள் இரண்டாம் பொது மொழியாகவும் இருக்க வேண்டும். தமிழ்ப் பாடத்தேர்வில் திருக்குறளுக்கென்றே தனித்தேர்வுத்தாள் இருக்க வேண்டும் என்பது இலக்குவனாரின் கல்விக் கொள்கை.பணியில் இருந்து ஓய்வுபெற்ற நிலையில் தி.மு.க. பிரிந்தபோது பெரியார் மேற்கொண்ட நீண்ட சுற்றுப்பயணம் முழுவதிலும் திராவிடர் கழக கூட்டங்களில் இலக்குவனாரும் அவருடன் பயணித்து உரையாற்றினார்.

புதுக்கோட்டையில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டில் (9-4-1950) புலவர் இலக்குவனார் திருவள்ளுவர் படத்தை திறந்து வைத்து உரையாற்றினார். 'ஆரியத்தை முதலாவது எதிர்த்த புரட்சிப் புலவர் திருவள்ளுவர். மக்களின் வாழ்வுக்கேற்ற அறம், பொருள், இல்லறம் பற்றித்தான் வள்ளுவர் எழுதினாரே ஒழிய, ஆரியக் கருத்துப்படி இருக்கும் வீட்டைப்பற்றி (மோட்சம்) பற்றி எழுதவில்லை' என்று பேசினார்.இலக்குவனார் பெயரில் அவர் பிறந்த வாய்மேடு உயர்நிலைப் பள்ளிக்கு அவர் பெயரே சூட்டப்பட்டுள்ளது. தன்மானப் புலவர் பேராசிரியர் இலக்குவனாருக்கு 6 மகன்களும், 5 மகள்களும் உண்டு. 'தமிழகத்தின் உரிமை உணர்வுக்கும் தமிழ்மொழியின் உயர்வுக்கும் உழைப்பதே எனது உறு கடனாம் என்று உறுதி

கொள்ளச்செய்தது; தமிழ்ப் போரே எனது வாழ்க்கைப் போர் என்னும் குறிக்கோளை வாழ்வின் உயிரென ஏற்றுக் கொண்டேன். புலவர் படிப்பால் பெற்ற பயன் இதுவேயாகும்'என்பதுஇலக்குவனார்இலக்கு.

அந்தத் தமிழ்ச்சிங்கம் 3-9-1973 அன்று கண் மூடிற்று. என்றாலும் வரலாற்றில் வாழுகிறது!

நன்றி: தினத்தந்தி (செப்டம்பர் 02, 2018)

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 18 | ஆவணி 31, தி.பி 2052 | செபுத்தம்பர் 16, பொ.ஆ 2021






பேரறிஞர் அண்ணாவும்
பேராசிரியர்சி.இலக்குவனாரும்

# திருவள்ளுவர்

## அறிஞர் அண்ணா

### பொதுமறை - புதுமறை

திருவள்ளுவர் - நமக்கு அளித்துள்ள திருக்குறள் இப்போது ஒவ்வொருவருடைய நாவிலும் - நெஞ்சிலும் - நினைவிலும் - இடம் பெற்றிருக்கிறது.

எல்லாரும் குறளை ஆதரிக்கிறார்கள்; போற்றுகிறார்கள்.

திருவள்ளுவர் தமிழகத்திற்கு மட்டும் அல்லாமல், வையகம் முழுமைக்கும் வாழ்க்கைக்கு உரிய நெறியைத் தந்திருக்கிறார்.

அதனை நாம் உலகத்தின் பொதுச்சொத்து என்று எண்ணத் தக்க விதத்தில் பொதுக் கருத்தைப் பரப்பவேண்டும்.

தமிழ் மக்கள் திருக்குறளைப் பொதுமறை என்றும், இன்றைய தமிழர்கள் பெற்ற புதுமறை என்றும் போற்றுகிறார்கள்.

இந்த நல்ல கருத்துக் கருவூலத்தை உலகத்தின் கவனத்திற்கு எடுத்துவைக்க நல்ல சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது.

அடுத்த ஆண்டு (1968) உலகத் தமிழ் மாநாடு சென்னை நகரத்திலே நடைபெறவிருக்கிறது.

தமிழ் ஆய்ந்த - தமிழ் அறிந்த - நல்லறிஞர்கள், பல நாடுகளிலிருந்தும் மாநாட்டுக்கு எனத் தமிழகத்துக்கு வர இருக்கிறார்கள்.

அப்போது திருக்குறளின் அருமை பெருமைகளை, ஏற்கெனவே தமிழறிஞர்கள் அறிந்திருந்தாலும், பத்து நாட்களோ எட்டு நாட்களோ மாநாடு நடைபெறும் நாட்களில், அவர்கள் எல்லாரும் கண்டுகளிக்கத்தக்க விதத்தில் திருக்குறளின் பெருமையை உலகு அறியச் செய்ய வேண்டும்.

திருக்குறளின் - தமிழ் இலக்கியங்களின் கருத்துக்களை, ஓவியங்களாக - வரி வடிவங்களாக - பாடல்களாக - கூத்தாக உருவாக்கி வெளிப்படுத்தும் முயற்சியில் ஈடுபடவேண்டும்.

எனக்குள்ள நீண்ட நாளைய ஆசை - சென்னை கடற்கரை ஓரத்தில் சிலப்பதிகாரத்தில் சித்தரிக்கப்பட்டுள்ள காவிரிப்பூம்பட்டினக் கடற்கரையைப்போல் சித்திரித்துக் காட்டவேண்டும் - உருவாக்கிக் காட்டவேண்டும் என்பது!

*(சென்னை - கோட்டை தலைமைச் செயலகத்தில் சூன் 9, 1967 நிகழ்ந்த திருவள்ளுவர் படத் திறப்பு விழாவில் முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா ஆற்றிய உரை. (நம் நாடு நாளிதழ் - 10.06.1967))*

### உலக மொழிகளில் எல்லாம் திருக்குறள்

உலக மொழிகள் எல்லாவற்றிலும் திருக்குறளை மொழி பெயர்த்துப் பயன்படுத்துகிறார்கள்.

நாம் எல்லாரும் எதிர்பார்ப்பதை விட மேலாக வெளிநாட்டினர் திருக்குறளைப் பயன்படுத்த முனைந்துவிட்டனர்.

திருவள்ளுவருக்குக் கிடைக்கும் இந்தச் சிறப்பை நீண்ட காலத்திற்கு முன்பே நாம் செய்திருக்கவேண்டும்; தவறிவிட்டோம்.

இப்போது சோவியத்து நாட்டிலே உள்ளவர்கள் திருக்குறளைப் பயில்கிறார்கள். இங்கிலாந்து நாட்டில் உள்ளவர்கள் பயில்கிறார்கள். இரண்டு நாட்களுக்கு முன்னர் நான் புதுச்சேரிக்குச் சென்றிருந்தபொழுது, பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட திருக்குறள் புத்தகத்தை என்னிடம் தந்தார்கள். அதன் நல்லறிவுக் கருத்துகள் நாட்டு மக்கள் அனைவராலும் போற்றப்படுகின்றன.

## திருவள்ளுவர் விழா ஏன்?

திருவள்ளுவர் விழாதான் நம் வாழ்வு செம்மைப்பட அமையும் விழாவாக அமைய வேண்டும்.

திருவள்ளுவரைப் போல, தமிழர்களிலே நிறையப் புலவர்கள் இருந்திருக்கிறார்கள். இளங்கோவின் சிலப்பதிகாரம் நாடு அறியாதது அல்ல; சிலப்பதிகாரத்தில் வரும் கனல் வரிக் கவிதை, உலகம் மறந்துவிடக் கூடியதும் அல்ல, இருந்தாலும் -இரண்டு வரிகளுக்குள் வாழ்வுக்குத் தேவையான கருத்துகளை எப்படி வாழ வேண்டும் என்ற முறையை வகுத்துக் கொடுத்த பெரியார் வள்ளுவர்தான்!

தமிழ் நாட்டில் இருந்த பெண்பாற் புலவர்களைப் போல் வெளிநாட்டில் எங்கும் நாம் கண்டதில்லை. இருந்தாலும் வள்ளுவரைப் போல் அவர்கள் சுவடி ஒன்றும் தரவில்லை.

ஆதலால் வள்ளுவர் விழாவினை மற்ற விழக்களைப் போல் எண்ணாது, தமிழர்களுக்கு ஏற்பட்டிருக்கும் அரிய விழாவாகக் கருத வேண்டும்.

இந்தக் குவலயத்திற்கே குறளைத் தந்த தமிழர் சமுதாயம், குறள் நெறியின்படி வாழ்கிறதா என்றால் - இல்லை.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்

என்று, உயர்வு பிறப்பிலே இல்லை; தான் செய்யும் தொழிலின் சிறப்பிலேதான் இருக்கிறது என்பதைத் திருவள்ளுவர் சொல்லியும் இந்தச் சமுதாயம் சாதிப் பிடிப்பிலிருந்து இன்னும் தன்னை விடுவித்துக்கொள்ளவில்லை. அதுமட்டுமல்ல; சாதி இருந்தால் என்ன? என்று கேட்பவர்களும் இருக்கிறார்கள்.

ஆகையால் விழா நடைபெறும் இந்த நேரத்தில் திருவள்ளுவர் சொன்ன கருத்துகளை நடைமுறைக்குக் கொண்டுவர உறுதி எடுத்துக்கொள்ளவேண்டும்.

## இரசியாவோடு போட்டியிடும் தலையாய செல்வம்

இன்றைய தினம் செல்வத்திலே - சீரடைவதிலே - கல்வி முன்னேற்றத்திலே - தொழில் துறையிலே - மிகவும் பின்தங்கியுள்ளோம்.

தமிழ்ச் செல்வம் யாரும் பெற முடியாத செல்வமாக இருக்கிறது. தமிழ்ப் பண்பாட்டுச் செல்வம் யாருக்கும் எந்த நாட்டுக்கும் கிட்டாத அளவிற்குக் கிடைத்திருக்கிறது.

இரஷ்யாவோடு நாம் போர்க் கருவிகளிலே போட்டியிட முடியாது; விஞ்ஞான வளர்ச்சியிலே போட்டியிட முடியாது.

ஆனால் இலக்கியத்திலே போட்டியிட முடியும். அப்படிப்பட்ட இலக்கியச் செல்வம் நம்மிடத்திலே இருக்கிறது. அதில் தலையாய செல்வம் - திருக்குறள்.

அந்தக் குறள், வகுப்பறையில் மட்டும் அல்லாமல் - உங்கள் இல்லங்களில் மட்டும் அல்லாமல் - உலகத்தார் உள்ளங்களில் எல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும்.

குறளைக் கற்றுக் கொள்வதால்,
நீங்கள் செம்மைப்பட்டு -
நீங்கள் செம்மைப்படுவதால்,
நாடு செம்மைப்பட்டு -
நாடு செம்மைப்படுவதால்,
உலகு செம்மைப்படச் செய்ய வேண்டும்.

(*சென்னை - இராணி மேரி கல்லூரியில் செப்டம்பர் 8, 1967 நிகழ்ந்த திருவள்ளுவர் விழாவில் முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா ஆற்றிய உரை - ஆதாரம்: நம் நாடு நாளிதழ் 09.09.1967*)

## இணையில்லா இலக்கிய வளம்

செழுமையான இலக்கிய வளம் நிறைந்த மொழி நமது மொழி - தமிழ் மொழி.

இதில் சிறிதும் ஐயப்பாடு கொள்ள தேவையில்லை.

உலகோர் முன் - அவர் எம்மொழியினராயினும் சரியே - எத்துணைக் கலையியல் வாய்ந்த எழுத்தாண்மைத் திறம் படைத்திட்ட நாட்டவரானும் சரியே - நாம் தலைநிமிர்ந்து கூறிடலாம் அவரிடம்:

எம்மொழி தமிழ் மொழி. மிகச் செழுமையான மொழி. கலைப் பண்பார்ந்த ஏட்டுக் கருவூல வளம் - காலக் கூறுக்கு ஏற்ற இலக்கியப் பகுதி ஏராளம் உண்டு எம்மிடம் - எமது செந்தமிழில்! - என்று.

இது வெறும் புகழ்ச்சியல்ல - உண்மை! தற்பெருமைக் குற்றத்தினைப் பொருட்படுத்திடவே கூடாத தன்மைத்தான் தற்பெருமிதமும் கூட!

இலக்கிய உலகில் - எழுத்தாண்மைத் துறையில் தமிழர் தம் சாதனை மிகவும் எடுப்பானது - ஈடும் இணையும் அற்றதும் கூட!

எடுத்துக்காட்டு வேண்டுமா? இதோ ஒரு பாடல்:

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை.

- இந்த ஒரு பாடலில் மட்டும் எட்டு நூல்கள் குறிப்பிடப்படுகின்றன. எட்டுத் தொகை என்னும் ஒரு சிறப்புத் தொகுதியில் வருவன மட்டும் இவை - மெத்தச் சிறப்புடைத்தான நூல்கள் இவை.

மற்றத் தொகுதிகள் - தொகுப்புகள் பற்றிப் பேசிடலும் வேண்டுமோ!

## உலகப் பேராசிரியர்

எல்லாவற்றையும் விட, திருக்குறள் குறித்து நாம் எவ்வளவு பெருமைப்பட்டுடக்கொண்டாலும் தகும். வலி ஏதும் இல்லை, நாமே பெருமிதப்பட்டுக் கொள்வதில்.

மானிடப் பண்பியல்புகளுக்கு ஓர் உறைவிடமாய் - வாழ்க்கை வழி, நெறி முறைகளுக்கான வழி காட்டியாய் - அமைந்துள்ளது திருக்குறள்.

காலக் கூறுக்கு ஏற்ற இலக்கியம் திருக்குறள் அன்றி வேறு ஏது?

- என்றும் நாம் கேட்டிடலாம், எவரைப் பார்த்தும்.

உலகெங்கணும் பறைசாற்றிடலாம்; அஞ்சிடத் தேவையில்லை.

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட
தமிழ்நாடு
நமது நாடு.

எதனால் இப்படிக் கூறினார் சி.சுப்பிரமணிய பாரதியார்?

அந்த வள்ளுவர், திருக்குறள் என்ற பொய்யாமொழியினை வாழ்க்கை நெறிக் கோட்பாட்டு மறைதனைத் தீட்டியதால்தான்!

ஷெல்லி, பைரன், கீட்ஸ், கால்ரிட்ஜ், எமர்சன், பேக்கன் முதலிய ஆங்கிலப் பாவாணர்களும் பேரிலக்கிய நூலாசிரியர்களும் அளித்துள்ள நற்காவியங்களும், எழுத்தோவியங்களும் நமக்கு அந்நியம் ஆகுமா? அயலானவை தாமா?

அந்நியம் என்கிற சொல்லின் நேரிடையான பொருளில்தான் அவற்றையெல்லாம் கருதிடவேண்டுமா? ஒதுக்கிடவும் வேண்டுமா?

தமிழ் மறையாம் திருக்குறளைத் தீட்டிய திருவள்ளுவர், தமிழர் என்பதால் தமிழருக்கு மட்டுந்தான் வழிகாட்டியா?

வள்ளுவன் தன்னை
உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட
தமிழ்நாடு
- என்று பாடிப் பூரித்து மகிழ்கின்றோமே, என்ன பொருள் அதற்கு?

ஷெல்லி போன்றோர் ஆங்கிலத்திற்கோ, ஆங்கில நாட்டாருக்கு மட்டுமோ உரியவர் ஆக மாட்டார்.

அவர்கள் அனைவரும் உலகினுக்கே சொந்தம்!
உலகப் பெருமக்கள் - குடி மக்கள் - அவர்கள்!
உலகப் பேராசிரியர்களும் ஆவார்கள் அவர்கள்!

*(1967 - ல் பேரறிஞர் அண்ணா ஆற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு பேருரை. ஆதாரம்:திரு.மு.நமசிவாயம் தொகுத்துள்ள சாமானியனின் சகாப்தம் நூல்)*

# பெருநெறி காட்டும் வழிகாட்டி நூல்

## பேரறிஞர் அண்ணா

வள்ளுவர் தந்த திருக்குறள் தமிழர்க்கு மட்டும் அல்லாமல் பண்புடன் வாழ விரும்பும் அனைவர்க்கும் ஒரு வழிகாட்டியாக அமைந்திருக்கிறது.

திருக்குறள் பூஜா மடத்துக்கு மட்டும் தயாரிக்கப்பட்ட ஏடு அன்று; புனைந்துரைகள் நெளியும் புராணம் அன்று; வாழ்விலே, தூய்மையை - அவரவரும், தத்தமது திறனைச் சரியாகப் பயன்படுத்தி, மற்றவர் வாழ்வின் மேம்பாட்டினையும் மதித்து ஒழுகுவதன் மூலம் பெறக்கூடியது என்ற பெருநெறியைக் காட்டும் நூலாகும்.

திருவிழாக்களையும், தீர்த்த மகிமைகளையும், திருப்பல்லாண்டுகளையும், திரு.அவதாரங்களையும் - இவற்றின் பிற பதிப்புகளான வெண்பொங்கல், இனிப்புச் சோறு எனும் இன்ன பிறவற்றினையும் மக்களுக்கு வழங்கும் அழுக்குக் கருத்துரைகள் கொண்ட ஏடுகளையே தமிழ்நாடு கொண்டாடி வருகிறது. காரணம் பலப்பல. விளைவோ - வாழ்வில் வேதனை; சமூகத்தில் சச்சரவு; நாட்டிலே நலிவு!

நாம் இதுகாறும் அத்தகு ஏடுகளின் பிடியிலிருந்து நாடு விடுபட வேண்டும் என்பதற்காகப் பணிபுரிந்து வந்தோம். அப்பணி தொடர்ந்தும் நடந்து வருகிறது.

அப்பணியுடனும் இப்போது நாம் வள்ளுவர் தந்த திருக்குறளை ஒவ்வோர் இல்லத்திலும் குடியேறச் செய்தாகவேண்டும்; ஒவ்வொருவர் மனத்திலும் அவருடைய அற உரைகள் பதியச் செய்யவேண்டும் என்ற சீரிய பணியினை மேற்கொண்டு உள்ளோம்.

### குறள் ஏந்திச் செல்வோம்

நாம் - நாவலரும் பாவலரும் கூடிடும் நல் மணிமாடத்திலே அல்ல உலவுவது; உரையாடுவது! நாதனைக் கண்டோம்; நம் நாவில் அவர் சூலம் பட இம்மெய்யறிவு கொண்டோம் என்று இயம்புடும் அருள் விற்பனையாளர்களின் அணி மாடங்களை நாம் அணுகுவது இல்லை.

மக்கள் இத்தகையவர்களிடம், மறைந்து கிடக்கும் இம் மாணிக்கத்தை - திருக்குறளைக் காட்டும் மகத்தான பணியினை, நாம் மேற்கொண்டுள்ளோம்.

நமது பணி வெற்றி பெற்றால்தான், மக்களின் உடைமையாகும் - இந்தத் தமிழ் அறிவுக் களஞ்சியம்.

நமது பெரும் பணி மூலமே, மக்களுக்க, வாழ்க்கையுலே சந்தேகத்தை நீக்கவும், போக்கவும், நேர்மையை நிலைநாட்டவும் உதவும் இப்பெருநூலின் உண்மைப் பொருள் தெரிய முடியும்.

குறள் ஏந்திச் செல்வோம் - நாடு, நகரமெங்கும்; பட்டி, தொட்டிகளில் எல்லாம்! பண்பாடு - எது என்பதை மக்கள் அறியச் செய்வோம்!

அறம், பொருள், இன்பம் எனும் அரிய முப்பொருளை மக்கள் உணர மட்டுமல்ல; நுகரவும் பணியாற்ற வேண்டும்.

புதிய பணி இது; ஆனால் நமது பழைய பணியின் தொடர்ச்சிதான் - முற்றிலும் புதிதன்று!

அப்பணிக்கு நம்மை ஆயத்தப்படுத்திக் கொள்வதற்கு - குறளின் அருமை, பெருமை பற்றி அறிஞர்கள் கூறியுள்ள கருத்துரைகளை எண்ணிப் பார்ப்பது முக்கியமான முதல் வேலையாகும்.

## உள்ளுவரோ மநுவாதி?

பேராசிரியர் சுந்தரனார் பெரும்புலவர். அவர், வள்ளுவரின் திருக்குறளைப் பற்றிய அருமை பெருமையினை அறிவிக்கப் பல கூற வேண்டாம்; முக்கியமானதைச் சுட்டிக்காட்டினால் போதும் என்று எண்ணி வள்ளுவர்செய் திருக்குறளை

மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி
ஒருகுலத்துக் கொருநீதி?
என்று பாடியுள்ளார்.

இந்த ஒரு குலத்துக்கு ஒரு நீதி என்னும் முறையினைக் காலம் கூடத் தகர்க்காதபடி, அவ்வப்போது உரம் ஊட்டி வருவனவே - புராண, இதிகாசங்கள். அவற்றை நம்பியதாலேயே நாடு நலிவுற்றது.

நாட்டின் நலிவு நீங்கி, மக்கள் நல்வாழ்வு பெறுவதற்காக, வள்ளுவர் குறளை, மறவற நன்கு உணர்ந்தார் ஆதல் வேண்டும் மக்கள்.

வள்ளுவர் அனைத்துப் பிரச்சினைகளையும் ஆராய்ந்து அரிய உண்மைகளை வெளியிட்டிருக்கிறார். கடவுள் கொள்கை, நாடு, அரசு, இல்வாழ்க்கை எனும் பல பகுதிகளாக உள்ள குறளின் முழு நோக்கம் - மக்கள் அற நெறியில் நிற்க வேண்டும் என்பதேயாகும். ஏனெனில், அவர் கூறியபடி அறத்தால் வருவதே இன்பம்.

இந்த அறநெறியைப் பரப்பும் பணியினை மேற்கொள்ளும் நமக்கு உறுதுணையாக, அறிஞரின் கருத்துரைகள் உதவுகின்றன.

## வாழ்க வள்ளுவர்!

திருக்குறளின் ஆரமையினை எடுத்துரைத்த அறிஞர் பலர் பல மொழிகளிலே குறள் மொழிபெயர்க்கப்பட்டு, அதன் பெருமை கடல் கடந்தும் சென்று பரவியுள்ளது.

எனினும் தமிழர் மனைகளிலே குறள் உண்டோ? பஞ்சாங்கம் இருக்கும்; பாரதக் கதை இருக்கும்; அபிமன்யு வீரமும் இருக்கும்; அறநெறி கூறும் அருமைத் திருக்குறள் இருக்குமா? இல்லையே! ஏன்?

பண்புடைத் தமிழரின் மனப் புண்ணும் - பயனில் நூல்களை மட்டுமே அறிந்ததால் மக்கள் மனத்திலே மூண்டு கிடக்கும் மருளும் - போக்கப்பட வேண்டும்.

வாழ்க வள்ளுவர்! வளர்க குறள் நெறி!

*( திராவிடநாடு கிழமை இதழ் - சனவரி 14, 1949)*

## பட்டை தீட்டிய வைரம்

திருக்குறள் இன்று பல்வேறு மொழிகளில் ஆக்கப்பட்டு உலக அரங்கில் உலா வருகிறது. இந்த அளவு வெற்றி, வேறு எந்தத் தமிழ் நூலுக்கும் கிடைத்தது இல்லை.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் தரணிக்கெல்லாம் நன்னெறி கூறும் நூல். நாளாக, நாளாக - சூழ்நிலை மாற மாற திருக்குறள், புதிய விளக்கங்களை, விரிவான கருத்துகளை நமக்குத் தரும் ஆற்றல் வாய்ந்தது! அதன் ஆழ்ந்த பொருளை அறிய ஆராய்ச்சி செய்வது இன்றியமையாதது.

வைரத்தைப் பட்டை தீட்டத் தீட்ட அதனுள் பல வண்ணங்கள் தெரிவது போல், திருக்குறளை ஆராய ஆராய அதில் பல புத்தம் புதிய அருமையான கருத்துக்கள் புலப்படும்.

இனித் திருக்குறளைப் பற்றி விரிவுரைகள் ஆற்ற வேண்டிய அவசியம் இல்லை. வள்ளுவர் கூறியுள்ள கருத்துக்களை எவ்வாறு பயன்படுத்துவது என்ற ஆராய்ச்சியில் ஈடுபடவேண்டியதுதான் தேவை.

## பல்கலைக் கழகத்தில் தனித்துறை

திருக்குறள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டது. அந்தக் காலத்தில் வேறு நாடுகளில் இயற்றப்பட்ட எந்த நூலிலும், குறளில் உள்ளதைப் போல் கருத்துக்கள் காணப்படவில்லை.

பிற நாடுகளில் மக்கள் காட்டுமிராண்டிகளாக இருந்த அந்தக் காலத்திலேயே தமிழர்கள் நல்ல பண்பாடு மிகுந்தவர்களாகத் திகழ்ந்தனர் என்பதைத்தான் திருக்குறள் காட்டுகிறது.

திருக்குறளைப் பற்றிப் பெருமையாகப் பேசும் நம்மிடம் மூடப் பழக்க வழக்கங்கள் இருப்பதைப் பார்க்கும் வெளிநாட்டவர்கள் நம்மைப் பற்றி ஐயப்படுவார்கள். அதனால்தான் திருக்குறளுக்கு உலகில் கிடைக்கவேண்டிய அளவு பெருமை கிடைக்கவில்லை.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை மான்

- என்ற குறளையும் போற்றிக்கொண்டு, சாதி முறைகளையும் கைவிடாமல் இருப்பது வாழ்க்கை நெறிக்குப் பொருத்தமாக இராது; குறளை நாம் உண்மையாகவே போற்றுவது ஆகாது!

சென்னைப் பல்கலைக் கழகத்தில் திருக்குறள் ஆராய்ச்சிக்கு என்றே ஒரு தனித் துறையை ஏற்படுத்தத் தமிழக அரசு முயற்சி செய்யும்.

*(சென்னை, மயிலாப்பூரில் 1967 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் நடைபெற்ற திருக்குறள் மாநாட்டில் முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா ஆற்றிய சிறப்புரை - நம் நாடு நாளிதழ் அக்டோபர் 16, 1967)*

# வள்ளுவரின் வாசிப்பும் விழைவும் - இல்லறம்

முனைவர்.சி. கலைமகள்



*கட்டுரையாளர் சென்னை, அரசி மேரி கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்; தமிழ்ப்பேராசிரியர். குடியரசுத்தலைவரின் செம்மொழித் தமிழ் இளம் அறிஞர் விருது, கரந்தைத் தமிழ் சங்கம் தமிழ்ச் சங்கத்தின் "தமிழ்ச் செம்மொழி ஆளுமை விருது" ஆகியவை இவர் புல புலமைத் திறத்திற்குக் கட்டியம் கூறுவன; நினைவில் வாழும் மேனாள் தமிழ் வளர்ச்சி இயக்கு வளர்ச்சி இயக்குநர் கு. சிவஞானம் அவர்களின் புதல்வி.*

## 1.0 வள்ளுவர் வாசித்த சமூகம்

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்மொழி வரலாற்றில் சங்ககாலம் முதல் தமிழ்ச் சமூகவரலாறு அறியப்படுகிறது. சங்ககாலச் சமூகம் இனக்குழுச் சமூகத்தையும் தொடக்க நிலவுடைமைச் சமூகத்தையும் தன்னகத்தே கொண்ட பழஞ்சமூகம் ஆகும். இதில் திருவள்ளுவர் வாழ்ந்த சமூகம் சற்றுப் பின் அமைந்த காலம் என்று கூறலாம். எனவே வள்ளுவர் அறிந்திருந்த தமிழ்ச் சமூகம் என்பது சங்கச் சமூகமும், அவரது காலச் சமூகமும் ஆகும். எனவே வள்ளுவரின் சமூக வாசிப்பில் 1. தொல்காப்பியமும் (தொல்.) சங்க இலக்கியங்களும் நமக்கு அறிவித்த சங்கச் சமூகமும், 2. அதில் இடம்பெறாது ஆனால் வள்ளுவரால் அறியப்பட்ட சமூகமும் அடங்கும். அச்சமூகங்களொடு வள்ளுவர் விரும்பி உடன்பட்ட கருத்துகளும் உடன்படாது புதிய சமூகத்தை - சமூக மாற்றத்தை உருவாக்க விரும்பிய அவரது விழைவும் திருக்குறளாக வடிவம் பெற்றுள்ளன எனலாம். வள்ளுவரின் இந்த வாசிப்பு 1. இலக்கிய வாசிப்பு, 2. வாழ்க்கை வாசிப்பு என்ற இரு நிலைகளில் அமைந்துள்ளது. இக்கட்டுரையில் இல்லறம் நோக்கிய அவரது வாழ்க்கை வாசிப்பும், அதில் அவரது விழைவும் மட்டும் ஆராயப்படுகிறது.

## 2.0 வள்ளுவரின் வாழ்க்கை வாசிப்பு

வள்ளுவர் தம் கால மற்றும் தமக்கு முற்பட்ட காலச் சமூகத்தை வேர்முதல் நுனிவரை வாசித்து அறிந்துள்ளார். அதன் விளைவாகவே எல்லா நிலையில் உள்ள மனிதனும் வையத்துள் வாழ்வாங்கு வாழ வேண்டும் என்று அவர் விழைகிறார். அதனால் தான் திருக்குறள் உலகப் பொது மறையாகியது.

## 3.0 இல்லறம்

வள்ளுவர் விழைந்த வாழ்க்கைக் கோட்பாடு என்பது முப்பால் பாகுபாட்டில் தனிமனிதனைச் சார்ந்த கல்வி, ஒழுக்கம், அரசு (அரசன்), நாடு, இல்வாழ்க்கை என்று பல பொருட்கூறுகளைக் கொண்டுள்ளது. எனினும் அவையாவற்றிலும் இல்லறத்தைச் சமூக அறமாக்க வேண்டும் என்ற அவரது விழைவே மேலோங்கியுள்ளது எனக் கருத முடிகிறது.

## 4.0 வள்ளுவர் வாசித்த இல்வாழ்க்கையும் விழைந்த இல்லறமும்

### 4.1 அறத்துப்பால்

வள்ளுவர் அறிந்த சங்க காலத்தில் இல்வாழ்க்கை என்பது ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழும் பேரின்பம். அது புறத்தாருக்குப் புலனாகாது அகம்

என்று அழைக்கப்பட்ட உள்ளத்து உணர்வு.இன்பம் நோக்கிய இல்வாழ்க்கை, அறத்தை நோக்கியதாக மலர வேண்டும் என்று விழைந்த வள்ளுவர் "அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை" என்று இல்வாழ்க்கையை இல்லறமாக்குகிறார்.

அதனாலேயே முதல் நான்கு அதிகாரங்களில், திருக்குறளின் முதல் விளக்கமாக இல்வாழ்க்கை என்ற அதிகாரத்தை அமைத்துள்ளார். தொடர்ந்து, ஒரு குடும்பத்தின் உறுப்பினர்களாகிய வாழ்க்கைத் துணை நலம், நன் மக்கட்பேறு ஆகியோரையும் விளக்குகிறார்.

இம்மூவரும் சார்ந்த தனிக் குடும்பமாகிய இல்லறத்தின் செயல்பாடுகளையே - வாழ்க்கை முறைகளையே முப்பாலிலும் அவர் விளக்குகிறார்.

வள்ளுவர் அறிந்த சங்கச் சமூகத்தில் இல்லாளின் மாண்புகளாக, "கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும், மெல்லியற் பொறையும், நிறையும், வல்லிதின் விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்" பிறவும் வலியுறுத்தப்படுகின்றன.

இப்பண்புகளை ஆணும் கடைப்பிடித்தால் தான் சமுதாயம் சிறப்படையும் என்று ஆணுக்கும் உரியதாக்கி அப்பண்புகளின் பரப்பை விரிவுபடுத்துகிறார். இதன் விளைவாகவே விருந்தோம்பல், பொறையுடைமை, பிறனில் விழையாமை போன்ற அதிகாரங்களைப் படைத்துள்ளார்.

சங்கச் சமூகம் விளக்கிய ஓர் இல்லறத்தில் வரக்கூடிய இன்னொரு உறவு பரத்தைமை. அதைவிட இழிவானதொரு உறவு பிறன்மனை நயத்தல். குறிக்கோள் நோக்கில் வடிவமைக்கப்பட்ட சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தாது மறைத்த ஒரு உறவு இது. சமூகத்தைச் சீர்கெடுக்கும் இவ்வுறவை அறிந்த வள்ளுவர் அதைக் கடிகிறார். பரத்தைமையை ஒருவன் தவிர்க்க வேண்டும் என்பதைப் பொருட்பாலில் நல்லொழுக்கமாகக் கூறும் வள்ளுவர் பிறன்மனை நயத்தலை அறத்துப்பாலில் கூற விழைவது கருதத்தக்க ஒன்று. ஏனெனில் பிறன்மனை நயவாமையை ஒருவன் அறமாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்று விரும்புகிறார். இதை வலிமையாக அறிவுறுத்த "அறன் வரையான் அல்ல செயினும் பிறன் வரையான் பெண்மை நயவாமை நன்று (150) என்று, "நீ அறம் நீங்கிய செயலைச் செய்தாலும் செய்; ஆனால் பிறன்மனை நயத்தலை மட்டும் செய்யாதே" என்று கூறுகிறார்.

இப்பிறன்மனை நயத்தலில்லாத இல்லமே "புகழ்புரிந்த இல்லம்" ஆகும் (59) என்று விளக்குகிறார்.

"காமம் சான்ற கடைக்கோட்காலை, ஏமம் சான்ற மக்களொடு துவன்றி அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" என்று அமைந்த தாம் கண்ட சமூகத்திற்கு ஏற்ப வள்ளுவரும் இல்வாழ்வான் மனைவி மக்களொடு சேர்ந்து, அவர் ஒவ்வொருவரும் சிறந்த அறங்களை வாழ்க்கைச் செயல்களாகக் கடைப்பிடித்து, இறுதியில் பற்று நீக்கி (துறவு 35), மெய்யுணர்வுற்று (36), அவாவறுத்து (37) வாழவேண்டும் என்று அறத்துப்பாலை அமைத்துள்ளார். எனவே அறத்துப்பால் முழுவதுமே இல்லறத்தாருக்குரியதாவே படைக்கப்பட்டுள்ளது என்று கருத இடமுள்ளது.

### 4.2 பொருட்பால்

வீரமும், கொடையும், புகழுமே பெருஞ் செல்வமாகக் கருதப்பட்ட சமூகப் பார்வையிலிருந்து மாறி வள்ளுவர் அறிவும் (கல்வி, கேள்வி முதலியன), பண்பும்

(செங்கோன்மை, மடியின்மை போன்றன), உணர்வும் (நட்பு, மானம், பெருமை....), தொழிலும் (இறைமாட்சி, அமைச்சு, ஒற்று, உழவு....), ஒழுக்கமும் (சுற்றந்தழால், வரைவின் மகளிர், பிறன்மனை நயவாமை....) ஆகிய வாழ்க்கை ஒழுக்கங்களே வாழ்க்கைப் பொருளாக அமைய வேண்டும் என்று விழைந்துள்ளார். இவற்றில் சுற்றந்தழால், குடிசெயல்வகை ஆகிய இல்லறக் கடமைகளை மேலே கூறியது போல் கிழவோளுக்கு உரியதாக இருந்ததை ஆணுக்கும் உரியதாக்க விரும்புகிறார்.

ஒரு கணவன் ஒரே ஊரில் வாழ்ந்தாலும், தாம் வாழும் சேரிக்கு வந்தாலும், தம் மனைவியை ஏதிலாளர் பிணம் போலப் பார்த்த பரத்தமை கொடுமை" கூடாது என்பதற்காகவே பரத்தையரைத் தழுவுதலை இருட்டறையில் ஏதில் பிணம்தழுவுவதற்கு ஒப்பாகக் (913) காட்டுகிறார்.

இவ்வாறு வாழ்வான், தனிமனிதன், ஆண், பெண் என்று வேறுபடுத்தாமல் எல்லோருக்கும் மேற்குறிப்பிட்ட அறிவும், பண்பும், தொழிலும் முதலிய அனைத்து ஒழுக்கங்களுமே வாழ்க்கைப் பொருளாகக் கருதப்பட வேண்டும் என்று விரும்புகிறார்.

### 4.3 காமத்துப்பால்

வள்ளுவர் தன்னை ஒரு சிறந்த அக இலக்கியக் கவிஞனாக வெளிப்படுத்திக் கொண்டது காமத்துப்பாலில் தான். எனினும் அதிலும் தன்னை இல்லறத்தைச் செம்மைப்படுத்தும் சமுதாயச் சிற்பியாகவே காட்டிக் கொள்கிறார்.

இல்வாழ்க்கை எல்லோருக்கும் உரியது. அதில் உயர்வு தாழ்வு இல்லை. சமுதாயத்தை வடிவமைக்கும் இல்லறத்தாரின் கடமைகளில் அரசனின் குடும்பத்திற்கும் ஆண்டியின் குடும்பத்திற்கும் வேற்றுமை இல்லை என்று வள்ளுவர் கருதுகிறார். எனவேதான் சங்க இலக்கியத்திலிருந்து மாறுபட்டுத் தலைவன் தலைவி என்ற சொல்லைப் பயன்படுத்தாது தவிர்த்துள்ளார்.

ஊடுதல் காமத்திற்கு இன்பம் என்றாலும் பெண்ணின் புலவியை உணர்ந்து ஊடலைத் தீர்க்காத கணவனிடம் அவள் ஊடுதல் கூடாது என்று அறிவுறுத்துகிறார். "நோதலும் எவன் மற்று நொந்தாரை அஃதறியும் காதல் இல்லா வழி" (1308), "நீரும் நிழலது இனிதே புலவியும், வீழுநர் கண்ணே இனிது" (1309). இல்லையெனில் அது பிரிவுக்கு வழிவகுத்துவிடும் என்று கருதியுள்ளார்.

மேற்குறிப்பிட்டவற்றால் வள்ளுவர், 1. இல்வாழ்க்கையே ஒரு சிறந்த சமுதாயத்தை வடிவமைக்கிறது. 2. இல்லறத்தின் உறுப்பினர்களாகிய கணவன், மனைவி, மக்கள் ஆகிய மூவரும் சமுதாய அறத்தைக் கடைப்பிடித்து (அறத்துப்பால்) வாழ்க்கைப் பொருளாகக் கருதப்படும் அறிவு, பண்பு, தொழில், ஒழுக்கம் முதலியவற்றைப் (பொருட்பால்) கைக்கொள்ள வேண்டும். 3. அப்போது அவர்கள் சமுதாயத்தின் உறுப்பினர்களாகவும் ஆகின்றனர். 4. எனவே, "இல்லறமே சமூக அறம் ஆகிறது" என்று கருதி வள்ளுவர் இல்லறத்தின் விளக்கமாக முப்பாலையும் வடிவமைத்துள்ளார் என்பது அறியப்படுகின்றது.

### அடிக்குறிப்புகள்

1. கலித்தொகை, தஞ்சைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984, பாடல் எண் 92 (1-16).
2. மேலது, பாடல் எண்கள் 9, 38.
3. திருக்குறள் பரிமேலழகர் உரை, கழக வெளியிடு, சென்னை, 1956.

4. தொல்காப்பியம் பொருளதிகாரம், கற்பியல், கழக வெளியீடு, சென்னை, 1980, நூற்பா எண். 11.
5. தொல்காப்பியம், மேற்படி, நூல், நூற்பா எண் 51.
6. குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே.சா., பதிப்பு, சென்னை 1937, பாடல் எண் 231.

# வாழ்வு நெறி

**-முனைவர் வ.சு.ப.மாணிக்கம்.**



1. பலருக்கு ஆராய நூல் வேண்டும், சொற்பொழிவாற்றக் கருத்து வேண்டும் என்பதற்காகத் திருவள்ளுவர் திருக்குறளை இயற்றவில்லை. எல்லாரும் வாழ வேண்டும்; எப்படி வாழ்விப்பது என்ற தலையாய நோக்கமே திருக்குறட் பிறப்பிற்குக் காரணம். இந்நோக்கம் எல்லாக் குறள்களிலும் வெளிப்படக் காணலாம். மிகக் கீழானோர்க்கும் உயர்வுண்டு; இயல்பாகவுள்ளவர்க்கும் மேலுயர்வு உண்டு; மிகவுயர்ந்தார்க்கும் மேன்மேலுயுர்ச்சியுண்டு என்ற நம்பிக்கையைத் திருக்குறள் நமக்கு ஊட்டுகின்றது.

தாழ்ந்தாரைப் பார்த்துச் சோர்வடைய வேண்டா எனவும், உயர்ந்தாரைப் பார்த்து அமைதியடைய வேண்டா எனவும் ஊக்கமும் ஆக்கமும் தருவது திருக்குறள். எல்லார்க்கும் பொதுவான அறங்களைக் கூறுவது குறள் என்று சொல்லி வருகின்றோம். இது எவ்வளவு தவறான கருத்து? எவ்வளவு வீழ்வான கருத்து? பொதுவறம் கூறாது அவரவர்க்குப் பொருத்தமான அறங்கூறுவதே குறள். இதுவே குறளின் தனிச்சிறப்பு. பொதுவறம் செயற்படுமா? பொதுமடம் துப்புரவப்படுமா?

"நிதி மிகுத்தவர் பொற்குவை தாரீர், நீதி குறைந்தவர் காசுகள் தாரீர், அதுவுமற்றவர் வாய்ச் சொல் அருளீர்" என்று பொருள் நிலைக்கு ஏற்ற அறம் பாரதியார் கூறியிருப்பதை அறிவோம். அதுபோல் உலகுபுகழ் வள்ளுவர் ஒவ்வொருவரையும் தனித் தனியாக முன்னேற்ற வேண்டி அவரவர் செய்வதற்கு ஏற்ற அறங் கூறியுள்ளார். அறத்திற்காக அறம் எழுதவில்லை அவர். இவ்வுண்மையை இப்போது நாம் தெளிந்து வருகின்றோம். யாரையும் முன்னேற்றிவிடவல்லது முப்பால் என்பதனை ஊரறிய உலகறியத் தெளிவிக்க வேண்டும். "என்நிலைக்கு ஏற்ற அறம் இந்நூலில் உண்டு; ஆதலால் எனக்கும் முன்னேற்றம் உண்டு" என்னும் மெய்ந்நம்பிக்கையோடு திருக்குறளைப் படியுங்கள்.

2. அறம் எல்லா மக்களும் செய்ய வேண்டிய கடமை. எனினும் இப்படிச் செய்வதுதான் அறம். இவ்வளவு செய்தாற்றான் அறம் என வரம்பு காட்டலாமா? வள்ளுவர் அறம் வலியுறுத்தினாரேயன்றி, அதற்கு ஓர் அரண் கட்டவில்லை.

ஒல்லும் வகையான் அறவினை ஓயாதே
செல்லும் வாயெல்லாம் செயல்.

இக்குறளில் அவர் நெகிழ்ச்சியைப் பாருங்கள். ஒல்லும் வகையான் எனவும், செல்லும் வாய் எனவும் அறஞ்செய்வான் நோக்கத்திற்கு எவ்வளவு தாராளமாக விட்டுக் கொடுக்கின்றார்? தலைமேல் புல்லுக்கட்டை இறக்க உதவுவதும், ஆட்டின் கால் முள்ளை அணைத்து எடுப்பதும், முதியோர்க்கு இடங்கொடுத்து செல்வதும் இவ்வண்டி என வினவினார்க்குச் சலிப்பின்றி அறிவுறுத்தலும் எல்லாமே சிறு வினையாயினும் அறிவினையல்லவா? வள்ளலிடம் சென்றான் வறியனாய்த் திரும்பான்; வள்ளுவரைக் கற்றான் வாழாதிரான். வள்ளல் எப்படியும் கொடுப்பான்; வள்ளுவர் எப்படியும் வாழ்விப்பார்.

வாழ்வின் உயுர்வுக்கு இன்னவளவு பொருளாதார அடிப்படை வேண்டும் எனப் பலர் மயங்கி எண்ணம் தடுமாறிச் சோர்வடைகின்றனர். உள்ள நிலையை மேலும்

குள்ள நிலையாக்கிக் கொள்கின்றனர். உயர்வுக்குப் புறவடிப்படை வேண்டாம் என்பது வள்ளுவம். உயர்வாக வேண்டும் என்றால், வேண்டும் என்ற எண்ணம் வேண்டும்; அவ்வெண்ணத்தைத் திரும்பத் திரும்ப எண்ண வேண்டும்; எண்ணப்பித்து வேண்டும்; இதுவே உயர்வுக்கு வள்ளுவர் காட்டும் நெறி.

உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

எந்தப் பொருளடிப்படை வேண்டும் என நாம் நினைக்கிறோமோ அதனை வள்ளுவப் பேராசிரியன் உடன்படவில்லை.பொருளே தகரக் கூடிய அடிப்படை என இகழ்வதைக் காணுங்கள். உலகில்பொருளுடையாரெல்லாம் உயர்ந்து விடவில்லையே; பொருளிலாரெல்லாம் தாழ்ந்துவிடவில்லையே. பொருளாளர் தாழவும் பொருளிலார் உயரவும் காண்கின்றோம். ஆதலால் உயர வேண்டும் என்ற ஊக்கமே நல்வாழ்வுக்கு அடிப்படை என்பர் ஆசிரியர். இதனைவிட உயர்வுக்கு எளியநெறி காட்ட முடியுமா? திருக்குறள் காட்டும் வழி ஏற்ற நெறி மட்டுமன்று; செய்ததற்கு எளிய நெறியுமாம்.

3. திருக்குறளில் பொருட்பாலே பெரும்பால். இப்பாலில் கூறப்படும் அரசியல் நெறிகள் நடைமுறைக்கு உகந்தவை. முடியரசு குடியரசு படையரசு என்ற வகைக்கு உட்பட்டு வள்ளுவர் அரசியல் வகுக்கவில்லை. நாடென்றால் அதற்கோர் நல்லரசு வேண்டும். அது வல்லரசாகவும் இருத்தல் வேண்டும் என்பதுவே வள்ளுவ அரசியல்.

படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.

இது பொருட்பாலின் முதற்குறள். அரசியல் நெறி பேசும் முதற்குறளிலேயே'படை' என்ற சொல்லை முதலாவதாக வைத்துப் பாடுகின்றார் வள்ளுவர். படையற்றது அரசாகாது என்ற பேருண்மையை இதனைக் காட்டினும் வேறு வகையான் அறிவுறுத்த முடியுமா? தமிழறிஞர் எவ்வளவோ நூற்றாண்டுக்கு முன்னர் வலியுறுத்தியிருந்துங்கூட, சீனப்படையெடுப்புக்குப் பின்னரேதான், படையின் இன்றியமையாமையை நாம் உணர்ந்து கொண்டோம்.

அரசு வினையாளரிடம் கையூட்டை எங்ஙனம் ஒழிப்பது என்று நம் இந்தியத் தலையரசும் உறுப்பரசுகளும் இன்று மும்முரமாக ஆராய்ந்து கொண்டிருக்கின்றன. பல குழுக்களைப் புதுவதாக அமைக்க எண்ணுகின்றன. இக்குழுக்களுக்குள்ளும் கையூட்டு நுழையாது என்று யார் உறுதி கூற முடியும்? கையூட்டைக் கண்டுபிடிக்க வழி செய்தலைக் காட்டிலும் கையூட்டு நிகழாதவாறு அலுவல் நெறிகளை அமைப்பதிற் கருத்துச் செலுத்த வேண்டும். இது பற்றி அரசியற் சான்றோராகிய வள்ளுவர்யாது கூறுகின்றார்?

நாடொறும் நாடுக மன்னன்; வினை செய்வான்
கோடாமை கோடா துலகு.

நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும்.

மக்களின் வேண்டுகோள்கள் தூங்காதபடியும், திட்டங்கள் காலங் கடவாதபடியும் உடனுக்குடன் செய்யப்படுகின்றனவா என்று மேலவர்கள் தம்

கீழவர்களை நாள் தோறும் கவனிக்க வேண்டும் என இடித்துக் காட்டுகின்றார் ஆசிரியர். தாமதமின்றிக் காரியம் நடக்குமென்றால், கொடுக்க யாருக்குத்தான் கைநீளும்? இன்னும் ஒன்று; வள்ளுவப் பெருமான் சொன்னபடி செய்தால் சிலவகைக் கையூட்டுகள் ஒழிந்துபோம் என்று நம்பலாம்.

காட்சிக் கெளியன் கூடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

இன்று பெரிய வினைஞர்களைப் பார்க்க வேண்டும் என்றால், பணியாளன் தயவு வேண்டும். எழுத்துமூலம் சில எழுதினாலும் அவை மேலவர் பார்வைக்கு எட்டுமென்று சொல்ல முடியுமா? கட்டில் எடுத்து வைத்தாற்றானே கண்ணுக்குப்படும்? ஆதலின் அமைச்சர்களும் அமைச்சரனையவர்களும் நாள்தோறும் அரைமணி நேரமோ வாரத்தில் ஒரு பொழுதோ தம் அலுவலகத்திற்கு வெளியே வந்து தடையின்றி யாரையும் பார்க்க இசைவது, குறைகேட்பது முறை காண்பது என்று வழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். அங்ஙனம் செய்யும் அன்பும் எளிமையும் இருக்குமாயின், ''மக்கட்கு இறையென்று வைக்கப்படும்'' என்ற வள்ளுவர் பாராட்டு அவர்கட்குக் கிடைக்கும். மக்கள் வாக்கும் மனமாரக் கிடைக்கும். மக்கள் வாக்கும் மனமாரக் கிடைக்கும். வள்ளுவர் நல்லரசுக்கு வேண்டும் நடைமுறையெல்லாம் அறிந்த அரசியல் மேதை ஆதலின் இந்திய அரசியல் வாழ்வில் செல்வார் அனைவர்க்கும் திருக்குறளறிவு இன்றியமையாதது என்பது வெளிப்படை.

4. உலக நலம் என்பது சமுதாய நலம். சமுதாய நலம் என்பது இல்லற நலம். இல்லற நலம் என்பது கணவன் மனைவியின் காதல் நலம். காதல் சிறவாவிட்டால் ஞாலத்தில் எத்துறையிலும் எப்பண்பும் சிறவாது. எம்முயற்சியும் விழலுக்கு இறைத்த நீராகிவிடும். உலகிடை வேறு வகையால் வரும் இன்பத்தினும் காதலர் தம் இன்பம் சிறந்தது ஐயமில்லை; ஆனால் வேறு வகையால் வரும் துன்பத்திலும் காதலர்களுக்குள் வரும் துன்பம் கொலையனையதன்றோ? காதலர்தம் வேற்றுமை அறத்தைக் கெடுக்கவும்.அரசியலைக் கெடுக்கவும் காண்கின்றோம். ஒருவர் பொறை இருவர் நட்பு என்பது குடும்பத்தின் தலையாய பண்பு. உயிரொன்று என இலக்கியம் பாராட்டும் காதலர்களுக்குள்ளும் நீண்ட வாழ்நாளில் நெஞ்சு பொறுக்கமாட்டாச் சில பிணக்குகள் நிகழவே செய்யும். மனப் பூசல்கள் வஞ்சகத்தாலன்றி வாய் வார்த்தையால் வளரவே செய்யும்; சில சமயம் தடிக்கவும் செய்யும். அப்போது காதலின் நிலையைப் புரிந்து கொள்ள வேண்டும். புரிந்து கொள்ளல் என்பது பொறுத்துக் கொள்ளுதலாகும். பொறுத்துக் கொள்ளாதார் புரியாதவரே, பிணக்கைப் புரிந்து கொண்டார், இன்பப் பெருமை எய்துவர்.

உப்பமைந் தற்றால் புலவி; அது சிறிது
மிக்கற்றால் நீள விடல்

பிணக்கம் அளவாகுக; மிகுதியாக்க வேண்டாம் என்று இல்லறப் பெருமகனாராகிய வள்ளுவர் காதலர்களுக்கு நுண்ணிய நாகரிக முறையில் புலப்படுத்துவர். அறம் பொருள் இன்பம் என்ற முத்திற வாழ்வுக்கும் எத்திறத்தானும் வழிகாட்டுவது திருக்குறள்.

பேராசிரியர் சி.இலக்குவனார் தமிழை வாழ்விக்கும் சிறந்த இலக்கு உடையவர். என்றும் நம்பிக்கைக்கு உரிய அன்புத் தமிழர். உலகப் பெருமொழிகளுள் ஒன்றாகிய நந்தமிழைக் காத்து வளர்க்கும் நோக்கத்தால், 'குறள் நெறி' என்னும் நல்லிதழைத்

தொடங்குகின்றார். அளவு கடந்த விற்பனைப் புகழ் நச்சி இன்று செய்தித் தாள்கள் கீழான செய்திச் சில்லறைகளை மேலாக வெளியிடுகின்றன. தெருச் சண்டையினும் கீழான வசைமாரி பெய்கின்றன. நல்ல எளிய புரியும் தமிழ்ச் சொற்கள் இருக்கவும், வேண்டுமென்றோ கருத்தில்லாமலோ கலப்பு மொழியைப்பரப்புகின்றன. இன்ன குறைபாடுகள் இன்றி 'குறள் நெறி' இயங்குமாக. இலக்குவனாரின்'குறள் நெறி'யால் வள்ளுவரின் குறள் நெறி எங்கும் பரவுவதாக.

*குறள்நெறி, தை 19, 1995 / 01.02.1964*

# திருக்குறளும் தீங்கியற் சட்டமும்

-பேரா. முனைவர் மு.முத்துவேலு,
மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணைய உறுப்பினர், சென்னை.



ஆங்கிலச் சட்ட நெறியில் 'தீங்கியல் சட்டம்' என்னும் ஒரு பிரிவு உள்ளது. இது உரிமையியல் சட்ட வகையினைச் சார்ந்ததாகும். இதனைப் பொதுச் சட்டம் (Common Law) என்றும் அழைப்பர். இச்சட்டம் சட்ட நெறி வரலாற்றில் மிகவும் பழமையானது ஆகும். இது, ஒருவன் மற்றொருவனுக்கு இழைக்கும் தீங்கிற்காக பாதிக்கப்பட்டவன் தீங்கிழைத்தவனிடம் இழப்பீடு பெறுவதற்கு வழிவகுக்கும் சட்டம். இந்தத் தீங்கியல் சட்டத்தை ஆங்கிலத்தில் Torts என்ற சொல்லால் வழங்குவர். 'Tortum' என்ற இலத்தீன் மொழிச் சொல் பிரெஞ்சு மொழிக்கு வந்து, அதன்பின் ஆங்கில மொழியில் 'Tort' என்ற வடிவில் இடம் பெற்றுள்ளது. 'Tortum' என்பது இலத்தீன் மொழியில், 'Which is not straight' என்று பொருள்படும். நேரான எதற்கும் மாறானது அல்லது எதிரானது எதுவோ அதுவே தீங்கு என்பதை உணர்த்துகின்றது. இதனைச் சுருக்கமாக, 'நேர்மையற்ற செயல்' என்பதே அச்சொல்லின் இயல்பான பொருள் என்று மா.சண்முக சுப்பிரமணியம் விளக்குகிறார்.

'நேர்மைக்கு மாறாக' இருப்பதைத் தீங்கின் அடிப்படை என்பதைச் சுட்டி, அது சட்டத்திற்கு எதிரானது என மேனாட்டார் கருதினர். 'வளைந்த கோடு' என்றும் பொருள்தரும், 'Tortum' என்றும் இலத்தீன் சொல் உள்ளத்தாலும் சொல்லாலும் வளைதல் என்பதைக் குறிப்பாகக் உணர்த்துகிறது என்பர். இந்தக் கருத்தினை வள்ளுவரும் நடுவுநிலைமை அதிகாரத்தில் உரைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நடுவுநிலைமை என்பது மனமும் சொல்லும் ஒருபால் கோடாது நிற்கும் நேர்மையைக் குறிக்கும். இதனை நடுவுநிலைமை அதிகாரத்தில் விளங்கும் வள்ளுவர்,

"சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்"

என்கிறார். இக்குறளுக்கு உரைவகுக்கும் பரிமேலழகர், 'நடுவு நிலைமையாவது சொல்லின்கண் கோடுதல் இல்லாததாம்' என்று குறிப்பிடுகின்றார்.

'சொற்கோட்டம் இல்லது செப்பம்' என்னும் தொடருக்கான ஆங்கில மொழி பெயர்ப்புகளை நோக்குமிடத்து. செப்பம் என்பது நடுவு நிலைமையை உணர்த்தி, அது நீதி, நேர்மை, சட்டம் என்னும் பொருள்களுக்கும் ஆகி வந்துள்ளது தெரிய வருகின்றது.

திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கும் தமிழர்களுள் குறிப்பிடத்தக்கவர் திரு.K.M. பாலசுப்பிரமணியம் ஆவார். அவர் சொற்கோட்டம் இல்லது செப்பம் என்னும் இத்தொடரை, The Words of impartiality could constitute justice (ஒரு பால் சாயாத சொற்கள் நீதியாக உருவெடுக்கும்) என்று மொழி பெயர்த்துள்ளார்.

தம்மைத் தமிழ்மாணவன் என்று அழைப்பதில் பெருமை கொண்ட அருள் திரு.ஜி.யூ.போப் அவர்கள் இத்தொடரை, The inflexibility in word is righteousness (சொற்களில் வளைந்து கொடுக்காத தளர்வின்மையே நேர்மை ஆகும்) என்று மொழி பெயர்த்துள்ளார்.

இம்மொழி பெயர்ப்புகளில் செப்பம் என்னும் சொல் நீதியை Justice அல்லது நேர்மையை righteousness உணர்த்துவதற்குப் பயன்படுத்தப் பட்டுள்ளது. எனவே நடுவுநிலைமை என்பதை உணர்த்தும் செப்பம் என்னும் சொல் சீரிய செயலை, நீதியை, சட்டத்தைக் குறிக்கும் சொல்லாக உருவாகியிருத்தலைக் காணலாம்.

சொற்கோட்டம் என்பது, சொல்லில் நேர்மை இல்லாமல், வளைந்து கொடுப்பது என்று பொருள்படும். இப்பொருள் 'Tortum' என்னும் சொல் உணர்த்தும் பொருளோடு ஒத்திருப்பதைக் காணலாம். சொற்கோட்டம் இல்லது செப்பம் எனின், சொற்கோட்டம் உடையது தீங்கு என்று பொருள்படும். 'தீங்கியல்' என்பதை இலத்தீனில் 'Tortum' என்று சொல் குறிப்பதைப் போல், பழந்தமிழில் தீங்கியல் என்பதைச் 'சொற்கோட்டம்' என்னும் சொல் குறித்துள்ளது. எனவே சொற்கோட்டம் என்பது சட்டச் சொல்லாக வழங்கப்பட்டுள்ளது என்று தெளியலாம்.

சொற்கோட்டம் என்பதைத் தீங்காகக் கொண்டால், சொற்கோட்டத்தினால் விளையும் தீமைக்கான இழப்பீட்டிற்கு ஆவன செய்யும் சட்டம் தீங்கியற் சட்டம் என்று வரையறுக்கலாம்.

# பட்டிமன்ற வரலாறு (தொடர்கட்டுரை)

**பேராசிரியர் கண.சிற்சபேசன்**



இந்தியத் தூதரகம் சுபாஷ் சந்திரபோஸ் கலாச் சார மையமும் மலேசியா வாழ் வெளிநாட்டுத் தமிழர் சங்கமும் இணைந்து நடத்தும் பட்டி மன்றம்—நாள் 15-08-2016

## அயலகப் பணி குடும்பத்திற்குச் சுவையா? சுமையா?

| **சுவையே** | **சுமையே** |
|---|---|
| ராதிகா சுரேஷ் | சத்தியப் பிரியா |
| சுகுணா | லட்சுமிப் பிரியா |
| சுபா கணேஷ் | தமிழ்ச் செல்வன் |
| பழநிவேல் | மதியழகன் |

தமிழன்பர்களே நமது தமிழகத்தில் பட்டிமன்றத்திற்கு இருந்த செல்வாக்கையும் மதிப்பையும் பார்த்தும் நேரில் கண்டும் மகிழும் நீங்கள் அயலகத்தில் அதன் நிலையைப் பார்த்தால் வியந்துபோவீர்கள்.

இவ்வகையில் அயலகங்களான இலங்கை, மலேசியா, சிங்கபுரம் என்ற சிங்கப்பூர் அமெரிக்க ஐக்கியக் குடியரசு நாடுகள், ஆஸ்திரேலியா, லண்டன் போன்ற உலகப்பெரு இடங்களில் நடைபெற்ற பட்டிமன்றங்களைப் பற்றிக் கேள்விப்பட்டாலும் உள்ளம் மகிழ்ச்சியில் துள்ளும். இதற்கான காரணத்தை அயலகப் பேச்சாளரே ஒருவர் சொன்னார் கேளுங்கள்: "அது ஒன்றும் இல்லை ஐயா! ஒரு பேச்சாளர் எவ்வளவு அறுவையாகப் பேசினாலும் குறிப்பிட்டக் காலக் கெடுவுக்குள் முடித்துவிடவேண்டும் என்ற விதி இருப்பதுதான் காரணம்". நான் கூட நினைத்துப்பார்த்தேன் உண்மைதானே. ஒரு பேச்சாளர் எவ்வளவு அருமையாகப் பேசினாலும் அறுவையாகப் பேசினாலும் வழங்கப்படும் நேரம் அதிக அளவு 10 மணித்துளிகள் தானே. எங்கள் அணியில் அப்படிப் பேச்சாளர் யாரும் இல்லையெனினும் சிலபேரை 'அறுவைவணிகன்' என்று மறைமுகமாக மக்கள் அழைப்பதை மறக்கமுடியாது.

சரி மேற்கூறிய பட்டிமன்றத்திற்கு வருவோம். மலேசிய நாட்டின் தலை நகரில் அப்போது இந்தியத் தூதராக விளங்கியவர் திரு.திருமூர்த்தி அவர்கள். இந்தியப் பெருநாட்டின் புகழ்மிக்க ஆங்கில நாவலாசிரியராகத் திகழ்ந்த ஆர்.கே.நாராயண் அவர்களின் மறுமகன்திரு.திரு மூர்த்தி அவர்கள். அவர்தான் அயலகங்களில் பணி காரணமாகக் குடியேறும் குடும்பங்களை நேரடியாகப் பாதிக்கும் இப்பொருள்பற்றிப் பட்டிமன்றம் நடத்தவேண்டும் என்று அறிவுரை நல்கியுள்ளார். அப்போது கோலாலம்பூரில் இருந்த இந்தியத் தூதரக சுபாஷ் சந்திரபோஸ் கலாச் சார மையத்திற்கு திரு.ஐயனார் என்ற தமிழன்பர் இயக்குநராக இருந்தார். அவர் உடனே அப்போது மலேசிய நாட்டின் 'ஆஸ்ட் ரோ'தொலைக்காட்சியில் இயக்குநராக விளங்கிய நண்பர் இராசாமணியைத் தொடர்புகொண்டு கேட்க அவர் தமிழகத்திலிருந்து அங்கு வந்திருந்த எனது பெயரைச் சொல்லித் தொடர்பு கைப்பேசி எண்ணையும் அளித்துள்ளார். எனது தலைமையில் பட்டிமன்றம் அமைத்தால் சிறப்பாக அமையும் என்றும் கூறியுள்ளார்.

அதன்விளைவே மேற்கூறியபட்டிமன்றம். பிறகு சுபாஷ் சந்திரபோஸ் கலாச் சார மையத்திரு.ஐயனார் அவர்கள் என்னைத் தொடர்புகொண்டார். அவரது அலுவலகம்

கோலாலம்பூரில் மையப் பகுதியில் அமைந்துள்ளது. அங்கு மலேசியா வாழ் வெளிநாட்டுத் தமிழர் சங்கத்தின் தலைவர் திரு. ராசா என்ற நண்பரின் துணையுடன் பேச்சாளர் தேர்வு நடைபெற்றது. பேச்சாளர் இருவரது இல்லங்களில் இருமுறை ஒத்திகை பார்த்தோம். பிறகு பட்டி மன்றம் நமது இந்தியத் திருநாட்டின் விடுதலை நாளான ஆகச்ட் 15 ஆம் நாள் அவர்களுடைய மண்டபத்திலேயே நடைபெற்றது.

"வீர சுதந்திரம் வேண்டி நின்றார் வேறொன்று கொள்வாரோ" என்று முழங்கிய பாரதியாரைப் போலச் சுதந்திரத்தைப் போர்செய்து பெறுவோம் என்று முழங்கி அதற்காக 'இந்தியதேசியஇராணுவம்' என்று படையை அயலக மண்ணில் திரட்டியவர் சுபாஸ் சந்திரபோஸ் அவர்கள். அப்படையில் பெண்களும் தாமாக முன்வந்து இணைந்தனர். அவர் பெயரால் அமைந்த மண்டபத்தில் விழா மாலை நேரம் 5 மணிக்குத் தொடங்கியது.

ஐயனார் வரவேற்புரை நிகழ்த்தினார். அடுத்து இந்தியத்தூதர் திரு.திருமூர்த்தி அவர்கள் அருமையான தலைமையுரை நிகழ்த்தினார். அடுத்து பட்டி மன்ற நிகழ்ச்சி. அனைவரும் எதிர்பார்த்ததைவிட மிக அருமையாக நிகழ்ச்சி நடந்தது.

சுவையென்ற அணியினர் அயலகப் பணியினால் தமிழர்கள் பெறும் பொருள் வளம் குறித்தும், ஊர்களில் அவர்கள் அடைந்த இன்னல்கள் குறித்தும் பேசினர். அவ்வப்போது திருக்குறள் மேற்கோள் காட்டிப் பேசினர். பொருளின் இன்றியமையாமை குறித்துத் திருவள்ளுவர் சொன்ன குறட்பாக்களை மேற்கோள் காட்டினர். அயலகத்தில் நாம் ஈட்டும் பொருள்வளத்தினால் தாயகத்தில் எத்தனை பேருக்கு உதவி செய்ய முடிகின்றது சின்னஞ்சிறு ஊர்களில் எத்தனை அறக்காரியங்களை முன்னெடுக்க முடிகின்றது என்று விளக்கமாகக் கூறினர். பொருளல்லவரைக்கூடப்பெருளாகச் செய்யவல்ல ஆற்றலுடைய பொருளை ஈட்டுவதற்கு அயலகப்பணி உதவுவதை மிக அருமையாக எடுத்துரைத்தது இவ்வணி.

அடுத்துவந்த சுமையென்ற அணியினர் ஏதோ ஒருகூடையைச் சுமப்பது போன்று சித்திரித்துப் பேசியது மிகச் சுவையுடையதாக இருந்தது. அயலகங்களில் பணிபார்ப்பதற்காகத் தங்களது வயதான பெற்றோர்களை விட்டு வருவது எவ்வளவு சுமை என்று பேசினார்கள். அதிலும் இளம் மனைவியை ஊரில் விட்டுவிட்டுத் தனிமரமாக அயலகம் வந்து பணியாற்றும் வலி உங்களுக்கு எங்கே தெரியப்போகிறது நடுவர் அவர்களே என்று என்னைவேறு வம்புக்கு இழுத்தார் ஒரு பேச்சாளர். பொருள் பொருள் என்று அலைகிறார்கள் எதிர் அணியினர். இளமை போனால் உங்கள் பொருளால் இளமையை வாங்கமுடியுமா என்று ஒரு பேச்சாளர் அதுவும் பெண் பேச்சாளர் கேட்டபோது அவருக்குக் கண்ணீர் மல்கியது; எனக்கு அவ்வையாரின் அறநூல் படிப்பது போல இருந்தது. அவருடைய தோழி எழுந்து நின்று தண்ணீர்ப் போத்தலை எடுத்து உதவினார்.

தீர்ப்புரை: அயலகப்பணி என்பது தமிழனுக்குப் புதியதல்ல. முன்பு நமது நாடு அடிமைப் பட்டுக்கிடந்தபோது அயலகப்பணி நம்மீது சுமத்தப்பட்டது. பிஜித் தீவு போன்ற பகுதிகளில் நமது பெண்கள் விம்மி, விம்மி, விம்மியழுங்குரல் காற்றில் கலந்து வந்து தனது காதுகளில் விழுந்து வருத்துவதாகப் பாரதி அழுகுரல் எழுப்பினான். ஆனால் இப்போது அயலகப்பணி என்பது நாமே விரும்பி ஏற்றுக்கொள்ளுவது. வேண்டுமாயின் ஏற்கலாம், வேண்டாமெனில் மறக்கலாம் ; துறக்கலாம். இளமையைத் துறக்க வேண்டாம், மாறாகப் பணியைத் துறக்கலாம். வேண்டுமாயின் நமது இந்தியத் தூதரகம் தங்கள் பயணத்திற்கு ஏற்பாடு

செய்வார்கள். இதைச் சொல்லும்போது சுமைஎன்ற அணியின் பேச்சாளரைக் குறிப்பாகப் பார்த்துச் சொன்னேன். பொருள்தேட இளம் மனைவியை கணவன் பிரிவதுசங்ககாலந் தொட்டு நிகழ்வதுதான். ஆனாலும் ஒன்றை அன்றைய மதிநுட்பம் வாய்ந்த தோழி சொல்வாள். "நீ போனவுடன் முகந்து கொண்டு வருவதற்கு பொருள் ஒன்றும் கொட்டிக் கிடக்காது. ஆனால் இவள் இளமைஅதுவரைநில்லாது. ஆராய்ந்து நீயே முடிவுசெய்" என்பாள். அதையே நான் எனது தீர்ப்பாகக் கூறிமுடிக்கிறேன். நாமெல்லாம் நன்கு கற்றறிந்தவர்கள் நாலும் தெரிந்தவர்கள், நாற்புறமும் பார்ப்பவர்கள் நமது குடும்பச் சூழலுக்கு எது உகந்தது என்று தேர்ந்து செய்க. வாழ்க்கைக்குப் பொருள் வளம் ஆகலாம் ; ஆனால் வாழ்க்கையே அவள்தானே-அவன்தானே. ஆகச் சுமையும் சுவையும் அவரவர் வசமே.

# குறள்நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

மின்னிதழ் 19 | புரட்டாசி 15, தி.பி 2052 | அக்குதோபர் 1, பொ.ஆ 2021






## காந்தியடிகளின் தமிழாசான்
## தில்லையாடி வேதியன் பிள்ளை

# காந்தியடிகளின் தமிழாசான் தில்லையாடி வேதியன்பிள்ளை

கட்டுரையாக்கம்-மறைமலை இலக்குவனார் (பதிப்புரிமை)

---

*இந்தக் கட்டுரை வேதியன் பிள்ளையின் இரண்டாம் புதல்வர் தட்சிணாமூர்த்தி அவர்களின் எண்பத்தெட்டாம் அகவையில் அவர் கூறிய தரவுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றது. அவருடைய செவ்வி (interview) காணொளிப்பதிவு செய்யப்பெற்றுள்ளது.*

---

தில்லையாடி என்னும் ஊரின் பெயரைக் கேட்டதுமே தியாகி வள்ளியம்மையின் பெயர் நம் அனைவர் கவனத்திற்கும் வருவது இயல்பு. தனது பதின்பருவத்திலேயே தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகளின் வேண்டுகோளுக்கிணங்க தென்னாப்பிரிக்க வெள்ளைத்துரைத்தனத்தை எதிர்த்துச் சிறைநிரப்பும் போராட்டத்தில் கலந்துகொண்ட அந்தச் சிறுமியின் அஞ்சாமையும் நெஞ்சுரமும் தியாக உணர்வும் காவியம் பாடிப் போற்றிடத் தக்கன.

தில்லையாடி வள்ளியம்மையின் பெற்றோரையும், அதுபோன்றே நூறு அல்லது நூற்றைம்பது குடும்பத்தினரையும் தென்னாப்பிரிக்காவுக்குப் பஞ்சம் பிழைக்க அழைத்துவந்த தில்லையாடி வேதியன்பிள்ளை இன்னும் வரலாற்றின் பேரேடுகளில் பதிவுறவில்லை.

அப்படி அவர் என்ன செய்துவிட்டார்? மூன்றாண்டுக் காலம், காந்தியடிகளுக்குத் தமிழ் கற்றுக்கொடுத்த,காந்தியடிகளின் தமிழாசிரியர் தில்லையாடி வேதியன்பிள்ளை என்பது பலரும் அறியாத உண்மையாகும்.இதன் விளைவாகத்தான் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் தமது ஆசிரமத்தில் தங்கியிருந்த தொழிலாளர் பிள்ளைகளுக்குத் தமிழ் சொல்லிக் கொடுப்பதைத் தமது பகுதிநேரப் பணியாகக் கொண்டிருந்தார்.அவர் நடத்தியது அறியாப் பிள்ளைகளுக்குத் தமிழ் அரிச்சுவடி கற்றுக்கொடுக்கும் பணி என்றாலும் அங்ஙனம் கற்றுக்கொடுக்கும் துணிவையும் தமிழறிவையும் அவருக்கு வழங்கிய தமிழாசான் தில்லையாடி வேதியன்பிள்ளை என்பது குறிப்பிடத்தக்கது.

வேதியன்பிள்ளை தமிழ்ப்புலவரா? அல்லவே அல்ல. அவர் தென்னாப்பிரிக்காவுக்கு வந்து தொழில் நடத்திப் பொருளீட்ட வந்தவர். அவரது குலமரபு குறிப்பிடத்தக்க சிறப்புடையதெனலாம்.. ஆமாம். அவர் தாயுமானவ அடிகளின் வழிமுறையில் ஐந்தாவது தலைமுறையைச் சேர்ந்தவர் ஆவார்.தாயுமானவ அடிகளார் தமது மனைவி காலமானபின் தமது ஒரே மகன் கனகசபாபதியைத் தம் அண்ணன் பொறுப்பில் விடுத்துத் துறவு பூண்டுவிட்டார். கனகசபாபதி>> சண்முகவடிவு>> கமலப்பண்டாரம்>>> கதிர்வேற் பிள்ளை>> தட்சிணாமூர்த்தி என வழிவழி வந்த மரபில் தட்சிணாமூர்த்தி அவர்களுக்கு இரு ஆண்மக்கள்; மூத்தவர் வேதியன் பிள்ளை. இளையவர் முத்துக்குமாரசாமி.

தட்சிணாமூர்த்தி அவர்கள் தம் மக்கள் சிறுபிள்ளைகளாக இருக்கும்போதே துறவு பூண்டு சென்றுவிட்டார்.அவர் வள்ளலாருடன் சென்றுவிட்டதாகச் செய்தி

நிலவுகிறது.அதுவரை திருவாரூரில் இருந்த அக்குடும்பம் பின்னர் தில்லையாடிக்குக் குடிபெயர்ந்துவிட்டது. வேதியன் பிள்ளையின் தந்தைவழிப் பாட்டி (தட்சணாமூர்த்தியின் தாயார்) தமது சகோதரன் பெருநிலக்கிழாராகத் தில்லையாடியில் வளமிக்க வாழ்வுடன் விளங்குவதால் அங்கு அழைத்துச் சென்றுவிட்டார். வேதியன் பிள்ளை தமிழ் கற்றுக்கொண்டது தமிழிசை மூவரில் ஒருவராகிய முத்துத்தாண்டவரிடம் என்னும் செய்தி அவருடைய புலமையின் ஆழம் எத்தகையதாயிருந்திருக்கும் என்னும் உண்மையை நமக்குப் புலப்படுத்துகிறது.

வேதியன் பிள்ளை இளமைப்பருவம் எய்தியவுடன் தமது சொந்த உழைப்பில் பொருளீட்டிக் குடும்பத்தைப் பார்த்துக்கொள்ளும் கடமையை உணர்ந்தார்.அந்த ஊரைச் சேர்ந்த விருத்தாசலம் பிள்ளை அப்போது தென்னாப்பிரிக்காவில் வணிகத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் போலவே தாமும் தென்னாப்பிரிக்காவுக்குப் பிழைக்கச் செல்லலாம் எனத் திட்டமிட்டுப் பெரியவர்களிடம் இசைவு பெற்றுத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றார். பல்வேறு சிறுவணிகங்களில் ஈடுபட்டுப் பொருளீட்டினார்; அதே வேளையில் கேம்பிரிட்சு பல்கலைக்கழகத்தில் பட்டப்படிப்புக்கும் சேர்ந்து பட்டமும் பெற்றார்.பெரிய செங்கற்காளவாய் அமைத்து வணிகம் செய்து பொருளீட்டினார்.

காந்தி அடிகள் தென்னாப்பிரிக்காவுக்கு வருவதற்குப் பல ஆண்டுகள் முன்னரே அங்கு வந்து வணிகச் சுற்றம் சூழ வளமுடன் வாழ்ந்துவந்த வேதியன்பிள்ளை இந்தியாவிலிருந்து வந்த அந்தக் குசராத்தி வழக்கறிஞரோடு முதலில் தொழில்முறைத் தொடர்பு கொண்டிருந்தார். வணிகர்—வழ்க்கறிஞர் என்னும் முறையிலே அத் தொடர்பு இருந்தது.சில ஆண்டுகளுக்குப் பின் தற்செயலாக ஒருமுறை திருக்குறள் ஒன்றினை ஆங்கிலத்தில் விளக்கி அதன் நயத்தை வேதியன்பிள்ளை கூறியபொழுது காந்தியடிகள் திருக்குறளையும் ஏனைய தமிழ் இலக்கியங்களையும் தமக்குக் கற்பிக்குமாறு வேண்டியவுடன் வணிகர் தமிழாசானாகிவிட்டர். வழக்கறிஞர் தமிழ் மாணவர் ஆகிவிட்டார்.

இதற்கு முதன்மையான காரணம்,உருசிய எழுத்தாளர் தால்சுதாய் மூலமாகத் திருக்குறளைப் பற்றிக் கேள்விப்பட்ட காந்தியடிகள் கொல்லாமை,இனாசெய்யாமை என்னும் இரு அதிகாரங்களின் பொருளை அவர் மூலம் அறிந்திருந்தார்.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன் பின் சாரப்
பொய்யாமை நன்று.

என்னும் குறள் காந்தியடிகளின் குறிக்கோள் பயணத்திற்குத் தடம் அமைத்தது.

கொல்லாமை அகிம்சைநெறிக்கும் பொய்யாமை சத்தியாக்கிரகத்திற்கும் அடிகோலின.

வள்ளுவரின் வழித்தோன்றலாகக் காந்தியடிகள் வாழ்ந்தார்.அவர் வாழ்க்கைமுறை குறளுக்குப் பொழிப்புரையாய் அமைந்ததே உலகம் கற்கும் வரலாறாகியது.

காந்தியின் வழித்தோன்றலாக நெல்சன் மண்டேலா,மார்ட்டின் உலூதர் கிங் அரசியலில் அறநெறி போற்றினர்.வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்ததாகப் பாரதியார் கூறியமை உண்மை.வெறும்புகழுரை அன்று.

வேதியன்பிள்ளை இருந்தது கிம்பர்லி நகரில்;காந்தியடிகள் இருந்தது கேப்டவுன் எனும் நகரில்.பெரும்பாலும் காந்தியடிகள் கிம்பர்கலிக்குச் சென்று தமிழ் கற்றுவந்தார்.

ஒருமுறை மாலையில் தமிழ்ப்படிப்பு முடிந்ததும் மழையின் காரணமாக காந்தியடிகள் தாம் வழக்கமாகச் செல்லும் தொடர்வண்டியைத் தவறவிட்டுவிட்டார்.எனவே வேதியன்பிள்ளை இல்லத்திலேயே அன்று இரவு தங்க நேர்ந்தது.இதனை ஒரு மகிழ்வான வாய்ப்பாகக் கருதிய வேதியன்பிள்ளை கட்டிலில் பட்டுமெத்தையில் குளிருக்கு இதமான வெந்நீர் ஒத்தடம் கொடுத்துக் காந்தியடிகளைத் தூங்குமாறு வேண்டியுள்ளார் அக்.கட்டிலையும் ஆடம்பரமான ஏற்பாடுகளையும் கண்ட காந்தியடிகள்'வேதியன் பிள்ளை! தென்னாப்பிரிக்காவில் நாம் (இந்தியர்கள்)எவ்வளவு பேர் வாழ்கிறோம்?'என வினவினாராம்.

தயக்கத்துடன் அங்கு வாழும் புலம்பெயர் இந்தியர் எண்ணிக்கையைப் பிள்ளை கூறினாராம்.

'இத்துணை இந்தியர்களும் இப்படிச் சொகுசான கட்டிலில் தான் தூங்குகிறார்களா?' என்பது காந்தியடிகளின் வினா.

கூலிகளாகவும் கட்டுமானத் தொழிலாளர்களாகவுமே பெரும்பான்மையோர் இருந்த சூழலில் பிள்ளை 'ஆமாம்' என்று கூறமுடியுமா?

'எனக்கு ஒரு கோணிப்பை இருந்தால் கொடுங்கள். தரையில் விரித்துப் படுத்துக்கொள்கிறேன்.' இது காந்தியடிகளின் வேண்டுகோள்.

வேறுவழியின்றிப் பொதிமானப் (பார்சல்) பணிக்காக அங்கே இருந்த ஓர் ஓலைப்பாயைப் பிள்ளை கொடுத்தார். தரையில் அதனை விரித்துக் காந்தியடிகள் படுப்பதைக் கண்ணீர்மல்கப் பார்த்துக்கொண்டிருந்தார் பிள்ளை.

இங்கே கவனிக்கவேண்டியது, அங்கே அப்போது காந்தியடிகளாக இல்லாமல் வழக்கறிஞர் மோகன்சந்து கரம்சந்து காந்தியாகத் தான் அண்ணல் இருந்தார். எனினும் அந்தச் சூழலில் அவருக்கு வாய்த்திருந்த அத் துறவுள்ளம் தாயுமானவ அடிகள் வழிவந்த வேதியன்பிள்ளையை மெய்சிலிர்க்கச் செய்துவிட்டது.

*'கல்லணையில் கண்துயிலக் கற்றனையோ காகுத்தா கரிய கோவே'* என்னும் ஆழ்வாரின் ஏக்கத்தைப் போன்றே பிள்ளை அவர்களும் ஏங்கினார்

பரணில் படுத்துறங்கிய இராமனைக் கண்ணீர் மல்கக் காத்துநின்ற இலக்குவனைப் போலவே இரவெல்லாம் கண்ணீர்மல்கக் காந்தியடிகள் துயின்ற கோலத்தைப் பார்த்தவாறு துயருற்றிருந்தார்.

காந்தியடிகளின் போராட்டவாழ்வுக்கு உதவியாகவும் பிள்ளை செயற்பட்டார்.அப்போது வ.உ.சி.பெற்ற சிறைவாழ்வைக் கேள்விப்பட்டு உடனடியாக அவரது வழக்குச் செலவுக்குத் தம்மால் இயன்ற பொருளுதவியைச் செய்தார்.மாதந்தோறும் வ.உ.சி.யின் குடுமபத்திற்குப் பணம் அனுப்பி உதவினார்.வ.உ.சி.சிறையிலிருந்து வெளிவந்தபின்னர்,தமது நன்றியுணர்வைக் காட்டும் விதமாகத் தமக்குப் பிறந்த பெண்குழந்தைக்கு வேதவல்லி எனப் பெயரிட்டார்.(ஆண்பிள்ளை பிறக்கும் என்றும் வேதியன் எனப் பெயரிடவேண்டும் எனவும் அவர் நினைத்திருந்தார்.)அந்தப் பெண்குழந்தை பருவமெய்திய வேளையில்

புனிதநீராட்டுநடத்தும் செலவு ஐம்பது ரூபாய் ஆகும் எனவும் அதற்கு என்ன செய்வது என வழியறியாது கலங்குவதையும் வ.உ.சி.தமது நண்பராகிய பிள்ளைக்கு எழுதிய கடிதத்தையும் இணைத்துள்ளேன்.

காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவை விட்டு இந்தியாவுக்கு வந்தபோது வ.உ.சி.யின் வறுமைத்துயரையும் மண்ணெண்ணெய் விற்கும் அவலநிலையையும் கேள்வியுற்று அவருக்குக் கொடுக்குமாறு ஐயாயிரம் ரூபாய் கொடுத்தனுப்பினார். ஆனால் இந்தியா வந்ததும் பல அலுவல்களில் மூழ்கிப்போன காந்தியடிகள் அதனை மறந்துவிட்டார்.பின்னர் வ.உ.சி.யே காந்தியடிகளுக்குப் பல மடல் விடுத்தும் பயனில்லை.வேதியன்பிள்ளை தென்னாப்பிரிக்காவிலிருந்து தமிழகம் வந்தபின்னர் தமது மைத்துனரையும் வ.உ.சி.யையும் காந்தியடிகளிடம் நேரில் அழைத்துச் சென்று செய்தியை நினைவூட்டி வாங்கித் தந்துள்ளார்.

உழவுத்தொழிலாளர்களாகப் பணியின்றிப் பஞ்சம் பிழைக்க வழிதேடிய பலரைத் தில்லையாடியிலிருந்து தென்னாப்பிரிக்காவுக்கு அழைத்துச் சென்றவர் பிள்ளையவர்களே.தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்துவந்த தொழிலாளர்களுள் ஒரே சிற்றூரிலிருந்து மிகுதியானவர்கள் வந்தனர் எனில் அந்த ஊர் தில்லையாடியே;அங்ஙனம் அழைத்துச் சென்றவர் பிள்ளையவர்களே.

எனவே தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்தபின் முதலில் தமது ஊருக்குத் தான் காந்தியடிகள் வரவேண்டுமென்னும் பிள்ளையின் வேண்டுகோளை ஏற்றும் வள்ளியம்மையின் தியாகத்தைப் போற்றும் வகையிலும் 1915-இல் காந்தியடிகள் வந்தார். தில்லையாடியில் அவர் வந்துசென்றதன் நினைவாக மண்டபம் கட்டப்பட்டுள்ளது

1915-இல் பெண்குழந்தைகளுக்கென்று ஒரு பள்ளிக்கூடம் நிறுவினார்.அப் பள்ளியின் பெயர் *சுதர்ம பாலிகா பாடசாலை*. அப்பள்ளியில் மதிய உணவும் வழங்க ஏற்பாடு செய்தார். பின்னர் அப் பள்ளி இருபாலார்க்கும் உரிய பள்ளியாகி இன்றளவும் நடந்துவருகிறது.

*அண்மையில் நூற்றாண்டுவிழா நடத்திய - தில்லையாடியில் வேதியன் பிள்ளை 1915-ஆம் ஆண்டு நிறுவிய அப் பள்ளியின் ஒளிப்படம் - 2015-இல் நூற்றாண்டு விழா நடந்தது இப் பள்ளி இன்னும் சிறப்பாக நடந்துவருகிறது*



வேதியன் பிள்ளைக்கு நான்கு மகன்கள்; மூன்று புதல்விகள்.அவரது இரண்டாம் புதல்வர் தட்சிணாமூர்த்திக்கு இப்போது எண்பத்தெட்டு வயது.ஓய்வுபெற்ற தலைமையாசிரியராகிய தட்சிணாமூர்த்தி அவர்கள் தென்னன் என்னும் புனைபெயரில் பல கவிதைத்தொகுப்புகள் எழுதி வெளியிட்டுள்ளார்.அகவை முதிர்ந்ததால் மறதி தலைதூக்கினாலும், காந்தியடிகளுக்குத் தமிழ் கற்றுக்கொடுத்தவர் தம் தந்தையார் என்னும் பெருமித உள்ளத்துடன் வாழ்ந்துவருகிறார்.அவர் கூறிய செய்திகளே இக் கட்டுரை ஆக்கத்திற்குத் துணை புரிந்தன. (இப்போது அவர் புகழுடல் எய்தியுள்ளார்.)



பிள்ளையவர்கள் காந்தியடிகளுடன்|இடது கோடியில் வேதியன் பிள்ளை|கோல் ஊன்றிய காந்தியடிகளுக்கு வலது பக்கம் திரு.நாராயணசாமி படையாச்சி. | வலது பக்கம் தில்லையாடிக்கு வேதியன் பிள்ளையை அழைத்துவந்த விருத்தாசலம் பிள்ளை.

# இவ்வுலகமே பின்பற்ற வேண்டிய கோட்பாடுகள்...

- வழக்கறிஞர் என்.எஸ்.ராஜன்

*திரு என் எஸ் ராஜன் (70) சிவகங்கை மாவட்டம் கோட்டையூரில் 2-3-1951ல் பிறந்தவர். சென்னையில் பட்டப்படிப்பும் சட்டக் கல்வியும் பயின்றவர். மாணவப் பருவத்தில் திராவிட இயக்கத்தின் பால் ஈர்க்கப்பட்டு பேரறிஞர் அண்ணாவுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவர். இந்தியன் வங்கியில் சட்டப்பிரிவில் உயர் அதிகாரியாக சிறப்புற பணியாற்றி விருப்ப ஓய்வு பெற்று சென்னை உயர் நீதிமன்றத்திலும் டெல்லி உச்ச நீதி மன்றத்திலும் வழக்குரைஞராக பணியாற்றியவர். சில காலம் சென்னை சட்டக்கல்லூரியில் வருகைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர். பொது இடங்களில் புகைபிடிக்கக் கூடாது என்று முதன்முதலில் சென்னை உயர் நீதிமன்றத்தில் பொது நல வழக்கு தொடுத்தவர். தொழிலாளர் தொடர்புடைய வழக்குகளில் திறம்பட வாதாடி தக்க ஆணைகள் பெற்றுத் தந்தவர். தமிழில் சட்ட உலகம் என்ற மாத இதழ் ஆசிரியராக இருந்து நடத்தியவர். ஆங்கில காட்சி ஊடக வாதங்களில் பங்கேற்றுள்ளார். தமிழ் இலக்கியத்தில் ஆர்வமும் அறிவும் கொண்ட இவர் திருக்குறளின் பால் கொண்ட பற்றின் காரணமாக பல கட்டுரைகளை எழுதியுள்ளார். குறள்வழி நடந்தால் நாட்டில் சட்டத்திற்கு இடம் இல்லை என்ற கருத்தை தனது கட்டுரைகளில் வலியுறுத்தியுள்ளார். சென்னை, அண்ணாநகரை அணிசெய்து வாழும் அறிஞர்களுள் இவரும் ஒருவர்.*



'அ'-வில் தொடங்கி, ஆதி பகவனை வணங்கி, வள்ளுவப் பெருந்தகை எழுதியருளிய திருக்குறள், காலங்களை வென்ற கலங்கரை விளக்கம். எல்லாக் காலத்திற்கும், எல்லா யுகங்களுக்கும், அனைத்து நாடுகட்கும், அனைத்து மக்களுக்கும் ஏற்ற வழிகாட்டும் நெறிமுறைகளாகும். இது மனிதனுக்கு மனிதன் சொன்ன வாழும் வழி முறைகள்!

குறளில் இல்லாதது எதுவும் இல்லை! உலகில் எங்கு தேடினாலும் - எந்த இடத்திலும் - எந்த மொழியிலும் - காணக் கிடைக்காத அற்புத அமுதம் திருக்குறள்! தமிழின் தனிப்பெரும் பெருமை அது! குறளுக்கு இணை எதுவுமில்லை! குறட்பா சொல்லாத கருத்துக்களும் இல்லை!

'வீடு' எப்படி இருக்க வேண்டும்? ஒரு நாடு எப்படிச் செயல்பட வேண்டும்? நல்லறமாக இல்லறத்தில் கோலோச்சி - அன்பும் - அறனும் தன்பாற்கொண்டு ஒழுகும் இல்லங்கள் நிரம்பிய நாடு எப்படி இருக்கும்? மலர்களின் மணம் பரப்பும் பூக்காடாக - மாண்புடையோர் உறையும் சொர்க்கபூமியாகவே இருக்கும்!

ஆனால், இன்றைய உலகில் நாம் காண்பது என்ன? எங்கும் ஊழல்... எதிலும் ஊழல்... அரசு நிர்வாகம் அடியோடு நிலை தடுமாறி... அறவழியில் இருந்து அறவே விலகி... ஆதிக்க வெறி... பணபலம்... இவற்றின் அடிப்படையில் அமைந்துவிட்ட கோலம்!

தனி மனிதர்களின் தன்னலம் அளவை மிஞ்சிய அலங்கோலம்! வீடுகள் எல்லாம் இன்னல் சூழ்ந்த இடுகாடுகளாக மாறிவிட்ட நிலை..! மணம் புரிந்தோர் மனம் ஒன்றுபடாததால், நீதிமன்றங்களில் குவிந்திடும் மணமுறிவு கோரும் மனுக்கள்..!

இப்படி இந்த உலகில் வீடும் - நாடும் சாக்காடாய் மாறிவிட்டனவே! என்ன காரணம்? நம்மில் எவரும் சிந்தித்தோமா?

'ஆன்மிகம்' - குறையவில்லை! தெரு முழுக்க, நாள் முழுக்க, நாலா வித

இரைச்சல்கள் கேட்டுக்கொண்டுதான் இருக்கின்றன! பல உருவங்களில், பல மதங்களில், பல இடங்களில், பல மொழிகளில், பல வழிகளில் இறைவனைக் காண நாம் முயன்றோமே தவிர, நம் எல்லோரிடமும் உள்ளே ஒளிந்திருக்கும் 'மனத்தை', 'மனச்சான்றை'க் கடவுளாக எண்ணி நினைத்திட, எண்ணி ஒழுகிட, நாளும் வழிபட நம்மில் பலரும் முயன்றிடவில்லை! இதுதான் காரணம்!

யாரும், யாரையும் ஏமாற்றலாம்! நாம் உரு வாக்கிய கடவுள்களை ஏமாற்றி, அதற்குத் தண்டமாக (அபராதமாக), காணிக்கையும் செலுத்தி, எல்லோரையும் ஏமாற்றலாம்! ஆனால், நம்முள் உறைந்த மனச்சாட்சியை ஏமாற்ற எவரால் இயலும்? 'மனத்துக் கண் மாசிலன் ஆதல்...' என்று வள்ளுவர் அழகாகச் சொன்னாரே! மனத்திலே மாசு இல்லை என்றால், குற்றங்கள் உருவாகுமா? அறம் அழிந்து போகுமா? தண்டனைச் சட்டங்களுக்கு வேலைதான் இருக்குமா?

நம் மனத்தையே கடவுளாக்கிக் கொள்ளுங்கள்! அதற்கு அஞ்சி வாழுங்கள்! இந்த உலகம் எப்படி ஆகிறது பாருங்கள்! குறள் காட்டும் நெறிமுறைகள் ஒவ்வொரு தனிநபராலும் பின்பற்றப்பட்டால், ஒவ்வொரு வீட்டிலும் அது ஒளிவிளக்காக ஏற்றப் பட்டால், நாடு எந்த நிலையில் இருக்கும், எண்ணிப் பாருங்கள்!

இன்று நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் இந்த உலகில், நமக்கு எல்லாவித வசதிகளும் கிடைக்கின்றன. அறிவியல் முன்னேற்றத்தினால் அனைத்து பலன்களையும் அனுபவிக் கின்றோம்! வியக்கத்தக்க முன்னேற்றத்தின் விளிம்பில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்! அனைத்துத் துறைகளிலும் அதிசயிக் கத்தக்க முன்னேற்றம்! எல்லாவித வாய்ப்புவசதிகள் கிடைக்கப் பெற்றிருந்தும், ஒன்று மட்டும் கிட்ட வில்லை. அதைத் தேடி நாம் அலைகிறோம்! அதை விரும்பி அனைத்து நாடுகளும் குரல் கொடுக்கின்றன! அதற்காக நாம் அனைவரும் ஏங்குகிறோம்! ஆனால் அது இங்கில்லை! என்ன அது? 'அமைதி..!' (Peace)

உலகின் எந்த ஒரு இடத்திலும் எவருக்கும் அமைதி இல்லை! நிம்மதியான வாழ்வு கிட்ட வில்லை! எங்கு நோக்கினும் துன்பமும், துயரமும்! தீவிரவாத அச்சுறுத்தல்! கொலை, கொள்ளை! குற்றங்கள்! இயற்கைப் பேரழிவுகள்! இயற்கையின் அச்சுறுத்தல்! குண்டு வெடிப்புகள்! மனித இன அழிவுகள்!

இத்தகு இடர்சூழ்ந்த, இருளில் இருந்து நாம் விடுபட்டு, இன்னல் அகற்றி, இனிமையாக வாழ என்ன வழி? அதுதான் குறள் கூறும் அன்புநெறி!

இனம், மனம், மதம், மொழி, நாடு என்ற வேறுபாடு இன்றி,

இன்றெல்லோரும் பின்பற்றவேண்டிய கோட்பாடுகள்...

இவ்வுலகமே பின்பற்றவேண்டிய கோட் பாடுகள்...

இன்பத் திருக்குறளில் நிறைந்து, புதைந்து கிடக்கின்றன. அக் கோட்பாடுகள் அறிந்து, உணர்ந்து, போற்றிப் பின்பற்றப்பட்டால், இவ்வுலகம் பேரழிவின் பிடியில் இருந்து காக்கப்படும். எல்லோருக்கும் அமைதி கிட்டும்!

சட்டங்கள் இந்த உலகை ஆள்கின்றன! உண்மைதான்! சட்டங்களால் ஆளப்படும் இந்த உலகம், நீதி தேவதையின் வெண்கொற்றக்குடையின் கீழ் சுற்றிச் சுழன்றால், சொர்க்கத்தை இந்த பூமியிலேயே உருவாக்கி மகிழ்ந்திடலாம்! ஆனால், மனிதனால் இயற்றப்பட்ட சட்டங்கள் (Man Made Laws) இத்தகைய நீதியைப் பெற்றிடவும், நீதியை நிலை நாட்டவும் போதுமானவைகளா? அல்லது, அவை களால் அது முடியுமா? அப்படி என்றால் சட்டம் வேறு நீதி வேறா? இவற்றுக்கெல்லாம் விடை காண நாம் முயன்று சிந்திக்க வேண்டும்.

இந்த உலகில் மனிதர்களாக வாழ நாம் பிறந்தோம். ஆனால், நாம் மனிதர்களாக இங்கே வாழ் கின்றோமா?

இயற்கை நம்மைப் படைத்திருக்கிறது. இயற்கையிலேயே நமக்குள்ள உரிமைகளையெல்லாம் பெற்று வாழ்கிறோமா? மனித உரிமைகள் இந்த உலகில் மதிக்கப்படுகின்றனவா? இந்த உலகின் சட்டங்கள் அந்த மனித உரிமைகளைப் பாதுகாக்கின்றனவா?

'மனித உரிமை' என்பது இன்றைய நாளில் உலகில் எங்கும் பேசக்கூடிய ஒரு தலைப்பாக மாறி உள்ளதே, மனதுக்கு ஆறுதல் தரும் உண்மையாகும். ஒவ்வொரு மனிதனும் - மற்ற ஒரு மனிதனை -மனிதனாக மதிக்கத் தொடங்கினாலே, அங்கே குற்றங்கள் நிகழ வாய்ப்பு இருக்காது!

தனக்குள்ள உரிமைகளை ஒருவன் உணர்ந்து, செயலாற்றும் போது, பிறருடைய உரிமைகளில் தலையிடாமல், தன் மூக்கை நுழைக்காமல் இருந்தாலே, இ.பீ.கோ. (இந்தியன் பீனல் கோடு) போன்ற தண்டனைச் சட்டங்களுக்கு வேலை இல்லாமல் போய்விடும்! ஆக, இந்த மனித உரிமைகளே சட்ட உலகின் அடித்தளமாக அமைந்திருக்க வேண்டும். Article 1 of the Universal Declaration of Human Rights, states that, 'All human beings are born free and equal in dignity and rights..... and should act towards one another in a spirit of brotherhood.'

'எல்லா மனித உயிர்களும் சுதந்திரமாகத்தான் பிறக்கின்றன. அவர்கள் மதிப்பு, மரியாதை மற்றும் உரிமைகளில் சமமானவர்கள். அவர்கள் அனைவருக்கும், ஒருவருடன் ஒருவர் சகோதர மனப் பான்மை என்ற கோட்பாடுடன் பழக வேண்டும்.'

ஐக்கிய நாடுகள் அவையின் பன்னாட்டு மனித உரிமைகள் சாசனம் இன்றைக்குக் கூறும் இத்தகு மனித உரிமைகளைப் பற்றி, இன்பத் திருக்குறள் அன்றைக்கே அழகாக எடுத்துச் சொல்லியிருக் கிறது!

பிறப்பிலே வேறுபாடு என்று ஒன்றுமில்லை! இதை வள்ளுவர் மிக அழகாகச் சொல்கிறார், 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்...' என்று!

எல்லா உயிர்களுக்கும் பிறப்பு ஒரு தன்மையானதே! மனித உரிமைகளை, மகத்தான, மாசற்ற கருத்துக்களைத் திருவள்ளுவர் அன்றே அழகாக எடுத்தியம்பி இருக்கிறார்.

அவருடைய ஆரம்பக் குறளே...

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்பதுதான். எந்த ஒரு காலத்திற் கும், எந்த ஒரு மதத்திற்கும், எந்த ஒரு கருத்துக்கும், எந்த யுகத்திற்கும் ஏற்புடைய மணியான குறள்!

இந்த மதம்தான் சிறந்தது என அவர் இயம்பிட வில்லை. எந்த ஒரு குறிப்பிட்ட கடவுளையும் குறித்துப் பாடவும் இல்லை! எல்லோருக்கும் அவரவர் கொள்கைப்படி, விருப்பப்படி மதத்தைப் பின்பற்றிட, எண்ணிய கடவுளைத் தொழுதிட உரிமை உண்டு. 'ஆதி பகவன்' என்பது அனைத்தையும் குறிக்கிறது. தமிழின் முதல் எழுத்தான 'அ'வில் ஆரம்பிக்கும் இந்தக் குறள் எல்லோருக்குமே உரிமைகளை அள்ளித் தருகிறது.

பிறருடைய கருத்துக்களில் தலையிட்டு, அவரவர் உரிமையைக் கெடுக்க, சிதைக்க எண்ணும்போது தான் உரிமைப்போர் உருவாகின்றது.

சிலர், பலருடைய உரிமைகளில் தலையிடும் போது, அவர்களின் உரிமைகள் பறிக்கப்படுகின்றபோது அல்லது மறுக்கப்படுகின்றபோது அல்லது நசுக்கப்படுகின்றபோது, மனித உரிமைகள் வேண் டிக் குரல் எழுப்ப வேண்டியுள்ளது.

இதை உணர்ந்த வள்ளுவர் அனைவருக்கும், அவரவர் விரும்பும் வழிபாட்டு உரிமைகளைத் தந்து, உரிமைகள் நசுக்கப்படுவதை, மீறப்படுவதைத் தடுத்து எழுதிய முதல் குறட்பாவையே மனித உரிமைகளின் மகத்தான நல்முத்தாகக் கொண்டிடலாம்.

எல்லாவற்றையும் கடந்த, மிஞ்சிய உயர் உன்னத சக்தி (Super Power) ஒன்று உள்ளது என்பதை எவர்தான் மறுக்க இயலும்? அதை எவர் எவரும் எந்தப் பெயரும் இட்டு அழைத்துக் கொள்ளுங்கள்! அது உங்கள் உரிமை!

# இராய.சொ.வின் காந்தியச் சிந்தனை

-சு . நிர்மலாதேவி



*இராய. சொக்கலிங்கம் (1898 அக்டோபர் 30 – 1974 செப்டம்பர் 30) என்னும் இராயப்ப செட்டியார் சொக்கலிங்கம் தமிழறிஞர்; கவிஞர்; சமய அறிஞர்; எழுத்தாளர்; சமூகச் சீர்திருத்தக்காரர்; காந்தியர். இராய. சொக்கலிங்கம் இளமையிலேயே தமிழார்வம் உடையவராக இருந்தார். குமரன் இதழின் ஆசிரியர் சொ. முருகப்பர் என்பவருடன் இணைந்து செட்டிநாட்டுப் பகுதியில் தமிழ்ப்பணியில் ஈடுபட்டார். 1917 செப்டம்பர் 10 ஆம் நாள் இந்து மதாபிமான சங்கத்தைத் தோற்றுவித்தார். விவேகானந்தர் படிப்பகத்தை நிறுவினர். அதன் தலைவராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்தார். இச்சங்கத்திற்கு வருகைதந்த சுப்பிரமணிய பாரதியாருடன் 1919 நவம்பர் 9 ஆம் நாள் தன் நண்பர்கள் சூழ ஒளிப்படம் எடுத்துக்கொண்டார். பாரதியார் இச்சங்கத்தைப் பற்றிஹிந்து மதாபிமான சங்கத்தார் என்னும் தலைப்பில் ஏழு விருத்தங்கள் எழுதியுள்ளார். சொ. முருகப்பா என்பவர் 1920 ஆம் ஆண்டில் தொடங்கிய தன வைசிக ஊழியன் என்னும் இதழின் ஆசிரியப் பொறுப்பை இராய. சொக்கலிங்கம் 1922 ஆம் ஆண்டில் ஏற்றுக்கொண்டார். இதழின் பெயர் ஊழியன் என மாற்றப்பட்டது. 1942 ஆம் ஆண்டு வரை இவ்விதழ் காரைக்குடியிலும் சென்னையிலும் இடம்மாறி வெளிவந்தது. காந்தியரான ராய. சொக்கலிங்கம் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டார். 1932 ஆம் ஆண்டில் சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றார். 1934 ஆம் ஆண்டில் காந்தியடிகளைத் தன்னுடைய இல்லத்திற்கு அழைத்து விருந்து படைத்தார். ராய. சொக்கலிங்கம் 28 சமய நூல்களையும் 5 கட்டுரைத் தொகுப்புகளையும் 8 கவிதைத் தொகுதிகளையும் 2 ஆய்வு நூல்களையும் எழுதியிருக்கிறார்.*

---

தமிழ்க்கடல் , சிவமணி, சிவம் பெருக்கும் சீலர் என்று போற்றப்படும் தமிழறிஞர் இராய.சொ.வின் தமிழ்ப் பணியைத் தமிழறிஞர் நன்கு அறிவர் . அவர் ஒரு கவிதைக் கடல் என்பதையும் நூறாயிரக்கணக்கான செய்யுட்களின் செல்வர் என்பதையும் அன்னார் இயற்றிய கவிதை நூல்கள் பறை சாற்றி நிற்கின்றன .

அவருடைய கவிதை நூல்களையும் அவற்றில் பெருகி நிற்கும் காந்தியச் சிந்தனைகளையும் வெளிப்படுத்தும் நோக்கில் இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது .

## இராய.சொ.வின் கவிதை நூல்கள்

காந்தி பிள்ளைத் தமிழ் , காந்தியும் வள்ளுவரும் என்ற நூல்கள் முதலாகக் காந்தியடிகள் இறந்ததன் பின்னர்ப் பாடிய காந்தி இரங்கற்பா , வாழ்த்து ஈறாக மொத்தம் 901 பாடல்களை உள்ளடக்கிய காந்திக் கவிதைகளைப் படைத்துள்ளார் இராய.சொ.

காந்தியக் கவிதை இலக்கியங்களும் பாடல் எண்ணிக்கை, அவை எழுதப்பட்ட காலம் ஆகியவற்றை உள்ளடக்கிய பட்டியல் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது . இத்தகு காந்திக் கவிதைகள் தவிர , திருத்தலப்பயணம் ( காப்பியப் பெருநூல் ) பெண்நிலைக் கண்டனச் செய்யுட்கள் , காதற் பாட்டு என்பவையும் இவரது கவிதை வார்ப்புகள் என்பது தெரிய வருகின்றது.

## இராய.சொ.வும் காந்தியடிகளும்

தெய்வீகத்தையும் தேசியத்தையும் இரு கண்களாகப் பாவித்த பசும்பொன் முத்துராமலிங்கத்தைப் போல இராய. சொ . தமிழையும் காந்தியையும் இரு கண்களெனப் போற்றியவர் என்பதை அவரது வாழ்க்கையும் படைப்புகளும் உறுதி செய்கின்றன . தேசிய விடுதலைப் போராட்டத் தீ கொழுந்து விட்டு எரிந்த காலக்கட்டத்தில் மகாத்மா

காந்தியடிகளின் தலைமையின் கீழ் இந்தியத் தேசமே ஒருங்கிணைந்து விடுதலை வேள்வித் தீயில் குதித்தது . காந்தியடிகளின் சொற்பொழிவுகளும் விடுதலை அவர் செய்த செயல்பாடுகளும் மட்டுமன்றி அவரது தூய , எளிய வாழ்க்கையே சிறந்த பாடமாக அமைந்து , இளைஞர்கள் அவர் பின்னே அணி அணியாக வருமாறு ஈர்த்தது . காந்தியின் அக்காந்த சக்திக்குக் கட்டுப்பட்டுத் தம்மை முற்றிலும் அர்ப்பணித்தவராக ஆனார் இராய.சொ. காந்தியின் மீதும் அவருடைய கொள்கைகளின் மீதும் தாம் கொண்ட ஈடுபாட்டைக் கவிதைகளில் பதிய வைத்ததன் மூலம் தமிழுள்ளளவும் காந்தியின் புகழை நிலைநிறுத்தும் பெருந்தொண்டையும் செய்து விட்டார் .

“காந்தியடிகளை ஒத்தவர் உலகில் எவரும் இலர் என்பது என் கருத்து . காந்தியடிகள் வாழ்ந்த காலத்தில் இருந்தமைக்காக நான் பெருமைப்படுபவன் . அப்பெரியார் என் குடிலுக்கு எழுந்தருளினார்

என்பதில் , கண்ணபிரானை வரவேற்ற விதுரனைப்போல் பெரு மகிழ்வு பூத்தவன் நான் ” ( காந்திக் கவிதைகள் , நன்றியுரை ) என்று இராய.சொ. காந்தியடிகளைப் பற்றிக் கூறியுள்ள கருத்துகள் காணத்தக்கன.

## இராய.சொ.வின் காந்தியக் கவிதைகள்

இராய.சொ., காந்தியடிகள் தொடங்கிய சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்து கொண்டு 1932 இல் சிறை சென்றார் . ஓராண்டுச் சிறைத் தண்டனை பெற்ற அவர் ஆறு மாதங்களில் வெளி வந்து விட்டார் . சிறையிலிருந்த ஆறுமாத காலத்தில் காந்தியுடன் தொடர்புடைய பகுதிகள் 30 பாடல் தொகை 659 கொண்ட கவிதைகளைப் பாடினார் .

1932 இல் சிறை சென்ற இராய.சொ. 1932 நவம்பர் இறுதியில் வெளிவந்திருக்கிறார் . 1932 மே ஐந்தாம் நாள் ‘தாலாட்டுப் பாடி , அதைத்தொடர்ந்து பல பகுதிகள் பாடி இறுதியில் சிறையில் 1932 நவம்பர் எட்டாம் நாள் தீண்டாமை என்ற பதிகம் பாடினார். காந்தியடிகளுடன் தொடர்பில்லாத வேறு பாடல்களும் சிறையிருந்தபோது பாடினார் என்றும் தெரிகிறது . சிறையிலிருந்து வெளிவந்தபின்னர் 6 பகுதிகள் 35 பாடல்கள் கொண்ட காந்திக் கவிதைகளையும் பாடினார். 1948இல் காந்தியடிகள் மறைந்த பிறகு காந்தியும் வள்ளுவரும் என்ற காந்தி தொடர்புடைய நூலையும் பாடியுள்ளார் . சிறை செல்வதற்கு முன்னர் இரத்தாட்சி ஆண்டு ஆடித் திங்களில் அதாவது 1924 ஆம் ஆண்டு இயற்கை வளம் மல்கிய திருக்குற்றாலத் தலத்திலிருந்து காந்தி பிள்ளைத் தமிழ் பாடினார் எனத் தெரிகிறது . சிறையிலிருந்த ஆறுமாத காலத்தில்தான் காந்தியைப் பற்றிய மிகுதியான பாடல்களைப் பாடியுள்ளார். எனவேதான் சிறையிலிருந்த காலத்தையும் போற்றித் துதித்தார் இராய.சொ. வேலூர்ச் சிறையை வேலூர் அரண்மனை என்று குறிப்பிட்டிருப்பதும் ( காந்தி திருத்தசாங்கம் - பாயிரம் ),

" நான் சிறையிருந்த ஓராண்டில் இப்பாடல்களை நல்கிய ஆறு திங்கள்கட்கு வணக்கம் செலுத்துகின்றேன் . இந்த அரிய வாய்ப்பு சிறையிராவிட்டால் கூடுவது அருமை " என்றும் உள்ள அவரது கூற்றுகள் நோக்கத்தக்கன. இராசேந்திரர் , சுபாஷ் சந்தரர் பற்றிய பாடல்களை அவர் பாடியிருப்பினும் அவையும் காந்தி தொடர்புடையனவாக உள்ளமையை அறிகிறோம் . இராய.சொ.வின் கவிதைத் திறன் காந்தித்திறன் போற்றுபவையாகவே அமைந்துள்ளமை கண்கூடு.

இராய.சொ.வின் காந்திக் கவிதைகள் அனைத்தும் தொகுக்கப்பட்டுக் காந்திக்கவிதை என்ற ஒரு நூலாக அழகப்பா கல்லூரி வெளியீடாக 1969 இல் வெளியிடப்பட்டுள்ளது . மொத்தம் 901 பாடல்கள் கொண்டதாக இந்நூல் அமைந்துள்ளது . இந்நூலில் இடம் பெற்றுள்ள எந்நாட் கண்ணி , பேரிகை , விடுதலை, இந்தியா , காதல் மறுமணம் , கிளி விடு தூது , கோயில் திறவு , வீரநாடு போன்ற பாடல்களுடன் தமிழ்மொழி (13 கண்ணிகள்) சாதி (33 அகவல்கள் ) என்ற தலைப்பில் அமைந்தவற்றையும் உள்ளடக்கிப் புதுமைப்பாக்கள் எனத் தனி நூலும் அச்சிடப்பட்டு (பவ ஆண்டு மாசித் திங்கள் 24ஆம் நாள் ) வெளிவந்துள்ளது .

காந்திக் கவிதை நூலிலுள்ள காந்தி பிள்ளைத்தமிழும் தனி நூலாகக் காணக் கிடைக்கின்றது . (தனவைசிய ஊழியன் அச்சுக்கூடம் , காரைக்குடி இரத்தாட்சி).

காந்தியின் மீது பாடப்பட்ட இருபாக்களான காந்தி கலித்துறை அந்தாதி , காந்தி நான்மணிமாலை ஆகியனவும் காந்தி இருபா என்ற தனி நூலாக விலை அணா 3 க்கு வெளியிடப் பட்டுள்ளது . சிறையிலிருந்தபோது பாடிய பாக்களைச் 'சிறைப்பாக்கள் ' என்றே குறிப்பிடுகிறார் . இராய.சொ. ( காந்தி கிருபா , முன்னுரை)

இனி , காந்தி பற்றிய நூல்களான காந்தி பிள்ளைத்தமிழ் காந்தியும் வள்ளுவரும் , காந்தி அந்தாதி , காந்தி நான்மணிமாலை போன்றவற்றையும் பிற பாடல்களையும் , புதுமைப்பாக்கள் என்று அவரால் குறிப்பிடப்பெறும் எந்நாட்கண்ணி முதலாக வீரநாடு ஈறாக உள்ள பாடல்களையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றின் மூலம் வெளிப்படுத்தப் பட்டிருக்கும் காந்தியச் சிந்தனைகளைக் காணலாம் .

### காந்தி பிள்ளைத்தமிழ்

காந்தியடிகள் மீது பிள்ளைத் தமிழ் பாடியதற்குக் காரணமாக இராய.சொ. நூல் முகவுரையில் , "கவிகளுளெல்லாம் பாடுதற்கு மிக இனிமை தருவது பிள்ளைக்கவி என்பது அனுபவத்திற் கண்ட உண்மை . அதனாலேயே எளியேனை ஆட்கொண்ட எம்பெருமான் காந்தியடிகளார்க்கு ஏழை பிறந்த தமிழ் மொழியில் ஒரு பிரபந்தம் ஆக்க வேண்டுமென்ற நசையெழ , அது பிள்ளைக் கவியாகவே பிறங்க வேண்டுமென்ற முடிவிற்கு வந்தேன் . அன்றியும் , சிறியேன் ஒரு புலவனல்லேன் ; பிள்ளைத் தன்மையுடையவனேயாதலின் , பிள்ளைக்கவி பாடுதலே எற்குப் பொருத்தமுடைத்து . யான் இக்கவி பாட முந்தியமைக்குக் காரணம் காந்தியடிகள் மீது கொண்ட காதலே " எனக் குறிப்பிட்டுள்ளார் .

பெரியார்கள் மீது பாடப்பெற்ற பிற பிள்ளைத்தமிழ் நூல்கள் எல்லாம் அன்னாரின் மறைவிற்குப் பின் பாடப் பெற்றவையே. ஆனால் காந்தி பிள்ளைத்தமிழ் என்ற இந்நூல் அவர் உயிருடன் உலவிய காலத்திலேயே ( 1924) பாடப்பெற்ற தனிச்சிறப்பைக் கொண்டதென்பது குறிப்பிட்டுக் கூறத்தக்கதாகும்.

தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகிய பிள்ளைத்தமிழ் நூல்கள் போன்றே காப்பு முதல் சிறு தேர்ப்பருவம் வரையிலான 10 பருவங்களைப் பத்துப்பத்துப் பாடல்களில் 100 பாடல்களாக இப்பிள்ளைத்தமிழை அமைத்துள்ளார்.

பிற பிள்ளைத்தமிழ் நூல்களில் காப்புப்பருவப் பாடல்கள் இறைவனைக் காப்பாகக் கொண்டு அமைந்திருக்கக் காந்தி பிள்ளைத் தமிழில் காந்தியின் குணநலன்களையே காப்பாகக் கொண்டு பாடப்பட்டுள்ள புதுமையைக் காண்கிறோம். திருவள்ளுவர் தாம் யாத்த திருக்குறளில் இறைவனின் பெயரைக் கூறாது , இறையின் குணநலன்களையே போற்றிக் கடவுள் வாழ்த்து அமைத்துள்ள முறை போன்றே இராய.சொ.வும் இந்நூலில் அமைத்துள்ள சீர்மையைக் காண்கிறோம்.அனைவரும் விளங்கிக் கொள்ளும்படியான எளிய சொற்களைக் கையாண்டு இப்பிள்ளைத்தமிழைப் பாடியுள்ளார் .

“இதனால் பெரும்புலவோர் சாதாரணமாக எண்ணித் தள்ளி விடாது அடிகளை எண்ணி ஏற்பாராக " ( முகவுரை) என்று வேண்டுகோள் விடுத்துள்ளார் .

நூலில் காந்தியின் பிறப்பிடச் சிறப்பு , பெற்றோர் , அயல்நாட்டுப் பயணம் , விடுதலை வேட்கை கொண்ட செயல்பாடுகள் , கொள்கைகள் , கதர், ராட்டை பற்றிய கருத்துகள் , வெள்ளையர் வெறுப்பு ஆகிய அனைத்தும் ஆங்காங்கே அள்ளித் தெளிக்கப் பெற்றுள்ளன. மத்தெறிந்த தயிர் போல ( காப்புப் பருவம் - 7 ) என்பன போன்ற எளிய உவமைகளும் சாந்தம் எனும் பெருங்கடல் சத்தியமெனும் தூண் (வருகைப்பருவம் - 8 ) என்பன போன்ற உருவகங்களும் அமைந்து கவிக்கு நயம் பயக்கின்றன.

இந்நூலில் காந்தியடிகளை வாழும் வள்ளுவராகக் கண்டுள்ளார் இராய.சொ , “தகுதியுடை நீயெங்கள் தன்மையோடு இனிமை சேரும் தெள்ளு தமிழ் வள்ளுவனார் திருவரவு " (சிறுதேர்ப் பருவம் ) என்று குறிப்பிட்டுள்ளமை காணத்தக்கது . கஸ்தூரிபா அன்னையையும் வாசுகியாகக் கொண்டு கவிதை பாடியுள்ளார் ( காப்புப்பருவம், 8) .

## காந்தியும் வள்ளுவரும்

காந்தியை எண்ணும் போதெல்லாம் வள்ளுவனார் நினைவே இராய.சொ.வின் மனத்தகத்து எழுந்ததெனத் தெரிகிறது . பொய்யில் புலவரின் அறங்கள் மெய்யே என்று இலக்கியமாக வாழ்ந்து காட்டியவர்

காந்தித்தோன்றல் என்பது அவர்தம் முடிபு . 1948இல் காந்தியடிகள் மறைந்த பிறகு யாக்கப்பட்ட இந்நூலில் 125 குறட்பாக்களை எடுத்துக் கொண்டு அவற்றைப் பிற்பகுதியாக்கி , அவற்றிற்குப் பொருத்தமான வினாவை எழுப்பி , முன்னிரண்டு அடியும் தனிச்சீரும் அமைத்து, நேரிசை வெண்பாக்களால் நூலைப் பாடியுள்ளார் . இந்நூல் முழுமையும் வள்ளுவ - காந்தி மணம் கமழ்கின்றது . திருக்குறட்கு வரலாறு காட்டும் சோமேசர் முதுமொழி வெண்பா போன்ற நூல்கள் ஒவ்வொரு குறளுக்கும் பலருடைய வாழ்க்கைச் செயல்களை இலக்கியமாகக் காட்டியுள்ளன . ஆனால் காந்தியும் வள்ளுவரும் என்ற இந்நூலிலோ எல்லாக் குறட்பாக்களும் காந்தி ஒருவரின் வாழ்க்கை வரலாற்றையே காட்டாக்கியுள்ளன. ‘தமிழிலக்கிய வரலாற்றில் இது ஒரு புது முறை என்று பாராட்டியுள்ளார் வ.சுப . மாணிக்கம் ( காந்திக் கவிதை, பதிப்புரையும் மதிப்புரையும், பக் . 13 ), செய்யுள் யாத்த இராய.சொ.

வேண்டிய விளக்கத்தை உரைநடையில் எழுதி உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக நூலை அமைத்துள்ளார்.

வெண்பாவாலும் விளக்கத்தாலும் திருக்குறளுக்குச் சில புதிய கருத்துகளை அறிந்து கொள்ள முடிகின்றது (ப.58). நூலின் அமைப்பு முறைக்கு ஒரு பாடற் (6) சான்று. "காந்தி பிறந்தது வைசியர் என்று கூறப்படும் வகுப்பில். ஆனால் காந்தியை வைசியன் என்று சொல்லலாமா? வணிகர் தொழிலுக்கும் காந்திக்கும் என்ன சம்பந்தம்? அவன் செய்ததெல்லாம் பிராமணர்க்குரிய செய்கைகள்." எனப்பாடல் தொடக்கத்தில் ஒரு விளக்கத்தை அமைத்துள்ளார். அடுத்துப் பாடல் அமைந்துள்ளது.

வணிகர் மரபிலே வந்துதித்த காந்தி
அணிமறையோன் என்றுரைத்தல் ஆமோ? - துணிவு அதுவே
அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்
என்ற பாடலை அடுத்து, "வணிகர் குலத்திலே தோன்றிய காந்தியை

மறையவன் என வழுத்துதல் பொருந்துமா வள்ளுவரே?" என வள்ளுவரை நோக்கி வினா எழுப்புவதான அமைப்பு உள்ளது.

அடுத்து வள்ளுவர் விடை கூறுவதாக, " ஓ சந்தேகம் என்ன? அதுதான் முடிவு. எல்லா உயிர்களையும் ஒன்றாகப் பார்க்கும் கருணையறம் காப்பவனே அந்தணன். காந்தியைத்தவிர வேறு யாரைத்தான் அந்தணன் என்று. சொல்வது?" என வள்ளுவர் விளக்கம் கூறுவதாக உள்ள அமைப்பை இறுதியில் காணலாம். இத்தகு அமைப்பு முறையிலேயே ஒவ்வொரு பாடலையும் அமைத்துப் பாடியுள்ளார்.

இந்நூலைப் பொறுத்தவரை, இந்நூலுள் பயன்படுத்தியுள்ள 125 குறட்பாக்களையும் எந்த அடிப்படையில் தெரிவு செய்து கொண்டார்? காந்தியின் பண்பு நலன்கள், கொள்கைககளுக்குத் தக்கனவாகவா? அல்லது வேறு அடிப்படை ஏதும் உண்டா? 125 என்று எண்ணிக்கை வரையறை செய்து கொண்டது ஏன்? என்பன நூலைக் கற்கும் ஆய்வாளர்கள் முன் நிற்கும் வினாக்களாகும்.

## காந்தி அந்தாதி, காந்தி நான்மணி மாலை

சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும் என்று வினவுவார் வள்ளுவர். அதற்குச் சிறைக்காப்பு தமிழ் செய்யும் என்று இராய.சொவை மனத்துட் கொண்டு விடை இறுக்கலாம். எனக்கு அரசாங்கம் கருணை கூர்ந்து அளித்த அமைதி வாழ்க்கையில் வேலூர் சிறையில் செய்த பாக்கள் காந்தி கலித்துறை அந்தாதி, காந்தி நான்மணிமாலை என்பன (காந்தி இருபா, முன்னுரை) எனக் குறிப்பிட்டுள்ளார் இராய.சொ.

பண்டை மரபுப்படி அந்தாதியை 100 பாடல்களிலும் நான்மணிமாலையை 40 பாடல்களிலும் அமைத்துள்ளார். முன்னது முற்றும் கட்டளைக் கலித்துறையால் ஆகியது. பின்னது வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் என்ற நான்மணி யாப்பினது. கலித்துறை அந்தாதி பற்றிக் குறிப்பிடும் போது,

"பாக்களுள் கட்டளைக் கலித்துறை பாடுவது கொஞ்சம் கடினம். அதற்கு யாப்பிலக்கணப்படி கணக்குகள் நிறைய உண்டு .அது காரணமாக எளிய சொற்களிலேயே ஆக்க எவ்வளவோ முயன்றுங் கூடக் கொஞ்சம் அருஞ்சொற்களும் ஆங்காங்கு விழுந்திருக்கலாம். அதற்கு மன்னித்தல் புதுமைத் தமிழர் கடன்" எனக்

கூறியுள்ளார் . அந்தாதியுள் உள்ள பிறர் கூற்றாகப் பாடும் துறைப்பாக்கள் பழைய துறைகளைப் புதுப்பித்தும் , புதிய துறைகளைப் படைத்தும் உள்ளனவாகக் காணப்படுகின்றன.

காந்தி அந்தாதி இலக்கியப் புரட்சி செய்வதாக அமைந்துள்ளது . காந்தியும் வள்ளுவரும் என்ற நூல் போன்று உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக அமைந்துள்ளது இந்நூல். அகப்பொருளில் பிரிவு பல கூறுதல் உண்டு. அப்பிரிவுகளினும் வேறாகத் தாய்நாட்டுக் கடமைக்குப் பிரிகிறான் காந்தியந்தாதித் தலைவன். தலைவியைத் தலைவன் பிரிவான் என்று பாடுவதே அகமரபு . ஈண்டோ நாட்டுப்பற்றுக் காரணமாகத் தலைவனைத் தலைவி பிரிந்து சிறை புகுகின்றாள் . இருவருமே வீட்டை விட்டுத் தனித்தனிச் சிறையில் வாழ்கின்றனர் . ஒரு சிறையிலிருந்து மறு சிறைக்கு வண்டைத் தூது விடுகின்றனர். இவ்வாறு துறைகள் புதியதாக ஆகும் போது துறை விளக்கங்களும் புதியனவாக அமைந்துள்ளன . காந்தியந்தாதித் தலைவி காதலுக்கும் ஒரு விதி போடுகின்றாள் . தன்னை விழையும் தலைவனை நோக்கி , என்னை மணஞ்செய்து கொள்ள விரும்புவையேல் காந்தியின் அறத்தை உலகறியச் செயலால் பரப்புவேன் , பரவ ஒத்துழைப்பேன் என்று காந்தி மேல் ஆணையிடுவாய் ; இடுவையேல் உனைநான் மன்றல் புரிவேன் , என்னை விரும்பின் இது தவிர உனக்கு வேறு வழியில்லை என்று காதல் விதி பகர்கின்றாள் . இதனால் மணக்காதலினும் காந்திக்காதல் பெரிதென உணர்த்தப்பட்டுள்ளமை தெரிகின்றது.

மெய்நொந்து உனைப்பெற்று யான் பெற்ற இன்பமிம் மேதினியில்
அய்யா பெரிதே எனினும் அருந்தவக் காந்தி களத்து
எய்யாது உழைத்தின்று இனிய பெருநலம் எய்தலின்றித்
துய்யாய் சிலநாள் வறிதே கழித்திடத் தோன்றினையே

என உன்னைப் பெறக் கழித்த நாட்களில் காந்தி வழிப்படி நாட்டுத்தொண்டு செய்ய முடியாமற் போயிற்றே என்று வருந்துகின்றாள் தாய்.மகவின்பத்தினும் நாட்டுக் கடமை பெரிது எனவும் நாட்டுக்கடமை வீழ்நாள் படாமல் நாள்தோறும் செய்ய வேண்டும் எனவும் இதன் மூலம் உணர்த்தப்பட்டுள்ளது . இது ஒரு புதுத்துறையாகும் .

தலைவன் போர்க்களம் செல்வான் என்று கூறுதல் மரபாகும் .

அப்போர்க்களம் குருதிப் படைப்போர்க்களம் ஆகும் . காந்திப் போர்க்களமோ உறுதியுடையதேயன்றிக் குருதியுடையது அன்று .

" மக்களைச் சேர்த்து ஒரு மாபெரும் போர் முந்தையர் காணாமுறை வகுத்திட்டவன் " ( 24 ) என்று பாடுகின்றார் . இது பகைவர்க்கும் இனிய போராதலின் பெண்ணும் தனித்து அமர்க்களம் புகுகின்றாள் . " வேந்தர் விறலும் மதியா வெறுங்கை அமர்க்களத்தே சேர்ந்தனளே" (39)

என்பது நற்றாய் இரக்கம். கன்னி காதல் களம் புகாது காந்திக் களம் புகுவதாகப் படைத்துள்ளார் . இதுவும் ஒரு புதுத்துறையேயாகும் .

இப்புதுமைத் துறைகள் பொருந்துமா முரண்பட்டதாகாதா என்ற வினா எழுகின்றது . ஆனால் அன்பின் அடிப்படையிலும் அறத்தின் அடிப்படையிலும் வழக்கு வழிப்பட்ட துறைகள் இலக்கிய முறைகள் ஆகும் எனக் கொண்டு தொல்காப்பியர் முறைப்படி இத்தகு துறை அமைப்புகள் மரபு நிலை திரியா மாட்சியனவே என அமைதி காணலாம் .

சைவப் பாசுரங்களில் திருநீறு நல்லிடம் பெறுதல் போலக் காந்திக் கவிதைகளில் கதர் நல்லிடம் பெறுகிறது. இந்தக் காந்தி அந்தாதியில் " கதர் உடுத்தியே கைராட்டு உருட்டும் நற்காரிகையையும் (13 ) நண்ணும் முரட்டுக்கதர் சுமந்து வாடிய சிற்றிடையையும் ( 8) இராய சொ. காட்டியுள்ளார். " நாணிக்கண் புதைத்தல் என்ற துறையில் வரும் ஒரு செய்யுள்,

பயிலின் மொழியே விழிதிற வாயெனில் பாவியெதும்
அயிலேன் இதுமெய் அருங்காந்தி ஆணை அறிகுவையே (133 )

என அமைந்துள்ளது. நாணத்தால் கண்பொத்திக் கொண்ட காதலியை நோக்கிக் காதலன் நீ எனைப் பார்க்கக் கண் திறவாவிட்டால் பட்டினி கிடப்பேன். காந்தி மேல் ஆணை என்கிறான். இப்பாவில் காந்தி வைப்புப் பொருளாக இடம் பெறுகிறார்.

நான்மணிமாலையுள் நேர்முகமாகப் பாடப்பெற்றுக் காந்தி
பாடற்பொருளாக விளங்குகிறார். பாடற்சான்று:
மன்னிய பாரத மணித்திரு நாட்டில்
துன்னிய தீண்டாத் துயரை அகற்றத்
தன்னுயிர் தரவும் சமைந்த காந்தி
உன்னெண்ணம் முடிய! நீஊழிநாள் வாழ்கவே (8)

நான்மணிமாலையைப் பற்றிக் குறிப்பிடும் போது " நான்கு மணிகளால் தொடுக்கப்பட்ட இம்மாலையைக் காந்தியடிகட்கு அணிவிக்கிறேன். இவன் காந்திக் கிறுக்கன் என நினைப்போர் நினைக்க . இந்த உலகத்தில் பாமாலை சூட்டத் தகுதியுள்ளார் ஒருவர் உண்டு என்றால் அவர் காந்தியடிகளே என்பது என் கருத்து " ( காந்தி இருபா, முன்னுரை ) என ஆணித்தரமாக அறைந்துள்ளார்.

அந்தாதி , தமிழர் உள்ளத்தை இன்பக் கடலாட்ட வேண்டும் என்றும் , நான்மணிமாலை தமிழர் நாவில் அணி செய்யப்பெறல் வேண்டும் என்றும் அவாவியுள்ளார் ( மேற்படி ).

## காந்தி பெயரில் அமைந்த பிற கவிதை அமைப்புகள்

காந்தி திருப்பள்ளியெழுச்சி, காந்தி திருத்தசாங்கம், காந்தி திருப்பொன்னூசல், காந்தி திருப்பல்லாண்டு, காந்தி திருநாமம் கேட்டல், காந்தி புகழ்பாடுமின், காந்தி சொற்பெருமை, காந்தி திருப்புகழ், காந்தி இரங்கற்பா என்ற கவிதை அமைப்புகள் ஆகியவற்றைக் காந்தி பெயரில் அமைந்த பிற கவிதைகள் என்ற வரிசையில் அடக்கலாம். இவற்றுள் முதல் ஏழு நூல்கள் ஆறுமாதச் சிறையிருந்த காலத்து, 30-6-1932 தொடங்கி 26-8-1932 வரையிலான இரு மாத காலத்தில் ( 58 நாட்கள் ) பாடப்பட்டுள்ளமை தெரிகிறது . காந்தித்திருப்புகழ் 14-10-1932இலும் காந்தி இரங்கற்பா காந்தி இறந்ததன் பின்னர் 30-1-1948இலும் பாடப்பட்டுள்ளன.

இராய.சொ.வின் காந்திக் கவிதைகள் தெய்வப் பாசுரமாகத் திகழ்கின்றன. காந்திப் பெருமானைத் தம் தெய்வமாகவும் தம்மைக் காந்தியடியானாகவும் வைத்து வழிபட்டுள்ளார். காந்திக்கும் இராய.சொ.வுக்கும் இருந்த உறவு ஆண்டான் - அடிமை உறவு என்பதை அவரது காந்திக் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன. ஞாலத்தார் வழிபட்டு வரும் பல்வேறு கடவுளர்களும் சிந்தனைப் பெரியவர்களும் திரண்டு ஓருருக்கொண்ட தனி முழுத் தெய்வமாகக் காந்தியைக் கண்டார்

இராய.சொ. காந்திப் பெருமான் (காந்தியும் வள்ளுவரும், 2) காந்திப் பரந்தாமன் ( மேற்படி , 61 ) காந்தி பதமலர் ( காந்தி திருப்பொன்னூசல் , 5) என உள்ள தெய்வத் தொடர்கள் காந்தியை இராய.சொ. எவ்வாறு கருதினார் என்பதற்குத் தக்க சான்றுகளாக அமைந்துள்ளன.

தெய்வக் காந்தியைத் தொழும் இராய.சொ. இடத்து நாயன்மார் , ஆழ்வார் ஒப்ப அடியவர் மனப்பான்மையைக் காண்கிறோம்.

தெய்வப்பாசுரம் பாடிப்பாடிப் பாசுர இலக்கியத்தின் எல்லை கண்டது தமிழ் ஆதலின், தெய்வ வடிவாகக் காந்தியைக் கண்டு பாடலியற்றும் இராய.சொ.வின் பாடல்கள், பழம் பாசுர அமைப்பின் படிவமாகவே அமைந்து விட்டன எனலாம்.

தான் கண்ட புதிய காந்திக் கடவுளைத் திருப்பள்ளியெழுச்சி திருப்பொன்னூசல், திருத்தசாங்கம், திருப்பல்லாண்டு, திருப்புகழ் என்றின்ன தலைப்புகளில் நெக்குருகிப் போற்றியுள்ளார்.

ஈசன் இருங்காந்தி எம்மான் புகழ்பாடிப்
பூசல் புரிகண்ணீர் ! பொன்னூசல் ஆடாமோ! (5)
எங்கள் தவக்கொழுந்தின் இணையில் புகழ்பாடிப்
புங்கம் பெறவிழைந்து பொன்னூசல் ஆடாமோ (4)
என்று திருவாசகத் தடத்தில் நின்று பாடிப்பரவியுள்ளார்.
பாரதர் முடிமணிக் காந்தி அடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே (3)
பங்கம் இல்குணக் காந்தி அடிகட்குப்
பல்லாண்டு கூறுதுமே (5)

என்று சேந்தனார் , பெரியாழ்வார்தம் திருப்பல்லாண்டுச் சாயலில் பாடிப் போற்றியுள்ளார் . தடம் பழமை என்றாலும் இக்கவிதைகளின் உணர்ச்சிகளும் கொள்கைகளும் புதுவேகம் உடையனவாக திகழ்கின்றன.

தலைவனின் பத்து அங்கங்களான நாமம் , நாடு , நகர் , நதி ,மலை, ஊர்தி, படை , முரசு, தார் , கொடி என்பனவற்றைப் பேசும் திருத்தசாங்கத்தில் காந்தியின் ஊராக,

யாதுமவன் தன்ஊரே! யாவரும் அவற்கு உறவு என்று
ஏதம் ஒன்றும் இன்றி இயம்பு (3)

என்றும் ஊர்தி பற்றிக்கூறும் பொழுது,

பூண்ட நலஞ்சேர் புகழார் பெருங்குணத்தில்
மாண்டார் மனமென்று உரை (6)

என்றும் கூறியுள்ள நயம் பாராட்டத்தக்கதாக உள்ளது.

காந்தி இரங்கற்பாவில் அமைந்துள்ள 7 பாடல்களும் கற்பாரின் உள்ளத்தைக் கசிந்துருகச் செய்வனவாய் உள்ளன.

பொய்தீர்ந்த பொன்மேனி குடியிருந்த
புண்ணியமும் பொறையும் அன்பும்
மெய்யோடு வெந்தனவே ! (2)

எனப் புலம்பியுள்ளார்.

மாண்டு அமைதி நீஉற்றாய், நாங்கள் ஒன்றும்
தோன்றாதே மயங்கு கின்றோம் (4)

என மயங்கியுள்ளார்.

அன்புதவழ் முகம் எங்கே ? அருள்சுரக்கும்
விழி எங்கே ? அமுதம் ஊறி
இன்பு ஒழுகும் திருவாயில் இனிக்கின்ற
பேச்செல்லாம் எங்கே ? எங்கே ? (S)
பொன்புரையும் திருமேனிப் பொலிவு எங்கே ?
மோகனப்புன் சிரிப்பும் எங்கே ?
என்பு உருக்கும் திறம் எங்கே ? எழில் உருக்கும்
பெரும்காந்தி எங்கே ? அந்தோ !

என அமைந்துள்ள பாடல்கள் நந்திக்கலம்பகத்தை நினைவூட்டுவதாக உள்ளன.

## காந்தி தொடர்புடைய பிற கவிதைகள்

காந்தி தொடர்புடைய பிற கவிதைகளாக அங்கங்களின் பயன், ஆடாமோ ஊசல், தோழிப்பேச்சு, ஏர்வாடாக்கோயில், சபர்மதி, கடவுளை வேண்டல், உண்ணா விரத முடிவு, சிறை வாழ்வு, திருப்பணி, தீண்டாமை, தாலாட்டு, கும்மி, விடுதலைப் பாடல், நாம் ஆர்க்கும் குடியல்லோம், அன்புச் செல்வம் ஆகிய 15 கவிதைகளைக் கூறலாம்.

அங்கங்களின் பயன் என்பதில் காந்தியை வழுத்துவதற்காகவே. அங்கங்கள் படைக்கப்பட்டுள்ளன என்ற கருத்தமைந்த 10 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

தலை, கண், செவி, மூக்கு, நாக்கு, வாய், கை, மெய், உள்ளம், அறிவு என்ற பத்து அங்கங்களும் காந்தியைப் போற்றுவனவாகப் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

கண்ணனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே
என்ற சிலப்பதிகாரப் பாடல் அமைவில் இப்பத்துப் பாடல்களும்
அமைந்துள்ளன.
காந்திதனைக் காணாத கண்ணென்ன கண்ணே (2)
உயர்காந்தி தனைநினையா உளமென்ன உளமே (9)

என்ற அமைப்பில் பாடல்கள் உள்ளன.

ஆடாமோ ஊசலில் உள்ள 10 பாடல்களும் காந்தியின் கழல், எழில், கதர், வளம், கரம், பெயர், திறம், அறம், செயல், சீர் ஆகியனவற்றைப் புகழ்ந்து பாடி ஊசலாடுவதாக உள்ளன.

காந்தி கழல்பாடி ஆடாமோ ஊசல் (1)
ஒண்மைக் கதர்பாடி ஆடாமோ ஊசல் (3)
பெரியோன் பெயர் பாடி ஆடாமோ ஊசல் (6)

என உள்ள பாடல் வரிகளைச் சான்றாகக் காட்டலாம்.

தோழிப்பேச்சு ஆசிரியத் தாழிசையில் வினா விடை அமைப்பில் காந்தியின் புகழ் பாடுவதாக அமைந்துள்ளது.

உறுதி கடைப்பிடித்த ஓராடை ஆண்டி
விறலா இடும்பையே மேவும் அவன் பின்னே
உறின் இவ் உலகு இன்பம் ஏதடியோ தோழி ! (4)

ஓராடை ஆண்டியையே உலகதனில் விரிந்த
பாராள்வோர் என்போரும் பரவி அவன் தன்னைத்
தீராச்சீர் செய்த கதை கேட்டிலையோ தோழி (5)
என்ற போக்கில் அனைத்துப் பாக்களும் அமைந்துள்ளன.

ஏர்வாடாக் கோவில் என்ற தலைப்பின் கீழ் அமைந்துள்ள 10 பாடல்களும் திருத்தாண்டக அமைப்பில் காந்தி சிறையிருந்த ஏர்வாடாச் சிறையைப் பற்றியனவாக உள்ளன. - காந்தி சிறையிருந்ததால் ஏர்வாடாச் சிறையும் ஏர்வாடாக் கோயிலானது. புத்திரிபாய் பெற்றெடுத்த புனிதன், ( 1), கத்தூரி மணாளன் ( 3 ) எக்குறியும் திருநெற்றி இடாதான் (5), ஏழையர் பங்காளன் (7) தென்னாப்பிரிக்காவில் உரிமைக்காகச் சிறையிருந்தான் பல்உடையும் பட்டான் (9), சத்தியமே படையாகக் கொண்டு தனிப்பெரிய போர் வகுத்த தக்கோன் ( 10 ) எனக் காந்தியைப் பற்றிய பல்வேறு செய்திகளையும் வெளிக்காட்டுவனவாகப் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சபர்மதி கவிதையில் அந்த ஆசிரமத்திலிருந்த காந்தி 10 பாடல்களில் திருத்தாண்டக அமைப்பில் புகழப்படுகிறார். ஒவ்வொரு பாடலும் " பூவில்உயர் சபர்மதி எம் புனித னார்க்கே " என முடிவுறுகின்றது. காந்தியின் திருவுருவத்தோற்றம் , புனையப்படும் ஒரு கவிதை.

சிறியதொரு கத்தர்ப்பை பக்கம் தோன்றும்
தினம்படிக்கும் ஒருகீதை அதனுள் தோன்றும்
மறையெழுதும் ஒருசிறிய குச்சி தோன்றும்
வனப்புயர்ந்த இராட்டொன்று திருமுன் தோன்றும்
கறையெதுவும் இல்லாத கத்தர் மாலைக்
கயிற்றுடன் கடிகாரம் ஒன்று தோன்றும்
பொறியடக்கி ஆண்டபெருந் தகைமை தோன்றும்
பூவிலுயர் சபர்மதியென் புனித னார்க்கே

கடவுளை வேண்டல் என்ற தலைப்பில் (9) காந்தியின் உயிர் காக்குமாறு கடவுளை வேண்டலாக அறுசீர் விருத்தத்தில் அமைந்த 10 பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாக்கள் காந்தியடிகள் தீண்டாதார் எனப்படுவோர் தனித்தொகுதிமுறை ஒழிப்பான் கருதி உண்ணாவிரதங் கொண்டு உயிர்விடவும் முன்னின்றதை முன்னிட்டுப் பாடியவை எனத் தெரிகிறது.

உண்ணாவிரத முடிவு என்பதில் உள்ள 10 பாடல்கள் காந்தியடிகள் உண்ணாவிரதத்தை வெற்றிகரமாக முடித்த பிறகு பாடப் பெற்றதென அறியப்படுகிறது . அறுசீர் விருத்தத்தில் பாடல்கள் அமைந்துள்ளன. தீண்டாதார்க்கெனப் பாடுபட்ட காந்தியடிகளின் திறன் போற்றப்பட்டுள்ளது.

கோயிலிலே நுழைஉரிமை தீண்டார்க்கு
வேண்டும் எனக் கூட்டம் கூடி

வாய் அதனால் வகுத்து உரைப்பார்! மாபெரிய
தீர்மானம் வரைவார்! ஆனால்
ஏயசெயல் ஒன்று ஆற்றார்! இடர் என்றால்
ஓடிடுவார்! ஏந்தால்! நின்போல்
நேயம் உளார்க்கு அல்லால் நின்போல்
பெறல் எளிதோ? நீள்சீர்க் காந்தி! (8)

என்ற இத்தகு போக்கில் பாடல்கள் அமைந்துள்ளன.

சிறைவாழ்வு என்ற தலைப்பின் கீழ் எண்சீர் விருத்தத்தில் அமைந்த 10 பாடல்கள் உள்ளன. இந்தியத் தாயின் துயர் துடைக்கத் தலைமை பூண்டு அறப்போர் நிகழ்த்தும் காந்தியின் செயல்கள் பேசப்பட்டுள்ளன. அறப்போரில் ஈடுபட்டுச் சிறையிலுள்ள பாரதப் புதல்வர்களைப் பற்றிக் கூறுவதாகப் பாடல்கள் உள்ளன.

நீதலைமை பூண்டு போர் நிகழ்த்தாய் என்னில்
கறை உடையார் தமக்காகக் காணப் பட்ட
காவல் அமை வறட்டுமலை சூழ்ந்த வேலூர்ச்
சிறையதனில் சிற்றறையில் இருந்து, ராய.
சொக்கலிங்கன் இப்பதிகம் சொல்லல் உண்டோ! (10)

எனக் கேட்டுள்ளார்.

திருப்பணியில் அமைந்துள்ள 10 பாடல்களும் காவடிச்சிந்து நடையில் காந்தியின் விடுதலைப் போரையே திருப்பணியாகக் குறிப்பிட்டுப் பாடப்பட்டுள்ளமை புலனாகின்றது. காந்தியின் செயல்களும் பண்புகளும் கொள்கைகளும் போற்றப்பட்டுள்ளன.

தீண்டாமை என்ற தலைப்பில் கண்ணியில் 10 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் தீண்டாமைப் பேயை ஒழிக்கப் பாடுபட்ட காந்தியின் முயற்சிகள் பாராட்டிப் போற்றப்பட்டுள்ளன.

தாலாட்டு, பெண்பால் (50) ஆண்பால் (50) என்ற இரு அமைப்புகளில் பாடப்பட்டுள்ளது.

காந்தி அறமதனைக் காசினிஎ லாம்பரப்பப்
போந்த இளங்கொடியே! பொன்னே! நீ கண்வளராய்! (8)

எனப் பெண்பால் தாலாட்டு அமைந்துள்ளது. பெண் குழந்தையை ஔவையார், பாஞ்சாலி, சீதை, மணிமேகலை என்று போற்றிப் புகழ்ந்து தாலாட்டு அமைந்துள்ளது. ஆண்பாற் தாலாட்டு காந்தியக் கொள்கை பரப்ப உள்ள ஆண் குழந்தையைத் தாலாட்டும் போக்கில் அமைக்கப்பட்டுள்ளது.

கருணை உருவெடுத்த காந்தி அறம் போற்றி உயர்
பெருமை யொடுவிளங்கப் பெரியோனே! கண்வளராய்! (17)

உலகில் பெரியராம் ஒப்பிலாக் காந்தி மகான்
அலகில் புகழ்பரப்ப அண்ணலே கண்வளராய்! (19)

என உள்ள பாடல் அமைப்புகள் காணத்தக்கன.

கும்மியின் 50 பாடல்களில் பெண்கள் காந்தியை வாயார வாழ்த்திக் கும்மியடிப்பதாக அமைக்கப்பட்டுள்ளது . பெண்ணடிமையினின்று விடுபட்ட பாரதியின் புதுமைப் பெண்கள் பெண்ணின் அருமை, பெருமைகளைப் பறை சாற்றிக் கும்மியடிப்பதாகப் பாடல்கள் உள்ளன.

காந்தி அறம்தரை எங்கும் வளர்ந்திடக்
கைகொட்டிக் கும்மியடியுங்கடி! (3)

என்று கும்மியடிக்கின்றனர் . அற்புதத் திருவந்தாதி அறைந்த காரைக்காலம்மையாரும் பெண் அலரோ ( 15 ) என்றும் அருமைத் தமிழில் அறம் உரைத்த ஔவைப் பிராட்டியும் பெண் அலரோ ! 16 ) என்றும் பெண்மையின் பீடும் பெருமையும் பேசிக் கும்மியடிப்பதாகப் பாடல்கள் உள்ளன.

விடுதலைப்பாடல் அறுசீர் விருத்தம் , கண்ணியில் 12 பாக்களாக விடுதலை பெற்ற 15-8-1947 அன்று பாடப்பெற்றுள்ளது . காந்தியுடன் தாதாபாய் நௌரோசி , திலகர், லாலா லசபதிராய், வ.உ.சி, சுப்பிரமணிய சிவா, பாரதி போன்ற விடுதலைப் போராட்ட வீரர்களின் பங்களிப்பு பாடல்களில் நினைவுகூரப்பட்டுள்ளது .

வீர சுதந்திரம் வேண்டி நின் றோம் அதை
வீறுடன் இன்றுபெற் றோம் - நல்ல
ஆரமுது உண்ணுதற்கு ஆசைகொண் டோம், அதை
அள்ளியே பருகுகின் றோம் (3)

என மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்துள்ளார் தமிழ்க்கடல்.

நாம் ஆர்க்கும் குடியல்லோம் என்ற தலைப்பில் அமைந்துள்ள 7 பாடல்கள் 15-8-1949 அன்று இரண்டாம் ஆண்டு விடுதலை நாளில் பாடப்பட்டுள்ளன. பாரத அன்னையின் கட்டுகளை முறித்த காந்தியும் பாரத அன்னை அரசிருந்த அப்புனித நாளும் போற்றிப் பாடப்பட்டுள்ளன.

அன்புச்செல்வம் என்ற 80 வரிகள் கொண்ட கவிதையில் அன்பு எனும் கோல் கொண்டு அவனியை ஆண்ட காந்தியின் அன்புக் கொள்கை போற்றப்பட்டுள்ளது . அன்பின் மேன்மை கவிதை முழுவதையும் கவின்பெறச் செய்வதாக அமைந்துள்ளது.

## பிற தலைவர் குறித்த பாடல்களில் காந்தி

இராசேந்திர பிரசாத், சுபாஷ்சந்திரபோஸ் ஆகியவர்கள் குறித்த இரு கவிதைகள் இராய.சொ. அவர்களால் பாடப்பட்டுள்ளன. இராசேந்திர பிரசாத் பற்றிய அகவற்பாவில் அமைந்த கவிதை காரைக்குடிச் செட்டியார் நல உரிமைச் சங்கம் அன்னாருக்கு அளித்த வரவேற்புரையில் இராய.சொ. பாடியதாகத் தெரிகிறது . காங்கிரஸ்

இயக்கத் தலைவரான காந்தியின் தலைமையின் கீழ்ச்செயல்பட்டு வந்த இராசேந்திர பிரசாத் பற்றி இராஜன்பாபு - வரவேற்புரை என்ற தலைப்பில் இராய.சொ. கவிதை பாடியுள்ளார் . இக்கவிதையுள் பாரதத்தாயின் மணிமுடியை அணி செய்யும் முதல் வரிசையுள் உள்ள நன்மணியாம் காந்தியின் பக்கலில் உள்ள வயிரமா மணியாக இராசேந்திரபிரசாத் கருதப்பட்டுப் புகழப்பட்டுள்ளமை தெரிகிறது . இவ்வகையில் இக்கவிதையும் காந்தியின் புகழ் பேசுவதாக அமைந்து காந்திக் கவிதை ஆகியுள்ளது.

படிதனில் உயர்ந்த பாரதத் தாயின்
முடிஉறை மணிகளுள் முதலமை வரிசையுள்
நடுஉயர் காந்தி நன்மணிப் பாங்கர்
வடுவிலாது ஒளிரும் வயிரமா மணியே!

என்று இராசேந்திர பிரசாத் போற்றி வரவேற்கப்பட்டுள்ளார்.

சுபாஷ் சந்திர போஸ் குறித்து அறுசீர் விருத்தத்தில் அமைந்த கவிதைகளை 6-8-1947 அன்று இராய. ப.சொ. இயற்றியுள்ளார். இதிலும் காந்தி தந்தை எனில் நீ தாய் என்று கூறிச் சுபாஷ் சந்திரபோஸைப் புகழ்வதால் இக்கவிதையும் காந்திக் கவிதை ஆகியுள்ளது.

தந்தை ஒரு காந்தி எனில், தாயெனவே
உனைநாடு தழுவி வாழ
வந்த சுபாஷ் சந்திரனே!

எனக் கவிதை வரிகள் அமைந்துள்ளன.

## காந்தி பதினெண்பா

காந்தி பெயரில் இராய சொவால் பாடப்பட்ட 18 பதிகங்கள் தொகுக்கப்பட்டுக் காந்தி பதினெண்பா எனத் தனி நூல் வெளியாகியுள்ளது. ஆண்டு மாதம் 18 ந்தேதி சென்னையிலிருந்து விலை அணா 5 க்கு நூல் வெளியிடப்பட்டதெனத் தெரிகிறது. காந்திக்கவிதை என்ற நூலுள் முழுமையாக இடம் பெற்றுள்ளது.

1. திருப்பள்ளியெழுச்சி,
2. திருத்தசாங்கம்
3. திருப்பொன்னூசல்
4. திருப்பல்லாண்டு,
5. திருநாமம் கேட்டல்
6. புகழ்பாடுமின்
7. சொற்பெருமை,
8. அங்கங்களின் பயன்,
9. ஆடாமோ ஊசல்
10. தோழிப்பேச்சு
11. ஏர்வாடாக் கோவில்
12. சபர்மதி
13. கடவுளை வேண்டல்
14. உண்ணாவிரத முடிவு
15. சிறை வாழ்வு
16. திருப்புகழ்
17. திருப்பணி
18. தீண்டாமை

ஆகிய 18 பதிகங்களை உள்ளடக்கியதாக இந்நூல் அமைந்துள்ளது. இப்பதிகப் பாடல்கள் குறித்த கருத்துகள் கட்டுரையில் முன்பே விளக்கப்பட்டுள்ளன.

இப்பாக்களுள் பெரும்பான்மை ஊழியன் இதழில் வெளிவந்தவை என்றும் இப்பாமாலை காந்தியடிகட்குச் சூட்டத்

தொடுக்கப்பட்டது என்றும் காந்தியடிகளின் இணையிலாப் புகழைத் தீந்தமிழ்த் தேனில் குழைத்துத் தமிழர்க்கு ஊட்ட வேண்டும் என்ற ஆசை மிகுதியாலேயே இப்பாக்களை யாத்ததாகவும் இதனை அருந்தி மகிழ்வதே தமிழ் மக்கள் எனக்குச் செய்யும் கைம்மாறு என்றும் காந்தி பதினெண்பா நூல் முன்னுரையில் இராய.சொ. குறிப்பிட்டுள்ளார்.

## புதுமைப்பாக்களும் காந்தியும்

காந்திக் கவிதையுள் அடக்கப்பட்டுள்ள எந்நாட்கண்ணி, பேரிகை, விடுதலை, இந்தியா, காதல் மறுமணம், கிளிவிடு தூது, கோயில் திறவு, வீரநாடு ஆகிய கவிதைகளைப் புதுமைப்பாக்கள் என இராய. சொ. குறிப்பிட்டுள்ளார். இவையும்

வேலூர்ச் சிறையிலிருந்த போது பாடியவையாகும் . இவை தனியாகத் தொகுக்கப்பட்டுப் புதுமைப் பாக்கள் என்ற தலைப்பில் தனி நூலாகவும் வெளியிடப்பட்டுள்ளது . இந்நூலின் முன்னுரையில் இராய.சொ. குறிப்பிட்டுள்ளதாவது : " இந்நூலுக்குப் பெயர் புதுமைப்பாக்கள் . புதுக்கருத்துகள் புகுத்திப் பாடிய பாக்களின் தொகுதியாதலின் அப்பெயர் இட்டேன் . தமிழுக்குப் புதுமைப்பாக்கள் தேவை என்பது என் கருத்து . தமிழ்த் தாய்க்கு அவளுடைய ஏராளமான ஆபரணங்களோடு இந்த என்னால் சமைக்கப்பட்ட ஒரு சிறிய அணியையும் ஒரு இடத்தில் போடுகின்றேன் . எனது அணியில் அழுத்திய மணிக்கு ஒளி விடும் ஆற்றல் எவ்வளவு உண்டோ அந்த அளவுக்கு அது விளங்கித் தோன்றட்டும் ! "

எந்நாட் கண்ணி புதுமைப்பாக்களில் முதலாவதாக உள்ளது
எந்நாளோ ? என முடிவுறும் 50 கண்ணிகளுடன் அறுசீர் விருத்தத்தில்

அமைந்த பாயிரத்தையும் கொண்டு அமைந்துள்ளது . அடிமை இந்தியாவில் காணப்படும் அவல நிலைகளை எல்லாம் அடுக்கிக் கூறி அவையெல்லாம் தொலையும் நாள் எந்நாளோ என்று விடுதலை வேட்கை உணர்வுடன் கண்ணிகள் எழுதப்பட்டுள்ளன.

பெண்ணடிமை , சாதிச்சண்டைகள் , சமயப்பூசல் , தீண்டாமை உணர்வு , தாய்மொழி வெறுப்பு ஆகியன அறவே ஒழியும் நாள் எந்நாளோ எனக் கண்ணிகளில் வருந்திப் பாடியுள்ளார் .

இவையெல்லாம் ஒழிந்தால்தான் காந்தி உண்மையான விடுதலையை நாட்டுக்குப் பெற்றுத் தர இயலும் எனக் கவன்றுள்ளார்.

கொத்தடிமை நீங்கியெங்கள் கோகிலப்பொன் மாதரார்
ஒத்தரவம் பெற்றோங்கி ஒளிருநாள் எந்நாளோ? (24)
என்று பெண்ணடிமை குறித்தும்
காதல் புரியிருவர் கருத்தை இடைதடுக்கும்
சாதி சமயமெலாம் தகர்ந்திடுநாள் எந்நாளோ ? (16)
என்று சாதி , சமயப் பூசல் குறித்தும்,
சாதியால் தீண்டாதார் என்னவொரு சாராரை
வாதிக்கும் மெய்யறியார் மதிபெறுநாள் எந்நாளோ ?
என்று தீண்டாமை குறித்தும்,
எனக்குத் தமிழ்வாரா தென்றுரைக்கும் புன்றமிழர்
இனித்த தமிழ்பேசி எழிலுறுநாள் எந்நாளோ ?
என்று தாய்மொழி வெறுப்பாளர்கள் குறித்தும் வருந்திப் பாடியுள்ளார் .

காந்தியின் அறக்கொள்கைகள் இம்மண்ணுலகில் மணம் வீசிப் பொலியும் நாள் எந்நாளோ என்றும் ஏங்கியுள்ளார் .

வாய்த்த பெருங்காந்தி மன்னும் அறமுலகில்
பூத்து மணம்வீசிப் பொலியுநாள் எந்நாளோ ?
என்பதுதான் முதற்கண்ணியாக அமைந்துள்ளது.

பேரிகை என்ற கவிதை “ என்று கொட்டு பேரிகை " என ஒவ்வொரு பாடலும் முடிவடைவதாக அமைந்து , 20 பாடல்களைக் கொண்டதாக உள்ளது . தீண்டாமை ஒழிய வேண்டும் , பெண்ணடிமை தீர வேண்டும் , சுயராச்சியம் அமைய வேண்டும்

என்று கொட்டு பேரிகை என்ற முறைகளில் காந்தியக் கொள்கைகள் பாடல்களில் விரவிக் காணப்படுகின்றன.

காந்தி வந்தான் மாந்தர் உய்ய,
என்று கொட்டு பேரிகை (11)
என்று காந்தியின் புகழும்

கத்தர் பெருக மற்றது ஒழிய
என்று கொட்டு பேரிகை (17)
என்று கதரின் புகழும்

துன்பம் செய்வோர் பொருளை வாங்கோம்
என்று கொட்டு பேரிகை

என்று அந்நியப் பொருள் புறக்கணிப்பு ஆகிய காந்தியக் கொள்கைகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இந்தியாவை ஆளுமுரிமை
இந்தியர்க்கே உரியது! (5)
என்றும்
எங்கள் நாட்டை ஏழையாக்கும்
எதிராரின் பொருள் கொளீர் (6)
என்றும் பாடல் வரிகள் அமைந்துள்ளன.

இந்தியா என்ற கவிதை 10 கண்ணிகளில் இந்தியா என்ற முடிவுச் சொல்லுடன் காணப்படுகின்றது. இந்தியாவின் பெருமையும் பீடும் வளமும் நலமும் பாடல்களில் சிறப்பாகக் காணப்படுகின்றன.

இன்று காந்தி தன்னைப் பெற்றே எழில்வளர்ப்பது இந்தியா (2)

எனக் காந்தியைப் பெற்றதால் இந்தியா எழில் பெற்றது எனப் போற்றப்பட்டுள்ளது.

காதல் மறுமணம் என்ற தலைப்பில் 10 பாடல்கள் உள்ளன. மணம் பேசி முடிவு செய்த காதலன் வாராமைக்கு வருந்திக் காதலி தோழியிடம் கூறுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

இதில் வரும் தலைவன் தலைவியர் காந்தியக் கொள்கைகளில் ஈடுபாடுள்ளவர்களாகக் காட்டப்படுகின்றனர். தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் காந்தி மேல் ஆணை வைத்துப் பிரிந்ததாகத் தலைவி கூறுகிறாள்.

காந்தி மேல் ஆணைவைத்து - சகியே!
கருத்துருகிமொழிந்தான் (2)
என்று பாடல்வரிகள் அமைந்துள்ளன.
தலைவன் கதர் உடுத்துபவனாகவும் காட்டப்படுகின்றான்.
தூய கதருடுத்தி - அடி யென்
சுந்தரன் பண்டொருநாள் (5)
என்பது தலைவி கூற்றாகும்.

கிளிவிடுதூது என்பது காதலி காதலனிடம் கிளியைத் தூது அனுப்புவதாக அமைந்ததாகும்.

சொல்லி அழையாயோ - கிளியே
சொல்லிநீ கூவாயோ!

எனப் பல்லவி அமைந்துள்ளது. இதிலும் தலைவன் காந்தியின் மெய்யடியாராகக் குறிப்பிடப்பட்டுள்ளான். " காந்தியின் மெய்யடியார் கழலும் கட்டுரை கடத்தல் இல்லை " எனவே அவன் சொன்ன சொற்படி வருவான் எனத் தலைவி உறுதிபடக் கூறிக் கிளியைத் தூதனுப்புகிறாள்.

கோயில் திறவு என்ற தலைப்பில் எண்சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தத்தில் 100 பாடல்கள் அமைந்துள்ளன. தீண்டாதார் எனச் சிறை ஒதுக்கி அவர்கள் கோயிலுள் நுழையத் தடை செய்ததைக் கண்டித்து, அவர்களே டவுளின் குழந்தைகள் எனக் கூறி அவர்களுக்குக் கோயிலைத் திறந்து விடுவதாகக் கோயில் திறவு அமைந்துள்ளது. காந்தியின் தீண்டாமை ஒழிப்புக் கொள்கை பாடல்களில் பரவிக் காணப்படுகின்றன.

வீரநாடு என்ற கவிதை காவடிச்சிந்து யாப்பில் அமைந்த 20 பாடல்களைக் கொண்டதாகத் திகழ்கின்றது. இந்தியாவின் மேன்மை பாடல்களில் சிறப்புறப் பேசப்பட்டுள்ளது.

நன்றறி நாயகன் மோகன தாசனெம்
நற்றவன் வாழ்நாடு (19)
என்றும்
சிறப்புடைப் பாலகங் காதரன் என்ற வெம்
திலகனின் தாய்நாடு
என்றும் இந்தியத் திருநாடு போற்றப்பட்டுள்ளது.

## முடிவுரை

சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்து கொண்டு சிறை சென்ற முதல் நகரத்தாராகிய இராய.சொ. சிறையிருந்த ஆறுமாத காலத்திலும் அதற்கு முன்பும் பின்பும் காந்தி பற்றிய கவிதைகளைப் பாடியுள்ளார். 901 பாடல்களைப் பாடிக் காந்திப் பாமாலை சூட்டிய தனிப்பெருந்தமிழறிஞராக இராய.சொ. திகழ்கின்றார். தெய்வப் பாசுரங்கள், சிற்றிலக்கியங்கள், காவடிச்சிந்து, தாலாட்டு, கும்மி ஆகியவற்றின் வடிவமைப்புகள் கொண்டதாக இவர் பாடல்கள் அமைந்துள்ளன. காந்தியும் காந்தியக் கொள்கைகளுமே அனைத்துப்பாடல்களின் உயிர்மூச்சாகத் திகழ்கின்றன. காந்தியின்பால் இராய.சொ. கொண்ட ஈடுபாட்டுக்கு இலக்கியச் சான்றுகள் இவர் பாடல்கள். காந்தியின் தாக்கம் குறிப்பிட்ட அக்காலக் கட்டத்தில் எந்த அளவுக்கு ஒரு தமிழறிஞரிடம் காணப்பட்டது என்பதற்கோர் உரைகல்லாகவும் இவர் கவிதைகள் காணப்படுகின்றன. தமிழறிஞர்கள் மட்டுமல்லாது காந்தியவாதிகளும் அறிந்து கொள்ள வேண்டிய ஒருவராக இராய.சொ. ஆகிவிட்டார். தமிழும் காந்தியமும் வாழும் வரை தமிழ்க்கடலின் கவிதைகளும் வாழும்.

காந்தி எனும் கருணைபொழி கவின் மேகம்
வாழ்க!உல கத்து வாழும்
மாந்தரொடு பல் உயிரும் வாழ்க! அறம்
யாவும்நனி வாழ்க! வாழ்க!

வாய்ந்த புகழ் கொண்டு அன்று வாழ்ந்த பெரும்
பாரதத்தாய் வாழ்க! நாங்கள்
ஏந்துதமிழ் வாழ்ந்திடுக! எழிலாரும்
அறவோர்கள் என்றும் வாழ்க! (901)

# மனமார்ந்த வாழ்த்துகள்

செம்மொழி விருது வழங்கிச் சிறப்பிகப்பெற்ற அறிஞர்களுக்கு எங்கள் மனமார்ந்த வாழ்த்துகள்.

குறள்நெறி இதழின் சிறப்பாசிரியர்கள் **முனைவர் பொன்.கோதண்டராமன்**, **முனைவரி.சுந்தரமூர்த்தி**, பொறுப்பாசிரியர் **முனைவர் மறைமலை இலக்குவனார்**, ஆகிய மூவரும்தெரிவு செய்யப்பட்டுள்ளமை மகிழ்வளிகிறது.

-இணையாசிரியர் தமிழியலன்

கலைஞர் மு.கருணாநிதி செம்மொழித் தமிழ் விருதாளர்கள்

முனைவர் வீ.எசு. இராசம் | பொன். கோதண்டராமன் | இ. சுந்தரமூர்த்தி





ப. மருதநாயகம் | கு. மோகனராசு | மறைமலை இலக்குவனார்





கா. இராசன் | உலுரிக்கு நிக்குலாசு | ஈரோடு தமிழன்பன் | கு.சிவமணி






குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

மின்னிதழ்:20 புரட்டாசி-30 -தி.பி.2052 அக்குதோபர்-16- பொ.ஆ.2021

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்





**பேராசிரியர் பாலூர் கண்ணப்பர்**

(14-12-1908-29-3-1971)

குறள்நெறி-மின்னிதழ் -- இலவச இணைய வெளியீடு

உலகத் திருக்குறள் இணையவழிக் கல்விக் கழகத்தால் வெளியிடப்படும் இணையத் திங்களிருமுறை– பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்-இணையாசிரியர்:பேராசிரியர் தமிழியலன்

# வள்ளுவர் கண்ட அரசியல்-நாடு

--பேராசிரியர் பாலூர் கண்ணப்பர்



-----------------------------------------------------------------------------------

கண்ணப்பர், செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள பாலூரில் 1908 திசம்பர் 14 ஆம் நாள் துரைச்சாமி - மாணிக்கம்மாள் இணையருக்கு மகனாகப் பிறந்தார். கண்ணப்பர் பள்ளிக் கல்வியைக் கற்ற பின்னர், டி. என். சேசாசலம் என்பவரிடம் ஆங்கிலமும் மே. வீ. வேணுகோபாலனார், கோ. வடிவேலர், சூளை வைத்தியலிங்கனார் ஆகிய தமிழறிஞர்களிடம் தமிழ் இலக்கண, இலக்கியங்களையும் கற்று வித்துவான் பட்டம் பெற்றார்.1956 ஆம் ஆண்டில் கீழ்த்திசை மொழியியல் இளவர் (பி.ஓ.எல்) பட்டமும் 1964 ஆம் ஆண்டில் கலை முதுவர் (எம்.ஏ.) பட்டமும் பெற்றார். கண்ணப்பர், தெய்வானையம்மை என்பவரை மணந்து ஏழு பெண்மக்களைப் பெற்றார்.

சென்னை புரசைவாக்கத்தில் உள்ள லூதரன் மிசன் உயர்நிலைப் பள்ளியில், 1926 சூன் முதல் 1934 மே வரை, எட்டாண்டுகளும் முத்தியால்பேட்டை உயர்நிலைப் பள்ளியில், 1934 சூன் முதல் 1938 மே வரை, நான்காண்டுகளும் திருவல்லிக்கேணி கெல்லட் உயர்நிலைப் பள்ளியில், 1938 சூன் முதல் 1952 மே வரை, பதினான்கு ஆண்டுகளும் தமிழாசிரியராகப் பணியாற்றினார்.பின்னர் சென்னை இராயப்பேட்டையில் அமைந்துள்ள புதுக்கல்லூரியில் 1952 சூன் திங்கள் தமிழ் துணை விரிவுரையாளராகப் பணியேற்றார். 1954ஆம் ஆண்டில் தமிழ் விரிவுரையாளராகவும் 1955ஆம் ஆண்டில் தமிழ்ப் பேராசிரியராகவும் தமிழ்த் துறைத் தலைவராகவும் பதவி உயர்வுபெற்றார். பதினாறாண்டுகள் அக்கல்லூரியில் பணியாற்றி 1968 சூன் திங்கள் ஓய்வுபெற்றார்.

கண்ணப்பர் பள்ளி, கல்லூரி வளாகங்களுக்கு அப்பாலும் தமிழ்ப் பணியாற்ற விரும்பி சென்னை சைவ சித்தாந்த சமாசம், சென்னை எ(ழுத்தாளர் சங்கம், செங்கை மாவட்ட எழுத்தாளர் சங்கம் ஆகியவற்றில் உறுப்பினராகி உழைத்தார். சென்னை பல்கலைக்கழக பாடத் திட்டக்குழுவில் இடம்பெற்று பணியாற்றினார்.

1949 முதல் 1969 வரை அறுபத்துமூன்று நூல்கள் இயற்றியுள்ளார். வள்ளுவர் கண்ட அரசியல்: நாடும் மக்களும் திறனாய்வு-1956, தமிழ் இலக்கிய அகராதி-1957, கிரேக்க நாட்டுப் பழமைப் பண்புகள் கட்டுரைகள் 1957 பாண்டிய நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்கள்-இடவரலாறு-1958, பொய்யடிமையில்லாத புலவர் யார்?-1958 சேக்கிழார் பிள்ளைத் தமிழ் உரை -1964 ஆகியவை குறிப்பிடத்தகவை. திருவெம்பாவை உரை, திரு ஈங்கோய் மலை எழுபது உரை,திருவருட்பா விரிவுரை ஆகியவை இவரது புலமைநலனுக்கும் ஆய்வுத்திறத்திற்கும் சான்று பகர்வன.

கண்ணப்பர் செய்த தமிழ்த் தொண்டினையும் சைவத் தொண்டினையும் பாராட்டி செந்தமிழ்ச் செல்வர், சைவ சமய சிரோமணி என்னும் பட்டங்கள் வழங்கப்பட்டன. சென்னைப்

**பல்கலைக் கழகத்தில் அப்பரடிகள் திருமுறை பற்றிய ஆராய்ச்சிப்பணியில் ஈடுபட்டிருந்த கண்ணப்பர், அப்பணி நிறைவுறும் முன்னரே 1971 மார்ச்சு 29 ஆம் நாள் இயற்கை எய்தினார்.**

**---------------------------------------------------------------------------------**

**திருக்குறளுக்கு விளக்கம் வழங்கும் வகையில் தணிகைப் புராணம்,வினாயகபுராணம் ஆகியவற்றிலிருந்து பல மேற்கோள்களையும் சீவகசிந்தாமணி,கம்பராமாயணம் ஆகியவற்றிலிருந்து சில மேற்கோள்களையும் இப் பேராசிரியர் வழங்கியுள்ளமையை இக்கட்டுரை மூலம் அறிகிறோம்.பௌராணிகத்தில் ஊறித் திளைத்த பழம்பேராசிரியர்களுள் இக் கட்டுரையாளரும் ஒருவர்.**

---------------------------------------------------------------------------

மலர்தலை உலகில் அரசியல் மாண்புற அமைதற்கு அடிப்படை, நாட்டின் வளம் நன்முறையில் இருப்பதேயாகும். நாட்டின் வளம் குன்றி இருப்பின், அரசியல் நடத்துதற்கு இயலாது. சுவரை வைத்துக்கொண்டே சித்திரம் எழுதவேண்டும்? அது போல நாடாகிய சுவரை வைத்துக்கொண்டே சித்திர மாகிய அரசியலே எழுதவேண்டும். எனவே, இனி நாடு அமைய வேண்டிய முறைகளையும், இருக்க வேண்டிய வளங்களையும் காண்போமாக.

நாடு குறையாத விளைச்சலைப் பெற்றிருத்தல் இன்றியமையாதது. குறையாத விளைவாவது, மழை இல்லாத காலத்திலும் சாவிபோகாது, விளைதல் வேண்டும். செல்வர்களும் அறிவோர்களும் நல்லோர்களும் நிறைந்து காணப்படுதல் வேண்டும். குறையாத விளைவு காட்டிற்குத் தேவை என்றதால், அவ்விளைவினை ஆக்கவல்ல உழவர்கள் நாட்டில் மலிந்திருத்தல் இன்றியமையாதது என்பதைக் கூறவும் வேண்டுமா?உழவு மிகுந்தால் உணவுப்பொருள்களும் மிகுதிப்படும் அல்லவா? உணவு மிகுதியானால் நாட்டில் வறுமை தலைகாட்டாது ஒழியும். அறிவோர்கள் மலிந்து நாடு விளங்கவேண்டும் என்று கூறியதனால், அறிவோர் எனப்படுவோர், பற்றைத் துறந்தவர்களும் அந்தணர்களுமே ஆவர். கல்வியும் ஞானமும் நற்குணமும் அமைந்தவர்களும் இவ்வறிஞர்களைச் சார்ந்தவர்களே. இவர்கள் நாட்டில் மலிந்து காணப்பட்டால், அந்நாடு அழியாது. செல்வர்கள் நிறைந்து இருத்தல் நாட்டிற்குச் சிறப்பாகும் என்றது, கப்பலின் மூலம் கடலைக் கடந்து வெளி நாடுகளுக்குச்சென்று வாணிபம்செய்து அரும்பொருள்களைத் திரட்டிவரும் முயற்சியுடையோர் நிறைந்திருத்தல் வேண்டும் என்பதாம். “திரை கடல் ஓடியும் திரவியம் தேடு ' என்பது நம் நாட்டு முதுமொழிதானே?கடல் கடந்துதான் மக்கள் பொருள் ஈட்டவேண்டும் என்பதில்லை. உள்நாட்டில், பல்வேறு இடங்களுக்குக் கால்நடையாகச் சென்றும் வாணிபத்தினைப் பெருக்கிப் பொருளைத் திரட்டலாம். இம் முறையில் காட்டிற்குப் பொருளைத் தேடி வரும் ஊக்கமுடைய மக்களைப்பற்றிச் சிலப் பதிகாரம்,

*உரைசால் சிறப்பின் அரசு.விழை திருவில்*
*பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்*
*முழங்குகடல் ஞாலம் முழுவதும் வரினும்*
*வழங்கத் தவாஅ வளத்த தாகி*
*அரும்பொருள் தரூஉம் விருந்திற்*
*றேன ஒருங்குதொக் கன்ன*
*உடைப்பெரும் பண்டம் கலத்தினும்*
*காலினும் தருவனர் ஈட்டிக் குலத்தில்*
*குன்றாக் கொழுங்குடிச் செல்வர்*

என எடுத்துக் கூறுகிறது. இவர்கள் தேடும் செல்வம் ஈயக் குறைபடாது; பிறரால் இகழவும்படாது. இந்தத் தன்மைகள் அனைத்தும் நாடுகள் பெற்றிருந்தன என்பதற்கு ஒரு சான்றாக ஏமாங்கத நாட்டைக் கூறலாம். அதைப்பற்றித் திருத்தக்கதேவர்,

*நற்றவம் செய்வார்க்கிடம் தவம்செய்வார்க்குமதுவே இடம்*
*நற்பொருள் செய்வார்க்கிடம் பொருள்செய் வார்க்குமிடம்*
*பெற்றஇன்பம் விழைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்தென*
*மற்றநாடு வட்டமாக வைகும் மற்ற நாடரோ.*

என்று கூறியுள்ளார். நாட்டிற்கு விளைவு மிகமிக இன்றியமையாதது என்று கூறினோம் அன்றோ? அவ்விளைவு முழு விளைவாக இருக்கவேண்டும். இப்படி விளைவுதரும் நிலங்கள் அல்லவோ முப்போகம் விளையும் நிலங்கள் என்று கூறப்பட்டு வருகின்றன முப்போகம் விளைந்து, முழுவிளைச்சலை நிலங்கள் தருவதாயின், அந் நிலங்களுக்கு எந்தக் கெடுதியேனும் இருத்தல் கூடுமோ ? கூடாது. நிலங்களுக்கு மிகுந்த மழையினாலும், மழையே இல்லாமையாலும், எலி, விட்டில் பூச்சி, கிளி, பன்றி, மான், யானை, தன்னரசு, காற்று, வேற்றரசு நெருங்குதல் முதலானவற்றால் கேடு வருதல் இயல்பு. இதனை விட்டில் கிளி, கால்வாய் வேற்றரசு தன்னரசு கட்டம் பெரும்பெயல் நால் எட்டு" என்ற மேற்கோள சூத்திரத்தாலும்: விட்டில் கிளியே கால்வாய் எனம் தொட்டியர் கள்வர் சோனைப் பெரும்புயல் கட்டம் காட்டேழ் குற்ற மாகும் என்ற பிங்கலந்தையாலும் அறியலாம். இவ்வாறு நாட்டிற்கு வரும் கேட்டினை வடநூலார் ஈதிகள் என்பர். மேலே கூறப்பட்ட கேடுகள் நிலங்களுக்கு இல்லையானால், நெல், பொன், மணி முதலியன மிகுதியாகப் பெருகும். இதனுல் பிறதேயத்தவர்களும் இத்தகைய நாட்டையே தம் நல் வாழ்வின் பொருட்டு வந்து குடியேறுவர். அப்படி விரும்பும் முறையில் நாடு அமைதல் வேண்டும். இந்த நிலையில் எல்லாத் தேயத் தவரும் விரும்பும் வளத்துடன் தொண்டை நாடு இருந்தது என்பதை, *மலிபெரும் பொருளால் பெட்கும் வண்மையும் நாடாது யாதும் மெலிவுக உதவும் வாய்ப்பும் மெலிகலார் மெலிந்த காலும் கலிதராவளனும் எல்லாம் நலிவுறநீத் தாற்ற ஈண்டும் ஒலிகெழு விளையுளோடும் உடையது தொண்டை நாடு*

என்று கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்தில் கூறியிருப்பதிலிருந்து நாம் அறிகிறோம். பிற நாடுகள் வளமுடைய நாடுகளை நோக்கி வருதற்கு மற்றும் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் சில, பகை அரசர் தம் நாட்டுடன் போர் தொடுத்த காலம், தம் நாட்டு அரசன் கொடுங்கோலனாக மாறிய காலம், மழையின்மையால் உணவின்மை ஏற்பட்ட காலம், ஆகிய இத்தகைய காலங்களில் பிற நாடுகள் வேற்று நாடுகளை நாடும் ; அப்படி வரும்போது, மக்கள் மட்டும் வேற்று நாட்டை அடைவர் என்று சொல்ல இயலாது, அம்மக்களைச் சார்ந்த பசுக்களும் எருமைகளும், ஆடுகளும் மற்றும் பிறவும் வளமுடைய நாட்டை அடையும். இத்துணைப் பொருள் களையும் தாங்கும் பொறுப்பையும் நாடு ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். பிற நாட்டு மக்களும், மூவினங்களும் வந்து சேர்ந்தால் உள் நாட்டுப் பொரு ளாதார நிலை குறைவுபடவும் கூடும். அதன் காரணமாக அந் நாட்டுக் குடிமக்கள் அரசனுக்குத் தர வேண்டிய இறைப் பணத்தில் சிறிதும் குறைக்காமல், கொடுக்க வேண்டிய பொருளை மனம் உவந்து கொடுத்து வருதல் முறைமையாகும். இப்படிப் பிற நாட்டுப் பாரங்களையும் தாங்கி,அரசனுக்குக்கொடுக்க வேண்டிய ஆறில் ஒரு கடமையும் கொடுத்துச் சிறப்புடன் விளங்கியது.தொண்டை நாடு என்பதைப்

*பல்குழு வேந்த லைக்கும் படர்கொலைக் குறும்பு*
*தீய பல்குமுள் பகையு டற்றும் பகையுறு பசிதீராதோ*
*பல்குறி தானும் இன்றிப் பொறையொருங் குறுகால் தாங்கி*
*நல்கிறை வேந்தர்க் குய்க்கும் நலத்தது தொண்டை நாடு*

என்னும் பாடலால் நன்கு அறியலாம். நல்ல விளைவு காரணமாக காட்டில் உணவுப் பொருள்கள் மலிந்து காணப்படும் ஆதலின், பசி நாட்டில் இருத்தற்கு இடம் இல்லை. பசிமட்டும் இல்லாமல் இருப்பது நாட்டுக்குச் சிறப்பில்லை. காட்டில் தீய காற்றாலும், மிகுந்த குளிரும், வெப்பத்தின் மிகுதியாலும், நாட்டில் கிடைக்கும் பொருள்களைப் பெரிதும் உன்னும் காலத்து ஏற்படக்கூடிய தீங்கிலும் நோய் தோன்றுதற்குக் காரணம் உண்டு. ஆதலின், இம்முறையில் ஏற்படக்கூடிய நோய் இல்லாது நாடு திகழ்தல் வேண்டும். வேற்றரசர்கள் படை எடுத்து நாட்டை அழிக்காமல் இருக்க, நிலப்படை, காட்டரண், நீர் அரண், நிலஅரண், மலையரண் முதலியவற்றைப் பெற்றுப் பகைவரால் அழிவுறாதிருக்கும் நிலையில் நாடு அமைந்திருத்தல் சிறப்பாகும். இளங்கோ அடிகளாரும் தமது சிலப்பதிகாரத்தில் நாட்டின் இயல்பைக் கூறுகையில், பசியும் பிணியும் பகையும் நீங்கி" என்று கூறிச் சென்றார் நாட்டு மக்களுக்கு இம்மூன்றும் இல்லாதிருக்கவேண்டும் என்பதை அடிக்கடி நினைவு ஊட்டும் பொருட்டுப் பறையறைந்து அறிவித்து வந்ததாகச் சிந்தாமணி ஆசிரியர்,

*ஒன்றுடைப் பதினை யாண்டைக் குறுகடன் இறைவன் விட்டான்*
*இன்றுளீர் உலகத் தென்றும் உடனுளீர் ஆகி வாழ்மின்*
*பொன்றுக பசியும் நோயும் பொருந்தலில் பகையும் என்ன*
*மன்றலில் மறுகு தோறும் மணிமுரசு ஆர்த்த தன்றே*

என்று கூறியிருப்பதனால் அறியலாம்.

நாடு என்பது பரந்த பரப்புடைய நிலப்பகுதி. இதில் எவர்க்கும் இடம் உண்டு. இப்படி இடம் பெறுபவர் பலர் ஆவார். சாதிபற்றியும், கடவுள்பற்றியும் தம் கருத்து வேற்றுமை கொண்டு மாறுபட்டுக் கூடும் கூட்டத்தவர்களும், வழிப்பறிக் கொள்ளக்காரர்களும், உள் நாட்டில் இருந்துகொண்டே திருடுபவர்களும், கோள் சொல்லித் திரிபவர்களும், இச்சகம் பேசிப் பொருள் பறிப்பவர்களும், பொய்ச்சாட்சி கூறுபவர்களும், மித்திரபேதம் செய்பவர்களும், புறம் கூறுபவர்களும், அரசை வருத்தும் குறுநில மன்னர்க்ளும், இராசத் துரோகிகளும் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இவர்கள் நாட்டில் இருத்தல் கூடாது. இவர்கள் வாழ இடங்கொடுக்காத நாடே நல்ல நாடாகும். இவர்கள் நாட்டுக்குப் பாழ் செய்யும் உட்பகைவர் ஆவர். இவ்வாறான உட்பகைவர்களுக்குள்ளே பன்றி, கரடி, புலி முதலான விலங்குகளும் சேர்ந்தவையே. ஆகவே, மாறுபட்டுக் கூடும் கூட்டமும், உள் பகையும், குறும்பர்களும் கொடும் விலங்குகளும் இல்லாமல் நாடு திகழ வேண்டும். இந்த முறையில்தான் நாடு இருத்தல் வேண்டும் என்பதை வினாயக புராணமும் நமக்கு நன்கு எடுத்து இயம்புகிறது.

*பழுதுசீர் நாட்டுக் கமரர்கள் சாதி பற்றுசங் கேதத்தின் ஈண்டும்*
*குழுவுமா றலைக்கும் கள்வர்.பொய் குறளை கூறுவோர் பன்றிமான் முதலாய்க்*
*கெழுவுமுட் பகையும் அளவுபார்த் தரசைக் கெடுக்கும்கொல் குறும்பரும் மிக்க*
*மழைமழை இன்மை எலிகிளி விட்டில் மன்னராம் கோளுமாம் மைந்தா:*

என்ற பாடலைக் காண்க. பகைவரால் நாட்டுக்குக் கேடுவராமல் நாடு அமைதல் வேண்டும். அப்படிக் கேடு வந்த இடத்தும் சுரங்கங்களிலிருந்து கிடைக்கும் வெள்ளி, பொன் முதலான உலோக வளம் குறைதல் கூடாது. இப்படி விளங்கும் நாடே தலைசிறந்த நாடாகும். கேடு வராமல் நாட்டைப் பாதுகாத்தல் அரசன் கடன். அரசனது ஆற்றலால் குடிகள் பகையைத் தடுத்துக் கொள்ளலாம். கடவுளுக்குச் செய்யும் பூசைகளாலும் அறச் செயல்களாலும் கேட்டை நீக்கிக் கொள்ளலாம். வயல்கள், சோலைகள் முதலியவற்றால் நாடு வளங்குன்றா நிலையில் இருத்தலைக் கம்பரும் தம் ராமாயணத்தில் கோசல காட்டுச் சிறப்பைக் கூறும்போது,

*கதிர்படு வயலின் உள்ள கடிகமழ் பொழிலின் உள்ள*
*முதிர்பல மாத்தின் உள்ள முதிரைகள் புறவின் உள்ள*
*பதிபடு கொடியின் உள்ள படிவளர் குழியின் உள்ள*

*கதுவரை மலரில் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்*
என்று கூறினார்.

நாட்டிற்கு உறுப்பாக அமையவேண்டுவன சில உள. அவையே நீரும், மலையும், வன்மையான அரணும் ஆகும். நாடு நீரைக் கிணறு, சிறு குளம் ஏரி, ஆறு முதலியவற்றில் இருந்து பெற்று வருகிறது. இந்நீர் நிலைகள் குறைவின்றி இருந்தால், வானம் பெய்யாது நாடு வறண்ட காலத்தும் நீரைத் தரவல்லனவாக இருக்கும். மலை நாட்டிற்கு உறுப்பாக அமைவதனால் இரண்டு விதங்களில் நன்மையாகும். அரணாக இருந்து பகைவர்கள் எளிதில் நாட்டில் புகுதல் இயலாமல் இருக்கத் தடுத்து நிற்கும். மழைக் காலத்தில் உட்கொண்ட நீரை, வெயிற் காலத்திலும், வெளிப்படுத்தி ஆறுகளைத் தன்னிடம் இருந்து உற்பத்தி செய்து வரும். மேலும் மலைகள் இருந்தால், அகில், மிளகு, வாசனைப்பண்டம், வால் மிளகு, குங்குமம் ஆகிய பொருள்களைப் பெறலாம். பல பெரிய வீடுகளும் பல மக்களும் அமைந்து அரணுடைய கோட்டையினையும் உடையது புரம் என்றும், பல பெரிய விடுகள் இருந்து, பல்மக்களும் நிறைந்து கிராமத்தினும் பெரியதாய் நகரில் சிறியதாய் இருப்பது பட்டணம் என்றும், பெரிய பெரிய வீடுகளைப் பெற்றுப் பட்டணம் புரம் ஆகிய இவற்றிலும், நிலப்பரப்பில் பெரியதாய் உள்ளது நகரி என்றும் கூறப்படும். இதுவே மாவட்டம் இராஜதானி எனப்படும். இன்னமும் தெளிவுற இந்தக் கருத்தை வினாயக புராணம், அரசியல் படலம்,

*இருபுனல் வாய்த்த மலைதரு புனலும்  இடவிரா நகர்களும் உடைத்தாய்ப்*
*பெருகவெப் பொருளும் ஒழிவற விளைக்கும் பெருங்குடிகளும் கலம் காலால்*
*பொருள்பல ஈட்டும் செல்வரும் மறையோர் புரையறு தவத்தினர் துறவோர்*
*மருளறு கலைஞர் ஆதியோர் பலரும் மன்னி வாழ்ந் திருப்பது நாடு “*

என்று  கூறுகிறது.. இதே கருத்தைத் தணிகைப் புராணமும்,

*“வருபுனல் வாய்ந்த ஓங்கல் வல்லரண் இருநீர் என்றும்*
*பொருவில்பல் உறுப்பிற் றாகிப் பொங்கிய செல்வம் ஏமம்*
*வெருள்பிணி இன்மை இன்பம் விளைவுகள் கனிந்து தாழ்வில்*
*திருவினர் தமக்கோர் சாலச் செறிந்தது தொண்டை நாடு “*

என்று கூறித் தொண்டை நாட்டை இவ்வமைப்புக்கு எடுத்துக் காட்டாகக் காட்டுகிறது. சிறு நூலாகிய கொன்றை வேந்தனும் “நீரகம் பொருந்திய ஊரகத்திரு” என்று எடுத்து மொழிகிறது. இதனால் நாட்டுக்கு நீர் வளம் இன்றியமையாதது என்பது தெரிகிறதல்லவா?

நாட்டிற்கு உறுப்புக்கள் மட்டும் அமைந்து பலனில்லை. அழகும் நாட்டிற்கு இன்றியமையாதது.அழகு என்பது மக்களுக்கு மட்டும் இருக்கும் அழகன்று நாட்டிற்கு அழகு என்று கூறப்படுவன நோய் இன்மையும், பசு, பொன் ஆகிய செல்வம் மிகுதியாக உள்ளமையும், விளைவின் மிகுதியும், இன்பமும், காவல் உடைமையும் ஆகும். இன்பத்தினை விழாச் செய்தலாலும், யாகாதி செயல்களைப் புரிதலாலும், பெரியோர்களைப் பெற்றிருத்தலாலும், நிலவளம் நீர்வளம் மிக்கு இருப்பதாலும்,மாதர்கள்பால் இன்மொழியினைக் கேட்டலாலும், அழகினைக் காண்டலாலும், இதழைச் சுவைத்தலாலும், உச்சி மோத்தலாலும், உடலைத் தழுவுதலாலும் பெறலாம். விளைவினால் ஒரு சில தானியங்களை மட்டும் பெறுதலில் பயன் இல்லை. நெல், புல், வரகு, தினே, சாமை, இறுங்கு, தோரை, இராகி, எள், கொள்,பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை முதலிய தானியங்கள் அனைத்தும் நாட்டில் விளைதல் வேண்டும்.விளைவு என்பது விளையக்கூடிய எல்லாவற்றையும் குறிப்பதாகும். செல்வம் என்பது பொன், பசு மட்டும் அன்று. வெளிநாடு சென்று திரும்பிவரும் வணிகர் கப்பலிலும், வண்டியிலும், கொணரும் பொருள்களும், குடிகள் குறைவின்றித்தரும் வரிப்பணமும் சுரங்கத்தினின்று கிடைப்பனவும் வயல் முதலியவற்றில் கிடைக்கும் தானிய முதலியனவும்

மலைதரும் பொருள்களும், செல்வம் எனப்படும். - விழாக்கள் நாட்டிற்கு அழகு தரும் என்பதை அறிவிக்கவே, இறையனர் அகப்பொருள் உரையாசிரியரும், "அவை மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர்ப் பங்குனி உத்திரமே, கருவூர் உள்ளி விழாவே என இவைபோல்வனவாம்' என்று கூறியுள்ளார். இன்னோரன்ன வளங்களும், அழகுகளும் உடையது நாடு என்பதை வற்புறுத்தவே வினாயக புராணம்,

*ஆதலில் குடிகள் ஆதியோர் தொகவும் அழிவுசெய் குழுமுதல் அகன்று*
*போதவும் காவல் புரிபி ணி இன்மை புகழ்திரு விளைவின்பம் அனைத்தும்*
*கோதற நாளும் மிகவுள தாகும் குலைந்தயல் நாடுகள் உறினும்*
*மேதகத் தாங்கும் வருந்துறா தெவையும் வேண்டுழி அளித்திடும் மைந்தா*

என்று கூறுகிறது. இந்த இலக்கணத்திற்கு ஏற்ற இலக்கியமாகத் தொண்டை நாடு விளங்கியது என்பதைத் தணிகைப் புராணம் கூறியதை முன்பே கண்டனம். நாட்டின் அமைதிக்குக் காரணம்,

*"செல்வம் விளையுள் பல்வளம் செங்கோல்*
*கொல் குறும் பின்மை கொடும்பிணி இன்மையென்*
*றிவ்வகை ஆறும் நன்னாட் டமைதி"*

என்று பிங்கலந்தை கூறுவதையும் காண்க.

நாடு தன்னிடத்து ஒரு பொருளும் குறைதலின்றி எல்லாப் பொருள்களையும் தன்னகத்துக் கொண்டிருத்தல் வேண்டும். ஒரு பொருள் கருதிப் பிற நாட்டிற்குப் போகும் தன்மையில் இருத்தல் கூடாது. தம்மிடம் வாழ்பவர் தேடி வருந்தாமல் அவர்கள் எளிதில் பெறக்கூடிய நிலையில் பொருள்களைப் பெற்று இருத்தல் வேண்டும். தேடி வருந்தச் செல்வத்தை அடைவிக்கும் நாடுகள் நாடு ஆகா. பிற நாட்டில் உள்ள பண்டங்கள் கலத்தாலும் காலாலும் கொணரப்பட்டிருப்பினும், தம் நிலத்தில் மிகுதியாக விளையின் பிற நாட்டை நாடிப் போகாமல் இருக்கலாம் அன்றோ? பிற நாட்டை நாடி மக்கள் போதல் கூடாது. "பொருள் செய்வார்க்கும் அஃது இடம்" என்றல்லவோ சிந்தாமணி ஆசிரியரும் கூறியுள்ளார்? காவிரிப்பூம்பட்டினம் இம்முறையில் தன்னகத்து எல்லா வளங்களையும் கொண்டிருத்தலால், பிற நாடு புகா நிலையில் இருந்தது என்பதைத் தன் பெயரினலும் வெளிப்படுத்தி இருத்தலேப் பூம்புகார் என்னும் பெயரால் அறிகிறோம். அந் நாட்டு மக்கள் பிற நாடு செல்லார் என்பதை இளங்கோ அடிகளாரும்,

*"பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய*
*பொதுவறு சிறப்பின் புகார் "* என்றனர். இதுவரை கூறியதில் இருந்து மேலே கூறப்பட்டவை அனைத்தும் ஒரு நாட்டின் இயல்பு என்பதை அறிந்தோம். ஆனால், இத்துணை நலனும் வளனும் பொருந்தி இருப்பினும், அந் நாட்டிற்கு அரசன் மிக மிக இன்றியமையாதவன். இக்கருத்தை முதுமொழி என்னும் நூல்,

*"இறைசாரும் தென்னாடே நாடேனை நாடு*
*பிறவுடைய வேனும் பேறாகாண்* "என்று தெரிந்து கூறுகிறது. இவ்வாறு நாட்டிற்கு மிக மிக இன்றியமையாத அரசனது இயல்புகளை அறிந்து கொள்ளுதற்கு முன், அவன் வாழ் இடமாகிய அரணப்பற்றி முன்னர் அறிந்து, பின்னர் அவ்வரசனது இயல்பினை அறிவோமாக,

# அறநெறியே சட்டம்! அறம் கூறும் அவையம்!



- வழக்கறிஞர் என்.எஸ்.ராஜன்

திரு என் எஸ் ராஜன் (70) சிவகங்கை மாவட்டம் கோட்டையூரில் 2-3-1951ல் பிறந்தவர். சென்னையில் பட்டப் படிப்பும் சட்டக் கல்வியும் பயின்றவர். மாணவப் பருவத்தில் திராவிட இயக்கத்தின் பால் ஈர்க்கப்பட்டு பேரறிஞர் அண்ணாவுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவர். இந்தியன் வங்கியில் சட்டப்பிரிவில் உயர் அதிகாரியாக சிறப்புற பணியாற்றி விருப்ப ஓய்வு பெற்று சென்னை உயர் நீதிமன்றத்திலும் டெல்லி உச்ச நீதி மன்றத்திலும் வழக்குரைஞராக பணியாற்றியவர்.சில காலம் சென்னை சட்டக்கல்லூரியில் வருகைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர். பொது இடங்களில் புகைபிடிக்கக் கூடாது என்று முதன்முதலில் சென்னை உயர் நீதிமன்றத்தில் பொது நல வழக்கு தொடுத்தவர். தொழிலாளர் தொடர்புடைய வழக்குகளில் திறம்பட வாதாடி தக்க ஆணைகள் பெற்றுத் தந்தவர். தமிழில் சட்ட உலகம் என்ற மாத இதழ் ஆசிரியராக இருந்து நடத்தியவர்.ஆங்கில காட்சி ஊடக வாதங்களில் பங்கேற்றுள்ளார். தமிழ் இலக்கியத்தில் ஆர்வமும் அறிவும் கொண்ட இவர் திருக்குறளின் பால் கொண்ட பற்றின் காரணமாக பல கட்டுரைகளை எழுதியுள்ளார். குறள்வழி நடந்தால் நாட்டில் சட்டத்திற்கு இடம் இல்லை என்ற கருத்தைத்தமது கட்டுரைகளில் வலியுறுத்தியுள்ளார்.சென்னை,அண்ணாநகரை அணிசெய்து வாழும் அறிஞர்களுள் இவரும் ஒருவர்.

முப்பாலில் முதல் பால் அறம்!

அறமே ஆரம்பமாக இருக்க வேண்டும்!

அறத்தின் வழியே நின்று, அறம் சார்ந்து பொருள் ஈட்டி, அதனால் வந்த பொருள் கொண்டு, அதன்பின், அறவழியிலேயே இன்பமும் காண வேண்டும்! ஆக, எல்லாமே அறவழிதான்! பொருள் ஈட்டுவதும் அறவழியே! இன்பம் நுகர்வதும் அறவழிக் கோட்பாடுகட்கு உட்பட்டே!

அன்பும் அறனும் உடையதுதான் இல்வாழ்க்கை. அறத்தால் வருவதே இன்பம். அறமே சட்டம்! ஆக, அறத்துக்கே அதிக முக்கியத்துவம்! வாழும் வாழ்க்கையில் அறம்! அரசு நிர்வாகத்தில் அறம்! நீதியை நிலைநாட்டுவதிலும் அறம்! இப்படி எங்கும் அறமே கோலோச்சும்!

அறம் எனும் நெறிமுறை கடைப்பிடிக்கப்படுகிறபோது, குற்றங் கள் நடைபெறுவதில்லை!

அந்த "அறம்' சட்டநெறியாகக் கோலோச்சினால், அல்லவை தேயும்! நன்மைகள் பெருகும்!

"அல்லவைதேய அறம் பெருகும் நல்லவை

நாடி இனிய சொலின்'

இதைத்தான் “தர்மம்‘ (DHARMA) என்று வட மொழி நூல்கள் இயம்புகின்றன! தர்மத்தின் ஆட்சி என்று!

(“அறம்‘ வேறு - “தர்மம்‘ வேறு என்று சில அறிஞர்கள் கருத்து தெரிவிக்கிறார்கள். தர்மத்தையும் உள்ளடக்கியது அறம். தமிழரின் பண் டைய இலக்கியங்களில் “அறம்‘ எனும் சொல்லே எங்கும் பயன்பட்டது. இது பற்றிய விரிவான விவ ரங்களையும் பின்வரும் இதழ்களில் காண்போம்.)

பொதுமக்களிடையே எழும் வழக்குகளைத் தீர்த்து வைக்கும் மன் றங்களை நாம் “நீதிமன்றங்கள்’ - Court of Justice என்று அழைக்கிறோம்.

Court என்பதைத் தமிழில் “முறையிடும் மன்றம்‘, “முறையீட்டு மன்றம்‘ என்று குறிப்பிடலாம். பழைய தமிழ் இலக்கியங்களில் நீதிமன்றங்களை “அறங் கூறும் அவையம்‘ என்றே குறிப்பிட்டுள்ளார்கள். “அறத்தைக் கூறும் அவையம்‘ என்றே பண்டையத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுவதால், அவர்கள் “அறமே’ சட்டமாகக் கொண்டு வாழ்ந்து வந்துள்ளது தெளிவாகிறது.

நம் பண்டைய இலக்கியங்களில் “சட்டம்‘ என்ற சொல்

இருந்ததாகத் தெரியவில்லை. “அறம்‘ என்று தான் இருந்துள்ளது.

“அறங்கூறும் அவையம்‘ என்றுதான் நீதிமன்றங்கள் கூறப்பட்டன.

அரசு கோல் கோடினும், அறங் கூறு அவையத்து

உரை நூல் கோடி ஒரு திறம் பற்றினும்......

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

செற்றமும் உவகையும் செய்யாது காத்து

சிறந்த கொள்கை அறங் கூறு அவையம்....

என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது.

அகநானூற்றுப் பாடல்களில், பல இடங்களில், இந்த “அறம் கூறும் நல் அவையத்தை’ப் பற்றிப் பேசப்படுகிறது.

இந்த அறங்கூறும் நல்லவையங்களில், வான் புகழ் நீதி

வழங்கப்பட்டது. அது அறத்தின்பாற்பட்டதாக அமைந்திருந்தது.

அங்கே, அந்த நாட்களில், எழுதப்பட்ட சட்டங்கள் இல்லை! தொகுக்கப்பட்ட சட்ட நியதிகள், விதிமுறைகள் இல்லை. அச்சிடப் பட்ட ஆயிரக்கணக்கான புத்தகங்கள் இல்லை!

அரசனே நீதி வழங்கினான்!

அவன் நீதி அரசனாகவும் இருந்தான்!

அவன் மக்களால் தெய்வமாகக் கருதப்பட்டு வணங்கப் பட்டான்!

அவன் சொன்ன நீதி, முறை கேட்டு வந்தவருக்கு, முறையாக, நிறையாக அமைந்திருந்தது. அது “அறமாகவே’ இருந்தது.

முடிசூடி முறை சொன்ன மன்னவன் வயதில் சிறியவனாக, இளைஞனாக இருந்தாலும் சரி, அனுபவத்தில் சிறந்த வயது முதிர்ந்த நரைமுடி மன் னவனாக இருந்தாலும் சரி, அன்று சொன்ன நீதியில் “அறம்‘ தெரிந்தது. அனைவரும் வியக்கும்படியாகவும் இருந்தது!

# ‘கவிஞர்‘ திருவள்ளுவர்

--கோவை இளஞ்சேரன்



**கோவை இளஞ்சேரன் தம் மரபார்ந்த தமிழ்க் கவிதைகளால். ‘கவிஞர் கோ ‘ எனப் பாராட்டப்பட்டவர்.தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத் துறைத் துணை இயக்குநராகப் பணியாற்றியவர்.பல கவிதைத் தொகுப்புகளும் ஆய்வுநூல்களும் இயற்றியவர்.இவரது நூல்கள் தமிழ்நாட்டு அரசால் நாட்டுடைமையாக்கப்பட்டுள்ளன.**

திருவள்ளுவப் பெருந்தகைக்குக் கவிஞர்' என்னும் சொல்லை அடைமொழியாக்கலாம். ஆக்கினால் அச்சொல் பெருமை பெறும். அதனுடன் அறிவியல்’ என்பதை அடைமொழியாக்கினால் அடைமொழியாக்குவோன் திருவள்ளுவரின் அறிவியல் திறத்தை அணுகியவன் ஆகிறான்.

**திருவள்ளுவர் கவிஞரா ?**

மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றுார்க்கிழார், இறையனார், ஆசிரியர் நல்லந்துவனார் ஆகியோர் திருவள்ளுவமாலையில் திருவள்ளுவரைப் ‘புலவர் திருவள்ளுவர்’, ‘மன்புலவன்’ திருவள்ளுவன்', ‘முதற் பாவலர்’- எனப் புலவராகவும், பாவலராகவும் ‘மாலை’ சூட்டிப் போற்றினர். மணிமேகலை ஆசிரியர் சாத்தனாரும் ‘பொய்யில் புலவன்’ (மணிமேகலை-22-61) என்றார். முந்தையோர் ‘கவிஞர்’ என்று பாடவில்லை.

.கம்பருடனும், இளங்கோவுடனும் இணைத்துப் பாடிய நம் காலக் கவிமாமன்னன் பாரதி, ‘யாமறிந்த புலவரிலே’ என்று திருவள்ளுவரைப் புலவராகப் போற்றினார்.

ஆனால், அவரே, “கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் முதலிய மகா**கவிகளுக்கு** ஞாபகச் சின்னமும் வருசோற்சவமும் ஏற்பாடு செய்ய வேண்டும்” என்று கட்டுரையில் 'கவி'யாகக் குறித்தார். பாரதிதான் திருவள்ளுவரைக் 'கவிஞர்' என்று குறித்த முதற் கவிஞர். அவ்வையாரையும் "கவியரசி" என்று போற்றினார்.

புலவர் புலமை உடையவர். புலமையால் பாடம் சொல்லும் ஆசிரியராகவும், எழுதும் ஆசிரியராகவும் விளங்குவார். முற்காலத்தில் எழுதும் புலமை "செய்யுள்' எழுதுவதாக இருந்தது. பின்னர் உரைநடையும் கூடிற்று. செய்யுளுக்குப் 'பா, பாட்டு' எனவும் பெயர். பாவைப் பாடுபவர், எழுதுபவர் பாவலர் எனப்படுவார்.

செய்யுளும் பாவும் பாட்டும் இலக்கணக் கட்டுக் கோப்புடன் அமைபவை. சீரான பலவகை ஓசைகள் உடையவை. ஆற்றுநீரில் மிதந்து செல்வது போன்று பாவின் பொருளை

எளிமையாகக் கொள்ளலாம். எதிர்த்து நீந்துவது போன்று மூழ்கி வளப்பொருளை எடுப்பது போன்று முயன்றும் பொருள் கொள்ளலாம்.

'செய்யுள், பா, பாட்டு' எனப்படுபவைதாம் 'கவிதை' எனப்படுவதும். கவிதை இலக்கண அமைப்பு உடையதே. பாரதியாரும் பாவேந்தர் பாரதிதாசனாரும் செய்யுள் இலக்கணம் வழுவாது எழுதினர். அவர்தம் செய்யுள்களும் பாக்களும் பாட்டும் 'பாரதியார்கவிதைகள்', 'பாரதிதாசன் கவிதைகள்' எனக் கவிதைப்பெயரில் வழங்கப்படுகின்றன.

பொதுவான ஒரு கருத்து, 'செய்யுளைப் பாடுபவன் புலவன்; கவிதை எழுதுபவன் கவிஞன் என்பது. இதற்கு மாற்றாக ஓர் அமைதி சொல்வதுபோன்று திருஞானசம்பந்தர் "உரவார் கலையின் **கவிதைப் புலவர்**"என்று "கவிதைப் புலவர்" என்னும் தொடரை வழங்கினார்.

ஒரு கருத்திற்குப் பழமைச்சொல்லும் இருக்கும். புதுமையாகச் சொல்லாக்கமும் அமையும். இவ்விரண்டையும் சங்க இலக்கியங்களிற் காணலாம்.

**கவிதை - சங்கச்சொல்**

'செய்யுள், பா, பாட்டு' என்னும் பழமைச் சொற்களை தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் காண்கிறோம். சொல்லாக்கமான 'கவிதை' என்னும் சொல்லை முதன்முதலில் பரிபாடல் காட்டுகிறது.வையை ஆற்றைப் பாடிய ஆசிரியர் நல்லந்துவனார் என்பார்,

**"புலவர்புல**
**நாவிற் புனைந்த நன்கவிதை"**

என்று பாடினார். இதிலுள்ள 'கவிதை' என்னும் சொல் அக்காலப் புதுமைப் படைப்புச் சொல். புலவர் புலமையால் பாடும் செய்யுளுக்குத்தான் 'கவிதை' என்னும் சொல்லை ஆக்குவதாக ஆசிரியர் நல்லந்துவனார் "புலவர்,புலம்" எனும் இரண்டு சொற்களையும் முன்னே வைத்துள்ளார்.

இதற்குப் பொருள் விரித்த பரிமேலழகரும்,

"கவிதை-கவியின் தன்மை. அஃது ஈண்டு செய்யுள் மேல் நின்றது" என்றார். இது, 'செய்யுள்' என்னும் சொல்லுக்குரிய மாற்றுச் சொல்லாகக் 'கவிதை' என்பதைக் காட்டியதாகும்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான சிறுபஞ்ச மூலத்தில்,( .காரியாசன் : சிறுபஞ்சமூலம் - 12)

**"செந்தமிழதேற்றாதான் கவிசெயல்**
**நாடின் நகை"**

என்பதில் 'கவி' என்னும் சொல் உள்ளது. இதனை எழுதியவர் காரியாசான் என்பவர்.

**கவிதை - தமிழ்ச்சொல்**

'கவிதை, கவி'- என்னும் சொற்கள் பற்றி ஓர் ஐயம் எழலாம். பரிபாடலிலும், மாமூலத்திலும் பல வட சொற்கள் உள்ளன. அவைபோன்று 'இவையிரண்டும் வடசொற்கள் ஆகாவோ(?) என்று வினவலாம். இந்த ஐயம் தோன்றி, நிலைத்து, உறுதியான முடிவாக வடமொழிதான் என்று இக்காலத்தில் கருதப்படுகிறது.

பாரதிதாசனார் புரட்சிக் கவிஞர் என்று புகழப் பட்டவர். இப்புகழ் மொழியில் உள்ள 'கவிஞர்' என்பதை வடமொழியாகக் கொண்டு அதனை அவருக்கு வழங்க மனமின்றி 'பா வேந்தர்'என்று புகழப்படுகிறார். ஆனால், பாவேந்தராம் புரட்சிக் கவிஞர் அவர்களே 'கவிதை' தமிழ்ச்சொல் என்று எழுதினார். அவர் கருத்தின்படியும் 'கவிதை' என்பது தமிழ்ச் சொல்லே. எவ்வாறு?

'கவிதை' என்னும் தமிழ்ச் சொல்லிற்குப் பகுதி 'கவி'. இதற்கு மூலச்சொல் 'கவ்' என்பது 'கவ்' என்றால் கவ்வுதல், கவர்தல் கவர்ச்சித்தல் எனப் பொருள்படும். இதற்குத் திருவள்ளுவரே சான்று தந்தார்:
"கவ்வையால் கவ்விது காமம்" (1144) என்னும் தொடரில் 'கவ்' **இரண்டு இடங்களைப் பிடித்துள்ளது.** முதலில் உள்ள 'கவ்வை' என்பதற்குத் 'துன்பம்' என்று பொருள். அஃதாவது கவ்வுதலால் ஏற்படும் மனத்துன்பம். இக்குறட்பாவில் கவ்விய, 'அலர்' என்னும் பழிச்சொல்லும் துன்பத்தைக் குறிக்கும். இரண்டாவதாக உள்ள 'கவ்' என்பது கவர்ச்சியுள்ளது; 'கவர்ச்சியால் இன்பம் தருவது' என்னும் பொருள் காட்டுவது.
இஃது இ என்னும் இறுதி இணைந்து 'கவி' என்னும் சொல்லாயிற்று, செவ் + இ = செவி: குவ்+இ = குவி (குவியல்); புவ்+இ = புவி என்றெல்லாம் ஆனமை போன்று 'கவி' உருப்பெற்றது. ('பௌவம்' என்னும் தமிழ்ச் சொல்லுக்குக் 'கடல்' என்று பொருள். பௌவம், 'புவ்வம்' என்றாகும். "புவ்வத்-தாமரை"[1] என்று (. இளம்பெருவழுதியார்: பரிபாடல்-15-49.) பாடப்பட்டுள்ளது). 'புவ்' என்னும் கடல் நீரை உடையது புவி.

இச்சான்றுகளால் 'கவி' என்னும் சொல் தமிழ்ச்சொல். 'கவி' என்பது இடையில் 'த்' என்னும் எழுத்துப்பேறு பெற்று ஐ இறுதியாகக் 'கவிதை' என்னும் சொல் ஆக்கம் பெற்றது. கவ்விக் கவரும் தன்மையை உடையது 'கவிதை'; தன் சொற்சுவையால் படிப்போர் உள்ளத்தைக் கவ்விக் கவர்வதை உடையது 'கவிதை'.
'த்+ஐ=தை' என்று முடிவுறும் சொற்களாக ஓதை,'அகுதை, மருதை, சிவதை' என்னும் சொற்கள் தமிழில் உள்ளமையும் சான்றாகும். மொழி மூல அடித்தளத்தாலும், சொல் இலக்கண அமைப்பாலும், சொல்லாக்கக் கருத்தாலும் 'கவிதை' என்னும் சொல் புத்தாக்கமான தமிழ்ச் சொல்லேயாகும். இது செய்யுளையும் பாவையும் பாட்டையும் குறிக்கும்.

**கவிதையும் பாவும்**

இக்காலத்தில் கவிதையுடன் பிற சொற்களும் எந்த அளவில் வழக்கில் உள்ளன? புலவர்களில் சிலரே செய்யுள் என்னும் சொல்லை வழங்குகின்றனர். தனித்தமிழ் உணர்வுடையோர் 'கவிதை' என்னும் சொல்லை வடசொல் என்று கருதுகின்றனர், எனவே, பா, பாட்டு இரண்டையும் கொண்டுள்ளனர். பெரும்பாலோர் 'கவிதை' என்பதையே வழங்குகின்றனர். இன்று ஆட்சி செய்வது கவிதையே.
இக்காலச் சூழலில் 'செய்யுள், பா' என்பன இலக்கணச் செறிவு உடையவை என்றும், முயன்று பொருள் காணப்பட வேண்டியவை என்றும் கருதப்படுவனவாகும். கவிதை "எளிமையானது, சுவையுள்ளது" என்று கொள்ளப்படுகிறது.
செய்யுளையும் கவிதையையும் ஈடுகட்டிப் பார்க்க வேண்டும்.

மயிலின் கால் அடிக்கும் நொச்சி இலைக்கும் மாற்றி மாற்றி உவமைகளை இரண்டு இலக்கியங்களில் காண முடிகிறது.

**"மயிலடி இலைய மாக்குரல் நொச்சி" (**கொல்லன்அழிசி: குறுந்தொகை - 138 – 3)
இது குறுந்தொகை என்னும் சங்க இலக்கியச் செய்யுள்.
**"நொச்சிப் பாசிலை அன்ன பைந்தாள் மஞ்சை"**/center>
இது திருவிளையாடற் புராணச் செய்யுள்.( பரஞ்சோதி முனிவர்: திருவிளை - இந்திரன் பழிதீர்த்த படலம் - 74 - 1.)

'நொச்சி இலைபோல் மயிலின் கால்' இது நம் காலத்துக் கவிஞர் சுரதா அவர்களின் கவிதை.

முன்னர் செய்யுளாகக் காணப்படுபவற்றுள் உள்ள உவமைக் கருத்தே இங்குக் கவிதை எனப்படுகிறது. இவ் உவமையைப் பாடியதைக் கருதியும் கவிஞர் சுரதா "உவமைக் கவிஞர்' என்று பாராட்டப்பட்டார்.

மற்றொன்று: குளத்து நீரில் செக்கச் சிவந்த ஆம்பல் பூத்ததை முத்தொள்ளாயிர வெண்பாச் செய்யுள், "வெள்ளம் தீப்பட்டது" என்கின்றது. இக்காலப் புதுக்கவிதை ஒன்று முத்தொள்ளாயிரத் தொடரை வட மொழியில் மொழி பெயர்த்தது போன்று,

"ஜலத்தின் ஜுவாலைகள்" என்கின்றது. இதனைப் புதுக்கவிதை என்பர்.

எனவே, ஒரே வகைக் கருத்து அவ்வக்காலத்தில் வழங்கிய சொல்லாட்சிகளாலும், தொடர் அமைப்புகளாலும் 'செய்யுள்' என்ற பெயரையும் 'கவிதை' என்ற பெயரையும் பெறுகின்றதைக் காண்கிறோம்.

## திருவள்ளுவமும் கவிதை நூல்

இவற்றைக் கொண்டு நோக்கினால் 'தம்கால வழக்குச் சொல்லில் எளிமையாக படித்ததும் கருத்தையும் சுவை நயத்தையும் அறிந்து கொள்ளும் கவர்ச்சியுடையது கவிதை என்றாகிறது.

திருவள்ளுவர்தம் திருக்குறள் படைப்பில் செய்யுள் பாங்கும் உள்ளது; கவிதைப் பாங்கும் உள்ளது.

**"முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற பேதை பெருமழைக் கண்" (1239)**

இக்குறளில், முயக்கு, தண்வளி, போழ, பசப்பு' என்னும் இலக்கியச் சொற்கள் கூர்ந்து பொருள் காணப்பட வேண்டியவை. இவற்றாலும், உள்ளீடான கருத்தாலும் இக்குறள் ஆழ்ந்து கண்டு பொருள் காணும் பாங்குடையதா கிறது. இது செய்யுட் பாங்கு.

இதே கண்ணைப் பற்றிக் குறள் ஒன்று உள்ளது. காதலி தன் காதலனை நோக்கி ஒடும் தன் நெஞ்சைப் பார்த்துப் பேசுகின்றாள்; 'நெஞ்சே! என் கண்ணையும் கொண்டு செல்' என்பவள் அதற்குக் காரணமும் கூறுகிறாள்:

**"கண்ணும் கொளச்சேறி நெஞ்சே; அவைஎன்னைத் தின்னும் அவர்க்காணல் உற்று"(1244)**

இக்குறளில் ' என் கண்கள் அவரைக் காணும் துடிப்பில் என்னைக் கடித்துத் தின்னுகின்றன' என்கின்றாள்: 'தின்னும்' என்ற ஒரு சொல்லே சுவையை அள்ளித் தந்து நம்மை மகிழவைக்கிறது. இது கவிதைப் பாங்கு.

எனவே, திருவள்ளுவத்தில் இது போன்று கவிதைப் பாங்குகள் மிக மிக உள்ளன. கவிதையைப் பாடுபவர் கவிஞர்; திருவள்ளுவரும் கவிஞர் ஆகிறார்.

கவிஞர் - சொல்லமைப்பு

'கவிதை' தமிழ்ச்சொல் என்று காணப்பட்டது. 'கவிஞர்' என்னும் சொல் தமிழ்ப்பாங்கில் உருவானதையும் காணவேண்டும்.

இச்சொல் கவி+ஞ்+அர் என்பதன் கூட்டு உருவம். இடையில் உள்ள 'ஞ்' எழுத்துப்பேறு எனப்படும். கவி(ய்)அ 'கவியர்' என்று தான் வரவேண்டும். இதில் இடை யில்உள்ள 'ய்' உடம்படுமெய் எனப்படும். இது போன்றே அறி+அர்-அறிவர், இளை+ அர்-இளையர், கிளை+அர்-கிளையர், வினை+அர்-வினையர், வலை+அர்-வலையர் என வரும். இவ்வாறும் இலக்கியங்களில் உள்ளன.

இவற்றுடன்,அறிஞர், இளைஞர் கிளைஞர், வினைஞர், வலைஞர் எனச் சங்க இலக்கியங்களில் அமைந்துள்ளன. இவற்றுள் ல், ய், என்னும் உடம்படுமெய்களுக்கு மாற்றாக 'ஞ்' அமைந்துள்ளது. இவ்வமைப்பால் 'ஞ்' அமைந்த சொற்கள் ஒரு தனி இன்னோசையுடன் ஒரு மெருகுப் பாங்கு பெற்றன. ஞ் அந்த மெருகுப் பாங்கைத் தருகிறது.

இவை போன்றே கவியர் என்பது கவிஞர் என்று சுவையுள்ள மெருகுச் சொல்லாகியது. தமிழ்ப் பண்பாட்டு மொழியமைப்பையும் கொண்டது.

எனவே, திருவள்ளுவர் கவிதைப்பாங்கில் குறட் பாக்களைப் படைத்திருப்பதால் நல்ல மெருகுத் தமிழ்ச் சொல்லாம் 'கவிஞர்' என்பதை அடைமொழியாக்கிக் 'கவிஞர் திருவள்ளுவர் என்று போற்றுவது பொருத்தமே.

# குறள் நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

மின்னிதழ்:21 ஐப்பசி-15 -தி.பி.2052 நவம்பர்-1- பொ.ஆ.2021



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



புலவர் குழந்தை
(1.7.1906--- 24.9.1972)

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்பெறும் இணையத் திங்களிருமுறை—

பொறுப்பாசிரியர்-மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்-முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ்-விற்பனைக்கு அல்ல

‘செந்தமிழ்க்குழந்தை’

பள்ளி சென்று படித்தகாலம் ஐந்து  ஆண்டு எட்டுமாதம்தான்! ஆனால் திருக்குறளுக்கும், தொல்காப்பியத்துக்கும் உரை எழுதி, பேரிலக்கியம் ஒன்றைப் படைத்து, நாடகக்காப்பியம் உருவாக்கிப் பல இலக்கணநூல்களையும், வரலாற்றுநூல்களையும் எழுதியவர் பெரும்புலவர் அ.மு. குழந்தை. ஈரோடு மாவட்டம் அறச்சலூரை அடுத்த ஓலவலசில் 1.7.1906 அன்று முத்துசாமிக்கவுண்டர், சின்னம்மையார் தம்பதியினருக்கு ஒரே மகனாகப் பிறந்தவர் குழந்தைசாமி; பின்பு  தன்னைக் ‘குழந்தை’ என்றே குறிப்பிட்டுக் கொண்டார்.

ஈரோடு லண்டன்மிஷன் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் “எலிமெண்டரிகிரேடு”, “லோயர்கிரேடு”, ஹையர்கிரேடு” ஆசிரியர் பயிற்சி பெற்ற அவர் திருவையாறு சென்று தேர்வு எழுதி 1934இல் ‘வித்துவான்’ பட்டம்பெற்றார். மொத்தம் 39 ஆண்டுகள் ஆசிரியப்பணி புரிந்தார். பவானி மாவட்டக்கழக உயர்நிலைப்பள்ளியில் மட்டும் தொடர்ந்து 21 ஆண்டுகள் பணிபுரிந்தார்.

தொடக்ககாலத்தில் கன்னியம்மன் சிந்து, வீரக்குமாரசாமி காவடிச்சிந்து, ரதோற்சவச்சிந்து போன்ற பக்திப்பாடல்களைப் பாடினாலும் 1925க்குப் பின் பெரியாரின் பெருந்தொண்டராகவே விளங்கினார்.

‘தமிழர்பண்பாட்டுக்குச் சான்றாக விளங்கும் நூல் திருக்குறள்; அது மனிதவாழ்வின் சட்டநூல்’ என்ற கொள்கையுடைய குழந்தை1943, 1948 ஆம்ஆண்டுகளில் நடைபெற்ற திருக்குறள் மாநாடுகளில் பெரும்பங்காற்றினார். தான் எழுதிய பள்ளிப்பாடநூல்களுக்கு ‘வள்ளுவர்வாசகம்’ வள்ளுவர்இலக்கணம்’ என்றுபெயரிட்டார். வள்ளுவர் பதிப்பகம் வைத்துப் பல நூல்களை வெளியிட்டார். அவற்றுள் பெரியார் நூல்கள் நான்கு.

பள்ளிக்கு வெளியேவந்தவுடன் கருப்புச்சட்டை அணிந்து கடவுள்மறுப்பாளராக விளங்கினாலும் பள்ளிப்பாடங்களில் உள்ள பக்திப்பாடல்களை மிகவும் சுவைபட நடத்துவார். தான் இயற்றிய ‘யாப்பதிகாரம்’ ‘தொடையதிகாரம்’ போன்ற நூல்களில் திருஞானசம்பந்தர் தேவாரப்பாடல்கள் பலவற்றை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

அரசியல்அரங்கம், நெருஞ்சிப்பழம், காமஞ்சரி, உலகப்பெரியோன்கென்னடி, திருநணாச்சிலேடைவெண்பா, புலவர்குழந்தைபாடல்கள்போன்றவைகவிதைநூல்கள், ‘காமஞ்சரி’ பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் மனோன்மணியத்திற்குப் பின்வந்த மிகச் சிறப்பான நாடகக்காப்பியம் ஆகும்.

தொல்காப்பியர்காலத்தமிழர், திருக்குறளும்பரிமேலழகரும், பூவாமுல்லை, கொங்குநாட்டுவரலாறு, தமிழகவரலாறு, தமிழ்வாழ்க, தீரன்சின்னமலை,

கொங்குக்குலமணிகள், கொங்குநாடும்தமிழும், அருந்தமிழ்அமுது, சங்கத்தமிழ்ச்செல்வம், அண்ணல்காந்தி ஆகியவை உரைநடைநூல்கள்.

‘தமிழ்வாழ்க’ நாடகமாக நடிக்கப்பட்டது. தீரன்சின்னமலை பற்றி முதன்முதலில் நூல் எழுதி அவர் வரலாற்றை வெளிக்கொணர்ந்தவர் புலவர்குழந்தை.

தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்குப் புதிய எளிய உரை எழுதினார். திருக்குறளுக்குப் புத்துரை எழுதியதுடன் தமிழில் வெளிவந்த அனைத்து நீதிநூல்களையும் தொகுத்து உரையுடன் “நீதிக்களஞ்சியம்” என்ற பெயரில் பெருநூலாக வெளியிட்டார்.

தமிழ் அறிந்தவர்கள் அனைவரும்கவிஞராக ‘யாப்பதிகாரம்’, ‘தொடையதிகாரம்’ என்ற யாப்புநூல்களை எழுதினார். கும்மி, சிந்து ஆகியவற்றிற்கும் யாப்பிலக்கணம் வகுத்துள்ளார். இலக்கணம் கற்க நன்னூல் போல ஒருநூல் இயற்றி ‘இன்னூல்’ என்றுபெயரிட்டார். ‘வேளாளர்’ ‘தமிழோசை’ போன்றஇதழ்களையும்நடத்தினார்.

வகுப்பில் பாடம் நடத்தும் போது பாடல்களை அதற்குரிய ஓசைநயத்துடன் ஒலிப்பார். உரைநடை போலத் தமிழாசிரியர்கள் பாடல்களைப் படிக்கக்கூடாது என்பது அவருடைய கருத்தாகும். தமிழைப் பிழையாகப் பேசினாலோ, எழுதினாலோ கண்டிப்பார்.

ஈரோட்டில் வாழ்ந்த மேனாட்டுத்தமிழறிஞர் ‘பாப்லி’லியுடன்நெருங்கிப்பழகியவர். அவரைப் பற்றிப் ‘பாப்புலி வெண்பா’ என்ற நூலே எழுதியுள்ளார்.

அவர் படைப்பில் தலையாயது ‘இராவணகாவியம்’ ஆகும். பெயரே அதன் பொருளை விளக்கும். 5 காண்டங்கள், 57 படலங்கள், 3100 பாடல்கள்.

இந்நூல் 1946-ல் வெளிவந்தது. பின் அதற்குத் தடைவிதிக்கப்பட்டது. தடை நீங்கி 1971-ல் இரண்டாம் பதிப்பும் 1994-ல் மூன்றாம் பதிப்பும் வெளிவந்தது. அண்மையில் நான்காம் பதிப்பைச் சாரதாபதிப்பகம்(சென்னை- 14) வெளியிட்டுள்ளது.

மிகச் சிறந்த நயமுடைய இராவணகாவியத்தைக் கம்பனில் முழுஈடுபாடு கொண்ட அறிஞர்களும் பாராட்டியுள்ளனர். ‘கம்பன் கவிதையில் கட்டுண்டு கிடந்தேன். இராவணகாவியம் அக்கட்டை அவிழ்த்துவிட்டது’ என்றுரா.பி.சேதுப்பிள்ளைகூறினார். கம்பர்அன்பர் ஐயன்பெருமாள்கோனார் ‘இனியொரு கம்பன் வருவானோ? இப்படியும் கவிதை தருவானோ? ஆம், கம்பனே வந்தான்; கவிதையும் தந்தான்’ என்று புலவர் குழந்தையைப் பாராட்டுவார்.

அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா.அப்புசாமி போன்றோரின் துணையுடன் அரிய செய்திகள் சேகரித்துத் ‘திராவிடகாவியம்’ பாடமுயன்றபோது 24.9.1972 அன்று புலவர் குழந்தை மறைந்தார். பாரதிதாசன் ‘செந்தமிழ்க்குழந்தை’ என்று பாராட்டியது போலத் தமிழாக வாழ்ந்த அவருடைய நூற்றாண்டு நிறைவுநாள்1.7.2006 தமிழகத்திலும் மலேயாவிலும் நடத்தப்பட்டது. மலேயா கிள்ளாங் நகரில் இந்து இளைஞர் இயக்கம் நடத்திய புலவர்குழந்தை நூற்றாண்டுவிழாவில் சிறப்புரை நிகழ்த்தத் தமிழ்நாட்டிலிருந்து பேராசிரியர் மறைமலை இலக்குவனார் அழைக்கப்பட்டார்.மலேயாப் புலவர் சீனிநயினார் முகமது அவர்களே இவ் விழாவுக்கு அமைப்பாளராக விளங்கினார்.

## பரிமேலழகர் உரை-வள்ளுவம் மறைக்கும் திரை

-புலவர் குழந்தை அவர்களின் ஆய்வுரை

[தலைப்பு எம்மால் இடப்பட்டது.புலவர் குழந்தை அவர்களின் "திருக்குறளும் பரிமேலழகரும் " என்னும் நூலில் "மாறுபட்ட உரை" "என்னும் தலைப்பில் அமைந்த ஏழாம் இயலே இங்கு வெளியிடப்பட்டுள்ளது.]

பரிமேலழகர் பெரும்பாலும் தமது கொள்கையை வலிந்து புகுத்துதலேயன்றிப் பல குறட்பாக்களுக்கு ஆசிரியர் கருத்துக்கு மாறாகவும் உரை யெழுதியுள்ளார். உள்ளபடியே ஆசிரியர் கருத்துக்கும், தமிழர் பண்பாட்டுக்கும் மாறுபட்ட உரையைத் தெரிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும்.

1. "சிறப்பீனும் செல்வமு மீனும் அறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு." *(31)*

சிறப்பு ஈனும் - சிறப்பையும் கொடுக்கும், செல்வமும் ஈனும்- செல்வத்தையும் கொடுக்கும், அறத்தின் ஊங்கு - ஆதலால் அறத்தை விட, உயிர்க்கு ஆக்கம் எவன் - மக்களுக்கு வேறு சிறப்பு என்ன? ஒன்றுமில்லை. சிறப்பு - மதிப்பு.

பரி : `சிறப்பு ஈனும் - வீடு பேற்றையும் தரும், செல்வமும் ஈனும் - துறக்க முதலிய செல்வத்தையும் தரும், உயிர்க்கு அறத்தின் ஊங்கு ஆக்கம் எவன் - ஆதலான் உயிர்கட்கு அறத்தின் மிக்க ஆக்கம் யாது?

எல்லாப் பேற்றினும் சிறந்தமையின் வீடு சிறப்பெனப்பட்டது.

துறக்கம் - சுவர்க்கம், வானுலகம். `அறன்வலி யுறுத்தல்'என்னும் அதிகாரத்தில் வீட்டுக்கும் துறக்கத்திற்கும் இடமேது? அறம் செய்வன தவிர்வன என்பதை மறந்தார் போலும்!

**2. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.** ***(212)***

**தாள் ஆற்றித் தந்த பொருளெல்லாம் - ஒருவன் முய**ன்று ஈட்டிய பொருளெல்லாம், தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு - தகுதியுடையார்க்கு உதவுவதற்காகவே.

தாள் - முயற்சி. தக்கார் - ஓயாது உடல் தேய உழைத்தும் உண்ண உணவும், உடுக்க உடையும், உறையக் குடிசையும் இல்லாத ஏழைப் பாட்டாளி மக்கள். உலக வாழ்க்கையின் அச்சாணி போன்ற ஏழைப் பாட்டாளி மக்களே ஏற்கத்தக்கவராவர். அன்னார் ஓயா உழைப்பால் வந்ததே செல்வரின் செல்வமாதலான் அப் பாட்டாளி மக்களுக்குக் கொடுத்தலே செல்வர் கடமையாகும். வேளாண்மை - உதவி.

பரி : `தக்கார்க்கு - தகுதியுடையார்க்காயின், தாள் ஆற்றித் தந்த பொருளெல்லாம் - முயறலைச்செய் தீட்டிய பொருள் முழுவதும், வேளாண்மை செய்தற் பொருட்டு - ஒப்புரவு செய்தற் பயத்தவாம்'.

தகுதியுடைய செல்வர்களேதான் ஒப்புரவு செய்வாராகலின், தக்கார் - தகுதியுடைய செல்வர் எனக் கொள்வதில் பயன் இல்லை. தக்கார்க்குக் கொடுத்தற் பொருட்டு என்பதே நேர் பொருள்கோள்.

3. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு. *(234)*

நிலவரை நீள்புகழ் ஆற்றின் - நிலமுழுவதும் ஒருவன் நெடிய புகழைச் செய்வானாயின், புத்தேளுலகு புலவரைப் போற்றாது - வானுலகம் தேவர்களைப் போற்றாது.

புலவர் - தேவர். தேவருலகம் அங்கு வாழும் தேவரைப் போற்றாது மிகுபுகழுடைய இவனையே போற்றும் என்பதாம். புகழுடையோரை வெளியுலகும் புகழும்.

பரி : `புத்தேள் உலகு புலவரைப் போற்றாது - புத்தேளுலகம் அவனை யல்லது தன்னை எய்தி நின்ற ஞானிகளைப் பேணாது. புகழுடம்பான் இவ்வுலகும் புத்தேளுடம்பான் அவ் வுலகும் ஒருங்கெய்தாமையின். அவன் (புகழுடையவன்) இரண்டுலகும் ஒருங்கெய்துவன்'.

புலவர் - ஞானிகள் எனவும், அவர் வானுலகை அடைவர் எனவும் கூறுதல், ஞானிகள் வீடடைவர் என்பதற்கு மாறுகொளக் கூறலாம். இங்கே ஞானிகளுக்கு யாதொரு தொடர்பும் இல்லை. ஓரூரில் புதிதாகக் குடியேறினவன், அவ்வூர்த் தலைவனின் செல்வாக்குப் பெற்றால், அவ்வூர் மக்கள் ஊர்த் தலைவனைப் போற்றாது அப் புதியவனையே போற்றுதல் இன்றுங் காணலாம். மாவலியின் புகழால் தேவர்கள் அவனைப் புகழத் தலைப்பட்டதனாலேயே இந்திரன் பொறாமை கொண்டு அவனைக் கொல்வித்தான் என்பது புராணம்.

4. தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது. *(262)*

தவமும் தவமுடையார்க்கு ஆகும் - துறவுபூண்டு நோன்பு நோற்றலும் இல்லற வொழுக்கங்களை நன்கு கடைப்பிடித்து ஒழுகியவர்க்கே முடியும், அஃதிலார் அதனை மேற் கொள்வது அவம் - அம் முற்றவம் இல்லாதவர் அதை மேற்கொள்வது வீணாகும்.

இல்லறவொழுக்கங்களை நன்கு கடைப்பிடித்து ஒழுகாதவர் மேற்கொண்டு செய்யும் தவங்கள் தப்புமாகை யால், `தவமும் தவமுடையார்க்காகும்'என்றார். இல்லறம் நன்கியாற்றித் துறவறம் பயில வேண்டும். இல்லையேல், இல்லறத்தாசை யுண்டாகும்.

பரி : `தவமும் தவமுடையார்க்கு ஆகும் - பயனே யன்றித் தவந்தானும் உண்டாவது முற்றவ முடையார்க்கே, அதனை அஃதிலார் மேற்கொள்வது அவம் - ஆகலான், அத் தவத்தை அம் முற்றவ மில்லாதார் முயல்வதும் பயனின் முயற்சியாம்'.

`பயனேயன்றி'என்பதால் முற்றவம் என்பது முற்பிறப்பில் செய்த தவத்தைக் குறிக்கும். முற்பிறப்பில் தவம் செய்த வர்க்கே இப் பிறப்பில் தவம் ஆகும் என்பது, முற்றவமில்லார் முயலுதல் வீண் என்று, அதிகாரத்தோடு மாறுபடுதல் காண்க.

5. வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
மீண்டு முயலப் படும். *(265)*

வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் - விரும்பியவற்றை விரும்பியபடியே அடைதலால், செய்தவம் மீண்டும் முயலப் படும் - செய்கின்ற தவம் மேன்மேலும் முயற்சிக்கப்படும். வேண்டிய வேண்டியாங் கெய்தல் 42, 264-ஆம் குறள் - குழந்தை யுரை பார்க்க. (துறவிகளுக்கு இல்லறத்தார் வேண்டிய உதவி செய்யப் பெறுவதால் அவர் எண்ணியதைச் செய்ய வல்லவரா கின்றனர். 264 குழந்தை)

பரி : `வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் - முயன்றால் மறுமைக்கண் தாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால், செய்தவம் ஈண்டு முயலப்படும் - செய்யப்படுவதாகிய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும். மேற்கதி, வீடு பேறுகள் தவத்தானன்றி எய்தப்படா வென்பதாம்.

மேற்கதி - உயர்பிறப்பு. இது தவத்தின்கண் சோர் வில்லாமல் முயலவேண்டும் என்பதேயன்றி மறுமைப்பயன் குறித்ததன்று. 264-ஆம் குறளுக்கு இது மாறுபட்ட கருத்தாகும். தவம் செய்வது இம்மையிலேயேயாகலான் `ஈண்டு'என்ற பாடம் பயனில்லதாகும்.

6. எள்ளாமை வேண்டுவா னென்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. *(281)*

எள்ளாமை வேண்டுவான் என்பான் - பிறரால் இகழா மையை விரும்புவோ னென்பான், எனைத் தொன்றும் கள்ளாமை தன் நெஞ்சு காக்க - யாதொரு பொருளையும் திருட நினையாதபடி தன் நெஞ்சைக் காக்கக் கடவன். திருடுவோனை உலகத்தார் இகழ்வர்.

பரி : எள்ளாமை வேண்டுவான் என்பான் - வீட்டினை இகழாது விரும்புவான் இவனென்று தவத்தோரான் நன்கு மதிக்கப்படுவான், எனைத்தொன்றும் கள்ளாமை தன் நெஞ்சு காக்க - யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை தன் நெஞ் சினைக் காக்க.

`வீட்டினை இகழ்தலாவது - காட்சியே அளவையாவ தொன்றும், நிலம் நீர் தீ வளி யெனப் பூதம் நான்கே யென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றிப் பிரிவான் மாய்வ தாய உடம்பின் கண்ணே அறிவு மதுவின் கட் களிப்புப்போல வெளிப்பட்டு அழியு மென்றும், இறந்தவுயிர் பின் பிறவா தென்றும், இன்பமும் பொருளும் ஒருவனாற் செய்யப்படுவன வென்றும் சொல்லும் உலோகாயத முதலிய மயக்க நூல்களைத் தெளிந்து, அதற்கேற்ப வொழுகுதல்'.

இங்கு வீடு என்னும் சொல்லுக்கு இடமே இல்லை. மேலும், இது பிற சமய மறுப்புரையேயன்றி இக் குறளின் விரிவுரையன்று. கள்ளத்தனத்தை இகழுதல் உலகோரே யன்றித் தவத்தோரன்று.

7. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை. *(325)*

நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம் - தீமை நிலைக்கு அஞ்சி அத்தீமையை விட்டவர்கள் எல்லோரினும், கொலை யஞ்சிக் கொல்லாமை சூழ்வான்தலை - கொலைப் பழிக்கு அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தைக் கருதுபவன் முதன்மை யானவன்.

தீமைநிலை - தீமை புரிந்து வாழுநிலை. தீமைகளுக்கு அஞ்சி அவற்றை விட்டவர் பலரினும், கொலைக்கஞ்சிக் கொலையை விட்டவரே சிறந்தவராவர். `ஒழுக்கத்து நீத்தார்' (21) என்னும் குறளுரை பார்க்க.

பரி : `நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் - பிறப்பு நின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப் பொருட்டு மனைவாழ்க்கையைத் துறந்தாரெல்லாருள்ளும், பிறப்பு நின்ற நிலையாவது - இயங்குவ, நிற்ப என்னும் இருவகைப் பிறப்பினும் இன்பமென்பதொன்றின்றி உள்ளன வெல்லாம் துன்பமே யாய நிலைமை'.

நிற்ப - மரவகை. மரஞ்செடி கொடிகளுக்குத் துன்ப நிலை தெரியுமெனின், அவையேன் யோக ஞானங்களெய்திப் பிறப்பறுக்க முயலுவதில்லை! இது, உலக வாழ்வே துன்பநிலை யென்னும் சமயக் கருத்தேயாகும்.

8.நன்றாகு மாக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை. *(328)*

நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் - வேள்விக் கண் கொன்றால், நன்மையைத் தரும் செல்வம் பெரிது ஆகும் என்று பிறர் கூறினும், கொன்று ஆகும் ஆக்கம் சான்றோர்க்குக் கடை - ஓர் உயிரைக் கொல்வதால் வரும் செல்வம் பேரறிஞர்க்கு இழிந்ததாகும்.

நன்று ஆகும் ஆக்கம் - நன்மையைத் தரும் வேள்விப் பயன். இது வேள்வி மறுப்பு.

பரி : `நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் - தேவர் பொருட்டு வேள்விக்கண் கொன்றால் இன்பமிகும் செல்வம் பெரிதாமென்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும், சான்றோர்க்குக் கொன்றாகும் ஆக்கம் கடை - துறவா னமைந்தார்க்கு ஒருயிரைக் கொல்ல வரும் செல்வம் கடை. இன்ப மிகுஞ் செல்வமாவது - தாமும் தேவராய்த் துறக்கத்துச் சென்றெய்தும் செல்வம்'.

இல்லறத்தோர் வேள்வி செய்தல் உண்டெனக் கூறுதல் ஆரியக் கொள்கையே யாகும். தமிழர்க்கு வேள்வியுடன் பாடன்று. வேள்விப்பயன் தேவனாகித் துறக்கமடைத லென்பதும் அக்கொள்கையே.

பரி : `கொலைவினையர் (329) என்றதனால், வேள்விக் கண் கொலையன்மை யறிக'.

`வேள்விக்காகவே பிரமனால் படைக்கப் பட்டிருக்கின்றன. அந்த வேள்வி செய்தால் உலகமெல்லாம் நன்மை யடைகின்றது. ஆகையால், வேள்வியில் செய்யும் உயிர்க்கொலை கொலையாக மாட்டாது.

(மனு, அ-5. சு-39)

என்பதற்கு மாறுபட்டதாகும்.

10. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. *(350)*

பற்றற்றான் பற்றினைப் பற்றுக - பற்றற்றவனது அன்பை மனத்துட் கொள்க, பற்றுவிடற்கு அப்பற்றைப் பற்றுக - ஆசையை ஒழித்தற்கு அவ்வன்பையே உறுதியாகக் கொள்க.

முற்றத் துறந்தவரது அன்பே பற்றறுதற்குக் ஏதுவாகும். பழக்கம் பற்றறற்குக் காரணமாம்.

பரி : 'பற்று அற்றான் பற்றினைப் பற்றுக - எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை இதுவே நன்னெறி யென்று மனத்துட் கொள்க, அப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு - கொண்டு, அதன்கண் உபாயத்தை மனத்தாற் செய்க, விடாது வந்த பற்று விடுதற்கு.

அதன்கண் உபாயமென்றது - தியான சமாதிகளை. விடாதுவந்த பற்றென்பது - அநாதியாய் வரும் உடம்பின் பற்றினை'.

அநாதி - தொன்று தொட்டு. இறைவன் ஏன் பற்றற வேண்டும்? வீடடைவதற்கா? பற்று அற்றான் பற்று என்பதற்கு - இறைவன் ஓதிய வீட்டு நெறி என்பது பொருந்தாவுரையே யாகும். உடம்பிற்பற்று - உடம்பின் மீதுள்ள பற்று. இங்குப் பொருட் பற்றே யன்றி உடம்பிற் பற்றன்று. உண்மைத் துறவிகளிடம் அன்பு கொள்ளுதல் பற்றறுதற்குக் காரணம் ஆகும் என்பதே கருத்தாகும்.

11. பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானா மாணாப் பிறப்பு. *(351)*

பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளான் - மெய்ப்பொரு ளல்லாதவற்றை மெய்ப்பொருள் என்று எண்ணும் மயக்க அறிவினையுடையவன், மாணாப் பிறப்பு ஆகும் - மாண்பில்லாத பிறப்பினன் ஆவான்.

மருள் - மயக்க வுணர்வு. பொய்ப் பொருளை மெய்ப் பொருளென்று உணர்பவன் இழிந்தவனாவான்.

பரி : `பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளான் ஆம்-மெய்ப்பொரு ளல்லாதவற்றை மெய்ப் பொருள் என்று உணரும் விபரீத உணர்வானே உளதாம், மாணாப் பிறப்பு - இன்ப மல்லாத பிறப்பு.

அவ் விபரீதவுணர்வாவது - மறுபிறப்பும், இரு வினைப் பயனும், கடவுளும் இல்லையெனவும், மற்றுமித் தன்மையவும் சொல்லும் மயக்க நூல் வழக்குகளை மெய்ந் நூல் வழக்கெனத் துணிதல். நரகர், விலங்கு, மக்கள், தேவர் என்னும் நால்வகைப் பிறப்பினுமுள்ளது துன்பமேயாகலின், `மாணாப் பிறப்பு'என்றார்',

இது பிற மத நூற் கொள்கை மறுப்பே யாகும். மயக்கவுணர்வான் துன்பப் பிறப்பு உண்டாகு மென்பது சமயக் கருத்து. நால்வகைப் பிறப்பினும் துன்பம் எனின், உலகத்தைக் கடவுள் எதற்காகப் படைத்தனர்? அல்லது இன்பப் படைப் பாகவே படைத்திருக்கலாமே? இங்கு ஒன்றை மற்றொன்றாக உணரும் மயக்கவுணர்வு பற்றியதே யன்றி பிறப்புக்கு இங்கு

இடமில்லை. மயக்கவுணர்வினன் துறவுக்குத் தகுதி யுடையவனல்லன் என்பதே நேர்பொருளாகும்.

12. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். *(388)*

முறை செய்து காப்பாற்றும் மன்னவன் - குற்றஞ் செய்தாரைத் தண்டித்து முறை செய்து, நாட்டு மக்களைக் காக்கும் அரசன், மக்கட்கு இறை என்று கருதப்படுவான் - தலைவன் என்று மக்களால் மதிக்கப்படுவோனே நல்ல அரசனாவான்.

பரி : `முறை செய்து காப்பாற்று மன்னவன் - தான் முறை செய்து பிறர் நலியாமல் காத்தலையும் செய்யும் அரசன், மக்கட்கு இறை யென்று வைக்கப்படும் - பிறப்பான் மகனே யாயினும், செயலான் மக்கட்குக் கடவுளென்று வேறு வைக்கப்படும்'.

தான் முறை செய்து பிறர் நலியாமல் என்பது இரு வகைப்பட்ட பொருளே இறை - கடவுளெனில், இறை மாட்சி - கடவுளின் மாட்சியா? முறை செய்து காப்பாற்று வோனை மக்கள் தம் தலைவனாகக் கொள்வர் என்பதே நேர்பொருள்.

13. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. *(413)*

செவியுணவின் கேள்வி உடையார் - செவியுணவாகிய கேள்வியினையுடையார், நிலத்து அவியுணவின் ஆன்றா ரோடு ஒப்பர் - நிலத்தில் குறைந்த உணவினை யுடைய நிறைந்த அறிவினை யுடையாரை யொப்பர்.

அவிதல் - குறைதல். ஆன்றோர்கள் நிறையுணவினை விரும்பாது குறையுணவுண்டு, புலனடக்கிப் புத்தொளி பெறுவா ராகையால், `அவியுணவின் ஆன்றோர்'என்றார். கேள்விச் செல்வமுடையோர் ஆன்றோர் போல மதிக்கப் படுவர்.

பரி : நிலத்து அவியுணவின் ஆன்றாரோடு ஒப்பர் - நிலத்தின் கண்ண ராயினும் அவியுண வினையுடைய தேவரோ டொப்பர். துன்ப மறியாமையால் தேவரோடொப்பர் என்றுங் கூறினார்'.

`அவி சொரிந்து' (259) என்னும் குறளில் வள்ளுவர் வேள்வியை மறுப்பதால், அவியுணவினையுடைய தேவர் சிறந்த வரெனக் கூறார். தேவர்கள் பொறாமையே உருவானவராகை யால் துன்பமறியாதவர் என்பது எங்ஙனம் பொருந்தும்?

14. உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். *(442)*

உற்ற நோய் நீக்கி - தனக்கு உற்ற துன்பத்தை நீக்கி, உறாமை முன் காக்கும் பெற்றியார் - அது பின்னும் உறாமல் முன்னறிந்து காக்கும் தன்மையரை, பேணிக்கொளல் - விரும்பித் துணையாகக் கொள்க.

வந்த துன்பத்தை நீக்கி, அது பின்னர் வராமல் காக்கும் பெரியாரைத் துணைக்கொள்ள வேண்டும்.

பரி : `உற்ற நோய் நீக்கி - தெய்வத்தானாக, மக்களானாகத் தனக்கு வந்த துன்பங்களை நீக்குமாறறிந்து நீக்கி, உறாமை முற்காக்கும் பெற்றியார் - பின் அப் பெற்றியன வாரா வண்ணம் முன்னறிந்து காக்கவல்ல தன்மையினை யுடையாரை, பேணிக்கொளல் - அரசன் அவர் உவப்பன செய்து துணைக்கொள்க.

தெய்வத்தான் வருந் துன்பங்களாவன - மழையின தின்மை மிகுதிகளாயினும், காற்றுத் தீப் பிணியென் றிவற்றானும் வருவன. அவை கடவுளரையும் தக்கோரையும் நோக்கிச் செய்யுஞ் சாந்திகளான் நீக்கப்படும்'.

இது ஆரியக் கொள்கை, வருணசெபம் செய்தல் போன்ற பித்தலாட்டங்களை அறிக. நோய் என்பதற்குத் துன்பம் என்னும் பொருளிருக்க, இவ்வாறு கூறுதல் மாறுகொளக் கூறுதலே யாகும். `ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையும் கூறியவா றாயிற்று'வள்ளுவர் புரோகிதரென்னும் பெயரையோ, கருத்தையோ கூறாமலிருக்க, இங்கு புரோகிதரைப் பெரியோ ரெனல் பொருந்தாது.

15. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல். *(543)*

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது - அறவோர் செய்த நூலுக்கும், அந்நூலில் கூறப்படும் அறத்திற்கும் அடிப்படையாய் நின்றது, மன்னவன் கோல் - அரசனது செங்கோல்.

அரசன் முறை செய்யாவிட்டால் அறவோரின் நூல்களைப் போற்றுவோரும், அறத்தைக் கடைப்பிடித்து நடப்பாரும் நாட்டில் குறைவாராதலால், அவ் விரண்டிற்கும் அடிப்படையாய் நிற்பது மன்னவன் கோல் என்றார். அறவோர் நூல் செய்யவும் முடியாதென்பதாம்.

பரி : `அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது - அந்தணர்க் குறித்தாய வேதத்திற்கும், அதனாற் சொல்லப்பட்ட அறத்திற்கும் காரணமாய் நிலைபெற்றது, மன்னவன் கோல் - அரசனாற் செலுத்தப்படுகின்ற செங்கோல்'.

வேதமும் அதனாற் கூறப்படும் அறமும் தமிழர்க் கேலாமையின் இவ் வுரை பொருந்தாது. வேதங்கள் கூறும் அறங்கள் என்ன? வேள்விகள் செய்யும் முறையும், பகைவரைக் கொல்ல வேண்டும் என்னும் வேண்டுகோளுந்தானே? இவற்றைத் தமிழரசர் எதற்காகக் காக்க வேண்டும்? வேதமும் அறமும் அநாதி என்பதும் பொருந்தாக் கூற்றே.

16. ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின். *(560)*

காவலன் காவான் எனின் - அரசன் முறை செய்யா னாயின், ஆபயன் குன்றும் - அவன் நாட்டின்கண் வாழும் மக்களது முயற்சியால் ஆகும் பலன் குறையப் பெறும், அறுதொழிலோர் நூல் மறப்பர் - முதன்மையான தொழிலுடையோர் தம் தொழிலுக் குரிய அறிவை மறந்து விடுவர்.

ஆபயன் - வினைத்தொகை. ஆகின்ற பயன். ஆ - ஆதல். அறுதொழில் - அறுத்த தொழில். அறுத்தல் - அறுதி செய்தல், வரையறை செய்தல், இன்றியமையாத சிறந்த

தொழிலென அறுதி செய்யப்பட்ட தொழில்கள். அவை உழவு, வாணிகம், நெசவு, தச்சு, கொல் முதலிய முதன்மையான தொழில்கள். கொடுங் கோலரசன் நாட்டில் அமைதியிராதாகையால் இத்தொழில்கள் ஒழுங்காக நடைபெறாவென்பதாம். மறத்தல் - முயன்று செய்யாமை. நூல் - அத்தொழில்களின் நுட்ப அறிவை யுணர்த்திற்று. அறு தொழில் - வினைத்தொகை.

பரி : `காவலன் காவான் எனின் - காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவானயின், ஆபயன் குன்றும் - அறனில்லாத அவனாட்டுப் பசுக்களும் பால் குன்றும், அறுதொழிலோர் நூல் மறப்பர் - அந்தணரும் நூல்களை மறந்துவிடுவர்.

பசுக்கள் பால் குன்றியவழி அவிஇன்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரம் கற்பம் என்ப ஓதாமையானும் வேள்வி நடவாதாம். வானம் பெயலொல்லா என்பதாயிற்று?

அறனில்லாதவன் நாட்டுப் பசுக்கள் பால் குறையுமென்பது புராணக் கூற்று. அவி - வேள்வித்தீயில் ஊற்றும் நெய் முதலியன. அவி - தேவருணவு. வேள்வியால் மழை பெய்யும் என்பது ஆரியக் கொள்கை. பிராமணர் வேதமோதல் தமிழ் மரபன்று.

17. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. *(716)*

வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு - விரிந்த நூற்பொருளைக் கேட்டு அறியவல்லவர் முன்னிலையில் குற்றமுண்டாகும்படி சொல்லுதல், ஆற்றின் நிலை தளர்ந்து அற்று - நல்வழியில் நின்றவன் அதினின்றும் தவறியது போலும்.

நல்லவழியில் நடந்தவன் தவறியது போலும் நல்லோ ரவையில் பொல்லாத சொல்லுதல்.

பரி : `ஆற்றின் நிலை தளர்ந்தற்று - வீடெய்தற் பொருட்டு நன்னெறிக்கண் நின்றானொருவன் அந்நெறியினின்றும் நிலை தளர்ந்து வீழ்ந்தா லொக்கும், வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு - அகன்ற நூற்பொருளை யுட்கொண்டு அவற்றின் மெய்ம்மை யுணர வல்லா ரவைக்கண் வல்லானொருவன் சொல்லிழுக்குப் படுதல்'.

ஆறு என்பதற்குத் துறவற நெறி என்பதும், வீடு என்பதும் வலிந்து கொண்ட பொருளே.

18. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் நிலை. *(786)*

கேடு அறியா - பயிர்நோய் முதலியவற்றால் கெடுதலை அறியாததாய், கெட்ட விடத்தும் வளங்குன்றா நாடு - ஓரிரு போகம் கெட்டதாயினும் வளங்குன்றாத நாட்டினை, நாட்டின் தலை என்ப - எல்லா நாடுகளிலும் முதன்மையான நாடென்று சொல்லுவர் அறிவுடையோர்.

ஒரு கெடுதலும் இன்றி விளையும் நாடே நன்னா டாகும். மழையின்மை, மிகுமழை, பயிர்நோய் முதலிய வற்றால் ஒன்றல்லது இரண்டு போகம் விளைவு கெட நேரினும், அதனால் உணவுத்தட்டுதல் உண்டாகாதபடி மிகுதியாக விளையும் நாடே சிறந்த நாடென்பார். `கெட்ட விடத்தும் வளங்குன்றா நாடு நாட்டின் தலை'என்றார்.

பரி : `கேடு அறியா - பகைவரால் கெடுதலறியாததாய், கெட்ட விடத்தும் வளங்குன்றாத நாடு - அரிதிற் கெட்ட தாயினும் அப்பொழுதும் தன் வளங்குன்றாத நாட்டினை, நாட்டின் தலை என்ப- எல்லா நாட்டினும் தலையென்று சொல்லுவர் நூலோர்.

கேடறியாமை - அரசனாற்றலானும், கடவுட் பூசை யறங்க ளென்றிவற்றது செயலானும் வரும்'.

பகைவரான் அழிக்கப்படின் வளங் குன்றாமை கூடாமையின் இது பொருளன்று. கடவுட் பூசை அறங்களால் நாட்டிற் பகைவர் புகாரென்பது ஆரியக் கொள்கையே.

19. பொருளானா மெல்லாமென் றியா திவறும்
மருளானா மாணாப் பிறப்பு. *(1002)*

பொருளான் எல்லாம் ஆம் என்று - பொருளினால் எல்லாம் உண்டாகும் என்று அறிந்து அதனை ஈட்டி, ஈயாது இவறும் மருளான் - பிறர்க்குக் கொடுக்காமல் கையழுத்தம் செய்யும் மயக்கத்தினால், மாணாப் பிறப்பு ஆம் - அமைதி யில்லாத வாழ்க்கை யுண்டாகும்.

பிறப்பு - பிறப்பின் பயனாக வாழ்க்கையை யுணர்த் திற்று. பொருளால் எல்லாம் உண்டாகு மென்று ஈட்டிப் பிறர்க்குக் கொடாதவர் வாழ்க்கையில் அமைதியிருக்காது.

பரி : `மாணாப் பிறப்பு ஆம் - நிறைதலில்லாத பேய்ப்பிறப்பு உண்டாகும். பேய்ப் பிறப்பு - உணவுகள் உளவாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்பு'.

இது, மறுபிறப்பென்னும் கொள்கை புகுத்தல். உலோபி கட்கு இத்தகைய பிறப்பு உண்டாகுமென்பது கற்பனையே. பிசினர்கள் வாழ்க்கையில் அமைதி இருக்காது என்பது நேர் பொருள்.

20. கருவியுங் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு. *(631)*

செய்யும் அருவினையும் - செய்யப்படும் அரிய செயலும், கருவியும் - அதற்கு வேண்டுங் கருவியும், காலமும் - காலமும், செய்கையும் மாண்டது அமைச்சு - அச் செயலைச் செய்யும் வழியையும் பொருந்த எண்ணியறிய வல்லானே அமைச்ச னாவான்.

வினை, கருவி, காலம், அவ்வினை செய்யும் வழி ஆகிய நான்கினையும் பொருந்த எண்ணி யறிய வல்லவனே அமைச்சனாவான். கருவி - பொருளும் படையும்.

பரி : `கருவியும் - வினை செய்யுங்கால் அதற்கு வேண்டும் கருவிகளும், காலமும் - அதற்கேற்ற காலமும், செய்கையும் - அது செய்யுமாறும், செய்யும் அருவினையும் - அவ்வாற்றிற் செய்யப்படும் அரிய வினைதானும், மாண்டது அமைச்சு - வாய்ப்ப எண்ண வல்லவனே அமைச்சனாவான்.

1. கருவிகள் - தானையும், பொருளும். 2. காலம் - அது தொடங்கும் காலம். செய்கை யெனவே, 3. அது தொடங்கு முபாயமும், 4. இடையூறு நீக்கி முடிவு போக்குமாறும் அடங்கின. சிறிய முயற்சியால் பெரிய பயன் தருவதென்பார் 5. அருவினை என்றார். இவை ஐந்தனையும் வடநூலார் மந்திரத்திற் கங்கமென்ப'.

மந்திரம் - அமைச்சர் குழு. குடிகாத்தல், கற்றறிதல் (632) என்பவற்றைப் பிறர் இரு பகுதியாகப் பிரிப்பதை மறுக்கும் இவர். செய்கையை இரண்டாகப் பிரிக்கிறார். உபாயத்தோடு தொடங்கி இடையூறு நீக்கி முடிப்பது தானே செய்கை?

21. வண்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. *(632)*

வன்கண் - அஞ்சாமையும், குடிகாத்தல் - குடிகளைக் காத்தலும், கற்றறிதல் - அறநூல்களைக் கற்றறிதலும், ஆள்வினை யோடு - முயற்சியும் ஆகிய நான்கும், ஐந்துடன் மாண்டது அமைச்சு - ஐம்பொறித் தூய்மையுடன் திருந்த உடையவனே அமைச்சனாவான்.

வன்கண் முதலிய நான்கும் ஐம்பொறித் தூய்மையுடன் திருந்த உடையவனே அமைச்சனாவான். வன்கண் முதலிய நான்கனோடு ஐம்பொறித் தூய்மையும் உடையவனென்க. `ஆள்வினையோடு'என்னும் ஓடு - பிரிந்து கூடும் எண்ணோடு.

பரி : `வன்கண் - வினை செய்தற்கண் அசைவின்மையும், குடிகாத்தல் - குடிகளைக் காத்தலும், கற்று அறிதல் - நீதி நூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வன அறிதலும், ஆள்வினை- முயற்சியும், ஐந்துடன் மாண்டது அமைச்சு - மேற்சொல்லிய (631 குறளில்) அவ் வங்கங்கள் ஐந்துடனே திருந்த உடையவனே அமைச்சனாவான்.

இந்நான்கனையும் மேற்கூறியவற்றோடு (631) தொகுத்துக் கூறியது, அவையும் இவற்றோடு கூடியே மாட்சிமைப்பட வேண்டு தலானும், அவற்றிற்கு ஐந்தென்னும் தொகை பெறுதற்கும். இனி, இதனை ஈண்டெண்ணிய வற்றிற்கே தொகையாக்கி, குடிகாத்தல் என்பதனைக் குடிப்பிறப்பும், அதனை யொழுக்கத்தால் காத்தலு மெனப் பிரிப்பாரும், கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலும் எனப் பிரிப்பாரு முளர்'.

ஐந்துடன் என்பதற்கு 631-ல் வரும் ஐந்துடன் எனப் பொருள் கொண்டதே தப்பு. ஒரு குறளின் பொருள், அடுத்த குறளில் தொகை பெறுதலென்பது புதுமையேயாகும். மேலும் 631-ல் நான்கு பொருள்தான் கூறப்பட்டுள்ளன. இவர் வடநூற் கொள்கையை எண்ணி ஐந்தாக வலிந்து தொகை கொண்டதேயாகும்.

22. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. *(18)*

வானம் வறக்குமேல் - மழை பெய்யாதாயின், ஈண்டு வானோர்க்கும் சிறப்பொடு பூசனை செல்லாது - இங்கு வரும் தேவர்களுக்கும் சிறப்பாக வழிபாடு நடவாது.

வழிபாடு - முகமன் - அன்போடு வரவேற்றுப் போற்றுதல். வானோர் - அயல் நாடர். வடபுலத்தாரிற் காண்க. மழை பெய்யா தாயின் அன்போடு அயலாரைப் போற்றும் தமிழர் பண்பாடாகிய அச்செயலும் நடைபெறாதென்பதாம்.

பரி : `வானோர்க்கும் ஈண்டு சிறப்பொடு பூசனை செல்லாது - தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழாவும் பூசையும் நடவாது, வானம் வறக்குமேல் - மழை பெய்யாதாயின்'.

`சிறப்பொடு'என்னும் ஓடு உடனிகழ்ச்சிப் பொருண்மைய தன்று. அன்பொடு விருந்து செய்தான் - அன்பாக விருந்து செய்தான் என்பது போல, சிறப்பாகப் பூசனை நடவாது என `ஆக'என்னும் பொருட்டு. சிறப்பு - திருவிழா எனவும், பூசனை - தினசரி நடக்கும் பூசை எனவும் கொண்டது உருவ வழிபாடு புகுத்தலேயாகும். கோயில்களில் நடக்கும் திருவிழாவையும்,

தினப் பூசையையும் வள்ளுவர் கூறியிருப்பாரானால், தமிழ் நாட்டில் உள்ள கோயில் கடவுளரை `வானோர்'என வேறு இடத்தில் உள்ளவராகக் கூறியிருக்க மாட்டார். மேலும், `ஈண்டு'என்னும் சொல் இங்குள்ள கோயிற் கடவுளரைக் குறிக்கும்போது வேண்டாச் சொல்லே யாகும். மழையின்றேல் அயல் நாடர்க்கு ஈண்டு சிறப்பாகப் பூசனை செல்லாது என்பதே நேர்பொருள். வள்ளுவர் காலத்தில் தமிழ்நாட்டில் உருவ வழிபாடு இருந் திருந்தால் கோயில் முதலியவற்றைக் கூறியிருப்பாரன்றோ? மழையின் இன்றியமையாமையை விளக்க, அயலாரை அன்போடு வரவேற்றுப் போற்றும் தமிழரது இன்றியமையாத பண்பாட்டின்மேல் வைத்துக் கூறியதேயாகும்.

**முடிவுரை :** பரிமேலழகர் உரையிலுள்ள அயற் கருத்துக்கள் முழுவதையும் ஆராயப் புகின், மணற் சோற்றில் கல்லாய்வதனோ டொக்கும். ஆனால், தமிழர் தனிச் சொத் தாகிய இன்பத்துப் பாலில் அவர் கையை வைக்கவில்லை. பொருட்பாலினும் அறத்துப் பாலிலேயே ஆரிய நஞ்சு அத்தனையுங் கலந்துவிட்டார். அதுதானே பிற்காலத் தமிழர்களை ஏமாற்ற வழி? திருக்குறள் அறத்துப்பாலில் கூறும் அறங்கள் தமிழர் அறங்கள் அல்ல. அவை ஆரியர் அறங்கள். ஆரியர் அறங்களையே வள்ளுவர் நூலாக்கி வைத்துள்ளார். ஆரியர் அறங்கள் தமிழர் அறங்களிலும் மேலானவை. அதனாலேயே பழந்தமிழர் அவற்றை மேற்கொண்டனர் எனப் பிற்காலத் தமிழர் நம்பினாற்றானே தமிழ்ப் பற்றின்றி ஆரியத்துக்கடிமையாக முடியும்? அப்போது தானே ஆரிய மக்கள் நல்வாழ்வு வாழலாம். பரிமேலழகரின் இனப்பற்றே பற்று! அது தானே தமிழர்க் கில்லை! இச்சிறு ஆராய்ச்சி நூல் தமிழர்க்கு அதை உண்டாக்குமாக. பரிமேலழகரின் மயக்க மருந்துண்டு மயங்காமல், தனித்தமிழ் முப்பாலுண்டு தமிழ் வாழ்வு வாழ்வார்களாக.

## நரைமுடி தரித்து முறை செய்த மன்னவன்!

**- வழக்கறிஞர் என்.எஸ்.ராஜன்**



திரு என் எஸ் ராஜன் (70) சிவகங்கை மாவட்டம் கோட்டையூரில் 2-3-1951ல் பிறந்தவர். சென்னையில் பட்டப் படிப்பும் சட்டக் கல்வியும் பயின்றவர். மாணவப் பருவத்தில் திராவிட இயக்கத்தின் பால் ஈர்க்கப்பட்டு பேரறிஞர் அண்ணாவுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவர். இந்தியன் வங்கியில் சட்டப்பிரிவில் உயர் அதிகாரியாக சிறப்புற பணியாற்றி விருப்ப ஓய்வு பெற்று சென்னை உயர் நீதிமன்றத்திலும் டெல்லி உச்ச நீதி மன்றத்திலும் வழக்குரைஞராக பணியாற்றியவர்.சில காலம் சென்னை சட்டக்கல்லூரியில் வருகைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர். பொது இடங்களில் புகைபிடிக்கக் கூடாது என்று முதன்முதலில் சென்னை உயர் நீதிமன்றத்தில் பொது நல வழக்கு தொடுத்தவர். தொழிலாளர் தொடர்புடைய வழக்குகளில் திறம்பட வாதாடி தக்க ஆணைகள் பெற்றுத் தந்தவர். தமிழில் சட்ட உலகம் என்ற மாத இதழ் ஆசிரியராக இருந்து நடத்தியவர்.ஆங்கில காட்சி ஊடக வாதங்களில் பங்கேற்றுள்ளார். தமிழ் இலக்கியத்தில் ஆர்வமும் அறிவும் கொண்ட இவர் திருக்குறளின் பால் கொண்ட பற்றின் காரணமாக பல கட்டுரைகளை எழுதியுள்ளார். குறள்வழி நடந்தால் நாட்டில் சட்டத்திற்கு இடம் இல்லை என்ற கருத்தைத்தமது கட்டுரைகளி வலியுறுத்தியுள்ளார்.சென்னை,அண்ணாநகரை அணிசெய்து வாழும் அறிஞர்களுள் இவரும் ஒருவர்.

சோழ வளநாடு! - பச்சைப்பட்டு விரித்ததுபோல நில வளமும், வற்றாத காவிரித்தாயின் நீர்வளமும், பசுமையான எண்ணங்கள் நிரம்பிய நேர்மையுள்ளம் கொண்ட மனித வளமும் என்று எல்லா வளங்களும் பெற்றுச் சிறந்து விளங்கிய தமிழ் பூமி!

கரிகால் சோழன் ஆண்ட நாட்கள்! “அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை” என அனைவரும் அறத்துடன் ஒன்றி வாழ்ந்த காலம்!

நீதி தவறா நெறிமுறையில், அறவழியில் ஆண்ட கரிகால் சோழன் வயதில் மிக இளையவன்.

“அறங்கூறும் அவைய”த்தில் அழகுத் திருமகனாகச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறான்!

இருபுறமும் - மதிநுட்பம் நிறைந்த அமைச்சர் பெருமக்கள்!

கல்வி, கேள்விகளில் சிறந்து மேம்பட்ட சான்றோர் பலர் மாபெரும் சபையினில் அமர்ந்திருக்க, வெண்கொற்றக் குடையின் கீழ், அழகுப் பதுமையாக - அரசருக்கு அரசனாக - நீதியில் வேந்தனாக - வயதில் மிக இளைய அந்தக் கரிகால் சோழன் அமர்ந்துள்ள அழகைக் கண்களால் கண்டு களித்தபடியே அவைக்குள் வந்தனர் அந்த இருவரும்!

அரசன் முன் வந்து நின்றனர். அரசனைக் கண்டதும் பெரிதும் வியந்தனர்!

“இந்த இளைஞனால் - வயதில் மிகச் சிறியவனான இந்த இளந்தளிரினால் நமக்கு நீதி கூற இயலுமா..?” அவர்கள் மனத்திலே உடனேயே எழுந்தது ஐயம்!

“புதையல் யாருக்குச் சொந்தம்” - என்ற வினாவிற்கு விடை கண்டிட அறங்கூறும் அவையத்திற்கு வந்த அவ்விருவரும் தங்கள் கண் இமைகளை மேலுயர்த்தி, ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்! அதில் ஒருவன் மற்றவனிடம், அவன் செவியில் மட்டும் கேட்கும்படி மெல்லிய குரலில் சொன்னான்.

“நாம் கொண்டு வந்திருக்கும் வழக்குக்கு இவனால் முடிவு சொல்ல இயலுமா? மிகவும் இளையவனாக உள்ளானே! வழக்கின் முடிவான உண்மையை ஆராயும் அறிவு நிரம்பப்

பெற்றவ னாகத் தெரியவில்லையே! மிக இளமையுடன், சிறுவயதினனாக உள்ள இவனால், நம் வழக்கிற்கு எப்படித் தீர்ப்பு சொல்ல இயலும்…”

ஒருவன் மற்றொருவன் காதில் ஏதோ மந்தணமாக முணுமுணுப்பதை அரசன் கண்டு கொண்டான்.

அரசன் கேட்டான் -

“அன்புள்ளம் கொண்டவர்களே! நீங்கள் இருவரும் ஏதோ வழக்கின் பொருட்டு இங்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. ஆனால், அதை என்னிடம் கூறாமல் உங்களுக்குள் ஏதோ கமுக்கம் பேசுகின்றீர்களே…. என்னவென்று நான் அறியலாமா..?” பணிவுடன் கேட்டான் பாராளும் மன்னன்!

வந்தவர்களில் ஒருவன் சொன்னான் -

“அரசே! சொல்லத் தயக்கமாக இருக்கிறது. தவறாக எண்ண மாட்டீர்களே..!”

“பரவாயில்லை, சொல்லுங்கள். என்னிடம் இருந்து எந்தக் கடுஞ்சொல்லும் வராது!”

இருந்தாலும், மிகுந்த தயக்கத்துடனும், அச்சத்துடனும் ஒருவன் சொன்னான் -

“அரசே! எங்கள் வழக்கு புதுமையானது! நாங்கள் இருவருமே நேர்மையே மூச்சாக வாழ்பவர்கள். எங்களுக்கு இடையே எழுந்துள்ள சிக்கலுக்குத் தீர்வு காண இங்கு வந்தோம். ஆனால், எங்களுக்குத் தீர்ப்பு கூறும் அளவுக்கு உங்களது வயது இல்லை என்று நாங்கள் ஐயம் கொண்டோம். அவ்வளவுதான்…”

அடுத்து, அவனுடன் வந்த மற்றொருவனும் சொன்னான் -

“ஆமாம்! அரசே! உங்களது இளவயது எங்களது சிக்கலைத் தீர்த்து வைக்க இயலுமா என்பதைக் கேள்விக்குறியாக்கியதாலேயே எங்களுக்குள் பேசிக் கொண்டோம்!”

சிரித்தான் அந்தச் சிம்மாசன இளைஞன்! “அப்படியா, உங்களது வழக்கைத் தீர்த்து வைக்க என்னால் இயலாது என்ற முடிவுக்கே வந்துவிட்டீர்கள் போல உள்ளது! அனுபவம் போதாது எனக்கு, என்பது, உங்கள் இருவரின் கருத்து! அதனால் என்ன? நீங்கள் இந்த அறம்கூறும் அவையத்துக்கு நாளை வாருங்கள்! வயதில் முதிர்ந்த, பட்டறிவு உள்ள, நடுவர் ஒருவர் நாளை இந்த அவையை அணிசெய்ய இருக்கிறார்! அவர் சாலச் சிறந்தவராக விளங்கி, உங்களுக்கு நல்ல தீர்ப்பு வழங்குவார்!” என்று உரைத்திட, மன்னவனை வணங்கி வெளியேறினர் அந்த இருவரும்!

மறுநாள்…

இருவரும் அறங்கூறும் அவையத்துக்கு வந்தனர்!

கொலு மண்டபத்தை அன்றைக்கு அணிசெய்தவர், வயதிலே மிக முதிர்ந்த பெரியவர் ஒருவர்! அவருடைய உருவத்தில், அவர் பழுத்த அனுபவம் மிக்கவர் என்பது தெரிந்தது! அவரது வெண்தாடி, அவரது ஆற்றலைப் பறை சாற்றியது! வெள்ளியை ஒத்த அவரது நரைமுடி அவருடைய வயதின் முதுமையை விட, அறிவின் செழுமையை அவைக்குச் சொன்னது!

வந்த இருவரும் “வணக்கம்” கூறி, அமைதியாய் நிற்க,

“வழக்கு என்ன? விளக்கமாய் சொல்லுவீர்…” என அந்த முதியவர் கேட்டார்.

வந்த இருவரும் வழக்கைச் சொன்னார்கள்.

“புதையல் எனக்கு வேண்டாம், ஐயா! நிலத்தை மட்டுமே நான் வாங்கினேன். நிலத்தடிப் பொருள் எனக்குரியதல்ல! ஆனால் இவரோ, அதை ஏற்க மறுக்கிறார்” என்று ஒருவன் கூற, அடுத்தவனும் அதுபோல் சொன்னான்!

“நீதிக்கு அரசரே! நீங்கள் சொல்லுங்கள்! அந்தப் புதையல் எனக்கு வேண்டாம்! நிலத்தை நான் விற்றதால் அன்று முதல் அதுவும், அது சார்ந்த எதுவும் எனக்கு உரியது அல்ல, அல்லவா? பின் எப்படி நான் அதை ஏற்க இயலும்?”

நீதிக்கு அரசர் அழகாகச் சிரித்தார்!

“இது அற்புதமான வழக்கு! இருவருமே புதையலை மறுக்கிறீர்கள்! பின் அது எவருக்குச் சொந்தம்? அது சரி, சற்று விளக்கமாக உங்கள் குடும்பச் சூழ்நிலையை விவரித்துக் கூறுங்கள்!”

“குடும்பச் சூழ்நிலை என்றால்...” இருவருமே ஒரே குரலில் தங்கள் ஐயப்பாட்டை வெளிப் படுத்தினர்!

“தங்கள் தங்கள் குடும்பம், வசதிகள், எத்துணைக் குழந்தைகள் என்பனவற்றை விளக்கிச் சொல்லுங்கள்...”

புதையலைப் பற்றி எதுவும் கூறாது, குடும்பத்தைப் பற்றி ஏன் கேட்கிறார் என்ற எண்ணத்தில் ஒருவன் சொன்னான்.

“ஐயா, என் குடும்பத்தில் என்னையும் சேர்த்து ஐந்து பேர்கள். நான், என் மனைவி, என் மகன், எனது வயது முதிர்ந்த தாய் தந்தையர், ஆக ஐந்து பேர்கள்...”

“உங்களுக்கு..?” மற்றவனைப் பார்த்து நீதிபதி கேட்டார்.

“என் குடும்பத்தில் நானும், என் மனைவி, மகள் மூன்றே பேர்தான்!”

“மிக்க நல்லது! உங்களுக்கு மகளுக்கு என்ன வயது?”

“என் மகளுக்கு 18 முடிந்தது இந்தச் சித்திரையுடன். மணமுடிக்க வேண்டிய வயதினள்...”

“அய்யா, உங்களுக்கு மகன் ஒருவன் இருப்பதாகச் சொன்னீர்களே! அவனுக்கு என்ன வயது?” நீதிபதி கேட்டார்.

“ஐயா, அவனுக்குத் தற்சமயம் திருமணம் பேசிக் கொண்டிருக்கிறேன். அவன் 20 வயதை அடைந்துவிட்டான்...”

“இருவருக்கும் திருமண வயதிலே மக்கள் உள்ளனர்; பிறகு என்ன? உன்னுடைய மகனுக்கு, அவரது மகளைத் திருமணம் செய்து வைத்துவிடு. அவர்களுடைய திருமணப் பரிசாக அந்தப் புதையலை அவர்களுக்கு வழங்கி விடு. இதுதான் சரியான ஒன்றாகும்.”

உரைத்த நீதி கேட்டு, வியந்து நின்றனர் இருவரும்! அவர்கள் மட்டுமா? அந்த அவையே வியந்து பாராட்டியது! பலர் கையொலி எழுப்பித் தங்கள் மகிழ்வையும் தெரிவித்தனர்.

தன்னை மறந்து சில மணித்துளிகள் செயலிழந்து நின்ற அந்த இருவரில் ஒருவன் பேசத் தொடங்கினான்...

“ஐயா, மிகச் சரியான முடிவு இது! நான் வணங்கி ஏற்கிறேன்.”

“உனது முடிவு என்ன?” - அடுத்தவனைப் பார்த்து, அவனே கேட்க,

“நானும் முழுமனத்துடன் வணங்கி, வரவேற்று ஏற்றுக் கொள்கிறேன். என் மனத்துக்கு ஒப்பிய நீதி.”

“அப்படியானால் இருவருக்கும் இசைவே! எனவே விரைந்து திருமணத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள். திருமணப் பரிசாக உங்கள் செல்வங்களுக்கு அந்தப் புதையலைக் கொடுங்கள்”- புன்னகையுடன் தன் வெண்தாடியைத் தடவிய படி, நீதியரசர் சொல்ல,

அந்த இருவரும் தங்கள் கைகளைக் குவித்து வணங்கி, நன்றி கூறத் தொடங்கினர்.

“மிக்க நன்றி ஐயா, தங்களின் தீர்ப்பு மெச்சத்தக்கது! நாங்கள் இருவரும் விரும்பி ஏற்கிறோம்!”

எங்கள் சிக்கல் இன்றே தீர்ந்தது! தங்கள் வயது மூப்பும், பட்டறிவு முதிர்ச்சியும் இந்த அருமையான தீர்ப்பை எங்களுக்கு நல்கி உள்ளன. அதனால்தான் நேற்று இங்கு வீற்றிருந்த இளையவரிடம் எங்கள் ஐயப்பாட்டை வெளிப்படுத்தி, அவரால் இந்தச் சிக்கலுக்கு இப்படி ஒரு தீர்வு கிட்டாது என்ற எண்ணத்தில் இன்று வந்தோம்! இன்று நாங்கள் தங்களிடம் நல்ல தீர்ப்பு பெற்றோம்! தீர்வு கிடைத்தது, மிக்க நன்றி! நாங்கள் வருகிறோம்.”

வணங்கிக் குனிந்த அவர்கள், பின் நிமிர்ந்தபோது, அவையில் பலர் சிரிக்கக் கண் டனர். என்னவென்று அறியாமல், அவர்கள் விழித்தபோது, அமைச்சர் எழுந்து சொன்னார்,

“அன்புள்ளம் கொண்டவர்களே! அங்கே அமர்ந்திருப்பது யார் என்று தெரியுமா? நேற்று நீங்கள் வந்தபோது இருந்த அதே இளைஞர்தான்! அவர்தான் நமது மாமன்னர் கரிகால் சோழப் பெருந்தகை! அவருடைய இளமையில், நீங்கள் முதிர்ந்த அறிவும், தேர்ந்த முறையும் கிடைக்காது என்று எண்ணி ஐயம் கொண்டீர்கள்! உங்களது ஐயத்தைப் போக்கி, உங்கள் உள்ளம் உவப்ப, நீதி சொல்லவே நமது மன்னர் இங்கே நரைமுடி தரித்து, முதியவராகத் தோற்றமளித்து வீற்றிருக்கிறார்.”

அமைச்சர் சொன்னதும் அவையே வியந்தது! அனைவரும் எழுந்து வாழ்த்தொலி எழுப்பி, அரசனைப் புகழ்ந்தனர்! அதன்பின் நரைமுடி நீக்கித் தன் வெண்தாடியைக் களைந்து, தன் வேடத்தை விட்டு வெளியே வந்தார், புவி புகழ்ந்த மாமன்னன்!

அழகால் மட்டுமன்றி, அறிவிலும் பொலிவுற்ற அந்த இளஞ்சூரியனைக் கண்களால் அளந்த இருவரும், ஒரு நொடிப் பொழுது எதுவும் செய்ய இயலாது, சொல்லவும் “நா” எழாது, திகைத்து நிற்க,

பின், ஒருசேர இருவரும்,

மன்னன் காலடியில் வீழ்ந்து வணங்கினர்!

“தேவர் திருவுருவே! எங்கள் இனிய மன்னவனே! பார் புகழும் நீதி வேந்தரே! சோழகுலம் தழைக்கவந்த மாமணியே! எங்களை மன்னித் தருள வேண்டும்...”

இது தவிர, வேறு என்ன வார்த்தைகளை அவர்களால் கூற இயலும்?

உரை முடிவு காணான் இளமையோன் என்ற
நரை முதுமக்கள் உவப்ப - நரை முடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன்....

-பழமொழி நானூறு, 6 - வது பாடல்.(உரை முடிவு காணான்- வழக்கின் முடிவான உண்மையை ஆராயும் அறிவு நிரம்பப் பெறாதவன். இளமையோன் - சிறுவயதினன். நரை முதுமக்கள் உவப்ப - முதியோர் இருவரும் மனம் மகிழும்படி. நரை முடித்துச் சொல்லால் முறை செய்தான் சோழன் - அவர்கள் கூறிய சொற்களைக் கொண்டே நீதி வழங்கினான் சோழன்.)

பண்டைய தமிழகத்தில் எப்படி, அன்புடன், பண்புடன், அறிவுடன், ஆற்றலுடன், மனி தாபிமான நோக்குடன், வழக்கின் இருசாராரும் ஒப்பும்படி, நீதி வழங்கப்பட்டது என்பதற்கு இந்தக் காட்சியே ஒரு சான்று!



-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

மின்னிதழ்:22 ஐப்பசி-30-தி.பி.2052 நவம்பர்-16- பொ.ஆ..2021

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்






**17/11/1909-3/9/1973**

## இலக்குவனார் இயக்கம்

## தமிழியக்கத்திற்கு ஒரு வரைவிலக்கணம்

**(உள்ளே)**

**உலகத் திருக்குறள் இணையவழிக் கல்விக் கழகத்தால் வெளியிடப்படும் இணையத் திங்களிருமுறை—பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்- இணையாசிரியர்:பேராசிரியர் தமிழியலன்**

# இலக்குவனார் இயக்கம் தமிழியக்கத்திற்கு ஒரு வரைவிலக்கணம்

தமது உயிரியக்கமே தமிழியக்கமாகக் கொண்டு வாழ்ந்த ஒரே பேராசிரியர் சி.இலக்குவனார் என்பது வரலாறு.பள்ளியிறுதி வகுப்பில் சிறந்த மதிப்பெண்கள் பெற்றவர் தமிழ்ப்புலவர் வகுப்பில் சேர்ந்து தமிழ் பயின்று தமிழ்த்தொண்டு புரியவேண்டும் என்னும் ஒரே குறிக்கோள் கொண்டு திருவையாறு அரசர் கல்லூரியில் சேர்ந்து புலவர்பட்டம் பெற்று ஆசிரியப் பணியேற்றார் படிக்கும்போதே "எழிலரசி அல்லது காதலி வெற்றி " என்னும் குறுங்காப்பியத்தைப் படைத்து 1933-ஆம் ஆண்டு தாமே வெளியிட்டார்.மணிமேகலைக் காப்பியம் போன்று யாக்கப்பெற்ற இக் குறுங்காப்பியம் பகுத்தறிவு,பெண்ணியம்,சமவுடைமை ஆகிய கோட்பாடுகளைக் காப்பியநிகழ்வுகளோடும் காப்பியமாந்தர் செயல்களோடும் பின்னிப் பிணைந்து எதிரொலித்தது.இருபதாம் நுற்றாண்டின் முன்னோடிக் குறுங்காப்பியம் என்னும் பெருமைமிக்கது இந் நூல்.

புலவர் மாணாக்கராக இருந்தபோதே வாரவிடுமுறை நாள்களிலும் பருவவிடுமுறை நாள்களிலும் அக்கம்பக்கத்தில் உள்ள சிற்றூர்களுகுச் சென்று திருக்குறள்வகுப்பு நடத்தினார்.பின்னாளில் ஈ.வெ.ரா.கல்லூரி,கிருட்டிணகிரி அரசினர் கல்லூரி ஆகியவற்றின் கல்லூரி முதல்வராகப் பணியாற்றிய மேசர்.அ.கிருட்டிணமுர்த்தி, பின்னாளில் மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனத்தின் இளைய சன்னிதானமாகிய திரு.முருக.இலக்குவன் என்னும் இருவரும் இலக்குவனாருடன் இணைபிரியாது உடன்சென்று இலக்கியப்பணியாற்றுவதில் ஆர்வம் காட்டினர்.

மாணவப் பருவத்திலேயே புதுக்கோட்டை அரசர் நடத்திய "ஒன்பான் இரவு"(நவராத்திரி) திருவிழாவுக்குச் சென்றார். அங்கே நடந்த புலமைப்போட்டியில் கலந்துகொண்டு தாம் இயற்றிய கவிதைக்காக புலமைப்பரிசில் (வித்வத் சன்மான்) பெற்றார்.அரசர் வழங்கிய தொகை முப்பது ரூபா.(முப்பதுகளில் அத்தொகை பெரிய தொகையே.)

இப்படிப் படிக்கும்பொதே பட்டை தீட்டிய வைரமென மிளிர்ந்த இலக்குவச்செம்மல் தமிழாசிரியப் பணியேற்றதும் குன்றிடை விளக்காக மிளிர்ந்தார்.பள்ளிப்பருவத்திலே தம் ஆசான் சாமி.சிதம்பரனார் மூலம் பெரியாரிய நெறியில் வழிகாட்டப்பட்டு பகுத்தறிவுப் பாதையில் பீடுநடை பயின்ற இலக்குவனார் பின்னர் புலவர் கல்லூரியிலும் ஆசிரியப்

பணியிலும் கொள்கையிலிருந்து சற்றும் வழுவாது தன்மதிப்பியக்க அடலேறாகத் திகழ்ந்தார்

நாட்டாண்மைக்கழகப் பள்ளியோ (District Board school) ஆளும் பேராயக்கட்சியின் பிடியில்.இலக்குவனாரோ பள்ளிப் பணிநேரம் முடிந்தபின் மாலைநேரத் திராவிடர் கழகப் பொழிவாளர்.1937-இல் ஆட்சியைக் கைப்பற்றியிருந்த பேராயக்கட்சியினர் இலக்குவனார் மீது கடும் குற்றச்சாற்றுகளைக் கூறினர்.நாட்டாண்மைக்கழகத் தலைவர் நாடிமுத்துப் பிள்ளை பழுத்த பேராயக்கட்சிப் பெருந்தலைவர்.ஆனால் எதனையும் நீதிவழுவாது அணுகவேண்டும் என்பதில் கடைப்பிடியாக இருந்த தலைவர் நாடிமுத்துப் பிள்ளை தலைமையாசிரியரிடம் உசாவினார். “இலக்குவனார் பள்ளிப்பணியில் காலந்தவறாமை,மாணவரிடம் கட்டுப்பாடும் ஒழுங்கமைதியும் காத்தல்,பாடங்களை மாணவர் மனங்கொள்ளுமாறு கற்பித்தல் என்னும் ஆசிரியர்க்குரிய கடமைகளில் அணுவளவும் பிறழாது தலைசிறந்த ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார்.பிற நேரங்களில் அவர் எந்தக் கூட்டத்திற்குச் செல்கிறார் என்பது பற்றி இதுவரை தெரியாது.ஆயின் அரசு உசாவலின் பொருட்டு அக் கூட்டங்கள் பற்றி ஆய்ந்தபொழுது திருக்குறள்,சங்க இலக்கியம்,சிலப்பதிகாரம் போன்ற செவ்விலக்கியங்களையே இக் கூட்டங்களில் பேசுவதனை அறிந்தோம்.பள்ளிநேரத்திற்குப் பின்பும் தமிழ்க்கல்வி பரப்பும் ஆசிரியர் மீது நடவடிக்கையா? ;ஆசிரியர்க்குப் பாராட்டே வழங்கவேண்டும்.“என நடுநிலை தவறாத தலைமையாசிரியர் அறிக்கை அனுப்பிவிட்டார்.அதன்பின் இலக்குவனார் மீது குற்றசாற்று கூறிவரும் மடல்களைக் கிழித்தெறியுமாறு நாட்டாண்மைக்கழகத் தலைவர் கூறிவிட்டார்.இதனால் சீற்றம் உற்ற பேராயக்கட்சியினர் தலைவர் அலுவலகத்திற்கு வந்து நேரிலேயே முறையிடத் தொடங்கிவிட்டனர். “இலக்குவன் இளம்வயதில் இந்த மாவட்டத்திலேயே சிறந்த தமிழாசிரியராகப் பணியாற்றிவருகிறார்.அவருடைய தமிழ்ப் புலமையில் உங்களால் ஏதாவது குறைகாணமுடியுமா?அவர் வகுப்புகளுக்கு ஒழுங்காக வரவில்லையென்றோ காலந்தாழ்த்துப் பள்ளிக்கு வருவதாகவோ பாடத்தை விடுத்துப் பொதுச்செய்திகளை வகுப்பில் கூறுவதாகவோ உங்களால் கூறமுடியுமா?வீணாக என்னை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? “ என்று கேட்டும் அமைதியுறாத கட்சியினர்க்காக அவரை இடமாற்றம் செய்தார்.குடவாசலிலிருந்து திருவாரூர்க்கு,அங்கிருந்து நன்னிலத்திற்கு.

இந்த வரலாறெல்லாம் இப்போது விரித்துரைக்கக் காரணம் என்ன? இலக்குவனாரின் தமிழியக்கச் செயல்முறை எப்படி அமைந்ததெனக் கூறுவதற்காகத் தான் இங்கே இவற்றை விரித்துரைக்க நேர்ந்தது.

“எழுதுதற்கு ஏடும் பேசுதற்கு மேடையும் எப்போதும் வேண்டும் தமிழ் பரப்ப “என்பதுதான் இலக்குவனாரின் அணுகுமுறை;செயல்திட்டம்.

1936-இல் பணிக்கு வந்த நாள்முதல் தாம் பணியாற்றிய பள்ளிகளில் ஆண்டுக்கு ஐந்துவிழாக்கள் தவறாமல் கொண்டாடுவார்.அவை: தொல்காப்பியர் விழா,திருவள்ளுவர் விழா,இளங்கோ விழா,ஔவையார்விழா,தமிழ் மறுமலர்ச்சி விழா; இந்த விழாக்களுக்கெல்லாம் தங்கள் பெற்றோரை மாணவர்கள் அழைத்துவரவேண்டும்.தமிழுணர்வைப் பரப்புதற்காக மட்டுமே இவ் விழாக்களை நட்த்துவதாகக் கருதிவிடக்கூடாது.ஆசிரியர்,பெற்றோர்,மாணவர் என்னும் முத்தரப்பினரும் இவ்வாறு அடிக்கடிச் சந்தித்துக்கொள்வதால் மாணவரிடையே கட்டுப்பாடும் பள்ளியில் நல்லிணக்கமும் நிலவும் என இலக்குவனார் கூறினார்.பெற்றோர்-ஆசிரியர்-மாணவர் சங்கம் அரும்பாத அக் காலத்தில் இலக்குவனாரின் இந்தக் கருத்து பெரிதும் வரவேற்கப்பட்டது.பின்னாளில் தாம் பணியாற்றிய கல்லூரிகளிலும் இத்தகைய விழாக்களை சிறப்பாக நடத்தினார்.தமிழ்நாட்டிலேயே இராசராசனுக்கு முதலில் விழா நடத்தியவர் இலக்குவனார்தான்.1959-ஆம் ஆண்டு தியாகராசர் கல்லூரியில் நடத்தப்பட்ட இராசராசன் விழாவை மகிழ்வோடு வாழ்த்தி ஔவை.தி.க.சண்முகம் அவர்கள் மடல் அனுப்பினார். நடத்துகின்ற விழாக்களில் குற்றம் சாற்ற முடியாத பேராயக் கட்சியினர் **நடத்தாத விழாக்களுக்காக** இலக்குவனார் மீது நடவடிக்கை வேண்டினர்.ஆம்!

“பாரதியார்க்கு ஏன் விழா நடத்தவில்லை?கம்பருக்கு ஏன் விழா நடத்தவில்லை?இவர் கருஞ்சட்டைக்காரர்.கல்லூரியில் இவரை விட்டுவைத்தால் பிள்ளைகள் கெட்டுப் போய்விடுவார்கள்.உடனே பதவியிலிருந்து நீக்கவேண்டும். “என்று முறையீடுகள் பறந்தன பொதுக் கல்வி இயக்குநருக்கு.(D.P.I.)பேராயக் கட்சி மடலடுக்குகளில் அனுப்பப்பட்ட அந்த முறையீடுகளை உசாவல் கூட நடத்தாமல் அப்படியே ஏற்றுக்கொண்டு அந்த அதிகாரியும் இலக்குவனார் மீது நடவடிக்கை எடுக்குமாறு கல்லூரி மேலாண்மைக்குழுவுக்கு மடல் அனுப்பினார்.ஆனால் கல்லூரி மேலாண்மைக்குழு “கல்லூரி சிறப்பாக நடப்பதற்கும் மாணவர்கள் சிறந்த மதிப்பெண் பெற்று முன்னணிக்கு வருவதற்கும் இலக்குவனாரும் ஒரு காரணம்;எனவே அவர்மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கமுடியாது “ என மறுத்துவிட்டது.

மக்கள் மன்றத்தில் செல்வாக்குப் பெற்றுத் தேர்தலில் சிறப்பான வெற்றி அடைந்து ஆட்சியைக் கைப்பற்றும் வலிமை வாய்ந்த ,ஆளும் கட்சி என்னும் சிறப்பைப் பெற்ற ஒரு கட்சி,நான்கு சுவர்களுக்குள் விழாவை நடத்தும் பேராசிரியருக்கு ஏன் அஞ்சவேண்டும்?

இலக்குவனார் நடத்தும் தமிழ்விழாக்களில் மாணவர்கள் எண்ணிக்கை அளவுக்கு நகர்ப்பெருமக்களும் கலந்துகொள்வார்கள்.ஒவ்வொரு தமிழ்விழாவும் ஒருதமிழ் மாநாடு

போல் எழுச்சியும் கிளர்ச்சியும் நிறைந்துவிளங்கும்.தமிழ்ப்பற்றோ தமிழ் உணர்வோ இல்லாத கட்சியினர் இதனைத் தமக்கு எதிராகத் திரளும் கூட்டமாக ஐயுற்று மருண்டுவிட்டதே அவர்களின் அச்சத்திற்கும் எதிர்ப்புக்கும் காரணமாகிவிட்டது.

1949-இல் விருதுநகரில் இலக்குவனார் முன்னின்று நட்த்திய திருக்குறள் மாநாட்டில் பாவேந்தர்,நாவலர் சோமசுந்தரபாரதியார்,பெரியார் ஆகிய முப்பெரும் தலைவர்களை சாரட்டு வண்டியில் ஏற்றி ஊர்வலம் வரச் செய்த தகைமை இன்றளவும் பாராட்டத் தக்க சிறப்பையுடையது.

1957-ஆம் ஆண்டு நாகர்கோவில் தெ.தி.இந்துக்கல்லூரியில் இலக்குவனார் நடத்திய திருவள்ளுவர் விழாவுக்கு வந்திருந்த முத்தம்ழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள் யானைமேல் திருக்குறளை ஏற்றித் தேசிய மாணவர் அணிவகுப்பும் நகர்மக்கள் ஊர்வலமும் முன்னேசெல்ல மாணவர் கூட்டம் பின்னே செல்ல நடந்த சிறப்பைக் கண்டு மகிழ்ந்து அதுபோன்றே அடுத்த ஆண்டில் தஞ்சையில் யானைமேல் பாவேந்தரை ஏற்றி நகர்மகளை அணிவகுக்கச்செய்து புலவர்குழுவிழாவை நடத்தினார் என்னும் ஒரு செய்தி போதும் இலக்குவனார் விழா நடத்தும் மாண்பைக் கூறுதற்கு!

உடல்நலிந்து மருத்துவமனை சென்றகாலம் வரை அதாவது தம் மறைவுக்கு ஒரு திங்கள் முன்னர் வரை அவர் விழாக்களுக்குச் செல்லாத நாள் அல்லது கூட்ட்த்திற்குச் செல்லாத நாள் என்று எதுவும் இல்லை.பணியிலிருந்து ஓய்வுபெற்றுத் தாம் இறக்கும்வரை எவ்வித ஓய்வூதியமும் அவர் பெறவில்லை.அரசு அலுவலகம் பல சிக்கல்களை எழுப்பி அவர் ஓய்வூதியம் பெற இயலாமல் தடைக்கல்லாக விளங்கியது.ஆனால் தாம் செல்லும் கூட்டங்களுக்கு எவ்வித மதிப்பூதியமும் பெறாமல் தம் உடல்நலனையும் புறந்தள்ளி அவர் கூட்டங்களுக்குச் சென்றுவந்தமை “எழுதுதற்கு ஏடும் பேசுதற்கு மேடையும் எப்போதும் வேண்டும் தமிழ் பரப்ப “ என்னும் அவரது செயல்திட்டத்திற்காகவே.

ஓர் அரசியல்தலைவரைப் போலத் தமது சொற்பொழிவுத் திட்ட அட்டவணையைத் திராவிட இயக்க இதழ்களில் வெளியிட்டு அனைவர்க்கும் தெரியப்படுத்துவார்.இத்தகைய செயல் திட்டத்தை அந் நாளில் முன்னணித் தலைவர்களிடம் கூடக் காண இயலாது.

“எழுதுதற்கு ஏடு” “தேவை என்றவர் தாமே இதழ் நடத்தித் தமிழ் மறுமலர்ச்சி தழைக்கச்செயல்பட்டார்.1946-இல் சங்க இலக்கியம் தொடங்கி 1973-இல் தமிழ்முனை என்று தம் மறைவுக்காலம் வரை இதழ் நடத்திவந்தார்.

இந்தியாவில் எந்த மொழியின் பேராசிரியரும் இப்படி இறக்கும்வரை இதழ் நடத்தி மக்களை அணுகியதாகக் கூற இயலாது.1966 சூன் முதல் திசம்பர் வரை குறள்நெறியை நாளிதழாக நடத்தி இந்தியாவிலேயே நாளிதழ் நடத்திய முதல் பேராசிரியர் என்னும் வரலாற்றையும் ஏற்படுத்தியுள்ளார்.

தமிழ்வகுப்புகளில் பிரசன்ட் என்று ஆங்கிலத்திலும் ஆசர் என்று உருதுவிலும் வருகைப்பதிவு வழங்கிய நிலையை மாற்றி “உளேன் ஐயா “ எனத் தண்ணார்தமிழ்ச்சொல்லை வழங்கிய அத் தகைமையாளரைத் தமிழியக்க நூற்றாண்டு நடத்தியவர்கள் புறக்கணித்த கொடுமை ஆறா வடுவாய் நெஞ்சை அறுக்கிறது.யாரையாவது நலம் உசாவி அறியும் வேளையில் “அவர் எப்படி இருக்கிறார்?தமிழ் உணர்வோடு இருக்கிறாரா? “என்றுதான் கேட்பார்.

கல்லூரிப்பணி,மாலைநேர இலவச வகுப்புகள் நடத்தல்,ஊர்களுக்குச் சென்று தமிழ்ப்பொழிவாற்றுதல், இதழ் நடத்துதல்,ஆய்வுநூல்களை இயற்றி வெளியிடல் என்று பலமுனைகளில் மாணவர்களையும் மக்களையும் அணுகித் தமிழ்மொழியையும் இலக்கியங்களையும் விரிவாக அறிமுகப்படுத்திய செயல்வீரர் இலக்குவனார் “நாமார்க்கும் குடி அல்லோம் நமனை அஞ்சோம் “ என்னும் நாவுக்கரசர் நெறி நின்று அஞ்சாநெஞ்சுடன் தமிழ்ப்பகையைத் தறுகண்மையுடன் எதிர்த்தார். “கெடலெங்கே தமிழின் நலம்?அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்வோம் “என்பதே தம் வாழ்வுநெறியாக வாழ்ந்து வழிகாட்டிக் கொண்டிருக்கிறார்.

ஆம்.தமிழியக்கத்திற்கு ஒரு வரைவிலக்கணமாகத் திகழ்வது இலக்குவனாரின் வாழ்வியக்கம்தான்.

## பசுமையான நினைவுகள்

2/2/1965 மாலை 5/30 இருக்கும்.திருப்பரங்குன்றம் பேருந்து நிலையத்திற்குஎதிரில், மலைப்பாதையில் அமைந்திருந்த “குறள்நெறி அச்சகம்” பரபரப்பாக இயங்கிக்கொண்டிருந்தது.அந்த இந்திஎதிர்ப்புக் கொந்தளிப்புச் சூழலில் அடுத்துவரும் இதழ் அச்சாகிக்கொண்டுள்ளது.முந்தைய நாள் திருப்பரங்குன்றம் தியாகராசர் பொறியியற்கல்லூரியில் காவல்துறையினர் அத்துமீறி நுழைந்து மாணவர்கள் மீது தடியடித்தாக்குதல் நடத்திய கொடுமையை விளக்கும் மாணவர் கையறிக்கை ஒன்று அப்போதுதான் அச்சுப்பொறியில் (டிரெடில்) ஏற்றப்பட்டிருந்தது.

வரவேற்பறையாகச் செயல்பட்ட முன்னறையில் மேலாளர் இருக்கையின் எதிரே என் தந்தையார் அமர்ந்திருந்தார்.நான் பொறி இயங்கும் உள்கூடத்திலிருந்து வெளியே வரவேற்பறைக்குத் தற்செயலாக வந்தபோதுதான் காவல்துறையின் ஈப்பு அச்சகத்தின் முன்வந்து நிற்பதைக் கவனித்தேன்.பருமனாகவும் நடுத்தர உயரத்துடனும் இரட்டைநாடிக் கட்டமைப்புடன்சதுரமான சட்டகம்கொண்ட மூக்குக் கண்ணாடி அணிந்த ஆய்வாளர் உள்ளே நுழைந்தார். இரும்புக்கம்பிகள் மட்டுமே சுற்றுவேலிபோல் அமைந்திருந்தமையால் குறைந்தது பத்துக்காவலர்களாவது வெளியே, திசைக்கொருவராகச் சிதறிய நிலையில் நின்றுகொண்டிருந்தார்கள் எனத் தோன்றியது.

உள்ளே நுழைந்த ஆய்வாளரை நோக்கிஐயா,வாருங்கள்!என்ன செய்தி?” என என் தந்தையார் வினவினார்.

“Dr.Ilakkuvanaar! I am Sachchithaanantham,Inspector at Thirupparankundram police station.”

“ம்ம்..சொல்லுங்கள்”

“Dr.Ilakkuvanaar,You are under arrest”

“என்ன காரணத்திற்காக எனத் தெரிந்துகொள்ளலாமா?”

““Dr.Ilakkuvanaar.You are the father of Anti-Hindi agitation”

‘ஐயா!அவ்வளவு பெருமைக்கு நான் உரியவன் அல்ல.இது மாணவர்கள் நடத்தும் போராட்டம்.தங்கள் வருங்காலம் குறித்த கவலையில் போராடுகிறார்கள்.”

“No. Dr.Ilakkuvanaar!We know everything.You are leading this agitation.Come on !Let us go”

ஆய்வாளர் சச்சிதானந்தம் சற்று உரத்த குரலுக்கு சொந்தக்காரர்.அழுத்தம் திருத்தமாகவும் சுருக்கமாகவும் அவர் நிகழ்த்திய உரையாடல் ஐம்பத்திரண்டாண்டுகள் கடந்தபின்னும் இன்னும் என் அகச்செவியில் ஒலிக்கிறது.

ஒரு பெரிய நீலவண்ணக் காவல்துறைப்பேருந்தும் இரண்டு ஈப்புகளும் வெளியே நின்றுகொண்டிருப்பதை அப்போதுதான் முழுமையாகப் பார்த்தேன்.

ஓர் ஈப்பில் தந்தையாரை ஏற்றிக்கொண்டு ஆய்வாளர் சச்சிதானந்தம் ஏறிக்கொண்டார்.பிறகு உசுபுசு என மூச்சுவிட்டும் உர்ரென உறுமியவாறும் வண்டிகள் கிளம்பின.வெளியே சீருடையில் பத்துப்பேரும் வெள்ளுடையில் பதினைந்துபேரும் நின்றிருந்தார்கள் என்பது அப்போதுதான் எனக்கு உறைத்தது.

ஒருவரைக் கைது செய்ய ஏன் இத்துணைக் காவலர்கள்??எனக்கு அப்போது விளங்கவில்லை.காலம் செல்லச்செல்லத் தான் அந்தக் கைது—மாணவர் மனங்கவர்ந்த ஒரு பேராசிரியரைத் தளைப்படுத்தும் கைது_எவ்வளவு முதன்மையான நிகழ்ச்சி என்பது எனக்கு விளங்கியது.தங்கள் தலைவராக மாணவர்கள் கொண்டாடும் பேராசிரியரைக் கைது செய்வதனை ஒருவேளை அந்த மாலைப்பொழுதில் மாணவர்கள் அறிந்துகொள்ளநேரிட்டால் எவ்வளவு கொந்தளிப்பும் குழப்பமும் ஏற்பட்டிருக்கும்?

காவல்நிலையத்தின் எண்ணை நான் இப்போது மறந்துவிட்டேன்.பி2 என எண்ணுகிறேன்.ஆய்வாளர் ஒருவர் எங்கள் வீட்டுக்குவந்து இரண்டு மாற்று உடைகள் வாங்கிச்சென்றார்.நாங்கள் கேட்ட எந்த வினாவுக்கும் அவர் விடைவழங்கவில்லை”இதோ நாளை வந்துவிடுவார்.இரண்டு மாற்று உடைகள் போதும்.”எனக் கூறிச் சென்றார்.அரைமணி நேரம் கழித்துத் தொலைபேசி வந்தது.”நாளைக் காலை எட்டரையிலிருந்து ஒன்பது மணிக்குள் காலைச்சிற்றுண்டி கொண்டுவாருங்கள்.இன்னும் நடுவர்முன் முன்னிலைப்படுத்தவில்லை.ஆகவே சிறைக்கு அழைத்துப்போகவில்லை. காவல்நிலையத்தில்(ரிமாண்டு) தளைப்படுத்தியுள்ளனர்.எனவே வீட்டு உணவு கொடுக்கலாம்.”எனக் காவல்நிலையத்திலிருந்து கூறினார்கள்.மறுநாள் காலை,சிற்றுண்டியை எடுத்துச்சென்றேன்.அங்கே அவர் பி2 காவல்நிலையத்தில் இல்லை.பி4-க்குக் கொண்டுபோயுள்ளனர்.’என மறுமொழி கூறினர்.பி4 காவல்நிலையம் சென்றேன்.

”அவர் பி6 நிலையத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டுள்ளார்.அங்கே ஆய்வாளர் தமது வீட்டிலிருந்து சிற்றுண்டி கொடுத்துவிட்டார்.கவலையின்றி வீட்டுக்குச் செல்லுங்கள்” என என்னை ஆற்றுப்படுத்தினர்.

வீட்டுக்கு வந்தவுடன் தந்தையார் கைது நாளிதழ்களில் பரபரப்புச் செய்தியாக வெளிவந்ததைப் படிக்கவே நேரம் போதவில்லை.காலையில் அலைந்தது அலுப்புத்தரவில்லை.சிற்றுண்டி அருந்தவேண்டும் என்னும் எண்ணமும் ஏற்படவில்லை.கல்லூரி மூடப்படிருந்தமையால் வெளியே செல்லும் வேலையில்லை.எனினும் கடைத்தெரு வரை காலாற நடக்க விழைவு உந்தியது.

வெளியே புறப்பட்டவுடன் சற்றுத்தள்ளி எதிர்ப்புறம் அமைந்திருந்த வீட்டில் தமிழ்நாடு பல்தொழில்நுட்பநிறுவனத்தின் முதல்வர் திருஞானசம்பந்தன் கல்லூரி கிளம்பிக்கொண்டிருந்தார். வாயிற்படியிலிருந்து கீழிறங்கித் தெருவுக்கு வந்தவர் எதிர்ப்பட்ட என்னைக் கண்டு என் காதில்“The fools have arrested a great scholar. Time will teach them befitting lessons,” என் காதில் கிசுகிசுத்தார்.

பத்திரிகைக்கடையில் சுவரொட்டி காற்றில் அசைந்துகொண்டிருந்தது.

“சித்தப்பாவுக்கு அரிவாள் வெட்டு  இலக்குவனார் கைது”

என்னும் தொடர்கள் தினத்தந்தி சுவரொட்டியில் இடம்பெற்றிருந்ததை நான் மறந்தாலும் என் மனக்கண்முன் இன்றும் அவை பசுமையாகக் காட்சியளிக்கின்றன.(முரசொலி – கருத்துப்படம்:கீழே)



**விருதுநகரில் 3/4/1949 அன்று நடைபெற்ற குறள்மாநாட்டிற்கு ஊர்வலமாகத் தந்தை பெரியார்,நாவலர் சோமசுந்தர பாரதியார்,பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோர் ஊர்வலமாக அழைத்துவரப்படும் காட்சி.(விடுதலை நாளேட்டில்)**

## விருதை குறள் மாநாடு: தலைவர்கள் வருகை

★

விருதுநகரில் 3—4—49 அன்று குறள் மாநாடுசீருஞ்சிறப்புடன்நடைபெற்றது. தலைவர்கள் தோழர் எம். எஸ். பி. செந்திக்குமார நாடார் இல்லத்திலிருந்து மாநாட்டுப் பந்தலுக்கு கோச்வண்டியில் ஊர்வலமாகஅழைத்து வரப்பட்டனர். தலைவர் பெரியாரவர்களையும், மாநாட்டுத் தலைவர் நாவலர் பாரதியார், திறப்பாளர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், வரவேற்புக் கழகத் தலைவர் இலக்குவனார் ஆகியோரையும் படத்தில் காணலாம்.

—படப்பிடிப்பு: வீ. ப. நாகரத்தினம்

நெல்லையிலிருந்து சங்க இலக்கியம்



சங்க
இலக்கியம்.

வெளியீடு 4

சங்கத்தமிழ் பாடி தமிழர் புகழ் வளர்ப்போம்

(மாமூலனார் பாடல்கள்)

(விளக்கவுரை, பதவுரை, ஆராய்ச்சிக்குறிப்பு)

ரு. விழுச்சீர் வேங்கடம் பெறினும் - ?

புலவர்
சி. இலக்குவன், M. O. L.
தமிழ் விரிவுரையாளர்,
சாலைத்தெரு, சிந்துபூந்துறை, திருநெல்வேலி.

விலை: 0—1—0

தஞ்சையிலிருந்துதிராவிடக்கூட்டரசு



திராவிடக் கூட்டரசு.

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவரும் வாரிதழ். கரந்தை, தஞ்சை.

ஆசிரியர்: சி. இலக்குவனார், எம் ஏ., எம். ஓ. எல்.

மலர் 1 | 31-10-52 | இதழ் 7

ஸ்ரீபிரகாசரின் பிதற்றலும் பெண்கள் உளக் குமுறலும்

"உங்கள் தீர்ப்பு என்ன?

தனி இதழ் விலை அணா 1 ★ ஆண்டுக்கட்டணம் ரூபாய் 4

மதுரையிலிருந்து குறள்நெறி

விருதுநகரிலிருந்து இலக்கியம்



குடி அரசு 20—12—47

எமது தீர்ப்பு

இலக்கியம்

(திங்கள் இருமுறை)
ஆசிரியர். சி. இலக்குவன்.
திருநெல்வேலி.

[புல்ஸ்கேப் 1/8 42 பக்கங்கள் தனி இதழ் 0-4-0 ஆண்டுக் கட்டணம் 4-0-0]

தமிழ் மக்களின் பழமைக்கும் பெருமைக்குமுரிய இலக்கியங்களை— தமிழ்ப் பொதுமக்களை நீண்ட காளாக அச்சுறுத்திக் கொண்டு வந்த இலக்கியங்களை — தமிழ் மக்கள் சுவைக்க வேண்டும்; தமிழர் தம் தனி நாகரிகம், பண்பு முதலியவற்றை புணர்ந்து இக்காலப் போலி மயக்கிலிருந்து விடுபட வேண்டும் என்ற சிறந்த நோக்கத்தோடு, இவ்விலக்கியம் தோன்றியிருக்க வேண்டும் என மலர் 14, 15. அறிவிக்கின்றது.

தாமரையில் தவழும் புலி, வில், கயல் அரசியல் கட்சியைத் தழுவியதா? என்பது இதிலிருந்து அறிய முடியவில்லை.

இலக்கியத்திற்கு அடிப்படையான மக்கள் வாழ்வு வளர, இலக்கியம் வளர்வதாக! என மனமுவந்து கூறுகின்றோம். திராவிடர்கள் — சிறப்பாகத் திராவிட மாணவர்கள் தவறாது படித்துப் பயனடைய வேண்டும்.

வெள்ளையனே! வெளியேறாதே.

லார்ட் மவுண்ட் பேட்டனின் கவர்னர் ஜெனரல் பதவியை 1948 மார்ச்சு 31ம் தேதியிலிருந்து அந்த வருஷக் கடைசி வரையிலாவது அல்லது இந்தியாவின் புதிய அரசியல் திட்டத்தின் கீழ் முதல் ஜனாதிபதி தேர்தல் நடக்கும் காலமாகிய 1949 வசந்த காலம் வரையிலாவது நீடிக்குமாறு பிரிட்டிஷ் சர்க்காரை இந்திய சர்க்கார் (காங்கரஸ்) கேட்டுக் கொண்டிருக்கிறார்களாம்.

இதற்குப் பெயர் வெள்ளையனே! வெளியேறு. என்பதா? வெள்ளைப் பிரபுவே! வெளியேறாதீர்கள் என்பதா?

வேறுபாடுகளும், வகுப்புகளும் ஒழிவது சாத்தியமாகும் என்ற உணர்ச்சியை இக்காட்டில் தோற்றுவித்து வளர்த்த திராவிடர் கழகத்தின் கொள்கைக் கிணங்கத்தோன்றியிருப்பதே "பல்லவ நாடு" என நாம் எண்ணுகின்றோம், வன்னியர் சமூகத்தின் நலத்திற்கான பல கட்டுரைகளும், கதைகளும், பிறர்கள் கடிதங்களும், மாநாடுகளில் பேசப்பட்ட பேச்சுகளும் காணப்படுகின்றன.

வன்னிய முரசு.
[மாத வெளியீடு]



குறள்நெறி

தமிழ் வாழ்க

ஆசிரியர்: டாக்டர் சி. இலக்குவனார், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.

மலர் 2 | திருவள்ளுவராண்டு 1996 பங்குனித்திங்கள் 19ஆம் நாள் 1—4—65 | இதழ் 6

ஓய மாட்டேன்!
உள நிறைவு அடையமாட்டேன்!

உள்ளே

விலை 25 காசு

தமிழர்க்குத் தேசியமொழி தமிழேயாகும்

# தமிழ்ப் போராளி இலக்குவனார்



---கி.வீரமணி



பேராசிரியர் சி.இலக்குவனார் தமிழறிஞர்கள் வரிசையில் தனித்தன்மையானவர்.
தான் படித்த படிப்பு , சம்பாத்தியம் குடும்ப வளமைக்கு மட்டுமே என்னும் கண்ணோட்டம் அவருக்கு இருந்திருந்தால் அவர் வாழ்க்கை என்பது இவ்வளவு தொடர் தொல்லைகளுக்கும், அலைச்சலுக்கும் ஆளா க்கி இருக்காது.
இலக்குவனார், தஞ்சாவூர் மாவட்டம் வாய் மேடு என்னும் கிராமத்தில் சிங்காரவேலர்-ரத்தினம் அம்மையார் ஆகியோரை பெற்றோ ராகக் கொண்டு எளிய குடும்பத்தில் 17-11-1909 அன்று பிறந்தார். உள்ளூர் தொடக்கப்பள்ளியில் படித்த அவர் பி.ஓ.எல். மற்றும்

முதுகலை பட்டங்களையும் பெற்றார்.தமிழ் , ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளையும் கற்றுத்தேர்ந்தவர். 'தமிழர் தலைவர்' நூலை எழுதிய சாமி.சிதம்பரனாரின் மாணவர் ஆவார். தொல்காப்பியத்தை அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார் என்பது அசாதாரணமானது. மறைந்த முன்னாள் முதல்-அமைச்சர் அண்ணா , போப் ஆண்டவரை சந்தித்த போதும் , யேல் பல்கலைக்கழகத்துக்கு சென்ற போதும் , அந்நூலை நினைவுப் பரிசாக அளித்தார்.எழிலரசி உள்ளிட்ட கவிதை நூல்கள் , தமிழ்க் கற்பிக்கும் முறை , அமைச்சர் யார் , தொல்காப்பிய ஆராய்ச்சிகள் , இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் , வள்ளுவர் வகுத்த அரசியல் உள்ளிட்ட ஆய்வு நூல்கள், என் வாழ்க்கைப்போர், கருமவீரர் காமராசர் எனும் வரலாற்று நூல்கள்.திருக்குறள் எளிய பொழிப்புரை , தொல்காப்பிய விளக்கம், தொல்காப்பிய எழுத்ததிகாரம் உள்ளிட்ட உரை நூல்கள் மற்றும் தொல்காப்பியம் உள்ளிட்ட ஒன்பது ஆங்கில அரிய நூல்கள் வாழும்வரை , அவற்றை படைத்த பேராசிரியர் இலக்குவனாரும் நாட்டு மக்களின் இதயங்களில் கோலோச்சுவார். சங்க இலக்கியம் , குறள் நெறி , திராவிடக் கூட்டரசு உள்ளிட்ட ஏடுகளின் ஆசிரியராக இருந்ததோடு, திராவிடன் பெடரேசன் என்ற ஆங்கில இதழையும் நடத்தியுள்ளார். இவற்றையெல்லாம் அவர் நடத்தினார் என்றாலும் பொருளாதாரக் கண்ணோட்டத்தில், தன் கையைச் சுட்டுக் கொண்டார் என்றே கூற வேண்டும்.

ஆனாலும் இனம் , மொழி மேம்பாட்டுக்கான மேட்டிமை அவரை ஆட்கொண்டது. அவர் தமிழாசிரியராக, விரிவுரையாளராக, பேராசிரியராக, துறைத்தலைவராகப் பரிணமித்தவர். திருவாரூரில் தமிழாசிரியராக பணியாற்றிய போது அவரின் மாணவராக இருந்தவர்தான் மு.கருணாநிதி (பிற்காலத்தில் முதல்-அமைச்சர் கலைஞர்).

'தமிழ் உணர்வுடன் சுயமரியாதைப் பண்பையும் எனக்கு ஊட்டியவர் இலக்குவனார்' என்று 'நெஞ்சுக்கு நீதி' நூலில் கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.திருவாரூரிலிருந்து தொடங்கி குலசேகரன்பட்டினம், நெல்லை ம.தி.தா. இந்துக்கல்லூரி , விருதுநகர் செந்தில்குமார் நாடார் கல்லூரி, ஈரோடு மகாஜனக் கல்லூரி, மதுரை தியாகராயர் கல்லூரி, நாகர்கோவில், சென்னை மாநிலக் கல்லூரி , ஆந்திராவின் உஸ்மானிய பல்கலைக்கழகம் வரை (1936-1968 இடைவெளியில்) பந்தாடப்பட்டவர்.

அந்த வகையில் தமிழ்நாட்டின் மண்ணை அளந்த மணவாளர் அவர்! என்ன காரணம் ? பணியில் தொய்வா ? திறமைக் குறைவா ? அல்ல அல்ல. சென்ற இடங்களில் எல்லாம் அவர் வகித்த துறையில் முத்திரை பதித்தவர். தமிழ் உணர்வோடு மாணவர்களை வார்த்தெடுத்தவர். அவருடைய மாணவர்களுள் ஒருவர்தான் ஆர்.நல்லக்கண்ணு ; பின் ஏனிந்தப் பந் தாட்டம்?அவர் தமிழ் உணர்வாளர் , இன உணர்வாளர் , பெரியார் வழி சுயமரியாதைக்காரர். இவைதான் இவர் மீது ஏவப்பட்ட அம்புகள்.

ஒரு கல்லூரியில் இருந்து அவர் வெளியேற்றப்பட்டதற்கு சொல்லப்பட்ட காரணம் தெரியுமா?

பெரியார் நடத்திய திருக்குறள் மாநாட்டிலும், இந்தி எதிர்ப்பு மாநாட்டிலும் பங்கு கொண்டார். இலக்குவனார் கருஞ்சட்டை இயக்கத்தில் தீவிர ஈடுபாடு காட்டி வருகிறார் என்று பொதுக்கல்வி இயக்குநர், ஆட்சிக்குழுவுக்கு தாக்கல் செய்தது. ஆட்சி மன்றக்குழுவின் கருத்து இதற்கு எதிராக இருந்தாலும் வேறு வழியின்றி இலக்குவனாரை வெளியேற்ற நேர்ந்தது.அந்தக் கல்லூரியில் அவருக்கு இழைத்த அநீதி கண்டு 'துரத்தப்பட்டேன்' என்று கவிதை வரிகளில் குமுறினார்!

கல்லூரிப் பேராசிரியர்கள் சார்பாக சென்னைப் பல்கலைக்கழகத்தின் அகாடமிக் கவுன்சில் உறுப்பினராகவும், சென்னைப் பல்கலைக்கழக ஆசிரியர் குழுவின் துணைத் தலைவராகவும், தமிழகப் புலவர் குழு ச் செயலாளராகவும் பொறுப்பேற்று செயபேரிகை கொட்டியவர்.

இந்தி எதிர்ப்புப் போராலும் , தமிழ் உணர்வு பெரு நடைப் பயணத்தாலும் சிறைவாசமும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் தனிமைச் சிறையும் பதவி இழப்பும் தான் அவர் பெற்ற பரிசுகள்.தமிழ்நாட்டில் கல்லூரி முதல்வர்கள் குறைந்த அளவேனும் தமிழ்ப்புலமை பெற்றிருக்க வேண்டும். கல்லூரிப் பாடத்திட்டத்தில் தமிழே முதற்பாட மொழியாகவும் ஏனைய மொழிகள் இரண்டாம் பொது மொழியாகவும் இருக்க வேண்டும். தமிழ்ப் பாடத்தேர்வில் திருக்குறளுக்கென்றே தனித்தேர்வுத்தாள் இருக்க வேண்டும் என்பது இலக்குவனாரின் கல்விக் கொள்கை.பணியில் இருந்து ஓய்வுபெற்ற நிலையில் தி.மு.க. பிரிந்தபோது பெரியார் மேற்கொண்ட நீண்ட சுற்றுப்பயணம் முழுவதிலும் திராவிடர் கழக க் கூட்டங்களில் இலக்குவனாரும் அவருடன் பயணித்துஉரையாற்றினார்.புதுக்கோட்டையில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டில் (9-4-1950) புலவர் இலக்குவனார் திருவள்ளுவர் படத்தை திறந்து வைத்து உரையாற்றினார். 'ஆரியத்தை முதலாவது எதிர்த்த புரட்சிப் புலவர் திருவள்ளுவர். மக்களின் வாழ்வுக்கேற்ற அறம் , பொருள், இல்லறம் பற்றித்தான் வள்ளுவர் எழுதினாரே ஒழிய, ஆரியக் கருத்துப்படி இருக்கும் வீட்டைப்பற்றி (மோட்சம்) பற்றி எழுதவில்லை ' என்று பேசினார்.இலக்குவனார் பெயரில் அவர் பிறந்த வாய்மேடு உயர்நிலைப் பள்ளிக்கு அவர் பெயரே சூட்டப்பட்டுள்ளது. தன்மானப் புலவர் பேராசிரியர் இலக்குவனாருக்கு 6 மகன்களும், 5 மகள்களும் உண்டு. 'தமிழகத்தின் உரிமை உணர்வுக்கும் தமிழ்மொழியின் உயர்வுக்கும் உழைப்பதே எனது உறு கடனாம் என்று உறுதி கொள்ளச்செய்தது ம்; தமிழ்ப் போரே எனது வாழ்க்கைப் போர் என்னும் குறிக்கோளை வாழ்வின் உயிரென ஏற்றுக் கொண்டேன். புலவர் படிப்பால் பெற்ற பயன் இதுவேயாகும் ' என்பதும் இலக்குவனார் இலக்கு.

அந்தத் தமிழ்ச்சிங்கம் 3-9-1973 அன்று கண் மூடிற்று. என்றாலும் வரலாற்றில் வாழுகிறது!

**- கி.வீரமணி, தலைவர், திராவிடர் கழகம்**

[தமிழர் தலைவர்,முதுமுனைவர் கி.வீரமணி அவர்களும் அவர்களது துணைவியார் அவர்களும் உடல்நலக் குறைவால் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டமை அறிந்து

பெரிதும் வருத்தமுற்றோம்.இப்போது அவர்கள் முழுநலன் எய்தி இல்லம் திரும்பியமை அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைந்தோம்.தமிழர் தலைவர் அவர்களும் அம்மா அவர்களும் உடல்நலனில் கருத்துச் செலுத்திப் பணிப்பளுவைக் குறைத்துக்கொள்ளுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.-குறள்நெறி ஆசிரியர் குழுவினர்]



ஆசிரியர் இலக்குவனாரும் மாணவர் கலைஞரும்

தமது சொற்பொழிவுகளைத் திட்டமிட்டுக் கால அட்டவணைப்படுத்தி நாளேட்டில் வெளியிட்டுத் தமிழ் முழக்கம் புரிந்த ஒரே பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களே.

குடி அரசு 15

சங்க இலக்கியப் பேச்சுகள்!

தோழர் சி. இலக்குவனாரின் தனி முயற்சியால் கீழ்க்கண்ட இடங்களில், கீழ்க்கண்ட நாட்களில் நடைபெற்றன.

| | |
|---|---|
| 26-12-48 | திருநெல்வேலி |
| 27-12-48 | வீரவநல்லூர் |
| 28-12-48 | கல்லிடைக்குறிச்சி |
| 29-12-48 | கீழ்ப்பாவூர் |
| 30-12-48 | தென்காசி |
| 31-12-48 | விக்கிரமசிங்கபுரம் |

இனி நடக்கவிருப்பவை:—

| | |
|---|---|
| 1-1-49 | சிவகிரி |
| 2-1-49 | மம்சாபுரம் |
| 3-1-49 | சிவகாசி |
| 4-1-49 | விருதுநகர் |
| 5-1-49 | ஆலங்குளம் (சாத்தூர்) |
| 7-1-49 | புதுவயல் |
| 8-1-49 | இராங்கியம் |
| 10-1-49 | பெரியகுளம். |

குடி அரசு

எங்கும் இலக்கிய முழக்கம்!

தமிழ்ப் பேராசிரியர் தோழர் இலக்குவனார் அவர்கள் கீழ்க்கண்டவாறு இக்கோடை விடுமுறையில் சுற்றுப் பிரயாணம் செய்து சொற்பொழிவாற்றுவார்.

| | |
|---|---|
| 17—4—49 | தென்மாப்பட்டு. |
| 19—4—49 | சிவகெங்கை. |
| 21—4—49 | அ. சிறுவயல். |
| 22—4—49 | தஞ்சை. |
| 23—4—49 | நீடாமங்கலம். |
| 24—4—49 | மன்னார்குடி. |
| 25—4—49 | வேட்டைக்காரனிருப்பு (தஞ்சை மாவட்டம்) |
| 26—4—49 | திருவாரூர். |
| 27—4—49 | குடவாசல். |
| 28—4—49 | கும்பகோணம். |
| 29—4—49 | மாயவரம். |
| 30—4—49 | பெருந்தோட்டம் (சீர்காழி) |
| 1—5—49 | புதுச்சேரி. |
| 3—5—49 முதல் 10—5—49 முடிய | வட ஆற்காடு மாவட்டம். |
| 12—5—49 | திருச்சிராப்பள்ளி (வானொலிப்பேச்சு—2-16 மதியம்) |
| 14—5—49 முதல் 19—5—49 முடிய | வட ஆர்காடு மாவட்டம். |
| 21—5—49 | பெங்களூர். |
| 25—5—49 | கோபிச்செட்டி பாளையம். |
| 27—5—49 | வெள்ளலூர் (கோவை மாவட்டம்) |
| 29—5—49 | சென்னை. |

இது போன்றே விடுதலை நாளேட்டின் பழைய பதிப்புகளிலும் அவ்வப்பொழுது இலக்குவனார் அறிவித்துள்ள சொற்பொழிவுத் திட்டங்களைக் காணலாம்.

# தமிழ் இலக்கியச் சீரிதழ் நாள்

பேராசிரியர் சி.இலக்குவனார் தம் வாழ்நாளில் பெரும்பகுதி இதழ்வெளியீட்டில் பொருளையும் நேரத்தையும் செலவிட்டுத் தமிழ் இலக்கியம் பரப்பவும் குறள்நெறி பரவும் தமிழ்க்காப்பு உரிமையுணர்வு மேலோங்கவும் பாடுபட்டார் என்பதனை அவர்தம் வரலாறு உணர்த்துகிறது.1946 முதல் 1973-இல் தாம் மறையும் வரை இதழ்வழித் தமிழுரிமைப்

போர்முரசு முழங்கியுள்ளார்.சோலை மிராசு அல்ல;ஆலை அரசரும் அல்ல;நடுத்தர வகுப்பைச் சேர்ந்த அடிக்கடி வேலையிழந்து பொருளாதாரத் தட்டுப்பாடு ஏற்பட்டுவிடும் சூழலையும் மீறி உரங்குன்றாது தரம் மேலோங்கும் தமிழ் இதழ்களைத் துணிவோடு வெளியிட்டுவந்த இலக்குவனாரைத் தமிழ் இலக்கிய சீரிதழ் முன்னோடி என அழைத்தல் முற்றிலும் பொருந்தும்.

விருதுநகரிலிருந்து அவர் வெளியிட்டுவந்த “இலக்கியம்“ எனும் இதழில் குறுக்கெழுத்துப் போட்டி நடத்திப் பரிசுத்தொகையும் வழங்கினார்.இலக்கிய இதழ்களிலேயே குறுக்கெழுத்துப் போட்டி நடத்திப் பரிசுத்தொகையும் வழங்கிய ஒரே இதழ் ‘இலக்கியம்‘ மட்டுமே.

1966 சூன் முதல் திசம்பர் வரை குறள்நெறியை நாளிதழாக நடத்தினார்.ஐயாயிரத்து ஐந்நூறு பேர் வாங்கிய அந்த இதழ் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.பல்வேறு ஊர்களில் முகவர்கள் விற்பனைத் தொகையைச் செலுத்தாத ஒரே காரணத்தால் இதழ் நிறுத்தப்படும் நிலை வந்தது.

இந்தியாவிலேயே நாளிதழ் நடத்திய ஒரே இலக்கியச் சான்றோர் இலக்குவனார் மட்டுமே.இவ்வாறு பல அருஞ்செயல்களை ஆற்றிய அந்தப் பெருந்தகையின் பிறந்த நாளை “தமிழ் இலக்கியச் சீரிதழ் நாள்“என அறிவிக்குமாறு கடந்த ஆண்டே தமிழ்ச் சீரியல் இதழியலாளர் சங்கத் தலைவர் பூ.அ.இரவீந்திரன் அவர்களை வேண்டியிருந்தோம்.அவர் ஆவன செய்வார் என நம்புகிறோம்.

<<<<<



பதிவு எண். எம். 8123. தமிழியக்க நாளிதழ் விலை காசு 6.

குறள் நெறி

ஆசிரியர்: சி.இலக்குவனார் எம்.ஏ.,எம்.ஓ.எல்.,பிஎச்.டி

மலர் 1 | மதுரை ஐப்பசி (2-11-66) வெளியீடு ஐப்பசி (3-11-66) | இதழ் 137

18 ஆண்டு ஆட்சியின் பயனைப் பாரீர்!

# “உணவு நிலைமை மனநிறைவளிக்க வில்லை!”

பாராளுமன்றத்தில் உணவமைச்சர் அறிவிப்பு-

‘ஐந்தாவது உருக்காலைக்குப் போதிய பணமில்லை’

இந்திரா கைவிரிப்பு!

## வன்முறைச் செயல்களால் நாட்டின் எதிர்காலம் இருண்டுவிடும்

மாணவர் கிளர்ச்சி குறித்துக் கல்வியமைச்சர் சக்ளா

நவம்பர் 6. நாடெங்கும் கிளர்ச்சி நாள்.

பேராசிரியர் சி.இலக்குவனார் நடத்திவந்த குறள்நெறி நாளிதழ்




**-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-**

மின்னிதழ்:23 கார்த்திகை-15-தி.பி.2052 திசம்பர்-1-கி.பி.2021

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## திருக்குறள்மணி அ.க. நவநீதகிருட்டிணன்
## நூற்றாண்டுச் சிறப்பிதழ்



தோற்றம் 15-6-1921– மறைவு14-4-1967

உலகத் திருக்குறள் இணையவழிக் கல்விக் கழகத்தால் வெளியிடப்படும் இணையத் திங்களிருமுறை—
பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்-இணையாசிரியர்:பேராசிரியர் தமிழியலன்

நூறாண்டுக்குப் பின்னரும் புகழ் மிளிரும்

## திருக்குறள்மணி **அ. க. நவநீதகிருட்டிணன்** (அ. கங்காதர நவநீதகிருட்டிணன்) அவர்களின் நினைவைப் போற்றுவோம்

(15-6-1921–14-4-1967)

கவிஞர், சொற்பொழிவாளர், தமிழாய்வாளர், எழுத்தாளர், பள்ளி ஆசிரியர் ,பேராசிரியர் எனப் பன்முகச் செயல்பாட்டாளர் அ.க. நவநீதகிருட்டிணன் புகழுடல் எய்தி 54 ஆண்டுகள் கடந்துவிட்டன. இவ்வாண்டு ( 2021) திருக்குறள்மணி அ.க. நவநீதகிருட்டிணன் அவர்களின் நூற்றாண்டு ஆகும்.

திருநெல்வேலி மாவட்டத்தி ல், அம்பாசமுத்திரத்துக்கு அருகிலுள்ள ஊர்க்காடு என்னும் சிற்றூரில் பிறந்தவர் நவநீத கிரு ட்டிணன். இவர் தந்தையார் அங்குள்ள குறுநிலமன்னரின் அவைக்களப் புலவராக விளங்கியிருந்த ’அரசவரகவி’ அங்கப்ப பிள்ளையென்பவர். அவருடைய மக்கள் மூவரில், நடுவர் தான் கங்காதர நவநீத கிருட்டிணன்.

அ.க.ந. பள்ளிக் கல்வியைக் கற்று முடித்தபின் புலமைக் கல்வியும் கற்றுச் சிறப்படைய விரும்பியதால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குச் சென்றார். கல்வி கற்கும்போதே செய்யுள் பாடவும் , இயற்றவும் கட்டுரைகள் எழுதவும் வல்லவரானார். இவர் கல்வி பயிலும்போது நாவலர் நெடுஞ்செழியனும் , பேராசிரியர் அன்பழகனும் , அண்ணாமலையில் கல்வி பயின்று கொண்டிருந்தனர். அவர்களோடு நெருங்கிப் பழகி அவர்களுடைய நன்மதிப்பையும் பெற்றவர் நவநீத கிருட்டிணன்.

புலவர் கல்வி பயின்று தேர்ச்சி பெற்ற பிறகு , திண்டுக்கல் புனித சூசையப்பர் மகளிர் உயர் நிலைப்பள்ளியில் ஈராண்டுகள் பணி புரிந்தார். சிவகாசி மகா ராச பிள்ளை அவர்களின் ஒரே மகளான பிச்சம்மாள் என்பவரை மணம் புரிந்து கொண்டு இல்லற வாழ்க்கையைத் தொடங்கினார். திருமணமான பிறகு , பாளையங்கோட்டையில் குடியேறி நெல்லையில் பணி புரியலானார். மந்திரமூர்த்தி உயர் நிலைப் பள்ளியில் ஒன்பது ஆண்டுகளும் , பின்னர் மதுரை திரவியம் தாயுமானார் இந்து கலாசாலைப் பள்ளியில் பதினைந்து ஆண்டுகளும் ஆசிரியராகப் பணி புரிந்தார்.

தமிழ்ப் பணியோடு சிவப் பணியையும் இடையிடையே செய்து வந்ததால் , திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் இவருடைய புலமையைப் பயன்படுத்தத் தொடங்கினர். காலத்துக்கு வேண்டியவாறு நூல்களை எழுதிப் பொருளும் புகழும் பெற்றார். திருக்குறளைப் பலருக்கும் போதித்ததோடு “வள்ளுவர் சொல்லமுதம் ” என்னும் நூலையும் (நான்கு பகுதிகள்) எழுதினார். திருவள்ளுவர் கழகத்திற்குப் பன்னிரண்டு ஆண்டுகள் தலைவராக இருந்தவர் , நெல்லையப்பர் கோயிலிலும் ஈராண்டுகள் திருக்குறள் விரிவுரையாற்றினார்.

இவரது தமிழ்த் தொண்டையும் , சிவத் தொண்டையும் பாராட்டிய மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம் இவருக்கு “தமிழ்க் கொண்டல் ” என்ற சிறப்புப் பெயரையும் , தருமபுரம் ஆதீனம் “செஞ்சொற்புலவர்” என்ற பெயரையும் வழங்கினர்.

1967ம் வருடம் சித்திரை முதல் தேதியன்று , கைத்தொழில் பொருட்காட்சியில் செய்யும் தொழிலின் ஏற்றத்தைப் பற்றி நெசவாளர்களுக்கு ஒரு சொற்பொழிவு நிகழ்த்தியபின் இல்லத்தை அடைந்தவர் திடீரென்று காலமானார்.

இவரது 19 நூல்கள் 2009-10 இல் நாட்டுடைமையாக்கப்பட்டு , அவரது மரபுரிமையாளர்களுக்கு பரிவுத்தொகையாக 5 இலட்சம் ரூபாய் தமிழக அரசின் தமிழ்வளர்ச்சித் துறையால் வழங்கப்பட்டது.

இவர் இயற்றிய நூல்களின் பட்டியல் வருமாறு:

1. அறநூல் தந்த அறிவாளர்
2. இலக்கிய அமைச்சர்கள்
3. இலக்கியத் தூதர்கள்
4. ஔவையார் கதை
5. கண்ணகி கதை
6. காவியம் செய்த மூவர்
7. கோப்பெருந்தேவியர்
8. தமிழ் காத்த தலைவர்கள்
9. தமிழ் வளர்த்த நகரங்கள்
10. தமிழ் வளர்த்த கதை
11. நாடகப் பண்புகள்
12. பாரதியார் குயிற்பாட்டு
13. முத்தமிழ் வளர்த்த முனிவர்கள்
14. முதல் குடியரசுத்தலைவர்
15. வள்ளலார் யார்
16. வள்ளுவர் சொல்லமுதம் - தொகுதி 1
17. வள்ளுவர் சொல்லமுதம் - தொகுதி 2
18. வள்ளுவர் சொல்லமுதம் - தொகுதி 3
19. வள்ளுவர் சொல்லமுதம் - தொகுதி 4

(தகவல் நன்றி — தமிழ்ப் புலவர் வரிசை பத்தாம் பகுதி — ஆசிரியர் சு.அ. இராமசாமிப் புலவர் — பதிப்பாளர் திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்- சென்னை. 1973)

தமிழின்மீது மிகுந்த பற்றுக் கொண்டிருந்த நவநீதகிருட்டிணன் , தமிழின் சிறப்பை , பெருமையை, வளர்ச்சியை, ‘தமிழ் வளர்ந்த கதை ’ என்ற தலைப்பில் நூலாக்கியுள்ளார். இதன் முதன்மைச் சிறப்பு இது ‘வில்லுப்பாட்டு’ வடிவில் எழுதப்பட்டதாகும். இதுபற்றி நவநீதகிருட்டிணன், “பண்டுதொட்டு இவ்வில்லிசையில் சிறு தெய்வக் கதைகளே பயின்று வந்தன. சிறந்த வரலாறுகளை இவ்வில்லிசையில் அமைத்துப் பாடினால் கல்லார்க்கும் கற்றவர்க்கும் நல்ல கருத்துக்கள் எளிதில் உள்ளத்தில் பதியும் என்னும் எண்ணத்தால் ‘தமிழ் வளர்ந்த கதை’ என்னும் இவ்வில்லிசைப் பாடலை இயற்றினேன்” என்கிறார்.

இவர் இதைப் பல அவைகளில் மக்கள்முன் அரங்கேற்றி , மிகுந்த வரவேற்பைப் பெற்ற பின்னரே நூல் வடிவம் பெற்றது. இதற்குக் கிடைத்த வரவேற்பைத் தொடர்ந்து வில்லுப்பாட்டு வடிவிலேயே ‘திருவள்ளுவர் வரலாறு’, ‘சிவஞான முனிவர் வரலாறு’, ‘மெய்கண்டார் வரலாறு’, ‘திருஞானசம்பந்தர் வரலாறு ’, ‘மாணிக்கவாசகர் வரலாறு ’, ‘கண்ணகி கதை ’, ‘ஔவையார் கதை’, ‘பத்துப்பாட்டின்பம்’ போன்ற நூல்களை எழுதினார்.

.

இவரது படைப்பாற்றலுக்கும் தமிழ்ப்பற்றுக்கும் எடுத்துகாட்டாகத் ‘தமிழ் வளர்ந்த கதை ’ என்னும் வில்லுப்பாட்டின் தொடக்கப்பகுதியைக் காணலாம்.

*தமிழர் திருநாடே தாரணியில் முதல் தோற்றம்*
*அமுதமொழி கண்டார் அருந்தமிழர் அந்நாளில்*
*இயற்கையோ டியைந்தமொழி இன்பம் நிறைந்ததமிழ்*
*நயங்கள் நிறைந்தமொழி நல்லறிஞர் கண்டதமிழ்*
*எப்போ பிறந்ததென்று எவரும் அறிந்ததில்லை*
*ஒப்பில்லா இன்பத்தமிழ் உலகில் முதன்மொழியே!*
*குமரியின் தென்திசையில் குளிர்ந்த வளநாடு*
*தமிழர்திருநாடு தழைத்தோங்கி இருந்ததையோ!*
*அந்நாட்டில் தென்மதுரை அழகான நன்னகரில்*
*தென்னன் தமிழ்ச்சங்கம் திறம்பெறவே அமைத்திட்டான்!*
*கன்னித்தமிழ்மொழியைக் கருத்தாய் வளர்த்திட்டான்*
*பன்னூறு புலவரதில் பழந்தமிழை ஆய்ந்திட்டார்*
*பின்னர்க் கபாடபுரம் பெரியதொரு தமிழ்நகரம்*
*மன்னு தமிழ்ச்சங்கம்மறுபடியும் அமைத்திட்டான்*
*அதிலும் பலபுலவர் அருந்தமிழை ஆய்ந்திட்டார்*
*மதிநுட்ப நிறைபுலவர் பலநூல்கள் வரைந்திட்டார்*
*இருசங்க நூல்களையும் பெருங்கடல் விழுங்கியதே*
*அரிய பல நூல்கள் அழிந்ததற்குக் கணக்கில்லை*
*தொல்காப்பியம் ஒன்றே நின்று துலங்கியது!*

***– திருக்குறள்மணி அ.க.நவநீதக்கிருட்டிணன்***

***தமிழ் வளர்ந்த கதை(வில்லுப்பாட்டு)***

வித்துவான்,திருக்குறள்மணி,செஞ்சொற்புலவர்,பேராசிரியர் எனத் தம் வாழ்நாளில் போற்றப் பட்டஅ.க.நவநீதகிருட்டிணன்அவர்கள்இளம்வயதில்–தமதுநாற்பத்தேழாம் அகவையிலேயே— நம்மைப் பிரிந்தது பெருந்துயரமேயாகும். திடமான நலத்துடன் நெடிது வாழ்ந்திருப்பரேல் நாடும் மொழியும் அவரது நற்பணிகளை இன்னும் கூடுதலாகப் பெற்றிருக்கும்.அவரது பணிகளுக்காக அவரும் உரிய சிறப்பும் பாராட்டும் பெற்றிருப்பார்.

அவர் நமக்களித்துச் சென்ற நூல்களைக் கற்று நாமும் அவர் காட்டிய வழியில் திருக்குறள் பணியிலும் தமிழ்த்தொண்டிலும் ஈடுபடுவதே அவருக்கு நாம் செலுத்தும் நன்றிக்கடன்.

வித்துவான்,திருக்குறள்மணி, செஞ்சொற்புலவர் **அ.க.நவநீதகிருட்டிணன்** அவர்களின் “வள்ளுவர் சொல்லமுதம் “(தி.தெ.சை.சி.நூ.ப.க.1956) என்னும் நூலிலிருந்து:

# நாடும் அரசும்

நிலத்தை நால்வகையாகப் பகுப்பர் நல்லறிஞர். அவை நாடு , காடு, மேடு, பள்ளம் என்று சொல்லப்படும். இயற்கையமைப்பிற்கேற்பக் குறிஞ்சி , முல்லை, மருதம், நெய்தல் என்றும் பகுப்பதுண்டு. இவற்றுள் மக்கள் மகிழ்ந்து வாழ்தற்குரிய நிலப்பகுதி நாடேயாகும். நாடு என்ற சொல்லே அழகுற அமைந்துள்ளது. ‘விரும்பு' என்பது அச் சொல்லின் பொருளாகும். எல்லோரும் விரும்புதற்குரிய பெருவளம் படைத்த நிலமே நாடு என்று நவிலும் தகுதியுடையது. மக்கள் விரும்பி உறையும் நிலப்பகுதிக்குத் தக்க வகையில் ஆராய்ந்து பெயரமைத்த ஆன்றோர் திறத்தை என்னென்பது ? இக் கருத்தை வள்ளுவர் சொல்லமுதமாகிய குறட் பா இனிது விளக்கும். "நாடென்ப நாடா வளத்தன, நாடு அல்ல நாட வளந்தரு நாடு'(739) தாட்டில் வாழும் மக்கள் நாடி வருந்தாமல் அவர்பால் தானே அடையும் செல்வம் ஒரு நாட்டில் தழைத்தோங்கி இருக்க வேண்டும். அத்தகைய நாட்டையே நல்லறி வாளர் சிறந்த நாடென வியந்து போற்றுவர். பெரிதும் தேடி வருந்த அரிதாகச் செல்வம் அ டைவிக்கும் நாடுகள் நாடாகா என்றே நவின்றருளினார் திருவள்ளுவர். நாட்டிற்கு அமைய வேண்டிய நல்லியல்புகள் எல்லாவற்றையும் வள்ளுவர் தமது நூலில் நாடு என் ற அதிகா ரத்தில் வி ரித்துரைத்துள்ளார். தாட்டில் என்றும் குன் றாத வி ளைச்சல் இருத்தல்வேண்டும். செந்தண்மை பூண்ட அந்தணாளரும் முற்றுந் துறந்த முனிவரும் வாழ்தற்கு இடமாக நாடு திகழவேண்டும். கொடுக்கக் குறையாத செல்வப் பெருக்கமும் இருக்கவேண்டும். கலத்தினும் காலினும் சென்று அரும்பொருள் ஈட்டிவரும் பெருவணிகர்க்கு உறைவிடமாக ஒளிரவேண்டும். பிற நாட்டவரும் அடைய விரும்பும் அளவிறந்த பெரும்பொருளைப் பெற்றிருக்கவேண்டும். பெருமழையாலோ மழையின்மையாலோ கேடு றாத நாடாகத் திகழவேண்டும். அண்டை நாட்டு அரசர்தம் வெறுப்பிற்கு உள்ளாகாத நாடாக விளங்கவேண்டும். அயலே அமைந்த நாடுகளில் வாழ்வார் ஒருகால் வறுமையால் வாடித் தன் கண் நாடி வந்தால் அவ் அயலவரைத் தாங்கும் பாங்கும் அமையவேண்டும். இறைப்பொருள் முழுதையும் முழுமனத்துடன் மன்னர்க்குக் கொடுத்து அரசினைப் பேணும் குடிமக்கள் அந் நாட்டில் வாழவேண்டும். மிக்க பசியும் , மெலிவிக்கும் நோய்களும், புறத்தே இருந்து புன்கண் செய்யும் பகையும் நாட்டில் இருத்தல் கூடாது. கொள்கையால் மாறுபட்ட பல்வேறு குழுவினர். உடனிருந்தே அரசினை அ லைத்து உலைக்கும் உட்பகையாளர் , வேந்தனை அழித்தற்கு வேளையை எதிர் நோக்கும் கொல்வினைக் கொடியரான குறுநில மன்னர் ஆகியோர் நாட்டில் இருத்தல் தகாது. இத்தகைய நல்லியல்புகள் எல்லாம் ஒருங்கமைந்து பகைவரால் கெடுக்க முடியாத பெருக்கமான வளமும் பெற்றதே பெருமை மிக்க நாடு. அரிதாகக் கெட நேர்ந்தாலும் அப்பொழுதும் தனது இயற்கை வளங் குன்றாத நாடே தலையாயது என்பார் திருவள்ளுவர். “கேடறியாக் கெட்ட இடத்தும்

வளங்குன்றா நாடென்ப நாட்டின் தலை' என்பது அவர் சொல்லமுதமன்றோ? கோசல நாட்டின் குன்றாத இயற்கை வளத்தைக் கூறவந்த கம்பர் பெருமான்,

“ கதிர்படு வயலிலுள்ள கடிகமழ் பொழிலிலுள்ள
முதிர்பல மரத்திலுள்ள முதிரைகள் புறவிலுள்ள
பதிபடு கொடியிலுள்ள படிவளர் குழியிலுள்ள
மதுவள மலரிற்கொள்ளும் வண்டென மள்ளர்கொள்வார்' என்று கட்டுரைத்த கவிதலம் கற்று இன்புறத் தக்கதாகும். கோசல நாட்டில் உழவர்கள் என்றும் திரளாகச் சென்று நிலத்தில் விளைந்த நெற்கதிர்களை அறுத்து வருவர். நறுமணப் பொழில்களில் புகுந்து தருக்களில் காய்த்து முதிர்ந்த கனிக ளைப் பறித்து வருவர்.புன்செய்க் காடுகளில் நன்கு விளைந்த தானிய மணிகளைத் திரட்டிக் கொணர்வர். கொடியில் தோன்றிய காய்கனிகளையும் , நிலத்தின் அடியில் விளைந்த கிழங்கு வகைகளையும் ஒருங்குசேர்த்து வருவர். உணவிற்குரிய இப் பொருள் வகைகளெல்லாம் மிக்க உழைப்பின்றித் தக்காங்கு வளமுடன் கிடைத்தலால் அந் நாட்டு உழவர், மலரில் ஊறும் தே னை மகிழ்வுடன் கவரும் வண்டுகளைப் பேசல் ஆர்வமுடன் சென்று கொள்வாராயினர். தலையாய நாட்டைத் தாங்கி நிற்கும் உறுப்புகன் மூன் றாகும். புனலும் ம லையும் அரணும் நாட்டின் நல்லுறுப்புகள் என் றார் வள்ளுவர். ஒரு நாட்டிற்கு மூவகையான புனல் வளம் வேண்டும் என்று புகன்றார். கிணற்றில் ஊறும் நீராகிய கீழ்நீர், ஏரி குளங்களில் மழை வளத்தால் பெருகும் மேல்நீர் , மலையினின்றும் வான் பொய்ப்பினும் தான் பொய்யாது பெருகிவரும் ஆற்று நீ ர் ஆகிய மூவகையான நீர்வளம் நாட்டிற்குரிய தல்லுறுப்புகளுள் ஒன் றாகும். நாட்டில் வாய்ப்பாக அமைந்த வளமான மலை மற் றோர் உறுப்பாகும். அதனை வாய்ந்த மலை என்று குறிப் பிட்டார் வள்ளுவர் பெருமான். நாட்டின் நடுவிடத்தே மலை அமைதல் கூடாது ஒரு புறத்தே விலகியிருத்தல்வேண்டும். அது பற்றியே மலைக்கு விலங்கல் என்றொரு பெயரும் வழங்குவதுண்டு. அங்ஙனம் ஒருபால் விலகி அமைந்த மலை அளவிட முடியாத வளமுடையதாய் ஒளிருதல்வேண்டும். நாட்டில் நீர் வறந்து போனாலும் தான் நீர்வளத்தைச் சுரந்து கொண்டிருக்கும் வண்மையுடைய மலையாக விளங்கவேண்டும். மலை , மாரிக்காலத்தில் உண்ட நீரைக் கோடைக்காலத்தில் உமிழும் இயல்புடைய தன் றோ? இத்தகைய வாய்ப்புடைத்தாய் அமைந்த வள ந் தரும் நன்மலை, நாட்டின் ஓர் உறுப்பாவதில் என்ன வியப்பு? பகைவரால் அழிக்க முடியாத உறுதியான அரண், மற்றோர் உ றுப்பாக மதிக்கப்படும். இத்துணைக் கருத்துகள் பொது ளப் பொய்யில் புலவர் புகன்றருளிய குறட்பா எத்துணைச் சிறப்பு வாய்ந்ததாகும்! ‘இருபுனலும் வாய்ந்த ம லையும் வருபுனலும் வல்லரணும் நாட்டிற்(கு) உறுப்பு' என்பது அவர் சொல்லமுதமன்றோ!

இனி, நாட்டிற்கு அ ழகு செய்யும் அணிக ளென ஐந்து இயல்புகளைக் குறிக்கி றார் திருவள்ளுவர்.

நோயில்லாமை, செல்வம், விளைச்சல், இன்பம், காவல் என்ற ஐந்தும் நாட்டிற்கு நல்லணிகள் என்று சொல்லுவார் . ‘நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் ' என்று நம் முன் னோர் கொண்டாடுவர். மக்கள் வாழ்விற்கு இன்றியமை யாத செல்வம் பல்வகையாலும் வந்து குவிதல்வேண்டும். ஒன்று , நூறாக வி ளைக்கும் உயர்ந்த நிலவளம் அமையவேண்டும்.

ஆன்றோர் வாழ்வும் , அருள் பெருக்கும் விழவும் இடைய றாது நிகழ்ந்து மக்கட்கு இன்பமூட்டுதல், நாட்டிற்கு மிக்க அழ கை நல்குவதாகும். ஆற்றல் சான்ற அரச னாலும் அவன்பால் பேரன்பு பூண்ட தன் மக்களாலும் வலியமைந்த அர ணாலும் உ ளதாகும் அரிய காவல் மற்றுமோர் அணியாக மதிக்கப்படுகின்றது.

"பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து' என்பது வள்ளுவர் சொல்லமுதமாகும். ஒரு நாட்டில் தக்கார் சிலர் வாழ்தல் மிக்க பெருமையை அந்நாட்டிற்குத் தருவதாகும். நிலத்தின் நலத்தை உணர்த்த வந்த தமிழ் மூதாட்டியார் , “அந் நிலம் ஒருபால் நல்ல நாடாகவும் இருக்கலாம் : ஒருபால் காடாகவும் கிடக்கலாம் ; ஒருபால் மேடாகவும் அமையலாம் ; ஒருபால் வெறும் பள்ளமாகவும் காணலாம் : அஃது எவ்வாறு அமை யினும் குறைவில் லை. எவ்விடத்தே ஆண் மக்கள் அருங்குணம் படைத்த நல்லா ராக உள்ளா ரோ அவ்விடமே நலமுடைய நாடு நன்கு அமைகின்றது" என்று அறவுரை வழங்கி யருளினர்.

'நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல் லை வாழிய நிலனே ' என்பது அமுத நெல்லிக்கனி உண்ட தமிழ் மூதாட்டியின் அருண்மொழியாகும்.

திருமுனைப்பாடி நாட்டின் சிறப்பைக் குறிப்பிட வந்த தெய்வப் புலமைச் சேக்கிழார், ‘அறந்தரு நாவுக்கரசரும் ஆலாலசு ந்தரரும் அவதரித்தருளும் பெருமையுற்றது. அத் திரு நாடு ‘ என்று குறித்தருளினார். திருவருள் பெற்ற சான் றோர் தோற்றத்தால் ஏற்றமுற்ற அந் நாட்டின் சிறப்பை நம்மால் அளவிட்டு உரைக்கலாகுமோ என்பார் அச் சேக்கிழார்.

'மறந்தரு தீ நெறி மாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந் தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானால் நம்மளவோ? பேருலகில்
சிறந்ததிரு முனைப் பாடித் திறம் பாடும் சீர்ப்பாடு ' என்பது அவரது தெய்வ மணக்கும் செய்யுளாகும்.

தெய்வப் புலவராகிய திருவள்ளுவர் தோற்றம் தமிழ் நாட்டிற்குத் தனிப்பெருமை அளித்தது. உலகப் பேரறிஞர் அனைவரும் தலைவணங்கும் சிறப்பினைத் தமிழகத்திற்குத் தேடித்தந்தவர் அத் தெய்வப் புலவரன் றோ? இத னாலேயே தேசியக் கவிஞராய பாரதியாரும் , 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண் ட தமிழ்நாடு ' என்று தமிழகத்தை வாழ்த்துவாராயினர். திருவள்ளுவரின் மறுதோற்றமோ , அன்றித் திருநாவுக்கரசரின் மற் றோர் அவதாரமோ என்று மதிக்கத் தக்க மகாத்துமா காந்தியடிகளார் , நம் பாரத நாட்டின் தவப்புதல்வராய்த் தோன்றினார். நம் நாடு அயலவர் ஆட்சியினின்று விடுத லை பெற அல்லும் பகலும் அயராது உழைத்தார். மக்களிடையே வாய்மை , இன்னாசெய்யாமை என்னும் அறங்களைத் திறம்பட அறிவுறுத்தி னார். தாமும் உள்ளத்தால் பொய்யாது ஒழுகி னார். அதனால் அப் பெருமான் இன்று உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் ஒளிவீசும் சுடர் விளக்காய்

ஒளிர்கின்றார். 'உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார் உ ள்ளத்துள் எல்லாம் உ ளன்' என்ற வள்ளுவர் சொல்லமுதத்திற்குத் தக்க சான் றாய்த் திகழும் மிக்கார் அவரன் றோ? பிற உயிர்கட்குச் சிறிதும் இன்னல் விளையாத வகையில் பாரத நாட்டின் அடிமை நிலையை அகற்ற அருந்தொண்டு புரிந்தார். அவருடைய தியாகத்தாலும் அவரைப் பின்பற்றி ஒழுகிய தலைவர் பெருமக்களின் அருந் தியாகத்தாலுமன் றோ நமது பாரதநாடு பூரண சுதந்தரம் பெற்றது? அதனாலேயே பாரதநாடு, காந்தி பிறந்த கவின் மிகு நாடெனக் கற் றோர் போற்றும் பெருமையுற்றது. என்றும் குன் றாது பெருகும் பெருஞ்செல்வம் நாட் டிற்குப் பேரழகு செய்வதாகும். அச் செல்வம் பல்வேறு வகையில் வந்து மல்குதல்வேண்டும். உள்நாட்டு , அயல் நாட்டு வாணிகத்தாலும் , நீர்வளம்மிக்க நிலவளத்தாலும், நிலத்தில் புதைந்து புலப்படும் பொன்னும் மணியும் போன்றனவற் றாலும் நாட்டிற்குப் பெருஞ்செல்வம் நிறைந்து பொங்கும். கோசல நாட்டில் கொழித்த செல்வப் பெருக்கைக் கம்பர் ஒரு கவிதையால் விளக்கினார்.

'கலஞ் சுரக்கும் நிதியம் கணக்கிலா
நிலஞ் சுரக்கும் நிறைவள நன்மணி
இலஞ் சுரக்கும் பெறுதற் கரியதாம்
குலஞ் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்.'

செல்வத்தால் செழிப்புற்ற கோசல நாட்டில் வாழ்வார் குல நலம் பேணும் கொள்கையுடையார்.செல்வச்செருக்கின் காரணமாக ஒழுக்கத்தில் அவர்கள் வழுக்குதலிலர். ஆகவே, ஆங்குள்ளார் செல்வமும் ஒழுக்கமும் ஒருங்கு சேர்ந்த உயர்குடியினர். அவர்களால் கோசலநாடு பெருமை கொண்டு இலங்கியது , என்று குறிப்பிட்டார் கவியரசர். நாட்டிற்கு அமைய வேண்டிய எல்லா நலங்களும் வ ளங்களும் இனிது நிறைந்து விளங்கி னாலும் நாட்டைக் காக்கும் நல்வேந்தன் ஒருவன் இல்லையாயின் அவற் றால் பயனில் லை என்பார் வள்ளுவர்.

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு ' என்பது அவர் சொல்லமுதமன் றோ? வேந்தனே நாட்டின் உயிர் என்பது நல்லறிஞர் உள்ளமாகும். உலகத்தார்க்கு நெல்லும் உயிரன்று. நீரும் உயிரன்று. மன்னனே உயிராவான். இந்த உண்மையை நன்கு உணர்ந்து செங்கோன்மை பூண்டு ஒழுகுவது சிறந்த அரசன் கடமையாகும் என்று மொழிவார் மோசிகீரனார்.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனுல் யானுயிர் என்ப தறிகை
வேல்மிகு தா னை வேந்தற்குக் கடனே ' என்பது அப் புலவரின் பொருண்மொழியாகும். நாட்டிற்கு உயிர்போன்ற அரசனின் இயல்புகளைத் திருவள்ளுவர் தமது நூலில் குறிப்பாக 'இறைமாட்சி' என்ற பகுதியிலும் விளக்கமாக இருபத்தைந்து அதிகாரங்களைக் கொண்ட "அரசியல்" என்ற பெரும்பகுதியிலு ம் அழகுறத் தொகுத்தும் வகுத்தும் சொல்லியுள்ளார். மக்களுடைய இன்ப வாழ்வுக்கு மன்னன் இன்றியமையாதவன் என்ற உண்மை யை வலியுறுத்த விரும்பிய வள்ளுவர் பொருட்பாலில் முதலிலேயே மன்னன் மாண்பைக் குறிப்பிட்டு விடுகி றார், இறைமாட்சி என்று அமைத்த தலைப்பிலேயே அரசன் எத்தகைய

இயல்பினனாய் இருத்தல் வேண்டும் என்ற கருத்தைப் புலப்படுத்தும் பொய்யில் புலவரின் புலமைத்திறம் நம்மால் அளவிட லாகுமோ !

எங்கும் நிறைந்து தங்கிய எல்லாம் வல்ல ஈச னையும் இறை என்பர் ஆன் றோர். தனது செங்கோன்மைச் சிறப்பால் மக்கள் சிந்தையெல்லாம் என்றும் மங்காது தங்கு ம் பெருமையுற்ற மன்னனையும் இறை என்று குறிப்பர். என்றும் நீங்காது தங்கும் நல்லியல்பே இறை என்று சொல்லப்படும். அவ்வியல்புடையானே இறைவ னாவன். எங்கும் நிறைந்த ஈசனே கண் காணாத்தெய்வம்; மக்களின் மனங் கவர்ந்த மன்ன னோ கண்கண்ட தெய்வம். "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டதற்கு ஒப்பாகும் ' என்று நம்மாழ்வார் அருளிச்செய்தனர். 'எல்லோர்க்கும் தெய்வம் இ லைமுகப் பைம்பூண் இறை ' என்பார் குமரகுருபரர். இங்ஙனம் இறைவனது கூ றாக நின்று நாட்டைக் காக்கும் அரசனுக்கு நல்லியல்புகள் பல அமையவேண்டும். அவன் அமைச்சு , நாடு, அரண், பொருள், படை, நட்பு என்னும் ஆறு அங்கங்களையும் குறைவறப் பெற்றிருக்க வேண்டும். இவ் ஆறனுள் ஒன்றிரண்டு குறையினும் இழுக்கில்லை. எனினும் இவ் ஆறும் இனிது அமைய ப்பெற்றவனே அரசருள் ஏறு ' என்று கூறியருளி னார் திருவள்ளுவர். அரசனுக்கு எப்பொழுதும் மா றாது, இயல்பாக அமையவேண்டிய பண்புகள் நான்கு ; பகைவர்க்கு அஞ் சாத தகைமை , அருள் நிறைந்தகொடையுள்ளம், நுண்ணிதாக நோக்கும் அறிவுடைமை , வினை செய்தற்கண் மன வெழுச்சி ஆகிய பண்புகள் இயற்கையாகவே அமையப் பெற்ற அரசனே நில னாளும் திருவுடையனாகத் திகழ முடியும் அவன்பால் செயல் விரைவும் சிந்தையுள் நிறைந்த கல்வியும் சிறந்த ஆண்மையும் நீங்காமல் நிமிர்ந்து காணப்படும்.

அரசன் தனக்குரிய அறத்தின் வழுவாது ஒழுக வேண்டும். ஓதலும் ஈதலுமாய பொதுத் தொழிலினும் படைக்கலப் பயிற்சியும் பல்லுயிரோம்பலும் பகைத்திறம் தெறுதலும் ஆகிய சிறப்புத் தொழிலினும் வழுவாது நிற்றல் வேண்டும். கொ லை, களவு, பொய், சூது, காமம் முதலாய குற்றங்கள் நாட்டின்கண் நிகழாமல் காத்தல் வேண்டும். வீரத்திற்கு ஊறு விளையாத மானத்துடன் வி ளங்கவேண்டும். வேலேந்திய வீரன் , மதவேழத்தை எறிந்தாலும் விலங்கை எறிந்தான் என்பர் என்று எண்ணி அச் செய லைப் புரிய விரும்பான். முன்பு வெட்டுண்டவர் தனக்கு ஒப் பா னவராயினும் பிறர் படை தீண்டிய எச்சிலென்று அவரையும்வெட்ட விழையான். தனக்கு இளையவர் ஒப்பின்மையால் வீ ரத்திற்கு இழுக்கு வி ளையுமென எண்ணி அவரொடும் போர் புரியான்.தன்னின் மூத்தோரை எதிர்த்து வாள் வீசுதல் அறமாகாதென அதனையும் செய்யான். தன்னைக் கண்டு அஞ்சிப் புறங்காட்டி ஓடுவார் மீதும் வாளினை ஓச்சான். இவைபோன்ற உண்மை வீரனது திண்மையான செயல்களே மறனிழுக் கா மானமெனப் பேணப்படும். இதனையே பேராண்மை என்றும் கூறுவர் பெருநாவலர். அரசன் தனக்குப் பொருள்கள் வரும் வழிக ளை மேன்மேலும் பெருக்கவேண்டும். பலதுளிப் பெருவெள்ளமாகப் பல்வேறு வழிகளில் வந்து குவி ந்த செல்வத்தை ஓரிடத்தே தொகுத்துவைக்கவேண்டும். அதனைப் பகைவர், கள்வர் முதலான பிறர் கவர்ந்து கொள்ளாமல்

காக்கவேண்டும். அதனை அறம்பொருள் இன்பங்களின் பொருட்டுச் செலவிடவேண்டும் , இச் செயல்களில் அரசன் சிறந்த வல்லமை படைத்தவனாய் இருக்க வேண்டும்.

'இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரக' என்பது வள்ளுவர் சொல்லமுதமாகும். பகைவரை அழிப்பதாலும் , பிற நாடுகளைத் தன்னடிப் படுத்துத் திறை கொள்வதாலும் , தனது நாட்டைத் தலையளி செய்து காத்தலாலும் அரசனுக்கு நிதிக்களஞ்சியம் நிரம்புவதாகும். தனது களஞ்சியத்தைப் பொன்னாலும் மணியாலும் நிரப்பிய மன்னன் அவற்றைக் கொண்டு கடவுளர்க்கு விழவெடுத்தல் வேண்டும். அந்: தணர்க்கும் வறியோர்க்கும் அருளுடன் வழங்கவேண்டும். இவ்வகையில் செலவிடவே அறத்தின் பொருட்டுச் செலவழிப்பாகும். படைவலியைப் பெருக்குதற்கும் பகைவருடன் சேர்வாரைத் தடுப்பதற்கும் தன்னை விட்டுப் பிரிவாரைக் கூட்டுதற்கும், செலவு செய்யவேண்டும். இவ் வகையான செலவுகள் பொருளின் பொருட்டுச் செலவழிப்பதாகும். மண்டபம் அமைத்தும் குளங்கள் தோண்டியும் செய்குன்றுகளைப் படைத்தும் நறுமணப் பொழில்க ளை வளர்த்தும் ஐம்புல நுகர்ச்சிக்கு வேண்டுவன கொண்டும் இன்பத்தின் பொருட்டுப் பொருளைச் செலவிடுதல் வேண்டும் , இங்ஙனம் அரசன் மூவகையாகப் பொருளை வகுத்துத் தவறாமல் செலவிடுதல் அரிது. மேலும் இயற்றல், ஈட்டல், காத்தல், வகுத்தல் முதலாக செயல்களைத் தவ றாமல் புரிதலும் அரிதாகும். ஆதலின் இவை யெல்லாம் வல்லவனே நல்லரசன் என்ற கருத்தால் 'வல்லது அரசு' என்று குறித்தார் வள்ளுவர். வலியரால் நலிவெய்தி முறைவேண்டிய மக்கட்கும் , வறுமையால் துன்புற்றுக் குறையிரந்தார்க்கும் எளிதில் காணவல்ல காட்சிக்கு எளிய னாய் அரசன் இருத்தல் வேண்டும். எவரிடத்தும் இன்சொல்லே பேசும் இயல்புடைய னாக வேண்டும். இவ்வியல்புகளை உடைய அரசன் ஆளும் நாட்டைச் சிறந்த நாடென உயர்ந்தோர் ஏத்துவர். இத்தகைய மன்னன் காக்கின்ற நாட்டில் பசியும் பிணியும் பகையும் இன்றிப் பல்லுயிரும் நல்லின்பம் துய்க்கும். எல்லோரும் அரசனைக் கைகூப்பித் தொழுது வாழ்த்துவர். இன்சொல்லும் ஈகையும் உடைய அரசன், நாட்டில் பெரும் புகழை நாட்டுவான். அவன் நினைத்த பொருள்கள் அனைத்தும் பெற்று இன்புற்று வாழ்வான். நாட்டை நீதி வழுவாமல் பாதுகாக்கும் அரசன் பிறப்பால் மகனேயாயினும் அவனே மக்கட்குத் தெய்வமெனப் போற்றினார் பொய்யில் புலவர்.

அரசன் நாட்டைச் செங் கோன்மையுடன் ஆள்வதற்கு இடித்துரைக்கும் அமைச்சர்கள் இன்றியமையாதவர். அவரது அறிவுரைகளைத் தனது செவியால் பொறுக்க முடியவில்லையாயினும் நாட்டின் நலன் கருதி அவற்றைப் பொறுத்துக் கேட்டல் அரசனது கடமை யாகும். அத்தகைய கடமை உணர்ச்சியுடைய அரசனது கவிகை நீழலில் உலகம் என்றும் தவிராது தங்கும். வேண்டுவார்க்கு வேண்டுவன விரும்பிக் கொடுத்தல், எல்லோர்க்கும் இன்னருள் செய்தல், நீதியான ஆட்சியை நிலவுமாறு செய்தல் , தளர்ந்த குடிகளைத் தாங்குதல் ஆகிய இந் நான்கு செயல்களும் உடைய அரசன் , வேந்தர்க்கெல்லாம் வழிகாட்டும் ஒளிமிகு விளக்காய்த் திகழ்வான்.

இத்தகைய வேந்தனுக்குச் சென்ற சென்ற பேரர்களில் எல்லாம் வென்றி விளைப்பது அவனது வேலன்று; செங்கோலே சிறந்த வெற்றியை வி ளைப்பதாகும் என்று. உரைப்பார் திருவள்ளுவர். “வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின் “ என்பது அவர் சொல்லமுதமாகும். இக் கருத்தைச் சங்கத் தமிழ்ச் சான்றோர் ஒருவர் நன்கு வலியுறுத்துவார்.அரசன் நால்வகைப் படைகளும் மிகுதியாக உடையவனாயினும் அவனது வெற்றி அறநெறியையே முதலாகக் கொண்டது என்று மொழிந்தருளினார் அப் புலவர்.

"கடுஞ்சினத்த கொல்களிறும்
கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும்
நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்டதாயினும்
மாண்ட அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்பது அப் புலவரது பொருண்மொழியாகும்.

மேலும், அப் புலவர் அரசனுக்கு அமைய வேண்டிய நான்கு அரிய பண்புக ளை நயம்பட உரைக்கிறார்.தம்மவர் என்று குறை மறைத்தலும் , அயலவர் என்று குணம் கொல்லுதலும் இல்லாத நடுவுநிலையும் , வெங்கதிரன்ன வீரமும் , திங்களன்ன தண்மையும் , வானமன்ன வண்மையும் உடையவ னாக வேந்தன் விளங்குதல் வேண்டுமென விளக்கி னார். இத்தகைய அரசன் உறங் கி னாலும் அனனது புகழ் , நாட்டை நலம்பெறக் காக்குமெனத் திருத்தக்கதேவர் உரைத்தருளினார்.

'உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி
கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால் ' என்பது அவரது சிந்தாமணியாகும்.

தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமான் மாநிலம் காக்கும் மன்னற்கு இலக்கணம் வகுத்துள்ளார். மன்னன் , தன் நாட்டில் வாழும் மன்னுயிர்க்கு ஐவகையாக வரும் இன்னல்களை அகற்றவேண்டும் அறங்கள் ஓங்குமாறு ஆட்சி செலுத்த வேண்டும் என் றார், நாட்டில் வாழும் உயிர்கட்கு மன்ன னாலும் அவன் சுற்றத்தாலும் பகைவ ராலும் கள்வராலும் காட்டு விலங்குகளாலும் இன்னல்கள் ஏற்படலாம். இவ் ஐவகை இன்னல்களையும் அகற்றி , தாட்டை ஆளுதல் அரசன் கடமையாகும் என்று அறிவுறுத்தினார் அப் புலவர்.

மாநிலம்கா வலனாவான்
மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு
தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால்
கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும் தீர்த்(து)

அறம் காப்பான் அல்லனோ ?"

இத்தகைய நற்குண நற்செய்கைக ளையுடைய அரச னால் ஆளப்பெறும் நாடே மக்களால் பெரிதும் விரும்பப்படும். அவ் அரசனை மக்கள் தெய்வமென மதித்துப் போற் றுவர்.அவனுடன் ஒற்றுமையாக வாழ்ந்து நாட்டின் வலியைப் பெருக்குவர். அத்தகை நாடும் அரசும் நல்லோரால் நயந்து போற்றப்படும். (பக்.1-15)

திருவள்ளுவர் பிறந்தது குமரி மண்



டாக்டர் பத்மநாபன் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக க் கல்லூரியில் படிக்கும் காலத்தில் இருந்தும் , அதன்பின் வங்கியில் வேலை பார்க்கும் போதும் திருவள்ளுவரைப்பற்றித் தொடர்ந்து ஆய்வு செய்து வந்திருக்கிறார். அவருடைய மாணவப் பருவத்தில் அப்போது தெ.தி.இந்துக்கல்லூரி முதல்வராகப் பணியாற்றிய **பேராசிரியர் சி.இலக்குவனார் தான் இந்தக் கருத்தைக் கூறியதாகவும் இது தொடர்பாக ஆராய்ச்சி செய்யுமாறு தூண்டியதாகவும்** தெரிவித்தார்.அவருடைய கூற்றாகவே இக் கட்டுரை தொடர்கிறது.

“ஐம்பது ஆண்டுக ளாகத் திருக்குறள் குறித்தும் , திருவள்ளுவர் பற்றியும் ஆராய்ச்சி செய்து வருகிறேன். எனது ஆய்வுகளில் தலைசிறந்தது என்றால் அது 'திருவள்ளுவர் பிறந்தது குமரி மண்' என்ற எனது கண்டுபிடிப்புதான். இதை 1989 திசம்பர் மாதம் மொரீ சியசு தீவில் நடைபெற்ற ஏழாவது அனைத்துலக த் தமிழ் மாநாட்டில் பேசினேன். பின் அதையே புத்தகமாக வெளியிட்டேன். அதை அன்றைக்கு முதல்வராக இருந்த கலைஞர் வெளியிட்டார். மயிலாப்பூர்தான் திருவள்ளுவர் பிறந்த இடம் என்ற ஆழ்ந்த நம்பிக்கை கொண்டு வள்ளுவருக்காக வள்ளுவர் கோட்டம் அமைத்த கலைஞருக்கு இதை நம்புவது கடினமாக இருந்தது. ஆதாரங்களோடு நான் எழுதிய தகவல்களை அவரால் மறுக்க முடியவில்லை. அதன் மூலம் வள்ளுவர் பற்றிய பொய்யான பல கதைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தேன். அதன்படி திருவள்ளுவர் வள்ளுநாட்டை ஆண்ட மன்னர் , வள்ளுவ நாட்டின் ஒரு பகுதியான முட்டத்தை

அடுத்துள்ள திருநாயனார்குறிச்சியில் பிறந்து , மதுரையில் சில காலம் தங்கி , மயிலாப்பூர் சென்று மறைந்தார். இதற்கான ஆதாரங்கள் திருக்குறளிலேயே எனக்கு கிடைத்தன.
கிட்டத்தட்ட திருக்குறளில் இந்தப் பகுதியில் மட்டுமே பேசப்படும் தனிச் சொற்கள் ஐம்பதிற்கும் மேற்பட்ட சொற்கள் உள்ளன. 'இன்னைக்கு ஒரே மடியா இருக்கு ' என்பது சாதாரண பேச்சு மொழி. மடி என்றால் சோம்பல். திருவள்ளுவர் மடியின்மை என்று ஒரு அதிகாரத்தையே எழுதியுள்ளார். தமிழகத்தில் வேறெங்குமே சோம்பலை மடி என்று சொல்வதில்லை. இங்கு அது அன்றாட வழக்கில் உள்ள பேச்சுத் தமிழ்.
தமிழகத்தின் மற்ற பகுதிகளில் கரைபுரண்டு ஓடும் நீரை மட்டுமே வெள்ளம் என்று சொல்லுவார்கள். குமரி மாவட்டத்தில் மட்டும்தான் கிணற்று நீர் , குளத்து நீர் , ஆற்று நீர் போன்றவற்றையும் வெள்ளம் என்பார்கள். இதை வள்ளுவர் 'வெள்ளத்தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு ' என்று குறிப்பிடுகிறார். இந்த மண்ணில்தான் தாமரை பூத்த தடாகங்கள் அதிகம். குடிக்க வெள்ளம் வேண்டும் என்பது இங்கு பேச்சு வழக்கில் உள்ளது. மற்ற இடங்களில் இப்படி பேசினால் சிரிப்பார்கள். குமரி மாவட்டத்தில் வெள்ளம் என்றால் தண்ணீர் என்று பொருள். இதனை அப்படியே வள்ளுவர் பயன்படுத்தியுள்ளார்.
அதேபோல் எழுவாய் உயர்தி ணையாக இருந்தாலும் , பயனிலை அஃறிணையாக க் கூறுவது இந்த மக்களின் வழக்கம். ' அப்பா வரும் ', 'அம்மா பேசும் ', 'மாமா முடிக்கும் ' இப்படிப் பல. இதை அப்படியே திருக்குறளில் பயன்படுத்துகிறார் வள்ளுவர். 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து , அதனை அவன் கண்விடல் ' இந்த குறளில் , இதனை இவன் முடிப்பவன் என்று கூறாமல் முடிக்கும் என்று கூறுவது, குமரித் தமிழ் இங்கு பேசுகின்றது.
அதேபோல் உணக்கின் என்ற வார்த்தையும் , ஒரு பங்கு மண் , கால் பங்கு ஆகும்படி உழுது காயவிட்டால், ஒரு பிடி உரம் கூட த் தேவையில்லாமல் அந்த நிலத்தில் பயிர் செய்யலாம் என்பதை வள்ளுவர் 'தொடிப் புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும் வேண்டாது சாலப்படும்' என்று குறிப்பிடுகிறார். இதில் உணக்கின் (காய வைத்தல்) என்ற வார்த்தையை குமரி மாவட்டத்தில் மட்டுமே மக்கள் பேசுகின்றனர்.
மீன்கள் மி னுமினுப்பிற்கு மயங்கும் என்பது இவர்களின் கண்டுபிடிப்பு. முட்டம் , கடியப்பட்டினம் மீனவர்கள் தூண்டிலில் சரிகையை இணைத்து மீன் பிடிப்பதில் வல்லவர்கள். இப்படித் தூண்டிலில் பொன் இழையை வைத்து மீன் பிடிக்கும் வழக்கத்தை 'வேண்டற்க வென்றிடினும் சூதினை வென் றதூஉம், தூண்டிற்பொன் மீன் விழுங்கியற்று ' என்று குறிப்பிடுகிறார். இத்தகைய தூண்டில் முறை திருவள்ளுவர் பிறந்த திருநாயனார் குறிச்சிக்கு அருகில் மட்டும்தான் உள்ளது. வேறு எங்கும் இல்லை. இந்த ஊரின் பழைய பெயர்தான் கடியப்பட்டினம்.
இவற்றையெல்லாம்விட ஓர் அரிய சான்றினை கூறுகிறேன். இதுதான் திருவள்ளுவர் இந்த மண்ணைச் சேர்ந்தவர் என்பதற்கு மிக அரிதான சான்று. 'வரைவின் மகளிர்' என்ற தலைப்பில் விலைமகளிரைப் பற்றி க் கூறுகிறார். 'பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில், ஏதில் பிணைந்தழீ இயற்று' என்பது அந்தக்குறள்.
வாடிக்கையாளர்களை மிகவும் அன்போடு தழுவுவதாக நடிக்கும் ஒரு விலைமகளின் செயல் இருட்டறையில் முன்பின் தெரியாத ஒருவரின் பிணத்தைத் தழுவுவது போலாகும் என்று கூறுகிறார். பிணம் தழுவுதல் என்பது பண்டைய கால நம்பூதிரி இனத்தவர்களிடையே

இருந்தது. திருமணம் முடியாத கன்னிப் பெண் இறந்துவிட்டால் அந்தப் பிணத்தின் மீது சந்தனம் பூசி ஓர் இருட்டறையில் கிடத்தி , அந்த ஊரில் உள்ள ஏழை இளைஞன் ஒருவனை அழைத்து, அந்த இருட்டறைக்கு அனுப்புவார்கள். அவன் உள்ளே சென்று கன்னிப் பெண்ணின் சடலத்தை தழுவி வரவேண்டும். இளைஞனின் உடலில் ஒட்டியிருக்கும் சந்தனத்தை வைத்து அவன் பிணம் தழுவியதை உறுதி செய்வார்கள். காதல் ஏக்கத்தோடு கன்னிப்பெண் இறந்தால் அவள் ஆத்மா சாந்தியடையாமல் ஆவியாக அலையும் என்பது அவர்களின் நம்பிக்கை.

கூலிக்காக முன் பின் தெரியாத பெண்ணின் பிணத்தை தழுவிய இளைஞனையும் , பணத்திற்காக எந்த உடலையும் தழுவும் விலைமகளையும் வள்ளுவர் ஒப்பிட்டுக் கூறுகிறார். மலை நாட்டிலுள்ள பிணம் தழுவும் வழக்கத்தை வள்ளுவர் தமது நூலிலே குறிப்பிட்டிருப்பது அவர் குமரி மண்ணிலே பிறந்தவர் என்பதற்கான அசைக்க முடியாத சான்று'.

திருநாயனார் குறிச்சியை அடுத்து வள்ளுவன் கல் பொற்றை என்ற இடத்திற்கும் திருவள்ளுவருக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. தடிக்காரங்கோணம் அருகே உள்ள கூவைக்காடு என்ற இடத்தில்தான் இந்த மலை இருக்கிறது. இது அந்த க் காலத்திய ஊட்டி , கொடைக்கானல் போல் குளுமையாக இருந்திருக்க வேண்டும். இந்த மலையில்தான் திருவள்ளுவரும், அவர் மனைவியும் ஓய்வெடுக்க வருவார்கள். தேனும் தினைமாவும் விரும்பி உண்பார்கள். அப்படி அவர் தங்கி இளைப்பாறிய இடம்தான் அவர் பெயராலேயே அழைக்கப்படுகிறது.

கருமை நிறத்தில் பெரிய பாறை ஒன்று சிறு குன்று போல் உள்ளது. அதுதான் வள்ளுவன் கல்பொற்றை. அதன் உச்சியில் பொறிக்கப்பட்டுள்ள பாதம் 'வள்ளுவர் பாதம் ' என்று அழைக்கிறார்கள் இங்குள்ள பழங்குடிமக்கள்.

இந்த வரைபடம் வள்ளுவநாடு அமைந்திருக்கும் பகுதியைத் தெளிவுபடுத்தும். “

இவ்வாறு டாக்டர் பத்மநாபன் தெரிவித்தார்.

*பேராசிரியர் சி.இலக்குவனார் குமரி மாவட்டம் தமிழ்நாட்டுடன் இணைக்கப்படாத காலத்திலேயே நாகர்கோவில் தெ.தி.இந்துக்கல்லூரிக்குப் பணியாற்றச் சென்றுவிட்டார்.அப்போது அங்கு வழங்கும் பேச்சுமொழிநடையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய பழந்தமிழ்ச்சொற்கள் வழக்கில் இருப்பதைக் கண்டு மகிழ்ந்தார்.எடுத்துக்காட்டாக ஏனைய பகுதித் தமிழர் சாவி எனும் போர்த்துக்கிசியச் சொல்லையே பயன்படுத்தும்போது நாஞ்சில் தமிழர் “தாழ்க்கோல் “என்னும் தண்டமிழ்ச்சொல்லைப் பயன்படுத்துதல் குறித்துப் பெருமிதம் கொள்வார்.தொல்காப்பியரும் திருவள்ளுவரும் நாஞ்சில் நாட்டில் தோன்றியவர்கள் என்னும் கருத்தைத் தமது கருதுகோளாக மாணாக்கரிடம் தெரிவித்தபோது அவரிடம் மாணாக்கராக இருந்த திரு.பத்மநாபன் தாம் இது பற்றி ஆய்வு செய்யப்போவதாகத் தெரிவித்தார்.அவருடைய ஆய்வு பற்றியே இங்குச் சுருக்கமாக அளித்துள்ளோம்.உங்கள் பின்னூட்டுகளையும் வரவேற்கிறோம்.*


குமரி மாவட்டத்தில் பண்டைய
வள்ளுவ நாடு
கேரள
மாநிலம்
வேணாடு
மேக்கோடு
வள்ளுவ நாடு
நாஞ்சில் நாடு
முட்டம்
மன்னார்
வளைகுடா
கன்னியாகுமரி
அரபி கடல்

# திருக்குறளில் மனிதநேயம்



முனைவர் இர. பிரபாகரன்
மேரிலாந்து,அமெரிக்கா.

நேயம் என்ற சொல்லுக்கு அன்பு என்று பொருள். மனிதநேயம் என்ற சொல்லுக்கு மனிதர்கள் மற்ற மனிதர்களிடம் காட்டும் அன்பு என்று பொருள். ஒவ்வொரு மனிதனுக்கும் தன்னுடைய வாழ்க்கையில், தன் குடும்பம், உற்றார், உறவினர் போன்ற தொடர்புடையவர்களோடும், தொடர்பில்லாத மற்றவர்களோடும் பழகும் வாய்ப்பு இயற்கையாகவே அமைகிறது. தொடர்புள்ள மனிதர்களோடு ஒரு மனிதன் காட்டும் அன்பையும், தொடர்பில்லாத மற்ற மனிதர்களோடு ஒரு மனிதன் காட்டும் அன்பையும், திருவள்ளுவர் அழகாகவும், விளக்கமாகவும் தெளிவாகவும் பல குறட்பாக்களில் கூறியுள்ளார். மனிதநேயக் கருத்துக்கள் அறத்துப்பால், பொருட்பால் மற்றும் காமத்துப்பால் ஆகிய திருக்குறளின் மூன்று பகுதிகளிலும் காணப்படுகின்றன. அவற்றை ஆராய்வதுதான் இந்தக் கட்டுரையின் நோக்கம்.

**நெருங்கிய தொடர்புடையவர்களிடம் காட்டும் அன்பு**

தன்னுடைய காதலிக்கும் தனக்கும் உள்ள உறவை, நட்பு என்றும் அது உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பைப் போன்றது என்றும் காதலன் கூறுவதாக காமத்துப்பாலில் வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 1122).

***உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன***
***மடந்தையொடு எம்மிடை நட்பு.*** (குறள் – 1122)

அவனுடைய காதலி, தனக்கும் தன் காதலனுக்கும் உள்ள உறவைப் பற்றிக் கூறும்பொழுது, தன் காதலன் தன் கண்ணுக்குள்ளே இருப்பதால், தான் தன் கண்ணுக்கு மையிடுவதில்லை (குறள் – 1127) என்றும், அவன் தன் நெஞ்சில் இருப்பதால், தான் சூடான பொருட்களை உண்ணுவதற்கு அஞ்சுவதாகவும் (குறள் – 1128) கூறுகிறாள்.

***கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்***
***எழுதேம் கரப்பாக்கு அறிந்து.*** (குறள் – 1127)

*நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்*
*அஞ்சுதும் வேபாக்கு அறிந்து.* (குறள் – 1128)

இந்தக் குறட்பாக்களிலிருந்து, காதலர்களிடையே உள்ள உறவு, அளவு கடந்த அன்பின் அடிப்படையில் அமைந்ததாகத் தெரிகிறது. இந்தக் காதலர்கள், திருமணத்திற்குப் பிறகு, கணவன் மனைவியாக வாழும்பொழுது, அவர்களுடைய இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடையதாக இருந்தால்தான் அது பண்பும் பயனும் உள்ளதாக இருக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 45).

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது.* (குறள் – 45)

ஒருவன், அன்போடும் அறத்தோடும் இல்வாழ்க்கை நடத்தும்பொழுது, அவனோடு தொடர்புடைய மனைவி, மக்கள், பெற்றோர் (இயல்புடைய மூவர்) மற்றும் உறவினர் (ஒக்கல்) ஆகியோருக்கு, அவன் உற்ற துணையாகவும் ஆதரவாகவும் இருந்து அன்பு செலுத்த வேண்டும் என்ற கருத்தையும் நாம் திருக்குறளில் காண்கிறோம் (குறட்பாக்கள் - 41,43). ஆகவே, தொடர்புடைய அனைவரிடமும் ஒருவன் அன்பாக இருக்க வேண்டும் என்பது திருக்குறளில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை.* (குறள் – 41)
*தென்புலத்தார் தெய்வம், விருந்துஒக்கல் தான்என்றுஆங்கு*
*ஐம்புலத்தார் ஓம்பல் தலை.* (குறள் – 43)

தன்னுடைய குடியை மேன்மேலும் முன்னேற்றும் முயற்சியைக் கைவிடேன் என்னும் பெருமையைப்போல சிறந்த பெருமை ஒருவனுக்கு வேறு ஒன்றுமில்லை (குறள் – 1021) என்று வள்ளுவர் கூறுவது, ஒருவனுக்குத் தன் குடும்பத்தின் மீதுள்ள மனிதநேயத்தின் சிறப்பையும் அதன் பெருமையையும் குறிக்கிறது.

*கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்*
*பெருமையின் பீடுடையது இல்.* (குறள் – 1021)

ஆகவே, ஒருவன் தன்னோடு நெருங்கிய தொடர்புடைய அனைவரிடத்தும் மனிதநேயத்தோடு இருக்க வேண்டும் என்ற கருத்து திருக்குறளில் வலியுறுத்தப்படுவதைக் காண முடிகிறது.

**நெருங்கிய தொடர்பில்லாதவர்களிடம் காட்டும் அன்பு**

முதலில் தொடர்பில்லாமலிருந்தாலும், காலப்போக்கில் ஒருவன் சிலரோடு நட்புக்கொள்கிறான். நட்புக்கொண்டபிறகு, அவனுக்கும் அவனுடைய நண்பர்களுக்குமிடையே உள்ள உறவு நெருக்கமாகிறது. அந்த நட்பினால், நண்பர்கள் எவ்விதத் தயக்கமும் இல்லாமல், தன்னுடைய ஆடை நழுவினால், அதை ஒருவன் உடனே சரிசெய்துகொள்வதைப்போல் ஒருவருக்கொருவர் உதவி செய்ய வேண்டும் (குறள் – 788) என்ற கருத்தை, வள்ளுவர்

***உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே***

***இடுக்கண் களைவதாம் நட்பு.*** ((குறள் - 788)

என்ற குறளில் கூறுகிறார். இவ்வாறு உதவி செய்வதும் மனிதநேயத்திற்கு எடுத்துக்காட்டுதான்.

வள்ளுவர் காலத்திற்கு முன்பும், அவர் காலத்திலும் துறவிகளுக்கு உணவளிப்பது இல்வாழ்க்கையில் இருப்பவர்களின் கடமையாகக் கருதப்பட்டது. உடல் ஊனமுற்றதால் அல்லது வறுமையால் வாழ்க்கையை அனுபவிக்க முடியாமல் வருந்தியவர்கள் துவ்வாதவர் என்று அழைக்கப்பட்டனர். துறவிகளுக்கும், துவ்வாதார்க்கும், வாழ்க்கைப் பாதையில் வழிதவறியவர்களுக்கும் (இறந்தார்க்கும்), இல்வாழ்க்கையில் இருப்பவர்கள் உறுதுணையாக இருக்க வேண்டும் (குறள் – 42) என்று வள்ளுவர் கூறுவது தொடர்பில்லாதவர்களிடத்தும் ஒருவன் மனிதநேயத்தோடு வாழ வேண்டும் என்பதைக் குறிக்கிறது.

***துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்***

***இல்வாழ்வான் என்பான் துணை.*** (குறள் – 42)

இக்காலத்தில் இருப்பதுபோல், திருவள்ளுவர் காலத்தில் நாடெங்கிலும் விடுதிகள் இல்லாததால், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்பவர்களுக்குத் தன் வீட்டில், உண்ண உணவும் இருக்க இடமும் கொடுத்து ஆதரிப்பது இல்வாழ்க்கையில் இருப்பவனின் கடமையாகக் கருதப்பட்டது (குறள் – 43). இவ்வாறு தொடர்பில்லாதவர்களை ஆதரிப்பது விருந்தோம்பல் என்று அழைக்கப்பட்டது. இல்வாழ்க்கை நெறிநின்று வாழ்வதன் நோக்கம் விருந்தோம்பல் (குறள் – 81) என்று வள்ளுவர் கூறுவது திருக்குறளில் உள்ள மனிதநேயத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

***தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான்என்றுஆங்கு***

***ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.*** (குறள் – 43)

***இருந்துஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி***

***வேளாண்மை செய்தற் பொருட்டு.*** (குறள் – 81)

மக்கள் அனைவரும் பிறப்பினால் சமம் (குறள் – 972) என்றும், பிறர் துன்பத்தை தன் துன்பமாகக் கருதுவதுதான் ஒருவன் அறிவினால் பெற்ற பயன் (குறள் – 315) என்றும் வள்ளுவர் கூறுவது திருக்குறளில் காணப்படும் மனிதநேயத்திற்கு மற்றுமொரு சான்று.

***பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா***

***செய்தொழில் வேற்றுமை யான்.*** (குறள் – 972)

***அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்***

***தம்நோய்போல் போற்றாக் கடை.*** (குறள் – 315)

மக்கள் அனைவரும் சமம் என்று உணர்வதும், மற்றவர்கள் துன்பத்தைத் தன் துன்பமாகக் கருதுவதும் உயர்ந்த மனிதநேயக் கோட்பாடுகள்தான். ஆனால், அந்தக் கோட்பாடுகளை உள்ளத்தால் உணர்வதோடு நிறுத்திக்கொள்ளாமல், அவற்றைச் செயலிலும்

காட்ட வேண்டும் என்றும், தன்னிடம் உள்ள உணவு, செல்வம் ஆகியவற்றை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்வதுதான் தலையாய செயல் (குறள் – 322) என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

***பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்***
***தொகுத்தவற்றுள் எல்லாந் தலை.*** (குறள் - 322)

நாம் பிறர்க்கு உதவி செய்வதை வள்ளுவர் இரண்டு வகையாகப் பிரிக்கிறார். ஒன்று, வறுமையில் வாடுபவர்கள் நம்மிடம் வந்து கேட்கும்பொழுது இல்லையென்று கூறாமல், நம்மால் இயன்றதைப் பிறர்க்கு அளித்து உதவுவதை வள்ளுவர் ஈகை என்று கூறுகிறார். வறியவர்களுக்குத் தேவையானவற்றை, அவர்களிடமிருந்து எதையும் எதிர்பார்க்காமல் நாம் கொடுத்து உதவுவதுதான் உண்மையான ஈகை (குறள் – 221) என்ற கருத்தும் திருக்குறளில் காணப்படுகிறது.

***வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்***
***குறியெதிர்ப்பை நீர துடைத்து.*** (குறள் – 221)

வறுமையில் உள்ளவர்களின் நிலையை உணர்ந்து, அவர்கள் வந்து கேட்காமலேயே, அவர்களுக்குப் பலவகைகளிலும் உதவி செய்வது ஒப்புரவு. மற்றவர்களும் தன்னைப் போன்றவர்கள்தான் என்பதை உணர்ந்தவன்தான் உயிரோடு வாழ்பவன் என்றும் அவ்வாறு உணராதவன் செத்தவன் (குறள் – 214) என்றும், ஒருவன் பாடுபட்டுத் தேடிய பொருளெல்லாம் தகுதி உடையவர்களுக்குக் கொடுத்து உதவுவதற்குத்தான் (குறள் – 212) என்றும் ஒப்புரவைப் பற்றிய வள்ளுவரின் கருத்துக்கள் திருக்குறளில் காணப்படும் ஒப்புயர்வற்ற மனிதநேயக் கருத்துக்களாகும்.

***ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்***
***செத்தாருள் வைக்கப் படும்.*** (குறள் – 214)
***தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு***
***வேளாண்மை செய்தற் பொருட்டு.*** (குறள் – 212)

ஒப்புரவு செய்வதை வள்ளுவர் மூன்று வகையாகப் பிரிக்கிறார். ஒன்று, பலகாலம் பலருக்கும் உண்ண நீரளிக்கும் ஊருணிபோல் ஒப்புரவு செய்வது (குறள் – 215). இது மிகுந்த அறிவுடையவன் ஒப்புரவு செய்யும் முறை. அவன் தன் செல்வத்தைப் பலகாலம் பலருக்கும் பயன்படும் வகையில் பகிர்ந்தளிப்பான். உதாரணமாக, ஒருவன் தன் பணத்தை வங்கியில் வைத்து, அதிலிருந்து வரும் வட்டியை ஒப்புரவு செய்வதற்குப் பயன்படுத்தினால், அவன் பலகாலம் பலருக்கும் உதவ முடியும். பல செல்வந்தர்களும், நிறுவனங்களும் அறக்கட்டளைகளை நிறுவி, வங்கியில் உள்ள பணத்திலிருந்து கிடைக்கும் வட்டியை வைத்துப் பலருக்கும் உதவுவது இந்த வகையைச் சார்ந்தது. மற்றொரு வகையான ஒப்புரவு, உள்ளூரில் உள்ள மரம் தன்னிடம் உள்ள கனிகளைத் தன்னிடம் வருபவர்களுக்கு அளிப்பதைப் போன்றது (குறள் – 216). ஒருசில நாட்கள் (அல்லது மாதங்கள்) மட்டுமே மரத்தில் பழங்கள் இருக்கும். தன்னிடம் வருபவர்களுக்குத் தன்னிடம் உள்ள பழங்களை எல்லாம் கொடுத்த பிறகு, அடுத்த

ஆண்டு பழங்கள் வரும்வரை அந்த மரம் எவருக்கும் பயனளிக்க முடியாது. இதை அன்புடையவன் செய்யும் ஒப்புரவுக்கு வள்ளுவர் ஒப்பிடுகிறார். செஞ்சிலுவைச் சங்கத்தின் ஒப்புரவு இந்த வகையைச் சார்ந்தது. செஞ்சிலுவைச் சங்கத்திடம் பணம் இல்லையென்றால், அதன் பொறுப்பாளர்கள் நிதி திரட்ட வேண்டும். நிதி கிடைக்கும்வரை எவருக்கும் எந்த உதவியும் செய்ய முடியாது. இது சிலகாலம் பலருக்கும் பயன்படும் பழமரத்தைப் போன்றது. மூன்றாவதாக, பிறர்க்கு வழங்கி மகிழும் பண்புடைய பெருந்தகையானிடம் உள்ள செல்வம், தன்னுடைய பட்டை, வேர், இலை, காய், கனி போன்ற எல்லாவற்றையும் பிறர்க்குக் கொடுத்துத் தன்னையே அழித்துக்கொள்ளும் மருந்துமரத்தைப் போன்றது (குறள் – 217) என்கிறார் வள்ளுவர். இது சிலருக்குச் சிலகாலம் மட்டுமே பயன்படும் ஒப்புரவு. இந்த மூன்று வகையான ஒப்புரவைப் பற்றிக் கீழ்வரும் குறட்பாக்களில் காணலாம்.

***ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்***
***பேரறி வாளன் திரு.*** (குறள் – 215)
***பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்***
***நயனுடை யான்கண் படின்.*** (குறள் – 216)
***மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்***
***பெருந்தகை யான்கண் படின்.*** (குறள் – 217)

இது போன்ற ஒப்புரவையும் ஈகையையும் அனைவரும் எந்தவிதமான எதிர்பார்ப்பும் இல்லாமல், கைம்மாறு கருதாமல் பெய்யும் மழையைப்போல் செய்ய வேண்டும் (குறள் – 211) என்பதும், பிறர்க்கு உதவி செய்வதால் மேலுலகம் செல்லும் வாய்ப்பில்லை என்றாலும், அதைக் கடமையாகக் கருதிச் செய்ய வேண்டும் (குறள் – 222) என்பதும் குறள் கூறும் மனிதநேயக் கருத்துக்கள்.

**மன்னனின் மனிதநேயப் பண்புகள்**

தனிமனிதன் மட்டுமல்லாமல், நாட்டை ஆளும் மன்னனும் மனிதநேயத்தோடு செயல்பட வேண்டும் என்று திருக்குறள் வலியுறுத்துகிறது. மன்னன் காட்சிக்கு எளியவனாகவும், கடுஞ்சொல் கூறாதவனாகவும் இருக்க வேண்டும் (குறள் – 386) என்று வள்ளுவர் கூறுகிறார். மற்றும், மன்னன் நீதி தவறாது, முறைசெய்து மக்களைக் காப்பாற்ற வேண்டும் (குறள் – 388) என்ற கருத்தும், மன்னன் கொடை, அன்பு, செங்கோல் செலுத்துதல், குடிகளைக் காப்பாற்றுதல் ஆகிய பண்புகளை உடையவனாக இருக்க வேண்டும் (குறள் – 390) என்ற மனிதநேயக் கருத்துக்களையும் திருக்குறளில் காணலாம். குடிமக்களை அரவணைத்துத் தழுவி வாழும் மன்னனே சிறந்தவன் என்றும், மழைத்துளி இல்லையென்றால் எப்படி உலகம் வாழாதோ அதுபோல் மன்னனின் அருளாட்சி இல்லையென்றால் மக்கள் வாழ முடியாது (குறள் – 557) என்றும் வள்ளுவர் கூறுவது மன்னனுக்கு மனிதநேயத்தின் இன்றியமையாமையை வலியுறுத்துகிறது.

***காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்***
***மீக்கூறும் மன்னன் நிலம்.*** (குறள் – 386)
***முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு***
***இறையென்று வைக்கப் படும்.*** (குறள் – 388)
***கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்***
***உடையானாம் வேந்தர்க்கு ஒளி.*** (குறள் – 390)
***துளிஇன்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்***
***அளியின்மை வாழும் உயிர்க்கு.*** (குறள் – 557)

மன்னனுக்கு மக்கள்மீது மனிதநேயம் இருக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுவது மன்னனுக்கு மட்டுமல்லாமல், இக்காலத்தில் ஆட்சியில் இருக்கும் அனைவருக்கும், நிறுவனங்களின் தலைவர்களுக்கும் பொருந்தும்.

**மனிதநேயத்திற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு**

மனிதநேயத்தால் உந்தப்பட்டு, தன் இனத்தின் முன்னேற்றத்திற்காகவும் நல்வாழ்விற்காகவும் அயராது உழைத்த பெருமைக்குரியவர் பலர். அவர்களுள் தந்தை பெரியார், நெல்சன் மண்டேலா (Nelson Mandela), மார்ட்டின் லூதர் கிங் (Martin Luther King Jr.), மகாத்மா காந்தியடிகள், அன்னை தெரசா (Mother Therasa) போன்றவர்களின் சிந்தனையும் செயலும் மனிதநேயத்திற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு. இவையனைத்தும் மனிதநேயத்தின் சிகரம் என்றால் அது மிகையாகாது. தமிழ்ச் சமுதாயத்தைத் தன் குடும்பமாகக் கருதி, பெண்ணுரிமைக்காகவும், தாழ்த்தப்பட்டோரின் சமத்துவத்திற்காகவும், சாதி, மதம், மூடநம்பிக்கை ஆகியவற்றின் தளைகளிலிருந்து தன் சமுதாயத்தை மீட்பதற்காகவும், தமிழர்களிடையே சுயமரியாதைச் சிந்தனையையும் பகுத்தறிவையும் பரப்புவதற்காகவும் தன்னலமின்றித் தன் வாழ்நாள் முழுதும் போரிட்டார் தந்தை பெரியார். தென்னாப்பிரிக்காவில் வெள்ளையரல்லாதாரின் சம உரிமைக்காக, வெள்ளையரின் இனவெறி ஆட்சியை எதிர்த்துப் போராடி, இருபத்தேழு ஆண்டுகள் சிறை சென்று, முடிவில் வெற்றிபெற்று, அந்த நாட்டில் குடியாட்சி மலரச்செய்து, தன் இனத்தவருக்குச் சம உரிமை பெற்றுத் தந்த பெருமைக்குரியவர் நெல்சன் மண்டேலா. அவருடைய வெற்றி மனிதநேயத்தின் வெற்றி. காந்தியடிகளின் வன்முறையற்ற அறப்போராட்டத்தைப் பயன்படுத்தி, ஆப்பிரிக்க அமெரிக்கர்களின் மனித உரிமைக்காக மனிதநேயத்தின் அடிப்படையில் அமெரிக்காவில் போராடி வெற்றிபெற்றவர் நோபல் பரிசு பெற்ற மார்ட்டின் லூதர் கிங். குறிப்பிட்ட ஒரு இனத்திற்கு மட்டுமல்லாமல், தன் நாட்டில் உள்ள எல்லா இனத்தவருக்கும் வெள்ளையர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றுத் தருவதற்காக, வன்முறையற்ற போராட்டத்தை மனிதநேயத்தின் அடிப்படையில் கையிலெடுத்து மகாத்மா காந்தியடிகள் பெற்ற வெற்றியும் மனிதநேயத்தின் வெற்றிதான். எங்கோ (அல்பேனியாவில்) பிறந்து, எங்கோ (அயர்லாந்தில்) வளர்ந்து, இனம் நாடு என்ற எல்லைகளைக் கடந்து, இந்தியாவிற்குச் சென்று, அங்குள்ள ஏழைஎளியோர்களுக்கும்,

நோய்வாய்ப்பட்டோருக்கும், அநாதைகளுக்கும், இறக்கும் தருவாயிலிருப்போருக்கும் மனிதநேயத்தோடு தன் வாழ்நாள் முழுதும் தொண்டாற்றிய அன்னை தெரசா அவர்களின் மனிதநேயத்தோடு கூடிய சேவை அளப்பரிய பெருமைக்குரியது.

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்ற பாண்டிய மன்னன், இந்த உலகம் ஏன் இயங்கிக்கொண்டிருக்கிறது என்று சிந்தித்தான். ஆழ்ந்து சிந்தித்த பிறகு, அவன் "தனக்கென்று வாழாமல் பிறருக்காக வாழும் தன்னலமற்றவர்கள் இருப்பதால்தான் இந்த உலகம் இயங்கிகொண்டிருக்கிறது." என்ற முடிவுக்கு வந்தான். தந்தை பெரியார், நெல்சன் மண்டேலா, மார்ட்டின் லூதர் கிங், மகாத்மா காந்தியடிகள் மற்றும் அன்னை தெரசா போன்றவர்களின் மனிதநேயச் சிந்தனையும், செயல்பாடுகளும் பாண்டிய மன்னனின் முடிவை உறுதிப்படுத்துகின்றன.

**அனைவருக்கும் இருக்க வேண்டிய மனிதநேயப் பண்புகள்**

அன்பில்லாத மனிதன் உயிரில்லாதவன் என்றும் அவன் வெறும் எலும்பும் தோலும் சேர்ந்த உடம்பு மட்டுமே என்றும் வள்ளுவர் கூறுகிறார் (குறள் - 80). ஆகவே, அன்பில்லாத மனிதனே இல்லை. அன்புதான் மனிதநேயத்தின் அடித்தளம். அதனால், ஒவ்வொருவரும், அன்பை வளர்த்து, மக்கள் அனைவரும் சமம் என்ற எண்ணத்தோடு, அனைவரிடமும் இன்சொல்பேசி, விருந்தோம்பி, அடக்கத்தோடும், ஒழுக்கத்தோடும் பழகி, பொறுமையைப் பேணிக்காத்து, அழுக்காறு இல்லாமல், பிறர் பொருளைக் கவரும் எண்ணம் இல்லாமல், பயனில சொல்லாமல், புறங்கூறாமல், தீவினைகளை விலக்கி, ஈகையும் ஒப்புரவும் செய்து, வாய்மையே பேசி, சினத்தைத் தவிர்த்து, இன்னாசெய்தார்க்கு அவர் நாணுமாறு நன்னயம் செய்து, பிறர் நலத்தைத் தன்னலம்போல் கருதி, எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம் மாணா செய்யாமல் அன்போடு வாழ்வதுதான் திருக்குறள் கூறும் மனிதநேயம் என்னும் தலைசிறந்த பண்பு. இத்தகைய மனிதநேயத்தோடு வாழ்பவர்கள் இருப்பதால்தான் இவ்வுலகம் இயங்குகிறது என்றும், மனிதநேயம் உள்ளவர்கள் இல்லையென்றால், இவ்வுலகம் மண்ணுக்குள் மறைந்து அழிந்துவிடும் (குறள் – 996) என்றும் வள்ளுவர்,

***பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்***
***மண்புக்கு மாய்வது மன்.*** (குறள் - 996)

என்ற குறளில் கூறி, மனிதநேயத்தின் சிறப்பையும் அதன் இன்றியமையாமையையும் வலியுறுத்துகிறார். மனிதநேயத்தால்தான் உலகம் இயங்கிக்கொண்டிருக்கிறது என்பதில் பாண்டிய மன்னன் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியின் கருத்தும் வள்ளுவர் கருத்தும் ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது

**முடிவுரை**

மனிதநேயம் என்ற சொல்லுக்கு மனிதர்கள் மற்ற மனிதர்களிடம் காட்டும் அன்பு என்று பொருள். நெருங்கிய தொடர்புள்ளவர்களிடமும் தொடர்பில்லாதவர்களிடமும் அன்பு காட்ட வேண்டும் என்பதுதான் திருக்குறளில் நாம் காணும் மனிதநேயக் கருத்து. மனிதநேயம் என்பது

மனத்தளவில் ஒரு சிந்தனையாக இருப்பதோடு மட்டுமல்லாமல் நம்முடைய செயல்களிலும் அதை வெளிப்படுத்த வேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகிறார். வறுமையில் இருப்பவர்களுக்கு ஈகை, ஒப்புரவு போன்றவற்றைச் செய்து அவர்களின் வறுமையைப் போக்குவதற்குரிய மனிதநேயச் செயல்களைச் செய்ய வேண்டும் என்பதுதான் வள்ளுவரின் அறிவுரை. மனிதநேயம் என்பது தனி மனிதனுக்கு மட்டுமல்லாமல், ஆட்சியில் இருப்பவர்களுக்கும் ஏற்ற கருத்து என்று வள்ளுவர் கூறுகிறார்

இவ்வுலகம் ஏன் இயங்கிக்கொண்டிருக்கிறது என்று சிந்தித்த கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்ற பாண்டிய மன்னன், தன்னலமில்லாமல் பிறர்க்காக உழைப்பவர்கள் இருப்பதால்தான் இவ்வுலகம் இயங்கிகொண்டிருக்கிறது என்ற முடிவுக்கு வந்தான். பண்புடையவர்கள் உள்ளதால்தான் இவ்வுலகம் அழியாமல் இருக்கிறது என்று வள்ளுவரும் கூறுகிறார். இளம்பெருவழுதியின் கருத்துக்கும், வள்ளுவரின் கருத்துக்கும் ஒற்றுமை இருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்களின் கருத்திற்கேற்ப தன்னலமின்றி, மனிதநேயத்தோடு உழைத்த தந்தை பெரியார், நெல்சன் மண்டேலா, காந்தியடிகள், மார்ட்டின் லூதர் கிங் மற்றும் அன்னை தெரசா போன்றவர்களின் செயல்கள் வள்ளுவரும் இளம்பெருவழுதியும் கூறும் மனிதநேயத்திற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.




-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-



மார்கழி-1 -தி.பி.2052 திசம்பர்-16- பொ.ஆ.2021

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



**இனமானப் பேராசிரியர் க.அன்பழகனார்**

(திசம்பர் 19, 1922 - மார்ச் 7, 2020)

**இனமானப் பேராசிரியரின் நூறாவது பிறந்தநாள் சிறப்பிதழ்**

பெரியார் நெறியில் பிறழாப் பெற்றியர்
அண்ணா வழியில் அயராது உழைத்தவர்
கலைஞர் போற்றிய கனிவுறு நண்பர்
தமிழ்மறுமலர்ச்சியும் தமிழின உயர்வும்
இலக்கெனக் கொண்டே உழைத்த சான்றோர்
பேராசிரியர் பெருமை அனைத்தும்
யாரால் இயம்பிட இயலுமோ சொல்வீர் !

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும் இலவச இணையத்திங்களிருமுறை

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்

இணையாசிரியர்: முனைவர் தமிழியலன்

# இனமானப் பேராசிரியரின் நூறாவது பிறந்தநாள்

பேராசிரியர் க. அன்பழகன் (திசம்பர் 19, 1922 - மார்ச் 7, 2020)

"தமிழக முதிர்ந்த அரசியல்வாதியும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் (தி.மு.க.) மூத்த தலைவர்களில் ஒருவரும் ஆவார். இவர், தமிழக தி.மு.க. அரசின் அமைச்சரவையில் பல்வேறு காலகட்டங்களில், நிதி, கல்வி, நல்வாழ்வு, சமூக நலத்துறை அமைச்சராகப் பணியாற்றியுள்ளார். தி.மு.க.வின் பொதுச் செயலாளராக 1977 முதல் 2020 ( தான் இறக்கும்) வரை இருந்துள்ளார்.இவர், 2020 மார்ச்சு 7 ஆம் நாள் , தம்முடைய 97 ஆம் வயதில் , சென்னையில் காலமானார். இவர், 'இனமானப் பேராசிரியர் ' என அழைக்கப்பட்டார்.தமிழக முன்னாள் முதல்வர் கலைஞர் மு. கருணாநிதியின் எழுபத்தைந்து ஆண்டுக் கால நண்பராக இருந்தவர்.

க.அன்பழகன், திருவாரூர் மாவட்டத்திலுள்ள காட்டூர் கிராமத்தில் , எம். கல்யாணசுந்தரனார் , சுவர்ணம்பாள் தம்பதியருக்கு, 1922 திசம்பர் 19 இல் பிறந்தார். இவர் இயற்பெயர் இராமையா ஆகும். அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் இளங்கலை (சிறப்பு) தமிழ் படித்தார். இது கலைமுதுவர் பட்டத்திற்கு இணையானது. படிப்பை முடித்தபின், 1944 முதல் 1957 வரை சென்னை பச்சையப்பன் கல்லூரியில் துணைப்பேராசிரியராகப் பணியாற்றினார்.

பொது வாழ்க்கை

தமிழ்நாடு சட்டமன்ற மேலவை உறுப்பினராக, 1962 ஆம் ஆண்டில், சென்னை-செங்கற்பட்டு ஆசிரியர் தொகுதிக்கான இடைத்தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்திய நாடாளுமன்றத்தில், மக்களவை உறுப்பினராக 1967 முதல் 1971 வரை பங்கு பெற்றவர். 1971இல், நல்வாழ்வுத்துறை அமைச்சராகப் பொறுப்பு வகித்தார். 1983 ஆகத்து 10ஆம் நாள் ஈழத்தமிழரின் சிக்கலில் இந்திய ஒன்றிய அரசும் தமிழ்நாட்டு மாநில அரசும் போதிய கவனஞ்செலுத்தாதைக் கண்டித்துத் தமது சட்டமன்ற உறுப்பினர் பதவியை இவரும் அன்றைய தி.மு.க.தலைவர் மு.கருணாநிதியும் துறந்தனர். தி.மு.க.வின் மூத்த மேடைப் பேச்சாளராக விளங்கினார். ஈ.வெ.ரா. அடியொற்றி நடந்தார். இவர் , 1996, 2001 மற்றும் 2006 ஆம் ஆண்டுகளில் நடந்த சட்டமன்றத் தேர்தல்களில் , துறைமுகம் தொகுதியில் போட்டியிட்டு , தமிழக சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் , 2011 சட்டமன்றத் தேர்தலில் , வில்லிவாக்கம் தொகுதியில் போட்டியிட்டுத் தோல்வியுற்றார்.

**இதழாளர்**

க. அன்பழகன் , சென்னை புரசைவாக்கம் , வெள்ளாளர் தெரு , கட்டிட எண் 10-இலிருந்து "புதுவாழ்வு" என்னும் மாத இதழை, 1948 சனவரி 15ஆம் நாள் (தை முதல் நாள்) முதல் ஆசிரியராக இருந்து வெளியிட்டார்.[7]

**எழுத்துப் பணி**

எழுத்தாளராகப் பல தமிழ் சமூகக் கட்டுரைகளையும் நூல்களையும் எழுதியவர். இவர் எழுதிய நூல்கள் பின்வருமாறு:

அழகுராணி
இன-மொழி வாழ்வுரிமைப் போர்
உரிமை வாழ்வு, (1956, பாரி நிலையம், சென்னை.)
தமிழர் திருமணமும் இனமானமும்
தமிழினக்காவலர் கலைஞர்
தமிழ்க்கடல்
தமிழ்க்கடல் அலை ஓசை பரவும் தமிழ் மாட்சி
தமிழ் வானின் விடிவெள்ளி தந்தை பெரியார்
தொண்டா? துவேசமா? 1953, பாரி நிலையம், சென்னை.
நீங்களும் பேச்சாளர் ஆகலாம்
வகுப்புரிமைப் போராட்டம், (1951; மக்கள் மன்றம், பவழக்காரத்தெரு, சென்னை.)
வளரும் கிளர்ச்சி, 1953, பாரி நிலையம், சென்னை. (டாக்டர் நாயர் காலத்திலிருந்து, 1953 வரை திராவிட இயக்கத்தின் வரலாறு)

வாழ்க திராவிடம் (ஓர் ஆராய்ச்சி நூல்) 1947, திராவிடன் பதிப்பகம், வேலூர்.[10]
விடுதலைக் கவிஞர்
விவேகானந்தர் - விழைந்த மனிதகுலத் தொண்டு
சிங்க இளைஞனே! சிலிர்த்து எழு!
மாமனிதர் அண்ணா
தி திராவிடியன் மூவ்மெண்ட்டு (The Dravidian Movement)

**குடும்பம்**

இவர் வெற்றிச்செல்வி என்பவரை 1945 பிப்ரவரி 21 இல் பெரியார் ஈ.வெ.ரா. தலைமையில் சென்னையில் மணந்தார்.இவர்களுக்கு அன்புச்செல்வன் (பிறப்பு: பிப்ரவரி 17,1952) என்னும் மகனும் டாக்டர் மணமல்லி சிவராமன் ( மறைவு:13-6-2020)[13] செந்தாமரை என்னும் இரு மகள்களும் பிறந்தனர். வெற்றிச்செல்வியின் மறைவிற்குப் பின்னர் சாந்தகுமாரி என்பவரை மணந்தார். இவர்களுக்கு புருசோத்தமரா சு, இராசேந்திரபாபு என்னும் இரு மகன்களும் செயக்குமாரி என்னும் மகளும் பிறந்தனர்.[15] திருமதி.சாந்தகுமாரி அம்மா திசம்பர் 23, 2012 ஆம் நாள் மறைந்தார். பேராசிரியர்க. அன்பழகனுக்கு ப் புலவர் க. திருமாறன் , க. அறிவழகன் , க. மணிவண்ணன் , க. பாலகிருட்டிணன் என்னும் நான்கு தம்பிகள் உள்ளனர். இவர்களுள் புலவர் க. திருமாறன் விருதுநகர் கல்லூரியில் தமிழ் பேராசிரியராகப் பணியாற்றினர்.மற்றொரு தம்பியான க. அறிவழகன் சென்னை த் தியாகராயர் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றினார்.

**மறைவு**

முதுமையின் காரணமாக 2020 பிப்ரவரி 24 அன்று அவருக்கு திடீரென்று மூச்சுத்திணறல் ஏற்பட்டது. இதனைத் தொடர்ந்து சென்னையில் உள்ள தனியார் மருத்துவமனையில் தீவிர சிகிச்சைப் பிரிவில் அவர் அனுமதிக்கப்பட்டார். ஆனால் சிகிச்சை பலன் அளிக்காமல் 2020, மார்ச் 7 அதிகாலை 1.10 மணி அளவில் காலமானார்.ஒருபுறம் மொழிப்பற்று, இனப்பற்று, எழுத்துப்பணி, இயக்கப்பணி, மக்கள்பணி ஆகியவை அன்பழகனின் தனித்த அடையாளமாக இருந்தாலும் , மறுபுறம் கருணாநிதியின் நம்பிக்கைக்குரிய தோழன் என்பதே அவரின் பெருமைமிகு அடையாளமாக கடைசிவரை இருந்தது.

**'ஒரு புயற்பொழுதில்**
**கலைஞரும் நீயும்**
**இரு கரங்களாகக்**
**காத்திராவிட்டால்**
**திராவிட தீபம்**
**அணைந்து போயிருக்கும்!'**— கவிக்கோ அப்துல் ரகுமான்

## "ஆல்பர்ட் சுவைட்சர் வியந்த திருக்குறள்"

**---பேராசிரியர் க. அன்பழகன்**

உலகமும், உயிர்களும், மானிட வாழ்வும் கனவுமல்ல, பொய்யுமல்ல, மாயையுமல்ல. மாறாக மானிடன் உணரலாகும் உண்மையே என்னும் 'இன்மை மறுப்பு உடன்பாட்டுக் கொள்கையை' (Positive Outlook about world and Life) ஏற்றுக் கொண்டதாகவும், மனிதனைச் செயற்பாட்டு வாழ்வில் நின்று ஒழுகச் செய்வதற்கும் ஊக்கமளித்திடும் நெறியாகவும், திருவள்ளுவர் வகுத்த குறள் அறம் விளங்குவதைத் தமது இந்தியத் தத்துவ நூல்களைப் பற்றிய ஒப்பீட்டு ஆய்வில் கண்டறிந்த ஆல்பர்ட் சுவைட்சர், திருக்குறளைப் பெரிதும் வியந்து போற்றிப் பாராட்டியுள்ளார்.

இளமையிலேயே கிறித்துவ சமயத்துறையில் தேர்ந்த பின்னும், மனித நேயம் வளர்த்திடும் மானிடத்திற்கான தொண்டே இறைப்பணியாகும் உளங்கொண்டு, அதற்காகவே மருத்துவத் துறையில் பயின்று பட்டம் பெற்று, தொண்டு மிகவும் தேவைப்படும் ஆப்பிரிக்க நீக்ரோ மக்களுக்குப் பணியாற்றத் தீர்மானித்து, ஆப்பிரிக்காவிலுள்ள லேம்பர்னேயில் அரை நூற்றாண்டுக்கு மேல் தொண்டாற்றிய பெருமைக்குரியவர் ஆல்பர்ட் சுவைட்சர். தத்துவ ஆய்விலும் ஈடுபட்டு, மனித நேயம் வளர்த்திடும் நூல்கள் இயற்றியவர். அவரது அன்பின் வழிபட்ட தூய தொண்டு நோபல் பரிசும் பாராட்டும் பெற்றது.

'நல்லனவெல்லாம் கடன் என்ப' என்னும் அறிவும், அவற்றைச் செய்தலால் விளையும் நல்லின்பத்துக்காக அவற்றைச் செய்வதுமே 'அறநெறிக் கடமை' என்னும் தெளிவும் பலப்பல குறட்பாக்களிலும் காணப்படுகிறது.

பிறர்க்கு ஒன்று ஈவார் செய்யும் புண்ணியத்தால், மேலுலகில் நல்வாழ்வு பெறுவர் எனவும், பிராமணர்கட்கு அளிக்கும் தானதருமம் மறுபிறவியில் மேலான கதி அளிக்கும் எனவும் பிறநெறிகளில் பேசப்படுவதைக் கண்டே மேலுலகும், மறுபிறவியும் இல்லாவிடினும், இவ்வுலக வாழ்வில் பிறர்க்கு உதவும் ஈதலே சிறந்த தன்மையாவது என்றார் வள்ளுவர்,
ஒருவர் உழைப்பினால் தேடிய பொருட் செல்வமெல்லாம், உரிய பிறர்க்கு உதவுவதாய நற்கடமையில் ஈடுபடுவதற்கே என்பதும், குறள்நெறியின்படி மனிதனின் கடமை, பகவத் கீதையைப் போன்று, வருணசாதி அடிப்படையில் வரையறுக்கப்படவில்லை. அனைவருக்கும் பயனாகும் நல்லனவெல்லாம் கடமை எனக் காட்டப்பட்டுள்ளது குறளில்.

மனிதன் தனக்கும் பிறருக்குமாகவும் (உலகத்துக்காகவும்) மேற்கொள்ள வேண்டிய ஒழுகலாற்றைக் குறித்து எழுகின்ற பல்வேறு கேள்விகளுக்கு , குறள் அளிக்கும் விடைகள் பண்பினால் உயர்ந்த நோக்கமும், நல்லறிவும் பூண்டவை.

உலகத்தில் தோன்றியுள்ள இலக்கியங்களில், நாம் காணும் இந்த அளவு (அறிவுரை) மெய்யுணர்வு மேலோங்கும் மூதுரைத் தொகுப்பு வேறொன்றும் இல்லையென்றே கூறலாம்.
கடமை தனது தவறாமல் பிறரிடத்துக் குற்றம் கண்டவிடத்தும் இரக்கங் காட்டிப் பொறுக்க வல்லார்க்கு, உலகோர் கடமைப்பட்டவராவர்.
மேட்டுக் குடியினராயிருந்தும் (மேல் சாதியாயினும்) உயர்ந்த பண்பில்லாதவர் உயர்ந்தவராகார்.
வாழ்க்கையில் தாழ்நிலையினராயிருந்தும் தாழ்ந்த குணமற்றவர் இழிந்த குலமக்கள் ஆகமாட்டார்.
தனக்குக் காலம் கைகூடி வரவில்லை என்று பிறரெல்லாம் குறைபட்டிருக்கும் வேளையிலும் , முயற்சியுடையனாய் உழைப்பவனுக்கு எல்லாம் கூடிவரும் என்பது கருத்து: 'தெய்வச் செயல் ' என்னும் மனித ஆற்றலைக் கடந்த இயற்கை விதி துணையாகும் அளவும் ஊக்கமுடையவன் இகழ்ச்சி கருதாது விடாமுயற்சி உடையவன் ஆவான் அன்றோ!
திருக்குறளைக் கடந்த நூற்றாண்டில் செருமன் மொழியில் கார்ல்கிரவுலும் மொழிபெயர்த்திருந்தார். அந்த மொழி பெயர்ப்பு நூலைக் கொண்டே இந்த அளவு குறளின் குறிக்கோள் மேன்மையையும், மெய்யறிவுத் திறத்தையும் சுவைத்துப் பாராட்டும் சுவைட்சர், அதன் தமிழ் வடிவிலான மூல நூலையே கற்க நேரிட்டிருக்குமானால் , அந்நூல் மேலும் எவ்வகைச் சிறப்புகளைக் கண்டிருக்கக்கூடுமோ என்ற எண்ணம் எவருக்குத்தான் எழாது!

----"ஆல்பர்ட் சுவைட்சர் வியந்த திருக்குறள்" (சுருக்கம்)

(நூல்: 'கோட்டம் முதல் குமரி வரை' பக் 41.)

# இன்றைய உலகுக்குத் திருக்குறள் கூறும் அறிவுரைகள்



முனைவர் இர. பிரபாகரன்

மேரிலாந்து,அமெரிக்கா.

**இக் கட்டுரையாசிரியர் முனைவர் இர.பிரபாகரன் கடந்த பத்தாண்டு ஆண்டுகளாக வலைத்தளங்களில் சங்க இலக்கியம் மற்றும் திருக்குறள் சார்ந்த பாடல்களுக்கு உரைகளும் அவற்றோடு தொடர்புள்ள கட்டுரைகளும் எழுதிவருகி றார். அந்த வலைத்தளங்களுக்குச் சென்று பார்த்தவர்களின் எண்ணிக்கையும், பின்னூட்டங்களின் எண்ணிக்கையும்:**

| வலைத்தளம் | வருகை | --- | பின்னூட்டங்கள் |
|---|---|---|---|
| puram400 & Puram 1to69 | 312,000 | --- | 132 |
| nalla kurunthokai | 112,000 | -- | 42 |
| amazing kural | 34,000 | -- | 42 |
| Thirukkural katturaikal | 19,000 | -- | 42 |

**உலகெங்கும் பல்வேறு நாடுகளிலிருந்து முனைவர் இர.பிரபாகரன் அவர்களின் கட்டுரைகளைப் படித்து மகிழ்கின்றனர்.வெல்க இவரது தமிழ்ப்பணி!**

**முன்னுரை**

இவ்வுலகில் மனிதர்கள் நெடுங்காலமாகவே தங்களுடைய வாழ்க்கையில் பலவகையான துன்பங்களைச் சந்தித்துக்கொண்டிருக்கிறார்கள்; மற்ற உயிரினங்களும் பல இன்னல்களைச் சந்தித்துக்கொண்டிருக்கின்றன. இத்தகைய துன்பங்களுக்கு முடிவுகாண வேண்டும் என்ற நோக்கத்தோடு ஐக்கிய நாடுகளின் அவையைச் சார்ந்த அறிஞர்கள் 2015 ஆம் ஆண்டு, நிலையான வளர்ச்சிக்கான பதினேழு இலக்குகளை முடிவு செய்தார்கள். ஆங்கிலத்தில், அவை 'United Nations Organization's Sustainable Development Goals' என்று அழைக்கப்படுகின்றன. அந்த இலக்குகளை 2030 ஆம் ஆண்டுக்குள் அடைய வேண்டும் என்பது அவர்களின் திட்டம். அந்த இலக்குகளை அடைந்தால் உலகில் வறுமை, பிணி, வன்முறை மற்றும் சுற்றுச் சூழல் சீரழிவு ஆகியவற்றால் வரும் பெரும் துன்பங்களையும் பெருமளவில் குறைத்துவிடலாம் என்பது ஐ. நா. அவை அறிஞர்களின் கருத்து. இந்த நான்கு பெரும் துன்பங்களும் வள்ளுவர் வாழ்ந்த காலத்திலும் இருந்தன. அவற்றை எப்படித் தவிர்க்கலாம் என்பதைப் பற்றி வள்ளுவர் பல குறட்பாக்களில் கூறும் கருத்துக்களை ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**வறுமை**

ஏறத்தாழ 2,500 ஆண்டுகளுக்குமுன், கிரேக்கத்திலும், ரோமாபுரியிலும் மக்கள் மிகுந்த வறுமையில் இருந்ததாக வரலாறு கூறுகிறது. தமிழ் நாட்டில், சங்க காலத்தில் புலவர்களும் பாணர்களும் வறுமையில் வாடி, வள்ளல்களையும் மன்னர்களையும் நாடிச் சென்று பரிசு பெற்றதாக சங்க இலக்கியம் கூறுகிறது. எல்லாக் காலங்களிலும் வறுமையில் வாடிய மனிதர்கள் இருந்திருக்கிறார்கள். இன்றும் கோடிக்கணக்கான மக்கள் கொடிய வறுமையின் பிடியில் சிக்கித் தவிக்கிறார்கள்.

மன்னன் கொடையிலும் ஈகையிலும் சிறந்து விளங்கி, வறுமையில் இருப்பவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று இறைமாட்சி என்ற அதிகாரத்தில் வள்ளுவர் கூறுகிறார். ஒரு நாட்டில் உள்ள வறுமையை மன்னனால் மட்டுமே ஒழிக்க முடியாது என்பதை உணர்ந்த வள்ளுவர், ”வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை (குறள் – 221)” என்று ஈகைக்கு இலக்கணம் வகுக்கிறார். மேலும், “தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு (குறள் – 212).” என்று, கைம்மாறு கருதாமல் பெய்யும் மழைபோல், பொருள் இல்லாதவர்களுக்குப் பொருள் உள்ளவர்கள் உதவி செய்ய வேண்டும் என்று வள்ளு வர் வலியுறுத்துகிறார். ”இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்துகெடுக உலகியற்றி யான் (குறள் -1062).” என்று இறைவனையே வள்ளுவர் சாடுகிறார். எவரும் இரந்து உயிர் வாழும் நிலை இல்லாமல் இருக்க வேண்டுமானால், மன்னனும், மக்கள் அனைவரும் தங்களால் இயன்றவரை வறியவர்களுக்கு உதவி செய்து அவர்களின் நல் வாழ்விற்கு வழி வகுக்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது. வறுமையில் இருந்து, பசியென்று வந்து கேட்பவர்க்கு உணவு அளிப்பதால் மட்டும் வறுமையை ஒழிக்க முடியாது. வறுமையில் இருப்பவர்கள் வறுமையில் இருந்து நீங்கி வளமான வாழ்வு வாழ்வதற்கு அரசும் செல்வம் உள்ளவர்களும் வழிவகுக்க வேண்டும் என்பதுதான் ஈகை மற்றும் ஒப்புரவு ஆகிய அதிகாரங்களில் வள்ளுவர் கூறும் கருத்து.

**பிணி**

வறுமையைப்போல் பிணியும் இவ்வுலகை நெடுங்காலமாகவே துன்புறுத்திவருகிறது. மருந்து என்ற அதிகாரத்தில், ”முன்பு உண்ட உணவு செறித்த பிறகு, மாறுபாடு இல்லாத உணவை அளவோடு உண்டால் உடலுக்குக் கேடு விளைவிக்கும் நோய்கள் வாரா (குறட்பாக்கள் 942, 945).” என்று வள்ளுவர் கூறுகிறார். இவ்வாறு உண்பதனால் எல்லா நோய்களையும் தவிர்க்க முடியாது என்பதை அறிந்த வள்ளுவர், “உறுபசியும் ஓவாப் பிணியும் (குறள் – 734)” இல்லாமல் இருப்பதுதான் சிறந்த நாடு என்று

மன்னனுக்கு அறிவுரை கூறுகிறார். மரபுவழி வரும் நோய்கள், புற்று நோய்கள், கொடுந்தொற்று நோய்கள் போன்ற கொடிய நோய்களைத் தவிர்ப்பதற்கும் அவற்றை குணப்படுத்துவதற்கும் ஆட்சியில் இருப்பவர்கள் பொறுப்பேற்று ஓவாப் பிணிகளை அழிக்க வேண்டும் என்பதுதான் வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது.

**வன்முறை**

இவ்வுலகம் தோன்றிய நாள் முதல் இன்றுவரை பலவகையான வன்முறைச் செயல்கள் தொடர்ந்து நடந்துவருகின்றன. ஆதாமுக்கும் ஏவாளுக்கும் பிறந்த கேய்ன் , ஏபல் என்ற இரு மகன்களில் ஒருவன் மற்றொருவனைக் கொன்றதாக விவிலியத்தில் காண்கிறோம். போர், கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற வன்முறைகளும் மற்றும் பல வன்முறைகளும் நெடுங்காலமாகவே உலகில் தொடர்ந்து நடைபெற்றுவருகின்றன. ”இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை வேண்டும் பிறன்கண் செயல் (குறள் – 316)”, என்று இன்னாசெய்யாமைக்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர், ”எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம் மாணாசெய்யாமை தலை (குறள் – 3 17)” என்று அறிவுரை கூறுகிறார். இன்னா செய்யாமை மற்றும் கொல்லாமை ஆகிய அதிகாரங்களில் வன்முறைகளைக் கண்டிப்பதோடு மட்டுமல்லாமல் அவற்றைத் தவிர்க்க வேண்டும் என்ற கருத்தையும் வள்ளுவர் வலியுறுத்துகிறார்.

**சுற்றுச் சூழல் சீரழிவு**

தங்களுடைய உணவுக்குத் தேவையான பெரும்பாலான பொருட்களை வேட்டையாடிச் சேகரித்த மனிதர்கள், ஏறத்தாழ பதினோராயிரம் ஆண்டுகளுக்குமுன், வேளாண்மை செய்யத் தொடங்கியவுடன் காடு திருத்திக் கழனி ஆக்கினார்கள். அதிலிருந்து சுற்றுச் சூழல் சீரழிவு தொடங்கியதாக யுவால் நோவா ஹராரி (Yuval Noah Harari) என்ற வரலாற்று ஆசிரியர் தன்னுடைய *Sapiens – A Brief History of Humankind* என்ற நூலில் குறிப்பிடுகிறார். மனிதர்கள் சென்ற இடங்களில் எல்லாம் விலங்குகளை அழித்தார்கள்; காடுகளை அழித்தார்கள்; சுற்றுச் சூழல் சீரழிவு நடைபெறத் தொடங்கியது. பதினெட்டாம் நூற்றாண்டில் தொடங்கிய தொழிற்புரட்சிக்குப் பிறகு நிலக்கரி அதிகமாகப் பயன்படுத்தப்பட்டது. பின்னர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் சீருந்துகளும், இருபதாம் நூற்றாண்டில் விமானங்களும் வரத் தொடங்கிய பிறகு, கல்லெண்ணெய் (Petroleum) அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுவருகிறது. நிலக்கரி, கல்லெண்ணெய் போன்ற புதைபடிவ எரிபொருள்களை (புதைபடிவ எரிபொருள் - Fossil Fuel) எரிக்கும்போது, அவை நாம் சுவாசிக்கும் காற்றை மாசுபடுத்துவது மட்டுமல்லாமல், கரியமில வாயுவை அதிக அளவில் காற்றில் வெளிப்படுத்துகின்றன. அதனால் வளிமண்டலமும் புவியும்

வெப்பமடையும் வாய்ப்பு ஏற்படுகிறது. புவி வெப்பமடைவதால், வானிலையில் கடுமையான மாற்றங்கள் ஏற்படுகின்றன. இது தொடர்ந்து நடைபெற்றால் கடல் மட்டம் உயரும்; கடலோரங்களில் உள்ள ஊர்கள் நீரில் மூழ்கும். தொழிற்சாலைகளிலிருந்து வெளிவரும் கழிவுப்பொருள்கள் நிலத்தையும் நீரையும் பாழக்குகின்றன. நெகிழியாலான (நெகிழி - Plastics) பொருட்கள் நிலத்தையும் கடல் நீரையும் மாசுபடுத்துவது மட்டுமல்லாமல் அங்கு வாழும் விலங்குகளுக்குத் தீமை விளைவிக்கின்றன. இவ்வாறு, ஆகாயத்தையும், நிலத்தையும், நீரையும் காற்றையும் தொடர்ந்து மாசுபடுத்தினால் அது நம்முடைய வாழ்வுக்கும் மற்ற உயிரினங்களின் வாழ்வுக்கும் கேடு விளைவிக்கும் என்று விஞ்ஞானிகள் உறுதியாகக் கூறுகிறார்கள்.

வள்ளுவர் காலத்தில், மனிதர்கள் சுற்றுச் சூழலுக்கு அதிக அளவில் கேடு விளைவிக்கவில்லை. விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்ப வளர்ச்சியால் மனிதர்கள் சுற்றுச் சூழலுக்குச் செய்யும் தீமைகள் அதிகரித்துவிட்டன. சுற்றுச் சூழல் பாதுகாப்பிற்கும் வள்ளுவர் சில அறிவுரைகளைக் கூறுகிறார்.

இக்காலத்தில் வாழும் மனிதர்களுக்கு மட்டும் இவ்வுலகம் சொந்தமானதன்று. நமது அடுத்த தலைமுறையினர்களுக்கும், இக்காலத்தில் வாழும் மற்ற உயிரினங்களுக்கும் அவைகளின் சந்ததிகளுக்கும் இவ்வுலகம் சொந்தமானது. ஆகவே, உலகைப் பாழாக்கி, அதை வாழ்வதற்கு ஏற்ற இடமாக இல்லாமல் அழிப்பதற்கு நமக்கு எந்த உரிமையும் இல்லை. சுற்றுச் சூழலுக்கு கேடுகள் வருவதற்குக் காரணம் விஞ்ஞானம் மற்றும் தொழில் நூட்பம் ஆகிய துறைகளின் வளர்ச்சியால் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டுவரும் செயற்கைப் பொருள்கள்தான். செயற்கைப் பொருள்களால் பல நன்மைகள் இருப்பதால், அவற்றைத் தவிர்க்க முடியாது. செயற்கையாக எதைச் செய்தாலும் அது இயற்கைக்கு முரணானதாக இல்லாமல் இருக்க வேண்டும் என்றும் அதை இயற்கையோடு இணைத்துச் செயல்படுத்த வேண்டும் என்ற கருத்தையும், "செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து இயற்கை அறிந்து செயல் (குறள் – 637)." என்ற குறளில் வள்ளுவர் எச்சரிக்கிறார்.

"எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை அதிர வருவதோர் நோய் (குறள் – 429)" என் ற வள்ளுவரின் அறிவுரை க்கேற்ப, விஞ்ஞானிகள் கூறும் அறிவுரைகளைப் பின்பற்றி, சுற்றுச் சூழலின் சீரழிவைத் தடுத்து, நம்மையும் நமது சந்ததியினரையும் மற்ற

உயிரினங்களையும் எதிர்காலத்தில் வரவிருக்கும் பேரழிவிலிருந்து பாதுகாத்துக்கொள்வது நமது தலையாய கடமை.

**முடிவுரை**

வறுமை, பிணி, வன்முறை, சுற்றுச் சூழல் சீரழிவால் வரும் தீமைகளைத் தவிர்ப்பதற்கு வள்ளுவர் கூறும் அறிவுரைகள் எக்காலத்திற்கும் எந்நாட்டவர்க்கும் ஏற்றவை. மனித சமுதாயம் இதுவரை அவற்றைப் பின்பற்றத் தவறிவிட்டது. இனி வருங்காலத்திலாவது வள்ளுவரின் அறிவுரைகளைப் பின்பற்றி நாம் வாழ்வாங்கு வாழ வேண்டும்.

# பரிமேலழகர் - சி. இலக்குவனார் உரை ஒப்பீடு

---இரா.உமாதேவி,

ஆய்வியல் நிறைஞர், தமிழ்த் துறை, அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),சேலம் - 07,

முன்னுரை:

தமிழறிஞர்களில் தலை சிறந்தவராகக் கருதப்படும் சி.இலக்குவனார் மொழியியல், இலக்கணம், திருக்குறளாராய்ச்சி, சங்க இலக்கிய ஆராய்ச்சி எனப் பல்வேறு பொருள்களில் நிறைய நூல்களைப் படைத்துள்ளார். மேலும் இவர் இதழியல், கவிதை போன்ற துறைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். திருக்குறளை மக்களிடையே பரப்புவதற்குக் குறட்பகுதியிலுள்ள சில அதிகாரங்களை எடுத்துத் தனித்தனி நூல்களாக எழுதி வெளியிட்டார். அவ்வழியாக எழுந்த நூலே ‘அமைச்சர் யார்?' என்னும் நூலாகும்: இது பொருளியலில் உள்ள அங்கவியல் பகுதியில் அமைந்துள்ள முதல் நூறு குறட்பாக்களுக்கு விளக்கமளிக்கிறது. இக்குறட்பாக்களை, தமிழறிஞர்களால் தலை சிறந்த உரை என அழைக்கப்படும் பாமேலழகரின் உரையுடன் ஒப்பிட்டு நோக்குவது சாலச் சிறந்தது.

குறட் பொருள் மாறுபாடு:

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு

என்ற குறட்பாவிற்கு பரிமேலழகர், இதற்கு முன்னர்க் கூறப்பட்ட நூற்பாவில் உள்ளதைக் குறிக்கும் வகையில் ஐந்து என்பதற்கு அவ்வைந்து எனச் சுட்டோடு சேர்த்துக் கூறுகிறார். ஆனால் பரிமேலழகர் கூறிய உரை விளக்கத்தினை மறுக்கும் இலக்குவனார் இதற்கு முன்னர்க் குறட்பாவில் கருவி, காலம், செய்கை, செய்யும்வினை என்ற நான்குதானே கூறப் பட்டுள்ளன? எனக் கேள்வி எழுப்புகிறார். மேலும், செய்கை என்பதில் ஒரு செயலைத் தொடங்கும் சூழ்ச்சியும், முடிக்கும் வழியும் அடங்கியுள்ளன எனப்பரிமேலழகர் உரைக்கிறார்.

ஆனால் இலக்குவனார் அதை மறுத்து வள்ளுவர் ஒவ்வொரு குறட்பாவிலும் 'ஒவ்வோர் உண்மையை விளக்கியுள்ளார். குன்றக்கூறலும், மிகைப்படக்கூறலும் திருவள்ளுவர் மேற்கொள்ள வில்லை எனக் கூறுகிறார். மேலும் இக்குறள் முதல் குறட்பாவிலும் உள்ள செய்திகளுடன் தொடர்புடையது அன்று, இதில் வரும் தொகை இக்குறட்பாவில் கூறும் ஐந்து செயல்களையுமே குறிக்கும் எனத் தெளிவுபட உரைக்கிறார்,

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்

என்ற இக்குறளில் வரும் தொழில் கேட்கும் ஞாலம் ' என்பதிலுள்ள தொழில் சொல்லை நிரந்து என்பதனோடு கூட்டித் தொழில் நிரந்து என்பதற்குச் சொல்லப்படும் காரியங்களை நிரல்படக் கோத்து என்று பரிமேலழகர் கூறுகிறார். ஆனால் இலக்குவனார் நிரந்து என்பதற்கே சொல்ல

வேண்டுவனவற்றை முறைப்படுத்தி முறைப்படுத்தி என்றுதான் கூறவேண்டும். தொழில் நிரந்து என்று கூறக்கூடாது என்கிறார். இதன் மூலமாக இவருடைய தமிழ்ப் புலமை வெளிப்படுகிறது. சொல்லுக்குச் சொல் மிகவும் எளிமையாகப் பொருள் தந்துள்ளார் இலக்குவனார். அவைஅறியார் சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின் வகையறியார் வல்லதூஉம் இல்.

இக்குறளில் வரும் 'வல்லதூஉம் இல் ' என்பதற்குப் பரிமேலழகர் , கற்றுவல்ல கலையும் அவர்க்கில்லை எனப் பொருள் கூறுகிறார். ஆனால் அதை இலக்குவனார் மறுக்கிறார். கற்றுவல்ல கலைகளைப் பெற்றிருத்தல் வேறு ; கலைகள் பல கற்றவர் அனைவரும் சொல்வன்மை உடையோராய் இருத்தல் சாத்தியமானது அன்று. சொல்வன்மைக் கலை. அவருக்கு இல்லை எனக் கூறலும் அச்சொல்லுக்கு பொருத்தமுடைய பொருளாக இருக்கும் எனக் கூறுகிறார்.

குறிப்பின் குறிப்பு உணர்வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.

இக்குறட்பாவில் வரும் குறிப்பின் குறிப்பு உணர்வாரை என்பதற்குப் பரிமேலழகர் தம் குறிப்பு நிகழும் வகையை அறிந்து அதனால் பிறர் குறிப்பையும் அறிவாரை எனக் கூறுகிறார். ஆனால் இலக்குவனார் பிறருடைய முகக்குறிப்பால் உள்ளத்தில் கருதுவதை அறிவாரை எனப் பரிமேலழகர் உரையிலிருந்து வேறுபட்டு நிற்கிறார். இங்கு இலக்குவனார் தரும் உரை விளக்கமே பொருத்த முடையதாக அமைகிறது.

பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின்

இக்குறட்பாவிற்கு பரிமேலழகர் அமைச்சர்கள் தம் அரசனை நாடி வரும் வேற்றுநாட்டு அரசர்களில் பகைவர் யார் ? நண்பர் யார்? என்று அறிதலில் கண்கள் பயன்படும் என்ற கருத்தில் கூறியுள்ளார். ஆனால் இக்கருத்தை மறுக்கும் சி.இலக்குவனார் இன்றைய நாளில் அரசர்கள் ஆட்சிப் பொறுப்பில் இல்லை. எனவே இது பொருந்தாது. அமைச்சர்கள் தன்னுடன் பழகுபவர்களில் நண்பர் யார் ? பகைவர் யார்? என்பதைக் குறிப்பால் அறிந்து கொள்ளவேண்டும் எனக் கூறுகிறார். இக் கருத்து காலத்திற்கு ஏற்றவாறு திருக்குறளுக்கு உரை எழுதவேண்டும் என்ற செய்தியை வெளிப்படுத்தகிறது.

ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

இந்தக் குறளுக்கு மூப்படைந்துள்ள தாய் , தந்தையாரையும் கற்புடைய மனைவியையும் , குழவியினையும் பசித்துன்பத்திலிருந்து காக்க இழிந்த செயல் புரிந்தேனும் காப்பாற்ற வேண்டும் என்பது அறநூற் பொதுவிதி எனப் பரிமேலழகர் கூறுகிறார். ஆனால் இக்கருத்தை சி.இலக்குவனார் மறுக்கிறார். பரிமேலழகர் கூறும் அறநூற் பொதுவிதி தமிழர் அறத்தைக் குறிப்பது அன்று. தமிழருக்குரிய நூலிலும் இவ்வாறு குறிப்பிடவில்லை. எனவே பரிமேலழகர் கருத்து பெருந்தவறாகும் என்கிறார். அன்னை மீது கொண்டுள்ள அன்பு காரணமாக அவள் பசியைத் தீர்ப்பதன் பொருட்டு பழி யானவற்றைச் செய்யக் கூடாது எனத் துல்லியமான கருத்தை இலக்குவனார் குறிப்பிடுகிறார்.

அதிகார வைப்பு முறை வேறுபாடு:

பரிமேலழகர் திருக்குறள் பொருளியலின் ஒரு பகுதியாக அமைந்துள்ள அங்கவியலில் கூறப்பட்டுள்ள முதல் பத்து அதிகாரங்களைப் பின்வருமாறு அமைத்துப் பொருள் கூறுகிறார்:

1.அமைச்சு 2.சொல்வன்மை 3.வினைத்தூய்மை 4. வினைத் திட்பம் 5.வினை செயல்வகை 6. தூது 7.மன்னரைச் சேர்ந்தொழுகல் 8.குறிப்பறிதல் 9.அவையறிதல் 10.அவையஞ்சாமை. அமைச்சர் குறித்தும் அமைச்சரின் பணிகள் குறித்தும் கூறும் சி.இலக்குவனார் ஒவ்வோர் அதிகாரத்தையும் கோவையாக அமைத்து அதற்கான சரியான விளக்கத்தையும் தருகிறார் , இவருடைய அதிகார வைப்பு முறையானது , 1. அமைச்சு 2.சொல்வன்மை 3. அவையறிதல் 4. அவையஞ்சாமை 5.குறிப்பறிதல் 6. வினைத்தூய்மை 7.வினைத்திட்பம் 8.வினை செயல்வகை 9. தூது 10. மன்னரைச் சேர்ந்தொழுகல் என அமைகிறது. இலக்குவனார் அதிகார வைப்பு முறைக்கு கூறும் விளக்கம் ஏற்புடையதாக அமைகிறது. அதாவது அமைச்சராவார் சொல் வன்மை பெற்றிருத்தல் வேண்டும். சொல்வன்மையுடையார்க்கு அவையை அறிதலும் அவையஞ்சாமையும் குறிப்பறிதலும் இன்றியமையாதன. அமைச்சரான பின்னர் வினைத்தூய்மையும் வினைத் திட்பமும், வினைசெயல்வகையும் இன்றியமையாதன. அமைச்சருக்குள்ள தகுதியுடையோரே தூதுவராவதற்கு உரியவர். மன்னரைச் சேர்ந்தொழுகல் அதிகாரம் இக்காலத்திற்கு வேண்டியதின்று.

ஆயினும் இவ்வியலில் கூறப்பட்டுள்ள அறிவுரைகள் தலைவருடன் அமைச்சரும் , அமைச்சருடன் செயலாளரும் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பதைக் கூறுகிறது. ஆகையால் இவ்வியல் இறுதியில் வைக்கப்பட்டுள்ளது.

குறள் வரிசைமுறை மாற்றம்:

சி.இலக்குவனார் 'அமைச்சர் யார்?' என்னும் நூலில் குறிப்பிட் டுள்ள பல அதிகாரங்களின் கீழ் அமைந்துள்ள குறட்பாக்களை முனைவர் கோ.சங்கர வீரபத்திரன் பொருளடிப்படையில் மாற்றி அமைத்துள்ளார். இது பரிமேலழகர் கூறும் குறள் வரிசை முறையில் இருந்து வேறுபடுகிறது. வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை, குறிப்பறிதல், அவையறிதல், அவையஞ்சாமை ஆகிய அதிகாரங்களில் உள்ள குறள் வரிசை முறையினை இலக்குவனார் மாற்றி அமைத்துள்ளார்.

எடுத்துக்காட்டாக, வினைத்தூய்மை என்ற அதிகாரத்தில் உள்ள குறள் வைப்பு முறையினைப்பற்றிக் காணலாம். பரிமேலழகர் "எற்றென்றிரங்குவ" என ஐந்தாவதாகக் கூறியுள்ள குறளினை இலக்குவனார் அவ்வதிகாரத்தின் பத்தாவது குறளாக மாற்றி அமைத்துள்ளார். "ஈன்றாள் பசி" என்ற குறளை ஐந்தாவது குறளாக இலக்குவனார் அமைக்கிறார் , இக்குறளைப் பரிமேலழகர் ஆறாவது குறளாக அமைக்கிறார். இதுபோல இவ்வதிகாரத்தில் பல குறள்களை மாற்றியமைத்துள்ளார் இலக்குவனார்.

மற்றுமொரு அதிகாரமான 'தூது' என்பதில் "நூலாருள் நூல் " என்ற குறளைப் பரிமேலழகர் மூன்றாவது குறளாக அமைக்க இலக்குவனார் நான்காவது குறளாக அமைக்கிறார். நான்காவது குறளாகப் பரிமேலழகர் "அறிவு உருவு " என்ற குறளை அமைக்க அதனை மூன்றாவது குறளாக இலக்குவனார் அமைத்துப் பொருளுரைக்கிறார்.

இவர் இவ்வாறு மாற்றி அமைப்பதற்கான காரணத்தை இலக்குவனார் கூறும் குறளின் பொருளைப் பார்த்தால் புலனாகும். "அறிவு உருவு " என்ற குறளின் பொருள் பின்வருமாறு அமைகிறது. எவற்றையும் எளிதில் உணரும் அறிவும் கண்டார் விரும்பும் தோற்றப்பொலிவும் ஆராய்ந்து கற்ற கல்வியும் என இம்மூன்று சிறப்பியல்புகளை மிகுதியாக உடையவன் வினை முடித்தற்கு வேற்று நாட்டிடைத் தூதாகப் போவான் எனக் கூறுகிறார். இதற்கு அடுத்த குறளில் வேற்று நாட்டிடைச் சென்றுள்ள தூதால் ஆண்டுள்ள அமைச்சர்களை விடச் சிறந்த புலமையாளராக இருத்தல் வேண்டும் எனப் பொருள் அடிப்படையில் பரிமேலழகர் கூறும் வரிசை முறையில் இருந்து மாற்றி அமைத்துள்ளார் இலக்குவனார்.

முடிவுரை:பரிமேலழகர் உரையின் வாயிலாக அவர் வடநூற் கருத்துகளை ஒட்டி உரை செய்தமையை அறிய முடிகிறது ஆனால் சி. இலக்குவனார் தமிழ் மீது பற்று கொண்ட காரணத்தால் அதனை மறுத்துத் திருவள்ளுவர் பரிமேலழகர் சொல்லுவது போல் கூறவில்லை ; அவர் அனைத்தையும் தமிழர் முறைப்படியே கூறியுள்ளார் என்பதைத் த மது உரையின் வாயிலாகக் கூறுகிறார். மேலும் , சி. இலக்குவனார் பொருள் அடிப்படையில் அதிகாரம் , குறள் வைப்பு முறையை மாற்றி அமைக்கிறார். இது பரிமேலழகர் அதிகாரம் , குறள் வைப்பு முறையிலிருந்து வேறுபடுகிறது.

# முறை சொல்ல வேண்டியவன் குறையின்றி இருக்க வேண்டும்!

## -வழக்கறிஞர் என்.எஸ்.ராஜன்



திரு என் எஸ் ராஜன் ( 70) சிவகங்கை மாவட்டம் கோட்டையூரில் 2-3-1951ல் பிறந்தவர். சென்னையில் பட்டப் படிப்பும் சட்டக் கல்வியும் பயின்றவர். மாணவப் பருவத்தில் திராவிட இயக்கத்தின் பால் ஈர்க்கப்பட்டு பேரறிஞர் அண்ணாவுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவர். இந்தியன் வங்கியில் சட்டப்பிரிவில் உயர் அதிகாரியாக சிறப்புற பணியாற்றி விருப்ப ஓய்வு பெற்று சென்னை உயர் நீதிமன்றத்திலும் டெல்லி உச்ச நீதி மன்றத்திலும் வழக்குரைஞராக பணியாற்றியவர்.சில காலம் சென்னை சட்டக்கல்லூரியில் வருகைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர். பொது இடங்களில் புகைபிடிக்கக் கூடாது என்று முதன்முதலில் சென்னை உயர் நீதிமன்றத்தில் பொது நல வழக்கு தொடுத்தவர். தொழிலாளர் தொடர்புடைய வழக்குகளில் திறம்பட வாதாடி தக்க ஆணைகள் பெற்றுத் தந்தவர். தமிழில் சட்ட உலகம் என்ற மாத இதழ் ஆசிரியராக இருந்து நடத்தியவர்.ஆங்கில காட்சி ஊடக வாதங்களில் பங்கேற்றுள்ளார். தமிழ் இலக்கியத்தில் ஆர்வமும் அறிவும் கொண்ட இவர் திருக்குறளின் பால் கொண்ட பற்றின் காரணமாக பல கட்டுரைகளை எழுதியுள்ளார். குறள்வழி நடந்தால் நாட்டில் சட்டத்திற்கு இடம் இல்லை என்ற கருத்தை த்தமது கட்டுரைகளில் வலியுறுத்தியுள்ளார்.சென்னை ,அண்ணாநகரை அணிசெய்து வாழும் அறிஞர்களுள் இவரும் ஒருவர்.

மனிதராய்ப் பிறந்த எல்லோருமே மாசற்றவர்களாக இருக்க முடியாது! வளர்ந்த விதமும், போதிக்கப்படும் அறநெறிகளும், அந்த அறநெறிப்படி நடந்து செயலாற்றும் வாழ்வே ஒருவனை நல்ல மனிதனாக உருவாக்குகிறது! தினசரி வாழ்க்கையில் ஒரு நல்ல மனிதன்கூடச் சிற்சில வேளைகளில் தவறுகள் செய்துவிடுவதுண்டு! நம்மை அறியாமல் நாம் சில தவறுகளைக் கவனக்குறைவாய் செய்துவிடுவது இயற்கை! அதனால்தான், பேச்சு வழக்கில், நடைமுறைப் பயணத்தில், பலமுறை நாம் கேள்விப்பட்டிருப்போம்! பலர் சொல்லக் கேட்டிருப்போம்…“தெரியாமல் செய்துவிட்டேன்! என்னை மன்னித்து விடுங்கள்” - இப்படிப்பட்ட புலம்பல்களை!

ஆனால், தெரிந்து செய்வதோ அல்லது தெரியாமல் செய்வதோ - இந்த இருவித செய்கைகளின் விளைவால் ஏற்படுவது ஒன்றுதான்! அதுதான் தீங்கு!அந்தச் செய்கைகளினால் மற்றவருக்குத் தீங்கு உண்டாக்கப் படுகிறது!அது சிறிய அளவிலோ அல்லது பெரிய அளவிலோ அல்லது மிகப் பெரிய அளவிலோ கூட இருக்கலாம்! அந்தத் தீங்கு அளவிலே வேறுபடலாம்! அவ்வளவுதான்!

ஆனால், தீங்கு தீங்குதானே! ஏற்படுத்திய தீங்குக்கு - அத்தீங்கை ஏற்படுத் தியவருக்குத் தண்டனை கொடுத்துத்தான் ஆக வேண்டும்!

தான் ஆற்றும் பணியில் - ஒரு சிறு கவனக் குறைவு ஏற்பட்டாலும், - அது மற்றவருக்குத் தீங்காக அமைந்து விடுகிறது!எனவே, ஆற்றும் பணியில் கவனம் வேண்டும்! எந்த ஒரு தன் செய்கையிலும் கவனம் வேண்டும். விழிப்புடன் இருந்து கவனத்துடன் செயல்பட வேண்டும் என்று சட்டம் கூறுகிறது! கவனமின்மை என்பதைத்தான் ஆங்கிலத்தில் Negligence என்று குறிப்பிடுகிறோம்.

Riddle Vs Reid என்ற வழக்கில், இதுபற்றித் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. “தகுந்த கவனத்துடன், செயல்பட வேண்டிய கடமை எல்லோருக்கும் உள்ளது. இது சட்டப்படியான கடமை. இத்தகு கடமையில் இருந்து தவறும்போது, அதனால், பிறருக்குத் தீங்கு விளைந்தால் - அது கவனமின்மை (Negligence) என்ற குற்றமாக - தீங்காக ஆகிறது.”

கவனத்துடன் இருக்க வேண்டிய சூழ்நிலையில், கவனத்துடன் ஆற்ற வேண்டிய பணியில் - கவனமின்மை ஒரு தீங்காகும்! ஒரு குற்றமாகும்!

ஒருவன் தொழில் சார்ந்த படிப்பு ஒன்றைப் படிக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அதில் பட்டம் பெறுகிறான் என்றால், அவன் அந்தத் தொழிலில் திறமை பெற்றவன் என்று பொருள்.

திறமையான அந்தத் தொழிலைப் பற்றி நன்கு படித்துப் பட்டம் பெற்று - நன்கு அறிந்த அவன், அத் தொழிலில் சிறு தவறு செய்தாலும் அல்லது திறமையின்றிச் செயல்பட்டாலும் - அதனால் ஏற்படும் நட்டத்தை - இன்னலை - தீங்கினை - அவன் கவனமின்மையால் ஏற்பட்ட ஒன்று என்றுதான் சட்டம் கூறுகிறது!

தணிக்கையாளர் (ஆடிட்டர்) எனப்படுபவர் ஒரு தொழில்துறை சார்ந்த திட்டத்தை - அதன் லாபம் - நட்டம், வருட ஈவு, திருப்பிச் செலுத்தும் தகுதி, வருடக்கணக்கு முடிவு, இவற்றையெல்லாம் முழுப் பரிசீலனை செய்து - அதன் பிறகு,

ஒரு அறிக்கை கொடுக்கிறார் என்று வைத்துக் கொள்வோம்! அந்த அறிக்கையின் மீது, - அதை நம்பி ஒரு வங்கி கடன் கொடுத்துள்ளது என்றும் வைத்துக் கொள்வோம்!

பிற்காலத்தில் - அந்தக் கடனை வாங்கியவர் திருப்பிச்
செலுத்த இயலாத நிலையில், தவறு ஒன்று கண்டுபிடிக்கப்
பட்டு, அந்தத் தவறு - அந்த ஆடிட்டர் எனும் தணிக்கை
யாளரின் கவனக்குறைவினால் ஏற்பட்டது என்பது கண்டு
பிடிக்கப்பட்டால், அந்தக் கவனக்குறைவினால் ஏற்பட்ட
இழப்புக்கு அவர் மீது வழக்கு தொடுக்கலாம்

தனித்திறமை வாய்ந்தவர் Specialist - என்ற அடிப்படையில், அவர் அறிக்கை மீது - அதை முழுதும் நம்பி வழங்கப்பட்ட கடன் அது!

அந்தத் தனித்திறமை - நமக்கு இல்லை என்று தான், அந்தப் பொறுப்பை அவரிடம் ஒப்படைக்கிறோம்!

எனவே, அவர் அதில் தவறு செய்யக்கூடாது! அவர் அதில் கவனக்குறைவாக இருக்கக்கூடாது!

அது போலவே மருத்து வரும்! இன்றைய நாட் களில்,

மருத்துவர்களின் கவனக்குறைவினால் எத்துணையோ விலைமதிக்க இயலாத உயிர்கள் பலியாவதை தினசரி செய்தித்தாள்களில் கண்டு வருந்துகிறோம்! அதுபோலவே, பொறியியல்

வல்லுநர்களும்! - ஆக, எத்துறையினரும் தங்கள் பணியில் கவனத்துடன் செயல்பட வேண்டும்!

தவறு - கவனமின்மை யினால் ஏற்படலாம்!

ஆனால்,

தப்பு - கவனமின்மையினால் ஏற்பட்டது அல்ல! அது,

விளைவு தெரிந்தே செய்வது! வேண்டும் என்றே செய்வது!

ஆனால், இரண்டின் பின் விளைவுகளும் ஒன்றுதான்!

அது ஏற்பட்டுவிட்ட தீங்கு! எனவே கவனமின்மைக்கும் (Negligence) தண்டனை உண்டு.

இந்தக் கோட்பாடு தொழில் சார்ந்த மனிதர்களுக்கு

மட்டுமல்ல! சாதாரண குடிமக்களுக்கு மட்டுமல்ல! நாடாளும் வேந்தர்களுக்கும், நீதி உரைக்கும் நீதிபதிகளுக்கும் பொருந்தும்! இன்தமிழர் பின்பற்றிய கோட்பாடு அது!

கவனக்குறைவினால் - ஒருவரின் உடைமைக்கு, உடலுக்கு, ஏன் உயிருக்குக்கூட ஆபத்து உண்டா கலாம்.

அத்தகைய கவனக்குறைவினால் ஏற்படும் தீங்குகளும் -

குற்றமாகவே கருதப்பட்டு, அதற்கும் தண்டனை வழங்கப்படுவது

தான் நியாயம் என்ற கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு நியதியாக இருந்து வருகிறது.

அத்தகு குற்றத்துக்குத் தண்டனை வழங்கிடும் நீதிபதிக்கே கவனக்குறைவு ஏற்பட்டால், விளைவு என்ன ஆகும்?

ஆளும் அரசனே நீதிபதி! அந்த நீதிபதிக்கு, - அந்த நாடாளும் வேந்தனுக்குக் கவனக்குறைவு ஏற்பட்டால் - நீதி என்ன ஆகும்?

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன் ஆள்பருக்கு

என்றார் தெய்வப் புலவர்.

இங்கே "தூங்காமை" என்று அவர் எதைக் குறிப்பிடுகின்றார்?

"எப்போதும் விழிப்புடன் இருக்கக்கூடிய தன்மை" - அப்படி இருக்கும்போது, கவனக் குறைவு ஏற்பட முடியாது! கவனச் சிதறல் ஏற்பட வாய்ப்பு இல்லை. எனவே, வழங்கப்படும் நீதியில் தவறு ஏற்பட முடியாது!

நீதி தவறாத நெறிமுறையில் - ஆட்சி செலுத்துகின்ற மன்னவனுக்கு இந்தத் "தூங்காமை" என்ற பண்பு இன்றியமையாத் தேவையாகும்!

ஆய்ந்து - அறிந்து - செயல்படும் அவன் செயல்பாடுகளில், சோம்பி இருத்தல் என்ற இழி பண்பு அறவே கிடையாது!

வழங்கிடும் நீதியில் களங்கம் ஏற்பட்டால் வளைந்து போகும் செங்கோல் - என்ற அச்சம், அங்கு "கவனக்குறைவு" போன்ற களைகளை வேரறுத்து விடுகிறது!

தான் சொன்ன நீதியில் - தவறு ஏற்பட்ட காரணத்தினால், தன் உயிரையே அதற்கு விலை யாகத் தந்த அரசனை - நீதிபதியை எங்காவது - எந்த நாட்டிலாவது - எந்த மண்ணிலாவது - இந்த உலகத்தின் சரித்திர ஏடுகளில் கண்டு, கேட்டிருக்கிறோமா?

நீதியும், தமிழும் இரு கண்களாகக் கொண்டு நிறைவான ஆட்சி நடத்தி வந்தான் பாண்டியன் நெடுஞ்செழியன்!

அந்தப் புண்ணிய பூமி நோக்கிப் புதுவாழ்வு வாழவந்தாள் கண்ணகி!

தன்னிடம் திரும்பி வந்தான் கணவன்! அவன் திருந்தியும் வந்தான்!

திருந்தி வந்ததும் - திரும்பி வந்ததும் - திருப்பு முனையாகத் தன் வாழ்வில் எண்ணினாள்!

வருந்திய கணவனின் வாடிய முகத்தைத் தேற்றி, வளமான எதிர்கால வாழ்விற்குச் சிறந்த இடமாய்,

மீன்கொடிப் பாண்டியனின் மதுரைக்கு வந்தாள்!

ஆனால், அங்கு நடந்தது என்ன?

அங்கே, கோவலன் உயிரைக் கயவர்கள் பறித்ததும், சிலம்புச் செல்வி சீறி எழுந்ததும், தன் கால் சிலம்பைக்கையில் ஏந்தி, கொற்றவன் மாளிகையில் கோபம் தெறிக்க, சிலம்பை உடைத்து, நியாயம் கேட்டதும்,

தவறு செய்த பாண்டியன் தலைசாய்ந்து விழுந்ததும், நீதி தவறிய தன் கணவன் உயிர் பிரிந்து மாண்டபோது, தானும் அவனுடன் இணைந்து, வீழ்ந்து, இறந்த பட்டத்து அரசியின் செய்கையும்,

நீதி நெறி தவறியதால் மதுரையே தீயில் எறிந்ததும் - தமிழ் உலகும் - இத் தரணியும் அறிந்த வரலாறு!

இலக்கியமாக இருந்தாலும், வரலாறு என்ற உண்மை நடப்பாக இருந்தாலும், இன்தமிழ் மண்ணிற்குப் பெருமை சேர்த்தது சிலப்பதிகாரம்!

வளைந்துவிட்ட செங்கோலை நிமிர்த்த முடியுமா? எதிர்காலப் பழிச் சொல்லைத் தவிர்த்திட இயலுமா?

கவனக்குறைவு கண்ணையே குருடாக்கியதால் தன் உயிரையே தந்து, அதற்கு விலையாக ஆக்கினான் பாண்டிய மன்னன்!

தான் இழைத்த தவறுக்குத் தன் உயிரையே மாய்த்துக்கொண்டு, தனக்குத்தானே பெருந் தண்டனையைத் தந்து நீதிபதி என்பவன் -

“முறை சொல்ல வேண்டியவன் குறையின்றி இருக்க வேண்டும்” என்பதற்கு இலக்கணமானான்!